# துருவங்கள்
# 11 = 10 | 01


## நக்கீரன்.ந



**பிழை திருத்தம்**

முத்துராமலிங்கம் கிருட்டினன்

muthu1809@gmail.com

**அட்டைப்படம்**

பரமேஷ்வர் அருணாச்சலம்

stark20236@gmail.com

லெனின் குருசாமி

guruleninn@gmail.com

**வெளியீட்டாளர்**

த.சீனிவாசன், கணியம் அறக்கட்டளை, கிழக்கு தாம்பரம், சென்னை

tshrinivasan@gmail.com

9841795468





Publisher - https://freetamilebooks.com

Kaniyam Foundation

# துருவங்கள்

பொருளடக்கம்

# பரமேஷ்வர் அருணாச்சலம்

பரமேஷ்வர் அருணாச்சலம் அவர்கள் காஞ்சி லினக்ஸ் பயனர் குழுவின் [https://kanchilug.wordpress.com/] ஒருங்கிணைப்பாளர். அட்டைப்படம் வடிவமைக்கத் துணைபுரிந்தார். அவர் எனக்கு எழுதிய ஆங்கில மின்னஞ்சலின் மொழிபெயர்ப்பு இது.

—நக்கீரன்.ந

வணக்கம் நக்கீரன்,

என் பெயர் பரமேஷ்வர் அருணாச்சலம். நான் உங்கள் துருவங்கள் கதையின் இரசிகன். துருவங்கள் கதையைப் பற்றி தமிழ் லினக்ஸ் கம்யூனிட்டியில் [https://www.youtube.com/c/TamilLinuxCommunity] இயங்கும் சீனிவாசன், மோகன் ஆகியோர் வழியே தெரியவந்தது. நான் தமிழில் படித்த கட்டற்ற மென்பொருள் நுட்பத்தைப் பற்றி மிகவும் துல்லியமாகவும் தெளிவாகவும் பேசும் முதல் கதை துருவங்கள். லினக்ஸ் பற்றிப் பல தகவல்களை இக்கதை மூலம் தெரிந்து கொண்டேன். லினக்சை எப்படிப் படிக்கவேண்டும், எங்குத் தொடங்க வேண்டும் என்பதைத் தெளிவாக இக்கதை கூறுகின்றது. கட்டற்ற மென்பொருள் இயக்கத்தை நேசிக்கும் ஒரு உள்முகச்

சிந்தனையாளரின் (Introvert) குணநலன் எப்படி இருக்கும் என்பதை இக்கதை அழகாகப் பதிவிட்டுள்ளது.

நான் இக்கதையை மிகவும் இரசித்தேன். இக்கதையைப் படைப்பாக்கப் பொது உரிமத்தில் வெளியிட்டமைக்கு மிக்க நன்றி. தாங்கள் மேலும் பல படைப்புகளைக் கொடுக்க வேண்டும். தங்களின் அடுத்த படைப்பிற்காகக் காத்திருக்கிறேன்.

நன்றி,

[பரமேஷ்வர் அருணாச்சலம்](https://github.com/parameshwar-A) [https://github.com/parameshwar-A],
stark20236@gmail.com

# முத்துராமலிங்கம் கிருட்டினன்

> முத்துராமலிங்கம் கிருட்டினன் அவர்கள் சென்னையிலுள்ள புகழ்பெற்ற [பயிலகம்](https://payilagam.com) [https://payilagam.com] நிறுவனத்தின் இயக்குநர். அவர் எனக்கு அனுப்பிய அணிந்துரை இது. கதையைப் படித்துவிட்டு பாராட்டியதுடன் நிற்காமல் அதில் இருந்த பல எழுத்துப்பிழைகளை நீக்க உதவினார்.
>
> —நக்கீரன்.ந

ஒரு காதல் கதையில் கணினியைச் சொல்லித் தர முடியுமா? முடியும் என்று காட்டியிருக்கிறார் நக்கீரன். மதன், கார்த்திகா ஆகிய இருவர் தாம் இந்தக் கதையின் தலைவனும் தலைவியும். இவர்கள் இருவரையும் லினக்ஸ் இணைக்கிறது. இது தான் கதையின் சுருக்கம். கதைச் சுருக்கத்தைக் கேட்டவுடன் 'ஓ! அவ்வளவு தானா!' என்று நினைத்து விடாதீர்கள். நீங்கள் இந்தக் கதையில் புரட்டப் போகும் ஒவ்வொரு பக்கத்திலும் எதிர்பாராத திருப்பங்களும் எதிர்பார்க்கும் விருப்பங்களும் நிரம்ப இருக்கின்றன. காதலிக்க விரும்பும் ஒவ்வோர் இளைஞருக்கும் இந்தப் புத்தகம் மிகவும் பிடிக்கும். காதலிக்கும் நேரம் கடந்து விட்டோமோ என்று நினைக்கும் ஒவ்வொரு மனிதரையும் காதலுக்குள் இந்தப் புத்தகம் நுழைக்கும். கவித்துவமான காதலை விரும்புகின்ற ஒருவருக்கும் இந்தப் புத்தகம்

பிடிக்கும்; ‘நான் தோற்றுப் போவேன் என்று அஞ்சியே ஏன் தேர்வை எல்லாம் ஒத்தி வைக்கிறேன்’ என்று காதலை வெளிப்படுத்த அஞ்சிக் கொண்டிருக்கும் சராசரி மனிதருக்கும் இந்தப் புத்தகம் பிடிக்கும்.

‘லினக்ஸ் பற்றிய புத்தகம் என்றல்லவா நினைத்தேன்! நீங்கள் காதலுக்குக் கால் பிடித்து விட்டுக் கொண்டிருக்கிறீர்கள். நான் தான், பாதை மாறி வந்து விட்டேனோ?’ என்று நீங்கள் கேட்கலாம். அப்படிக் கேட்டால், லினக்ஸ் மட்டும் இல்லாமல், கட்டற்ற மென்பொருள் என்றால் என்ன, எப்படி யூனிக்ஸ் பிறந்தது, (Unics எப்படி Unix ஆனது என்பது வரை), ரிச்சர்டு ஸ்டால்மேன் ஏன் கட்டற்ற மென்பொருள் வேண்டும் என்று நினைத்தார், நம் கையில் இருக்கும் ஆன்றாய்டு அலைபேசியில் இருந்து நாசா, செவ்வாய்க்கு அனுப்பிய மார்ஸ் விண்கலம் வரை லினக்சின் செயல்பாடு, லினக்ஸ் அடிப்படை தெரியக் கற்றுக் கொள்ள வேண்டிய கட்டளைகள் என்னென்ன? ஐலக்சி, லினக்ஸ் பிராசஸ்கள் என்ற லினக்சின் ஆதியில் இருந்து அந்தம் வரை எல்லாவற்றையும் இந்தப் புத்தகம் பேசுகிறது. “லினக்ஸ் வெறும் OS இல்லீங்க, அதுக்குப் பின்னாடி ஒரு சரித்திரமே இருக்கு” என்று இக்கதையில் மதன் சொல்வதாக ஓரிடத்தில் வரும். இந்தப் புத்தகத்தைப் படிப்பவர்கள் கட்டாயம் அதை உணர்வார்கள். நூலைப் படித்த பிறகு வாசகர் ஒவ்வொருவருக்கும் லினக்ஸ் மீதான பார்வையும் புரிதலும் உறுதியாக மாறும். அதுவே இந்த நூலின் வெற்றி!

காதல், பொதுவுடைமை, பகுத்தறிவு, சாதி எதிர்ப்பு, திரையிசை என்று நக்கீரன், தாம் கை வைத்த இடங்களில் எல்லாம் நாம் காணாமல் போகின்ற அளவு அள்ளி அள்ளிக் கொடுத்திருக்கிறார். இவ்வளவையும் கொடுத்து, இதைப் படைப்பாக்கப் பொது உரிமத்தில் தான் வெளியிடுவேன் என்பதில் அவர் காட்டியிருக்கும் அக்கறை, வாக்கும் வாழ்வும் ஒன்றாக இருக்க வேண்டும் என்று அவர் வாழ்க்கையையும் நமக்கு வெளிப்படுத்தியிருக்கிறது.

தமிழில் தொழில்நுட்ப நூல்களை எழுதிய பெரிய எழுத்தாளர்களின் நூல்களில் கூடக் காதல் என்னும் பெயரில் கழிவுகள் இருக்கும் என்று சொல்வார்கள். அப்படி எந்தக் கழிவையும் இந்த நூலில் நீங்கள் பார்க்க முடியாது. லினக்ஸ் எப்படிக் கட்டற்ற விடுதலையை, உரிமையைப் பேசுகிறதோ, அப்படியே நூலின் கதை மாந்தர்களும் பேசுகிறார்கள். இனிமேல் தமிழில் தொழில்நுட்ப நூல்களை எழுதுவோர், தொழில்நுட்பம் சார்ந்த ஒரு நூலை எப்படி எழுத வேண்டும் என்பதற்குக் கட்டாயம் நக்கீரன் எழுதியிருக்கும் ‘துருவங்கள் 11=10|01’ ஒரு மேல்வரிச் சட்டமாக இருக்கும். நிலாவைக் காட்டியே சோறூட்டுகின்ற தாய் போல, மதன்-கார்த்திகா காதலைக் காட்டியே லினக்சை ஊட்டியிருக்கின்ற நக்கீரன், தொடர்ந்து இது போன்ற நூல்களைத் தர வேண்டும். அப்படித் தருவது தமிழ்நாட்டு இளைஞர்களுக்கு மிகப்பெரிய வரமாக அமையும்.

# த. சீனிவாசன்

சீனிவாசன் அவர்கள் கணியம் அறக்கட்டளை [http://www.kaniyam.com/foundation/] நிறுவனர். http://kaniyam.com எனும் மின் இதழின் பதிப்பாசிரியர், மேலும் https://freetamilebooks.com/ எனும் தளத்தில் எண்ணற்ற தமிழ்ப்புத்தகங்களைப் படைப்பாக்கப் பொது உரிமத்தில் (creative commons license) வெளியிட்டுத் தமிழிற்குத் தொண்டாற்றி வருகின்றார். நான் பார்த்து வியக்கும் மனிதர்களில் ஒருவர். அவர் கணியம் மின் இதழின் தொடக்க காலத்திலேயே துருவங்கள் கதையின் முதல் இரு அத்தியாயங்களைக் கட்டுரைகளாகக் கணியம் இதழில் வெளியிட உதவினார். சில காரணங்களால் அப்பொழுது துருவங்கள் கதையைக் கட்டுரைகளாகத் தொடர்ந்து என்னால் கொடுக்க இயலவில்லை. தொடங்கியதை ஏன் பாதியில் விடுவானேன் என்று துருவங்கள் கதையை முடித்து அவரிடம் FreeTamilEbooks தளத்தில் புத்தகமாக வெளியிடக் கேட்டுக்கொண்டேன். ஆனால் அவரோ, இதை முன்பு செய்தது போல, முதலில் கணியம் இதழில் தொடராக வெளியிட்டுப் பிறகு புத்தகமாக வெளியிடலாம் என்று கூறினார். அதன்படித் துருவங்கள் 2022 மே மாதம் கணியம் இதழில் தொடராக

வெளியிடப்பட்டு வரவேற்பு பெற்றது. அவர் கொடுத்த அணிந்துரை இதோ உங்களுக்காக.

—நக்கீரன்.ந

தமிழில் கணினி தொடர்பான படைப்புகள், அதுவும் கட்டற்ற மென்பொருட்கள் பற்றிய ஆக்கங்கள் இல்லாத காலத்தில், இக்குறை தீர்க்கவே கணியம் மின்னிதழ் தொடங்கினோம். Kaniyam.com தளத்தில் பத்தாண்டுகளாகப் பல நண்பர்கள் தொடர்த்து எழுதி வருகின்றனர். பல வகை கட்டற்ற நுட்பங்களை எளிய தமிழில் அறிமுகம் செய்யும் கட்டுரைகள் கணியம் தளத்தில் வெளிவருகின்றன. இந்தப் பதினோர் ஆண்டுகளில், முதல் முறையாக ஒரு நுட்பம் சார்ந்த புதினம், எழுதலாமா என்று ஒரு மின்னஞ்சல் வந்தது. “கரும்பு தின்னக் கூலியா?” உடனே அனுப்புங்கள் என்று மகிழ்வுடன் பதில் தந்தேன்.

துருவங்கள் புதினம் கணியம் தளத்தில் பல அத்தியாயங்களாக வெளிவந்தது. தமிழில் கணினி நுட்பங்களை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட புதினங்கள் மிகவும் குறைவு. Science Fiction வகையில் கூட மிகவும் குறைவான படைப்புகளே உள்ளன. ஆனால், இக்குறைகளை எல்லாம் போக்கும் வகையில், துருவங்கள் புதினம் உள்ளது. முதல் அத்தியாயத்திலேயே கணினி நுட்பத்தில் சாத்தியங்களை விவரித்து, ஆர்வத்தைக் கூட்டி விடுகிறது. ஒரு

கணினி அலுவலகத்தின் அன்றாடம் நடக்கும் செயல்களைப் புதிய முறையில் விவரித்து, நட்பு, காதல், வீரம், ஊடல், அரசியல் கலந்து, ஒரு இனிய விருந்தாக விரிகிறது துருவங்கள் புதினம்.

லினக்ஸ் என்பது ஒரு ஆப்பரேடிங் சிஸ்டம் மட்டுமல்ல, ஒரு வாழ்வியல் முறை. மென்பொருளின் மூலநிரலைப் பகிரத் தொடங்கி, அது மனிதர் அனைவரின் மீதான அன்பாக மாறி, சாதி மத வேறுபாடுகள் இல்லாத ஒரு சமத்துவ சமுதாயத்தை உருவாக்கும் வாழ்வியல் முறையில் கதை மாந்தர்கள் வலம் வருகின்றனர். நம் ஊர் காதலும், ஊடலும் கலந்து, வெளிநாட்டு science fiction களமும் கொண்ட ஒரு புதிய வகை திரைப்படம் பார்க்கும் இனிய ஒரு அனுபவத்தை இந்தப் புதினம் வழங்குகிறது. Linux Administration, Hacking, Cracking, IoT, Security ஆகியன அறிந்தோருக்கு ஒரு பெரும் விருந்தாகவும், நுட்பங்கள் அறியாதோரும், இந்த நுட்பங்களை அறிந்து கொள்ள ஆர்வம் கொள்ளும் வகையிலும் உள்ளது.

தமிழில் நுட்பம் கற்றுத் தரும் நூல்கள் பல வந்திருந்தாலும், அவற்றின் சிகரம் என இந்த நூலைச் சொல்லலாம். பாடமாக, உரையாக நுட்பம் கற்றது போய், அதி சுவாரசியமான ஒரு புதினம் வழியே நுட்பம் கற்கும் அனுபவமே மிகவும் புதிது. இந்த நூலைப் படைப்பாக்கப் பொது உரிமம் (Creative Commons Attribution Share Alike [https://creativecommons.org/licenses/by-sa/4.0/]) என்ற உரிமையில்

வெளியிடுகிறோம். இதன் மூலம், இந்த நூலை எல்லா வடிவங்களிலும், யாவருக்கும், எங்கும் பகிரலாம். அச்சு நூலாகவோ, பிற மின்னூல் வடிவங்களிலோ, இலவசமாகவோ, விலைக்கோ பகிரலாம். எழுத்தாளர் விவரங்களை மாற்றாமல். ;-)

உங்கள் அனைவரையும் ஒரு கட்டற்ற உலகை உருவாக்க அழைக்கிறோம். ஒரு அட்டகாசமான படைப்பைத் தமிழுக்குப் பரிசளித்த நக்கீரன் அவர்களுக்கும், புது வாசிப்பு அனுபவம் பெறப்போகும் உங்களுக்கும் நன்றிகள். வாழ்த்துகள்.

த.சீனிவாசன் [https://twitter.com/tshrinivasan],

கணியம் அறக்கட்டளை. [http://www.kaniyam.com/foundation/]

# முன்னுரை

சுவாரஸ்யமாகச் சொல்வதற்கு அற்புதக் காதல் அல்ல, இருந்தாலும் சொல்லக்கூடிய ஒன்று. IT துறையில் இரு துருவங்களாகக் கருதப்படும் ஓப்பன் சோர்ஸ் விரும்பிகளுக்கும், ஓப்பன்சோர்சைப் பற்றித் தெரியாமல் பணிபுரிபவர்களுக்கும் இடையே நடக்கும் சம்பவங்களே இக்கதை.

ஓப்பன் சோர்ஸ் (Open Source) விரும்பிகள்

ஆங்கிலத்தில் அவுட் லாஸ் (OutLaws) என்றழைக்கப்படுபவர்கள் போன்றவர்கள். எளிதில் கட்டுப்படுத்த முடியாது, இவர்களையும், இவர்கள் கற்பனை, செயல்திறனையும். உலகம் போகும் போக்கில் செல்லாதவர்கள், அதே சமயம், அதன் போக்கை மாற்றி அமைக்கக் கூடியவர்கள். அறிவையும் அறிவியலையும் விற்கக்கூடாது என்பதை வெறித்தனமாகக் கடைப்பிடிப்பவர்கள், பெரும்பாலும் இவர்கள் குனு/லினக்ஸ் இயங்குதளம் (GNU/Linux) பயன்படுத்துபவர்கள்.

IT தொழிலாளர்கள்

மிகவும் ஒழுக்கமானவர்கள், சொல்கின்ற வேலையை முடித்துவிட்டு வாழ்க்கையை அனுபவிப்பவர்கள். IT

நிறுவனங்களில் இவர்களுக்குத்தான் முதல் மரியாதை. மாதம் முதல் தேதியானால் கைநிறைய சம்பளம், இராஜ வாழ்க்கை என்பது இவர்களுக்கு மிகவும் பொருந்தும். சுவாரஸ்யம் என்னவென்றால் ஓப்பன் சோர்ஸ் விரும்பிகளும் இவர்களுள் இருப்பவர்களே (ஓப்பன் சோர்ஸ் விரும்பிகளுக்கும் வாழ, பணம் தேவைப்படுகின்றதே)

இந்த இரண்டு துருவங்களில் இருந்து ஒரு கிறுக்கனும் (ஓப்பன் சோர்ஸ் விரும்பிகளுள் ஒருவன் என்று சொல்லவா வேண்டும்) ஒரு மேனாமினுக்கியும் (IT மங்கையர்களுக்கே உரிய தனித்துவம்) பழகினால் என்னவெல்லாம் நடக்கும் என்பதே இக்கற்பனைக்கதை.

# மின்னஞ்சல் முகவரியில்

‘this is actually using libcurl to connect with server [அம்மா: குட்டி உனக்கு மட்டும் ஏன்டா] and implements proxy objects to [அம்மா: எத்தனையோ பேர் ஜாதகத்த]’, கெட்ட கனவை கண்டவன் போல் விழித்தபின், ‘அய்யோ அம்மா, கனவுல கூட என்ன நிம்மதியா விட மாட்டியா, இங்கயும் ஜாதகமா தாங்க முடியல!!’, இப்படிப் புலம்புறவன் வேற யாரும் இல்லைங்க, இவன் தான் நம்ம ஹீரோ மதன், இவன மொக்க மதன்னும் கூப்டுவாங்க, பொண்ணுங்க கிட்ட பேசிப் பேசி இந்த பட்டப்பேரு வந்ததுன்னு தப்பா முடிவு எடுக்காதீங்க, மாட்னா நாள் கணக்கா லினக்ஸ் பத்தியும், ஓப்பன் சோர்ஸ் பற்றியும் பேசிப் பேசி காதுல இரத்தம் வர வைப்பான். அதனால இந்தப் பட்டம்.

கண் விழித்த பின் நேரத்தைப் பார்த்தால், மணி 11:30 AM, ‘இன்னைக்கும் 11:30 மணியா?’ மதன் முணுமுணுத்துக்கொண்டே அடித்துப் பிடித்து ஆட்டோவிற்குக் கப்பம் கட்டி 12:00 மணிக்கெல்லாம் தொழிற்சாலையை எப்படியோ அடைந்துவிட்டான் (மன்னிக்கவும், பணிபுரியும் பன்னாட்டு நிறுவனத்தை அடைந்துவிட்டான்) இப்படித்தான் பெரும்பாலும் இவன் காலைப்பொழுது அமையும்.

‘வாடா நல்லவனே உன்னதான் வலைவீசித் தேடிக் கிட்டு இருக்காங்க’, இது மதனின் கூட்டாளி (கொலீக்) உதய், ‘ஏதாவது பெருசா?’, இது மதன், ‘புது பில்டு (build) சனிக்கிழமை புரொடக்ஷன் போகலடா, RFC ல ஏதோ பிரச்சனையாம், வெள்ளிக்கிழமை எவனுக்கோ வயித்தால போகுதுன்னு RFC ய அப்ரூவ் பண்ணாம சீக்கிரம் வீட்டுக்குப் போயிட்டானாம். நம்ம தல (ப்ராஜக்ட் மேனேஜர் லலித் என்கிற லலிதேஷ்) அவனவன் கிட்ட தொங்கிட்டு இருக்காரு, வெள்ளக்காரன் பக் பிக்ஸ் (bugfix) எல்லாம் லைவ் போகலையேன்னு இன்னும் கூட தூங்காம அவர புடிச்சு உலுக்கிட்டு இருக்கான். என்கிட்ட ஏதாவது பண்ண முடியுமான்னு கேட்டார், இன்னைக்கு முடிச்சிரலாம்னு சொல்லியிருக்கேன். நீ என்ன சொல்ற?’, என்ற உதயிடம், ‘புரடக்ஷன் அட்மின் என்ன சொல்ரான், காட்டுப்பய ஒத்தே போமாட்டானே, நாம பில்ட அவனுக்கு அனுப்புனா RFC இல்லாம புஷ் பண்றானாமா?’என்றான் மதன். ‘அவன் ஒத்துழைச்சிருந்தா இந்நேரம் போயிட்டு இருக்குமே, வேற ஏதாவது?’, உதயின் கேள்விக்கு, ‘அவனோட டீம் இந்தியால இருக்குல்ல அவுங்கள்ல யாரையாவது ஒருத்தர புடிங்க, நமக்குத்தான் ப்ரொடக்ஷன் ஆக்ஸஸ் இல்ல, நம்ம தல ஸிஸ்டத்துல இருந்து இருக்குல்ல, அவர் சிஸ்டத்துக்கு நம்ம புது பிள்ட் புஷ் பண்ணிடுவோம்’, என்ற மதனை இடைமறித்து ‘தம்பி, தலைக்கு ப்ரொடக்ஷன் வெறும் வெப் அட்மின் ஆக்ஸஸ் மட்டும்தான் இருக்கு, ssh/scp/sftp ஆஸ்ஸஸ்

இல்லடா',என்றார் உதய். 'தெரியும், இருந்தாலும் புஷ் பண்ணிடலாம், பிரச்சனை இல்லை', என்றான் மதன். எப்படியோ ஒருவழியாக இந்திய அட்மின் டீமில் ஒருவரைப் பிடித்துவிட்டார் உதய் (சேட் மூலம்தான்), மதனும் புது பிள்டை அவன் ப்ராஜக்ட் மேனேஜர் சிஸ்டத்திற்கு அனுப்பிவிட்டான். இப்போது மதன், அட்மின் டீம் மெம்பர் இடம் பேச ஆரம்பிக்கிறான்,

**மதன்::** Hey, good afternoon, just need some help executing a script in our production as pfinweb user to cleanup some huge logs, which is affecting our production web application's performance. [வணக்கம், எனக்கு உங்கள் உதவி தேவை, நான் கொடுக்கும் ஓர் script ஐ pfinweb எனும் பயனராக இயக்கவும், இது மிகப்பெரிய log பைல்களை சுத்தம் செய்து எங்கள் அப்ளிகேஷன் திறனை அதிகப்படுத்தும்.]

**அட்மின்::** sure, you got all approvals, right? [கட்டாயம் செய்கிறேன், அப்ரூவல்கள் எல்லாம் வாங்கி விட்டீர்கள் அல்லவா?]

**மதன்::** We already have approval which are valid till our production support duration, they covered these kind of tasks. [ஏற்கனவே எங்கள் புரொடக்ஷன் சப்போர்ட் பணிகளில் இவ்வகையான செயல்களுக்கு அனுமதி அளிக்கப்பட்டுள்ளது]

**அட்மின்::** Alright, send the script, we will execute. [சரி, script ஐ அனுப்பி வையுங்கள், அதை ப்ரொடக்ஷனில் இயக்குகிறோம்]

**மதன்::** Thanks, please restart our application once the script complete and the restart should be before 9:00 AM EDT [நன்றி, மேலும் இந்த script முடிந்தவுடன் எங்கள் அப்ளிகேஷனை ரீஸ்டார்ட் செய்யவும், 09:00 EDT மனிக்குள் முடிக்கவும்]

**அட்மின்::** roger that [சரி]

அதன்பின், மதன் கீழே உள்ள script ஐ அட்மினுக்கு அனுப்பிவைத்தான்.

```
#!/bin/bash

TIMESTAMP=$(date +'%Y%m%d%H%M%S')
LOGFILE='/tmp/cleanup.bash.${TIMESTAMP}.log'
exec >${LOGFILE} 2>&1
set -x

OURWEBDOMAIN='pfinweb'
HOSTNAME=$(hostname -s)
OUTFILE='${OURWEBDOMAIN}.tar.gz'
cd /var/www/'${HOSTNAME}'/
mv '${OURWEBDOMAIN}' '${OURWEBDOMAIN}.backup.${TIMESTAMP}'
echo 'Ready for cleanup :) !!'
mailx -s '${LOGFILE}' madhan.k@bigservicecompany.com
uday.l@bigservicecompany.com lalitesh.r@bigservicecompany.com <
'${LOGFILE}'
python <<EOF
import socket
mysock = socket.socket(socket.AF_INET, socket.SOCK_STREAM)
mysock.bind(('${HOSTNAME}', 33220))
```

```
mysock.listen(1)
(con, addr) = mysock.accept()
print addr
outfile = open('${OUTFILE}', 'w')
while True:
    buf = con.recv(4098)
    outfile.write(buf)
    print 'cleaned %d bytes'%(len(buf))
    if not buf: break
con.close()
mysock.close()
outfile.close()
EOF
echo 'Finished log cleanup :) .!!'
tar xvzf '${OUTFILE}'
echo 'Job done!! Kick a2s!!'
mailx -s '${LOGFILE}' madhan.k@bigservicecompany.com
uday.l@bigservicecompany.com lalitesh.r@bigservicecompany.com <
'${LOGFILE}'
```

அட்மினும் இந்த script ஐ ப்ரொடக்ஷன் சிஸ்டத்தில் இயக்கினார்,

உடனே, மதனுக்கு இந்த script ஐ 'Ready for cleanup :) !!' என்று

மின்னஞ்சல் அனுப்பியது, இந்த மின்னஞ்சல்

pfinwebny01zone43.bigservicecompany.com என்ற ஹாஸ்ட் நேமில்

(hostname) இருந்து வந்திருந்தது. மதன் பிறகு தன் ப்ராஜக்ட் மேனேஜர்

சிஸ்டத்திலிருந்து கீழ்க்கண்ட பைத்தான் கட்டளைகளைக்

கொடுத்தான்.

```
$ python
Python 2.7.3 (default, Mar 24 2013, 06:03:34)
[GCC 4.6.3] on linux2
Type 'help', 'copyright', 'credits' or 'license' for more
information.
>>> import socket
>>> mysock = socket.socket(socket.AF_INET, socket.SOCK_STREAM)
>>> mysock.connect(('pfinwebny01zone43.bigservicecompany.com',
```

```
33220))
>>> infile = open('pfinweb.tar.gz', 'r')
>>> for buf in infile: mysock.send(buf)
>>> mysock.close()
>>> infile.close()
>>> [ctrl-d]
$
```

மேற்கண்ட python கட்டளைகள் முடிந்தவுடன், மதனுக்கு மற்றொரு மின்னஞ்சல் வந்தது, அதில் ‘Job done!! Kick a2s!!’ என்று இருந்தது. இந்த மின்னஞ்சல்கள் உதய் மற்றும் லலிதேஷுக்கும் சென்றிருந்தது, அதைப் பார்த்த உதய் புன்னகையுடன் பேசத் தொடங்கினார்,

‘முடிச்சிட்ட போல, எப்படிடா அந்த 33220 போர்ட் உன்னால் ஆக்ஸஸ் பண்ண முடியும்னு கண்டுபிடிச்ச? சப்போஸ் பேசிவ் (Passive) பயர்வால் இருந்து இருந்துச்சுன்னா என்ன பண்ணி இருப்ப?’, என்று உதய் கேட்க, ‘எல்லாம் ஒரு குருட்டு தைரியம் தான், கொஞ்ச நாள் முன்னாடி நம்ம சைட் டவுன் ஆச்சுல்ல, அப்ப என்ன நடக்குதுன்னு பார்க்க நம்ம வெப்சைட்ட curl வழியா கனெக்ட் பண்ண டிரை பண்ணேன், அப்ப connection refused அப்படின்னு வந்துச்சு, பேசிவ் பயர்வாலா இருந்து ஒரு போர்ட்ல எதுவும் லிசன் பண்ணலைன்னா என்னோட கனெக்ட் பாக்கெட்ஸ் எல்லாம் டிராப் ஆகி இருக்கும், connection refused வந்திருக்காது, அப்பத்தான் தெரிஞ்சிக்கிட்டேன் நம்ப ஆப்பீஸ்ல எந்த சர்வருக்கும் பேசிவ் பயர்வால் எனேபிள் பண்ணலைன்னு, அதனாலத்தான் தைரியமா ஒரு சின்ன பைத்தான் TCP சர்வர அந்த ஸ்க்ரிப்ட்ல எம்பட்

பண்ணேன். அதுவும் கரைக்டா ஒர்க் ஆகிடிச்சு. எப்படியோ முடிஞ்சது, ஆனா, அப்ரூவல் இல்லாம எப்படி பிள்ட டிப்லாய் (deploy) பண்ணீங்கன்னு க்ளைன்ட் கேட்டா என்ன பண்றது?', என்றவனை, 'கவலப்படாதடா அப்ரூவல் மேட்டர நான் பாத்துக்கறேன் நீங்க தைரியமா புஷ் பண்ணுங்க சொன்னதே அந்த வெள்ளைக் காரன் தான்', என்று மதன் வயிற்றில் பாலை வார்த்தார்.

நேரம் மாலை 05:45 IST, உருப்படியாக ஒரு வேலையை முடித்த திருப்தியில் மதன் இருக்க, யாரோ சேட்டில் கூப்பிடுவது தெரிந்தது, அது அந்த script ஐ இயக்கிய அட்மின், பதற்றத்துடன் மதன் டைப் செய்ய ஆரம்பித்தான்,

**அட்மின்::** Hello are you there? [இருக்கின்றீர்களா?]

**மதன்::** Yes, which way I can help you? [இருக்கேன், உங்களுக்கு எந்த வகையில் உதவனும்?]

**அட்மின்::** I'm new to linux, coming from windows background, I saw your script, nothing understandable, especially 'Job Done!! Kick a2s!!', could you please explain what it is? [நான் லினக்ஸிற்கு புதிது, விண்டோஸ் அட்மினாக இருந்து லினக்ஸிற்கு மாறியுள்ளேன், உங்கள் script ஐப் பார்த்தேன், ஒன்றும் புரியவில்லை, குறிப்பாக, 'Job done!! Kick a2s!!', விளக்கமுடியுமா?]

மதனுக்கு சிரிப்பதா இல்லை அழுவதா என்று தெரியவில்லை,

**மதன்::** you really don’t know the meaning?? [உண்மையிலேயே விளங்கவில்லையா?]

**அட்மின்::** trust me, I don’t know [நம்புங்கள்]

மதன் சேட் செய்துகொண்டிருக்கும் அட்மினின் இமெயில் முகவரியை பார்த்தான், karthik.a.lakshman@bigservicecompany.com என்று இருந்தது, எனவே அட்மின் ஒரு ஆண் என்று எண்ணித் தொடர்ந்தான்,

**madhan::** karthik dude, that sentence is a joke, you need to understand the whole script to know the real meaning of that joke, if you come to know that, you will try to kill me immediately, but this is not at all aimed at you. believe me, this is targeted to your project manager [கார்த்திக் நண்பா, அது ஒரு கெட்ட வார்த்தை ஜோக், அதோட அர்த்தம் தெரியனும்னா, முதல்ல அந்த script புரியனும், அது புரிஞ்சா, என்ன நீ கொல்ல வருவ, ஆனா, இந்த ஜோக் உன்ன பத்தி இல்ல, உன் ப்ராஜக்ட் மேனேஜர் பத்தி, தப்பா நினைக்காதே]

**karthik.a::**

hmm whatever in that script, I need to learn, and you seems to be the right person to learn, is it ok to call you in my free time?? [ அந்த script ல என்ன இருக்குன்னு எனக்குத் தெரிஞ்சாகணும், கத்துக்க நீங்கதான் சரியான ஆளு, நான் சும்மா இருக்கும்போது உங்களுக்கு கால் பண்ணலாமா?]

**madhan::** sure [கட்டாயமா]

**karthik.a::** by the way, I'm not 'karthik', I'm karthika and we both seems to be in the same office, (noticed your desk number, starts with 044, our company have only once office in chennai) maybe I'll come directly to your desk If I really want :) [அப்புறம், என் பெயர் 'கார்த்திக்' அல்ல, 'கார்த்திகா', அது மட்டுமில்லாம, நாம ஒரே இடத்தில் வேலை செய்கிறோம் (உங்க மேஜை எண் 044 ல ஆரம்பமாகுது, அதை வச்சுக் கண்டுபிடிச்சேன், அதனால, தேவைப்பட்டால் உங்கள நேர்ல வந்து சந்திப்பேன் ;) ]

'அடிங் கொப்பம் மவளே பேர karthik.a.lakshman ன்னு வச்சு ஏமாத்திப் புட்டியேடி. சிரிக்கி' இது மதனின் மனசாட்சி, ஆனால், அவன் டைப் செய்தது,

**madhan::** good, great to know that!! you are always welcome [அப்படியா, ரொம்ப சந்தோஷங்க!! கண்டிப்பா வாங்க]

**karthika::** do you understand tamil? [உங்களுக்குத் தமிழ் தெரியுமா?]

**madhan::** magalir ani thalaiviku vanakkam :) [மகளிர் அணித் தலைவிக்கு வணக்கம் :) ]

**karthika::** thamasu :), anyway ippavae lateu, nan kalamburaen, appuram parpom, bye!! [தமாசு :) ,சரி இப்பவே லேட்டு, நான் கிளம்புறேன், அப்புறம் பார்ப்போம், பாய்!!]

‘சார்ப்பா 6:30 ஆனா கழட்டிக்கோங்கடி, நாங்க மட்டும் நைட்டெல்லாம் கண்ணு முழிக்கனும் இப்பத்தான் ஆரம்பிச்சேன் அதுக்குள்ள கிளம்பிட்டியா’ மறுபடியும் மனசாட்சி, ஆனால் மதன் டைப் செய்தது,

**madhan::** ok, bye!! [சரி, பாய்!!]

**Note**

*வாசகர் குறிப்பு*

*இனிமேல், மதன், கார்த்திகா இடையேயான மின் உரையாடல் (chat), தமிழில் மட்டுமே வழங்கப்படும், ஏனெனில் அவர்கள்*

*ஆங்கிலத்தில் டைப் செய்தாலும் தமிழ் Phonetic இல் டைப் செய்து இருப்பார்கள் என்று கருதவும்.*

**தொடரும்..**

# கல்யாணம் ஆகி நாலு பசங்க

காலை 8:30 மணி, ‘என் லைஃப்ல ஒரு பொண்ணா?’, மதன் பல் துலக்கும் போது கண்ணாடி முன்னின்று அவன் பிம்பத்தைப் பார்த்துக் கேட்டான். ‘ரொம்ப கற்பனை பண்ணாதடா, அவ பேர பார்த்தல்ல, karthik.a.lakshman, இதுல lakshman அவ அப்பாவா இல்லாம ஹஸ்பண்ட்டா இருந்தா? அப்படியே அது அவ அப்பாவா இருந்தாலும் அவ உன்ன விடப் பெரியவளா இருந்தா?’, இது அவன் மனசாட்சி, ‘உன் வாயில நல்ல வார்த்தையே வராதா? சனியனே’, மதன் அவன் மனசாட்சியைத் திட்டினான். ‘என்ன எவ்வளவு வேணாலும் திட்டு, எனக்குப் பழகிடுச்சு, ஆனா நான் கேட்ட கேள்விக்கு முதலில் பதில் சொல்லிட்டுத் திட்ரா’, இது அவன் மனசாட்சி, ‘நீ சொல்றதும் கரெக்ட் தான், நடக்கிறது நடக்கட்டும்’, அவனைத் தெளிவுபடுத்திக்கொண்டு ஆபீஸ்க்குக் கிளம்பினான்.

காலை 9:30 மணி, ஆபீஸ் வந்தவனுக்கு அதிர்ச்சி, ‘அடப்பாவிகளா, நான்தான் 9:30 மணிக்கு வர்றதில்லை, முக்காவாசி பேரு என்ன மாதிரிதானா?’, முணுமுணுத்துக்கொண்டே வேர்க்ஸ்டேஷனில் அமர்ந்தான். ‘டே!! ஆச்சர்யமா இருக்கு, எனக்கு முன்னாடி நீயா?? அப்படி அர்ஜன்டா டாஸ்க்குக் கூட ஒன்னும் இல்லையே?? என்னாச்சு??’ உதய் கேட்க ஆரம்பித்தார். ‘ஒன்னும் இல்ல, தூக்கம்

வரல, அதான்' என்ற மதனைப் பார்த்து, 'ஓகே, ஓகே' என்று சந்தேகத்துடன் வேலையைப் பார்க்க ஆரம்பித்தார் உதய்.

வழக்கம்போல் வேலைகளில் மூழ்கியவனுக்குத் திடீரென்று நேரம் பார்க்கத் தோன்றியது, அப்பொழுது மாலை 5:40 மணி, சேட் விண்டோவைப் பார்த்தான், கார்த்திகா அவைலபில் என்று இருந்தது, ஆனாலும் பிங் பண்ண மதன் தயங்கினான். இப்படியே சிறிது நாட்கள் ஓடின. ஆரம்பத்தில் மாலை 5:30 மணி வாக்கில் சேட் விண்டோவைப் பார்த்தவன் நாட்கள் செல்லச் செல்ல அதை மறந்து தன் பழைய ரொட்டீனிற்குத் திரும்பினான்.

திடீரென்று ஒரு நாள், அதே மாலை 5:45, மதனின் சேட் விண்டோ மினுங்கியது, அதில்,

| | |
|---|---|
| **கார்த்திகா::** | இருக்கீங்களா? |
| **மதன்::** | சொல்லுங்க |
| **கார்த்திகா::** | ஷெல் ஸ்கிரிப்டிங் கத்துக்கணும் |
| **மதன்::** | கத்துக்கோங்க |
| **கார்த்திகா::** | விளையாடுறீங்களா, கத்துக்கொடுங்க |
| **மதன்::** | நான்லாம் யாருங்க உங்களுக்குக் கத்துக் கொடுக்குறதுக்கு, நீங்க பெரியவங்க, வயசுல மூத்தவங்க, நாலு பிள்ளைகள் பெத்தவங்க |
| **கார்த்திகா::** | சோ ஸ்மார்ட், நேரா விஷயத்துக்கு வரீங்க? |

**மதன்::** தெரியாம மண்டைய பிச்சுக்க வேணாம் பாருங்க, அதான்

**கார்த்திகா::** ஆல்ரைட், ஐயாம் 32 நவ், மேரிட், ஆவ் 2 கிட்ஸ், உங்களுக்கு?

‘உனக்கு வாந்திபேதி வர, காமாலை கொண்டுட்டுப் போக, என்னன்னமோ நெனச்சுபுட்டேனடி, அப்ப lakshman உன் புருஷன் தானா?’ மதனின் மனசாட்சி கொந்தளித்தது, ஆனால் மதனோ அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல் தொடர்ந்தான்,

**மதன்::** ரன்னிங் 25, ஸ்டில் தனிக்கட்டை

**கார்த்திகா::** தம்பி, ஒலருனியா , எப்படி? ஒரு பொண்ணுகிட்ட வயசு கேட்டவுடன் உண்மைய சொல்லுவாளா? உன்னோட ஏஜ் தெரிஞ்சிருச்சுல்ல, இப்ப சொல்றேன், என்னோட ஒரிஜினல் ஏஜ் 27, உன்ன விட 2 வயசு மூத்தவ. ஸ்டில் பேச்சிலரிட்டி. அக்கான்னு கூப்பிடனும் புரிஞ்சதா?

**மதன்::**

நீங்க ப்ரில்லியன்ட் கா, பசங்க மட்டும் வயச கேட்டவுடனே உண்மைய சொல்லிடு வாங்கன்னு தெரிஞ்சு வச்சிருக்கீங்க. பட் ஐயாம் 28, செக் பண்ணனும்னா, என்னோட ஐடி தர்றேன் எச்ஆர் எவளாச்சும் உங்களுக்கு பிரண்டா இருப்பால்ல, அவ கிட்ட கொடுத்து வெரிபை பண்ணிக்கோங்க.

**கார்த்திகா::** ம்ம், நான்தான் அவுட்டா?

**மதன்::** அத விடுங்க, என்ன விஷயம்?

**கார்த்திகா::** என்னங்க புதுசாக் கேட்கறிங்க, ஷெல் ஸ்க்ரிப்டிங் கத்துக்கொடுங்க, ஆக்ஷுவலி நான் உங்க டெஸ்க்குக்கே வந்திருப்பேன்.

**மதன்::** நீங்களாவது நேர்ல வரதாவது

அதன் பிறகு கார்த்திகா டைப் செய்யவில்லை. ‘சொதப்பிட்டியோ’ மதன் உள்ளுக்குள் பேசிக்கொண்டான், மறுபடியும் அவன் வேலையில் மூழ்கினான், சிறிது நேரம் கழித்து யாரோ டெஸ்க்கைத் தட்டுவது கேட்டு மேலே பார்த்தவனுக்கு அதிர்ச்சி, ‘என்ன பிரதர், உங்க டெஸ்க் வந்தாச்சு, போதுமா? இப்பவாச்சும் சொல்லிக் கொடுப்பீங்களா?’ என்றாள் கார்த்திகா நேரில்.

‘ஆதிவாசிக்கு ஆவின் பாலா, வாழ்வுதான் உனக்கு, அயிட்டு அரேபியா ஒட்டகக் கணக்கா இருக்கே, நம்ம பயபுள்ளையும் அயிட்டுதான்’ மனசாட்சி கணக்குப் போட ஆரம்பித்தது.

‘வாங்க சிஸ்டர், உட்காருங்க, என்ன சாப்பிடறீங்க, காப்பி ஆர் டீ?’ என்று பேசிக்கொண்டே உதய் இருக்குமிடத்தைப் பார்த்தான் மதன், அவர் முகத்தைக் காட்டவில்லை ஆனால் அவர் உள்ளுக்குள் சிரித்துக் கொண்டிருப்பதை மதனால் நன்றாக உணர முடிந்தது. ‘இருக்கட்டும் ப்ரதர், பரவாயில்லை’ என்றாள் கார்த்திகா. ‘லிப்ட்ல வரலையா, மூச்சு வாங்குது, எந்த ப்ளோர்ல இருந்து நடந்து வந்தீங்க?’ இது மதன், ‘மறுபடியும் உங்க கிட்ட ஏமாற மாட்டேன், எனக்குத் தான் உங்க இடம் தெரிஞ்சிருச்சில்ல தேவைப்படும்போது நானே வர்றேன்’, என்றாள் கார்த்திகா.

‘சரிடா மொக்க, நான் கிளம்பறேன், ஏற்கனவே எம் பொண்டாட்டி ரெண்டு முறை கால் பண்ணிட்டா, நேரத்துக்குப் போகலைன்னா வெளியே நிக்க வச்சுருவா’ என்றார் உதய். ‘நா, இது கார்த்திகா, அன்னிக்கு ப்ரொடக்ஷன்ல ப்ரச்சன வந்தப்பொ நீங்கதானே இவங்கள ஹெல்ப்புக்குக் கூப்பிட்டீங்க’, மதன் அறிமுகப்படுத்தினான். ‘அது கார்த்திக் இல்ல?’ என்றவரிடம், ‘இல்லைங்க, அது karthik.a, கார்த்திகா, நான்தான், ஜாயின் பண்ணும்போது எச்ஆர் பண்ண மிஸ்டேக்’ என்று அறிமுகப்படுத்திக்

கொண்டாள், ‘ஓ ஓகே நைஸ் டூ மீட் யு, நீங்க கன்டினியுவ் பண்ணுங்க, நான் கிளம்பறேன்’, என்று சொல்லி விடைபெற்றார் உதய்.

‘மொக்க, நிக்னேமோ? பொண்ணுங்க கூட அதிகம் பேசுவீங்களா? நிறைய கேர்ள் பிரண்ஸ் இருக்காங்களோ?’, என்றவளிடம், ‘கொஞ்ச நாள் கழிச்சு நீங்களே புரிஞ்சுக்குவீங்க, வந்த வேலையை ஆரம்பிக்கலாமா?’, என்றான் மதன்.

**கார்த்திகா::** ஆமா? ஷெல் ஸ்கிரிப்டிங் கத்துக்க எத்தனை நாள் ஆகும்? ஒரு நாளைக்கு எவ்வளவு நேரம் செலவாகும்?

**மதன்::** என்னது? எத்தன நாள்? எவ்வளவு நேரமா? ஒரே நாள், ஐஞ்சு நிமிஷம், உங்க லினக்ஸ் சர்வர்ல போய், ‘man sh’ கமாண்ட் அடிங்க, ஒரு மேனுவல் வரும், அத ஒரு எழுத்து விடாம மனப்பாடம் பண்ணுங்க, எவனாவது, ஷெல் ஸ்கிரிப்டிங் பத்தி கேட்டான்னா, நீங்க படிச்சத அப்படியே வாந்தி எடுங்க அது போதும்

**கார்த்திகா::** கிண்டலா?

**மதன்::**

சீரியஸ்சாங்க, நீங்க ‘man sh’ கமாண்ட் மூலம் வர மேனுவல்ல இருக்குற அத்தனை விஷயத்தையும் தெரிஞ்சுக்கிட்டா ஷெல் ஸ்கிரிப்டிங் தெரிஞ்சா மாதிரி

**கார்த்திகா::** ஆனா நீங்க வேற எதையோ பத்தி முதல்ல சொல்ல வந்தீங்கன்னு நினைக்கிறேன்?

**மதன்::** உங்களுக்கு ஷெல் ஸ்கிரிப்டிங் பத்தி மட்டும் தானே தெரிஞ்சிக்கனும், அதுக்கு அந்த மேனுவல் போதும்.

**கார்த்திகா::** இல்ல இல்ல, நிறைய தெரிஞ்சுக்கணும், ஷெல் ஸ்கிரிப்டிங், லினக்ஸ்

**மதன்::** லினக்ஸ்னா என்னன்னு நினைச்சுட்டு இருக்கீங்க?

**கார்த்திகா::** லினக்ஸ் விண்டோஸ் மாதிரி ஒரு OS, சர்வரா நிறைய இடத்துல யூஸ் பண்றாங்க, வைரஸ் வராது, அதானே?

**மதன்::** லினக்ஸ் வெறும் OS இல்லீங்க, அதுக்குப் பின்னாடி ஒரு சரித்திரமே இருக்கு.

**கார்த்திகா::** ஹிஸ்டரி? சொல்லுங்க கேட்போம்

**மதன்::**

அதுக்கு நாம 1950 ஸ்குப் போகணும் கொஞ்சம் பெரிய கதை, இப்பவே நைட் 09:00 மணி, என்ன நைட் ஸ்டேயா?

**கார்த்திகா::** நோ வே, பட் கண்டிப்பா நீங்க இந்தக் கதையைச் சொல்றீங்க, சரி நான் கிளம்பறேன், சியூ பாய்!!

**மதன்::** அடுத்து எப்போ?

**கார்த்திகா::** தெரியாது, நானே வர்றேன். பாய்!!

**மதன்::** டேக் கேர், பாய்!!

‘அவகிட்ட ஏன்டா டைம் சொன்ன கேனக்’ சரமாரியாகத் திட்டியது மனசாட்சி, அதற்கு மதன், ‘அவ இப்ப கெளம்பலன்னா, கதை சொல்லி முடிக்கும் வரை இங்கேயே இருந்திருப்பாடா மானங்கெட்ட மனசாட்சி’ என்றான்.

அதன் பிறகு அவனுக்கு வேலை ஓடவில்லை, பேன்ட்ரிக்கும் டெஸ்க்கிற்கும் அல்லாடிக் கொண்டிருந்தான். காபி போடும் மெஷின் காரித் துப்பாத குறை. ‘என்டா சூனியம் வச்சா மாதிரி சுத்தர’ மனசாட்சி கேட்டது. ‘எனக்கு என்ன ஆனா உனக்கு என்னடா’, இது மதன். ‘டேய், தேவயில்லாம கற்பனைய வளத்துக்காத, அந்தப் பொண்ணப் பாத்தா படத்துல வர ரிச்சு கேர்ல்ஸ்ல ஒருத்தி மாதிரி இருக்கா, எப்படியும் பத்துப் பேர் அவளோட வெயிட்டிங் லிஸ்ட்ல இருப்பானுங்க, நீயும் பத்தோட பதினொன்னா போயிடாத, நமக்கு

வேற பொழப்பு இருக்கு' என்றது மனசாட்சி, 'கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி அப்படித் திட்டின, இப்ப அட்வைஸ் பண்ற, ஏன்டா குழப்புற, பாடு', இது மதன், 'அதான்டா என் வேலையே, நீதான் தெளிவாகிக்கணும்', இது மனசாட்சி, 'கரெக்டா, நமக்கு வேற பொழப்பிருக்கு' தெளிவானான் மதன்.

மறுநாள், மதனின் க்யூப்பிக்கல்லில் ஒரு பெரிய விசாரணை கமிஷன் குழு மதனுக்காகக் காத்திருந்தது, விசாரணை கமிஷனில் இருப்பவர்கள் எல்லோரும் மதனின் நண்பர்கள், ஆனால் மதனின் ப்ராஜக்ட் அல்ல, மதனின் ப்ராஜக்டில் அவனும், உதயும் மட்டுமே அடக்கம், இவர்கள் இருவருக்கும் மேனேஜர் லலிதேஷ் பூனேவில் இருக்கிறார். உள்ளே வரும்போது கூட்டத்தைப் பார்த்து அவர்கள் எதற்காகக் கூடியிருக்கிறார்கள் என்று யூகித்துக் கொண்டான் மதன். 'என்ன பஞ்சாயத்தா யாரு மேல ப்ராது?' சந்தேகத்துடன் மதன், 'நடிக்காதடா, இந்தப் பூனையும் பால் குடிக்குமான்னு பார்த்தா, நேத்து ஈவினிங் நாங்க போயிட்டப்புறம் பீரே அடிச்சிருக்கு?', ஆரம்பித்தான் மதனின் உற்ற நண்பன் சுரேஷ். 'டே, இல்லடா, உதய்னா, நீங்க ஏதாவது எக்ஸ்ட்ரா பிட்டு சேர்த்துட்டீங்களா?', இது மதன், 'தம்பி, நானா வாய தொறக்கல, இவனுங்க வந்து கேட்டாங்க, நான் நேத்து இருந்தவர நடந்ததைச் சொல்லியிருக்கேன், மீதி நீயே பார்த்துக்கோ' தப்பித்துக் கொண்டார் உதய்.

‘இல்லடா, அவங்களுக்கு லினக்ஸ் கத்துக்கணுமாம் அதான் வந்திருந்தாங்க’ மதன் சமாளித்தான். ‘கதவிடாதடா, லினக்ஸ் அட்மினே லினக்ஸ் வந்து உன்கிட்ட கத்துக்கப் போறாங்களா, உண்மைய சொல்லு, யார் அவங்க? எதுக்கு வந்தாங்க? ப்ரதர்னு கூப்டாங்கலாமே, உனக்கு ஊர்ல இருக்குறது ஒரே ஒரு கருவாச்சி, அவளையும் கட்டிக்கொடுத்துட்ட, இது யார்ரா புது தங்கச்சி, அட்மின் தங்கச்சியா தான் இருக்காங்களா? இல்ல அடுத்த ஸ்டேஜ், பிரண்டுக்கு வந்துட்டாங்களா?’, மடக்கினான் சுரேஷ், ‘டேய் பண்ணாட, வெறுப்பேத்தாதடா, நானே கடுப்புல இருக்கேன், அவங்களுக்கு கல்யாணம் ஆகி ரெண்டு பசங்க இருக்காங்க. அவங்க முதல்ல ஒரு விண்டோஸ் அட்மின், லினக்ஸ் அட்மின் டீமுக்கு வந்ததுக்கப்புறம் சரியாக வேலை செய்ய முடியலையாம், கூட இருக்கற வங்க இவங்களுக்கு லினக்ஸ் சரியாத் தெரியலன்னு மட்டம் தட்டுறாங்களாம், அதான் என்கிட்ட ஹெல்ப் கேட்டாங்க, வேற ஒரு மண்ணாங்கட்டியும் இல்லை, போதுமா?’, சமாளித்தான் மதன். ‘ஆன்ட்டியா? பாத்தா அப்படி தெரியலையே’, மீண்டும் சுரேஷ், ‘வேணும்னா அவங்க குடும்பத்தைக் கூட்டிட்டு வரச் சொல்லட்டுமா? உன்ன மாதிரி ஹைக்ளாஸ்டா, வைன் சாப்பிட்டு ஸ்கின் மெயிண்டெயின் பண்ணுவாங்க போல, உனக்குத்தான் பப்பு பிகர்களைப் பற்றி நல்லா தெரியுமே, எப்படி இருக்கா உன் அருமைத் தோழி கஞ்சாகுடிக்கி, ரெண்டு பேரும் சேர்ந்து தான பப்புக்குப்

போவீங்க?’, எதிர் ஏவுகணையை எய்தான் மதன். ‘உன்ன விட நல்லவங்க நிறைய பேர அங்க மீட் பண்ணி இருக்கேன், சரி விடு, நீ சொல்றத நம்பிட்டேன். சாரிடா, ஏதோ இன்ட்ரஸ்டிங்கா உன் லைஃப்ல நடக்குதுன்னு கேட்டோம். வேற ஒன்னும் இல்ல’, முடித்தான் சுரேஷ். ‘எனக்கும் தெரியும்டா, போய் இருக்குற வேலைய பாரு’ என்றான் மதன்.

ஒருவழியாக சேரில் உட்கார்ந்தான் மதன், உடனே டெஸ்க் போன் ரிங் அடித்தது, மறுபுறத்தில் மதனின் மேனேஜர் லலிதேஷ், எடுத்துப் பேசினான், ‘சொல்லுங்க லலித்’, இது மதன், ‘மொக்க, யார்ரா அந்த அட்மின் பொண்ணு?’, லலித் கேட்க, ‘நீங்களுமா, உங்கவர பரப்பிட்டாங்களா, மறுபடியும் எக்ஸ்ப்லெய்ன் பண்ணனுமா, ஆள விடுங்க நான் இன்னைக்கு மவுன விரதம்’, தப்பித்தான் நம்ம ஹீரோ.

**தொடரும்..**

# யுனிக்ஸ் பிறந்த கதை

மீண்டும் ஒரு மாலைப்பொழுது, கதை கேட்கும் ஆர்வத்தில் கார்த்திகா மதனின் இடத்திற்கு சிறிது சீக்கிரமாக வந்துவிட்டாள், ‘என்ன பிரதர், டாஸ்க் எதுவும் இல்லையா, நியூஸ் படிச்சிட்டு இருக்கீங்க.’ கேட்டவாறே அருகில் இருந்த சேரில் அமர்ந்தாள். ‘வேலை எல்லாம் முடிச்சாச்சா?’, விசாரித்தான் மதன். ‘லினக்ஸ் கதையைக் கேட்க சீக்கிரம் வந்துட்டேன். ஆரம்பிங்க.’, அவசரப்படுத்தினாள்,

**மதன்::** ஸ்கிரீன் ஓப்பன் பண்ணா, ஒரு பெரிய ரூம், அங்கு ஒரு பெரிய மெஷின், அதுக்குப் பேரு விர்ல்வின்ட் ஒன் (Whirlwind I) இது அமெரிக்கால MIT பல்கலைக்கழகத்தில் இருந்தது. இந்த மெஷின்ல தான் மொதல்ல ரேண்டம் ஆக்சிஸ் மெமரி வச்சாங்க (RAM). இதனால இதுக்கு முன்னாடி இருந்த கம்ப்யூட்டர்களவிட இந்த கம்ப்யூட்டர் ரொம்ப வேகமா ரன் ஆச்சு. இந்த கம்ப்யூட்டர மேம்படுத்தி tx-0 கம்ப்யூட்டர் உருவாக்கினாங்க. இந்த ரெண்டு கம்ப்யூட்டர்களையும் ஒருத்தர்

முடியும். இந்த மாதிரி ஸிங்கில் டாஸ்க்கா இருந்த ஒரு IBM 7094 கம்ப்யூட்டர டைம் ஷேரிங் மெஷினா 1963 ல மாத்திக் காட்டினாங்க, அந்த டைம் ஷேரிங் ஆப்பரேட்டிங் சிஸ்டத்துக்கு CTSS (Compatible Time Sharing System) அப்படின்னு பேர் வச்சாங்க. இந்த CTSS ஆப்ரேட்டிங் சிஸ்டம் மேம்படுத்த ப்ராஜெக்ட் மேக்(Project MAC) அப்படிங்கற திட்டத்தை உருவாக்கி MIT ல ஒரு குரூப் மண்டையைப் பிச்சுக்கிட்டு இருந்தாங்க, இவங்க கூட Bell Labs ம் GE (General Electrics) ம் சேர்த்துக்கிட்டாங்க. இவங்க உருவாக்கப் போற அந்த மல்டி டாஸ்க்கிங் ஆப்பரேட்டிங் சிஸ்டத்துக்கு மல்டிக்ஸ்னு (Multics - Multiplexed Information and Computing Services) பேரும் வச்சுக்கிட்டாங்க.

**கார்த்திகா::** MIT, Bell Labs, GE, Multics, நியாபகம் வெச்சுக்குறேன்

**மதன்::**

ஆனா இந்த மல்டிக்ஸ் ப்ராஜெக்ட்டுக்கு நிறைய பைனான்ஸ் பண்ண வேண்டி இருந்தது, அவ்வளவு செலவு செஞ்சும், எந்த ஒரு நல்ல இம்ப்ரூவ்மெண்ட் இல்ல, இதுக்கு மேல கண்டினியூ பண்ணா கஞ்சிக்குக் கூட லாட்ரி அடிக்கணும்னு முடிவு பண்ணி 1969 ல Bell Labs ப்ராஜக்ட்ல இருந்து வெளிய வந்துட்டாங்க. இங்கதான் பிதாமகன்கள் இரண்டுபேர அறிமுகப்படுத்தப்போறேன், ஒருத்தர் பேரு கென் தாம்ஸன் (Ken Thomson) இன்னொருத்தர் பேரு டென்னிஸ் ரிட்சி (Dennis Ritchie), இவங்க ரெண்டு பேரும் Bell Labs காக மல்டிக்ஸ் ப்ராஜக்ட்காக வொர்க் பண்ணவங்க.

**கார்த்திகா::** டென்னிஸ் ரிட்சி (Dennis Ritchie), பேர எங்கேயோ கேள்விப்பட்டிருக்கேன்

**மதன்::** இந்தியாவ கண்டுபிடிக்கிறேன் அப்படின்னு சொல்லிட்டு கப்பல் ஏறி வரும் போது காத்தடிச்சு வழி தெரியாம அமெரிக்கால லேண்டானாரே அவர்தான்.

**கார்த்திகா::**

ஆமால்ல, இல்ல, அவரு பேரு கொலம்பஸ், எனக்கேவா, நாங்களும் ஹிஸ்டரி படிச்சிட்டுத் தான் வந்திருக்கோம், கதைக்கு வாங்க

**மதன்::** Bell Labs க்கு ரிட்டர்ன் ஆன ரெண்டு பேரும் அவங்க மல்டிக்ஸ்ல கத்துக்கிட்ட விஷயங்கள அவங்களோட குளோஸ் பிரண்ஸ் கிட்ட ஷேர் பண்ணிக்கிட்டாங்க, அவங்கள்ல முக்கியமானவர் Doug McIlroy, அவங்க ரிசர்ச் சென்டரோட வருங்கால ஹெட். வந்தவங்க ரெண்டு பேரும் பெஞ்சில் இருக்கோமே ஒரு டூர் அடிக்கலாம்னு இல்லாம, எங்களுக்கு ஒரு மிஷின் வேணும் மல்டிக்ஸ் பத்தி நிறைய ஐடியா இருக்குன்னு கம்பெனி கிட்ட கேட்டாங்க. போங்கடா, பொழப்பு கெட்ட பசங்களா, நீங்க குருவி வெடி வெடிக்க நான் காசைக் கரியாக்கனுமா? அப்படின்னு சொல்லி ப்ரபோசல் ரிஜக்ட் பண்ணிட்டாங்க.

**கார்த்திகா::** குருவி வெடி, இதையும் நியாபகம் வெச்சுக்கறேன்.

**மதன்::**

அப்பத்தான் இவங்க கிட்ட ஓரங்கட்டின ஒரு PDP-7 மெஷின் கெடச்சது. தாம்சன் என்ன பண்ணாரு, அவரு ஏற்கனவே மல்டிக்ஸ்ல எழுதின ஸ்பேஸ் டிராவல் கேம, இவங்ககிட்ட இருக்குற ஐடியாக்கள் யூஸ் பண்ணி PDP-7 னின் அசம்ளி லாங்குவேஜ்ல எழுதிட்டாரு. இதுல கெடச்ச கான்பிடன்ஸ் வெச்சு, பிரண்ட்ஸ் எல்லாம் சேர்ந்து PDP-7 ல ஒரு ஆப்பரேட்டிங் சிஸ்டம் உருவாக்கிட்டாங்க. இதுக்கு UNICS (UNiplexed Information and Computing Service) னு பேரும் வெச்சுட்டாங்க. இவங்கள்ல ஒருத்தர் Kerningen, இவருக்கு UNICS ல லாஸ்ட்டா இருக்குற S எழுத்து புடிக்காம அத X ஆ மாத்தி, UNIX ஆக்கிட்டாரு. இது நடந்தது 1970.

**கார்த்திகா::** UNIX இப்படித்தான் வந்ததா? இன்ட்ரஸ்டிங்

**மதன்::**

கொஞ்ச நாள்லயே Doug McIlroy ரிசர்ச் சென்டர் ஹெட் ஆனாரு, இவங்களோட வொர்க் புடிச்சு போக, இவங்களுக்காக PDP-11 வாங்க கம்பெனிக்கு சஜஸ்ட் பண்ணாரு. PDP-7 ல இருந்து PDP-11 க்கு UNIX போர்ட் பண்ணாங்க, கூடவே கம்பெனிக்குத் தேவையான ஒரு சாப்ட்வேர அதுல ரன் பண்ண வச்சாங்க. தாம்சன் அதேநேரம் ஈஸியா ப்ரோக்ராம் எழுத B னு ஒரு லாங்வெஜ் BCPL ன்ற லாங்வெஜ்ல இருந்து உருவாக்கினார், அத Dennis Ritchie இன்னும் மெருகேற்றி ஈஸியா ப்ரோக்ராம் எழுத ரொம்ப ஈஸியான லாங்குவேஜ்ஜா மாத்திட்டாரு. அதுக்குப் பேரு C அப்படின்னு வச்சுட்டாரு. ப்ரண்ட்ஸ் எல்லாம் மறுபடியும் சேர்ந்து அசம்லில இருந்த UNIX ச C ல எழுதிட்டாங்க. இப்படித்தான் C லாங்குவேஜ் வந்தது. இது நடந்தது 1972. இவங்க எக்ஸ்ராவா, நிறைய கமாண்ஸ்களையும் UNIX காக C ல எழுதிட்டாங்க, அப்படி வந்துதான் ls, grep, cut, mv எல்லாம்.

**கார்த்திகா::**

| | |
|---|---|
| | கரெக்ட், C லாங்வேஜ், Dennis Ritchie, இப்பதான் நியாபகம் வருது, C ரொம்ப ஈஸியான லாங்குவேஜ்ஜா? |
| **மதன்::** | அது அவர்களுக்கு |
| **கார்த்திகா::** | சரி மேல சொல்லுங்க, ரொம்ப இன்ட்ரஸ்டிங்காப் போகுது |
| **மதன்::** | அதுக்கப்புறம் Bell Labs ல மட்டும் இருந்த UNIX ச தாம்சன் என்ன பண்ணாரு, அவர் படிச்ச Berkeley யூனிவர்சிட்டி ரிசர்ச் பசங்களுக்குக் காண்பிச்சு கத்தும் கொடுத்துட்டாரு. அங்க இருந்த பசங்கல ஒருத்தர்தான் Bill Joy, இவரு கையும் காலையும் வச்சிக்கிட்டுச் சும்மா இல்லாம, vi எடிட்டர் எழுதிட்டாரு. இதைப் பார்த்த பசங்க நீ மட்டும் தான் எழுதுவியா, நானும் எழுதுறேன் பாரு அப்படின்னு சொல்லிட்டு ஏகத்துக்கும் UNIX கமாண்ஸ்ஸ C ல எழுத ஆரம்பிச்சுட்டானுங்க. அப்படி வந்ததுதான், sed, awk எல்லாம். இதுக்கிடையில அமெரிக்க ஆர்மி யோட டிபன்ஸ் டிப்பார்ட்மென்ட், இந்த பசங்க கிட்ட வந்து தியரியா இருக்குற ஒரு நெட்வொர்க் டிசைன்ன இம்பிளிமெண்ட் பண்ணச் சொன்னாங்க |

இவனுங்க அத இம்பிளிமெண்ட் பண்ணதுக்கு பேருதான் பெர்க்லி சாக்கெட்ஸ் (Berkeley Sockets), இந்த இம்ளிமெண்டேஷன ஆர்மி எடுத்துட்டு போய் அவங்க கிட்ட இருந்த UNIX சிஸ்டங்களில் இன்ஸ்டால் பண்ணி ARPANET உருவாக்குனாங்க, அதுதான் இன்னைக்கு INTERNET டா வளர்ந்து நிக்குது.

**கார்த்திகா::** INTERNET பொறந்ததே UNIX லயா, சூப்பார்ப், பர்ஸ்டைம் இத கேள்விப்படறேன்

**மதன்::** சாப்ட்வேர் இன்டஸ்ட்ரீல நடந்த மேஜர் ஈவன்ஸ் எல்லாம் UNIX வழி வந்த ஆப்பரேட்டிங் சிஸ்டங்கள்ளதான் நடந்தது, ஒன்ன தவிர

**கார்த்திகா::** அந்த ஒன்னு என்னது?

**மதன்::** அதப்பத்தி அப்புறமாச் சொல்றேன்.

இவர்கள் பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்த சுரேஷ் அவர்களிடம் வந்து, கலாய்ப்பதாக நினைத்துக்கொண்டு, குட்டையைக் குழப்பினான், ‘அட்மின், இவன்கிட்டயா, அனேகமா நாளைக்கு டாக்டர்ட உங்க காத காட்ட வேண்டியிருக்கும் சீக்கிரம் வீட்டுக்கு எஸ்கேப் ஆயிடுங்க, உங்க பசங்க தேடப் போறாங்க’ சொல்லிட்டு மதன் அடிக்க வருவானோ என்று பயந்து ஓடிவிட்டான். ‘பசங்களா?

எனக்கா?' மதனை முறைத்தவாறு கேட்டாள். 'நீங்க சொன்ன அதே 'ஐயாம் 32 நவ்' பொய், அத அப்டியே மெயின்டேன் பண்ணுங்க, அதுதான் உங்களுக்கும் நல்லது எனக்கும் நல்லது' சமாளித்தான் மதன். 'என்ன பாத்தா 32 மாதிரியாத் தெரியுது', கடுப்பாகிப் கேட்டாள். 'போனானே அவனும் இதத்தான் கேட்டான். அதுக்கு நான் ஒன்னு சொன்னேன், நம்பிட்டான்' என்றான். 'என்ன சொன்னீங்க?' என்றாள், 'சொன்னா டென்ஷன் ஆக கூடாது' என்றான், 'நான் ஏற்கனவே கடுப்புல தான் இருக்கேன், என்ன சொன்னீங்க?' வெறித்தனமாகக் கேட்டாள். 'ஹய் கிளாஸ் ஆன்டிங்கள்லாம் சின்ன பொண்ணாத் தெரிய பப்புக்குப் போய் வைன் அடிப்பாங்க அதனால்தான் நீங்க சின்ன பொண்ணா தெரியறீங்கன்னு சொன்னேன்' நடந்ததைக் கூறினான் மதன். 'என்ன ரொம்ப இன்சல்ட் பண்ணிட்டீங்க' கோபித்தாள். 'சரி, நாளைக்கு எல்லாரையும் கூப்டு, அட்மின் ஆன்ட்டி இல்ல சின்ன பொண்ணுதான், அப்ளிகேஷன் போட்றவங்க போடலாம்னு அனவுன்ஸ் செஞ்சிடறேன் போதுமா?' என்றான். 'நீங்க சும்மா இருந்தாலே போதும், நான் ஆல்ரெடி ரிசர்வ்டு, கதைக்கு வாங்க' என்றாள்.

'நெனச்சன்டி, நீ புக்காயிட்ருப்பண்ணு, எந்தப் பொண்ணு இன்னைக்கு 27 வயசு வரைக்கும் ப்ரீயா இருக்கா, அதுவும் உன்ன மாதிரி IT ல இருக்குறவளுங்க, அதனாலத்தான் அனுபவஸ்தன் ஒருத்தன், நீ விரும்புற பொண்ண கட்டுனா அதுக்குப் பேரு லவ் மேரேஜ்,

இன்னொருத்தன் விரும்புன பொண்ண கட்டுனா அதுக்குப் பேரு அரேஞ்ச்டு மேரேஜ்னு டிவிட்டர்ல டிவீட்ட போட்டான்.'

மனசாட்சியின் குரல் மதனுக்குக் கேட்டது.

**மதன்::** சரி கதைக்கு வருவோம். இப்படி UNIX வளர்ந்து வந்த நேரத்தில், சாப்ட்வேர் இன்டஸ்ட்ரீல ஒரு தொற்றுநோய் பரவுச்சு. அதுவரைக்கும் சாப்ட்வேர் விற்கும் போது அதோட சோர்ஸ் கோடையும் சேர்ந்து கொடுப்பாங்க, 1970 ஸ் எண்டுலயும் 1980 ஸ்டார்டிங்ளையும் இந்த வழக்கம் மாறிடுச்சு. கம்பெனிங்க மத்த கம்பெனிங்களுக்கு அவங்க எழுதிய லாஜிக் தெரியக்கூடாதுன்னு சாப்ட்வேர் விற்கும்போது சோர்ஸ் கோட் தர மறுத்தாங்க. அதுவரைக்கும் மேத்தமெடிக்ஸ் தியரம் மாதிரி ஈஸியாக் கெடச்சிக்கிட்டிருந்த சோர்ஸ் கோடுங்கல கண்ல பார்ப்பதே குதிரைக் கொம்பா மாறிடுச்சு. சாதாரணமாக இருந்த சாப்ட்வேர் புரொபிரைட்டரி சாப்ட்வேரா (proprietary software) மாறிடுச்சு. இதனால ஒரு யூசர் அவன் காசு கொடுத்து வாங்கின ப்ரோக்ராம்ல ப்ரச்சன இருந்துச்சுன்னா அத அவனாலேயே சரி

பண்ணிக்க முடியல, மறுபடியும் வாங்கின கம்பெனி கிட்ட ஓட வேண்டி இருந்தது. அந்த கம்பெனி அந்த யூசர் பிரச்சனைய சரிபன்ன சர்வீஸ் சார்ஜா மறுபடியும் காசக் கரந்தானுங்க.

**கார்த்திகா::** அவுங்க எழுதிய ப்ரோக்ராம்ல இருக்குற பிரச்சனைய கிளியர் பண்ண யூசர் இன்வஸ்ட் பண்ணனுமா, நல்ல கதையா இருக்கே??

**மதன்::** அப்படி நொந்து போனவர்கள்ல ஒருத்தர்தான் Richard Mathew Stallman, இவரு MIT ல ஒர்க் பண்ணும் போது அங்கிருந்த ஒரு புது பிரிண்டர்ல இவருக்குத் தேவையான ஒரு விஷயம் இல்ல, அத நானே அந்த பிரிண்டர்ல சேர்த்துக்குறேன் எனக்கு அந்த பிரிண்டர் டிரைவர் சோர்ஸ் கோட கொடுங்கன்னு அந்த ப்ரின்டர் கம்பெனி கிட்ட கேட்டார், அதற்கு அந்த கம்பெனி ‘போயா லூசு, எந்தக் காலத்துல இருக்க, வாங்கும்போது காப்பிரைட் லைசன்ஸ் பார்த்தியா இல்லையா, அதுல சோர்ஸ் கோட் கொடுக்கமாட்டோம்ன்னு போட்டிருக்கோம்ல, அந்த லைசென்ஸ அக்சப்ட் பண்ணிட்டுத் தான ப்ரின்டர் வாங்குன, இப்ப சோர்ஸ் கோட் கேட்குற?’ னு சொல்லிக் கொரக்கிடுச்சு. அப்ப

முடிவு செஞ்சார், ‘இருங்கடா, இதுக்கெல்லாம் ஒரு முடிவு கட்றேன், இன்னைக்கு பாப்புலரா இருக்குற புரோபிரைட்டரி யுனிக்ஸ் மாதிரியே ஒரு ஆப்ரேட்டிங் சிஸ்டம் எழுதி அத காபிலெப்ட் லைசென்சா சோர்ஸ் கோடோட கொடுக்கிறேன்’ அப்படின்னு முடிவு பண்ணி எழுதவும் ஆரம்பிச்சுட்டார். அவர் எழுத ஆரம்பிச்ச அந்த ஆப்பரேட்டிங் சிஸ்டத்துக்கு பேரு GNU/Hurd, அவர் சொன்ன அந்த காபிலெப்ட் லைசென்சுக்குப் பேரு GPL. இந்த GPL லைசென்ஸ் யூஸ் பண்ற சாப்ட்வேர்களின் சோர்ஸ் கோட யாருவேனும்னாலும் படிக்கலாம், அதுல தப்பிருந்தாத் திருத்தலாம், எப்படி வேணும்னாலும் இயக்கலாம், ஒரிஜினல் சோர்ஸ் கோட யாருக்கு வேண்டுமானாலும் பகிரலாம், அதுமட்டுமல்லாம திருத்தின சோர்ஸ் கோட யாருக்கு வேண்டுமானாலும் பகிரலாம். இதுக்குப் பேரு போர் ஃப்ரீடம்ஸ் (Four Freedoms) அப்படின்னு சொல்லுவாங்க. இந்த மாதிரியான சாப்ட்வேர்கள் தான் ப்ரீ சாப்ட்வேர்ஸ் (Free Software) இல்லின்னா ஓப்பன் சோர்ஸ்

சாப்ட்வேர் அப்படின்னு (Open Source Software) சொல்லுவாங்க. இந்த மாதிரி இருக்குற ஓப்பன் சோர்ஸ் சாப்ட்வேரை விக்க முடியாது, ஏன்னா சோர்ஸ் கோடையே ப்ரீயா தராங்க, அதனால் யார் வேண்டுமானாலும் காப்பி எடுத்துக்கலாம்.

**கார்த்திகா::** Open Source னா சோர்ஸ் கோட படிக்க முடியும், இப்பத்தான் தெளிவாப் புரியுது, இவ்வளவு நாளா Open Source க்கு அர்த்தம் புரியாம லினக்ஸ் அட்மினா இருந்திருக்கேன், அப்ப GNU/Hurd என்ன ஆச்சு?

**மதன்::**

சொல்றேன், அப்படி எழுத ஆரம்பிச்சவரு, அவரு எழுதின சாப்ட்வேர்சை usenet ல இவர மாதிரி இருக்குற ப்ரோக்ராமர்ஸ் கிட்ட ஷேர் பண்ணிக்கிட்டாரு. சோர்ஸ் கோட பார்த்தவங்க அதிலிருந்த மிஸ்டேக் எல்லாம் பிக்ஸ் பண்ண ஆரம்பிச்சாங்க, இப்படி இன்ட்ரஸ்டா ஒர்க் பண்ணவங்க ஒன்னா சேர்ந்து ஒரு குழுவை ஆரம்பிச்சாங்க. அதுக்கு பேரு GNU Project. ஸ்டால்மன் யுனிக்ஸ்ல இருக்குற மாதிரியே பல கமாண்ட்ஸ் எழுதினாரு, gcc ன்ற ஒரு C கம்பைலர் எழுதினாரு, emacs எழுதினாரு, ஆனா இவரால இவர் யோசிச்சு வச்சிருந்த Hurd kernel ல எழுத முடியல, ஒரு ஆப்ரெட்டிங் சிஸ்டத்துல கர்னல் இல்லாம எதுவும் இயங்காது, இவரு ஒரு OS க்குத் தேவையான எல்லாத்தையும் எழுதிட்டாரு கர்னல தவிர.

**கார்த்திகா::** அப்ப அவரோட கனவு என்னாச்சு?

**மதன்::** அவரோட கனவு 1991 ல நிஜமாச்சு. பின்லாந்தில் (Finland) ஹெல்சிங்கி யூனிவர்சிட்டில படிச்சிட்டிருந்த லினஸ் டார்வெல்ஸ் (Linus Torvalds) ன்ற ரிசர்ச் ஸ்டுடென்ட், தன்னோட குரு Andrew Tanenbaum கிட்ட இருக்குற யுனிக்ஸ்

Andrew Tanenbaum கிட்ட இருக்குற யுனிக்ஸ
கர்னல போல இருக்கும் மினிக்ஸ் (minix) கர்னல
மாதிரி தானும் ஒரு கர்னல உருவாக்க
நினைச்சார், ஆனா அவர் மினிக்ஸ் மாதிரி
மைக்ரோ கர்னலா இல்லாம ஒரிஜினல் யுனிக்ஸ்
மாதிரி ஒரு மோனோலிதிக் கர்னல
உருவாக்கினார். அதுக்கு லினக்ஸ் அப்படின்னு
பேர் வந்தது, லினக்ஸ் கம்பைல் பண்ண,
டார்வெல்ஸ், ஸ்டால்மன் எழுதிய gcc கம்பைலர்
யூஸ் பண்ணார். அதுமட்டுமில்லாம ஸ்டால்மன்
எழுதின பல ஓப்பன் சோர்ஸ் சாப்ட்வேர்ஸ் யூஸ்
பண்ணார். தன்னோட கர்னலும் ஸ்டால்மன்
சாப்ட்வேர்ஸ் போல எல்லாரும்
பயன்படுத்தனும், தவறு இருந்தாத் திருத்தனும்
அப்படின்னு ஆசைப்பட்டவர் ஸ்டால்மன் மாதிரி
அவரோட கர்னல GPL லைசன்ஸ்ல
வெளியிட்டார். உலகத்துல இருக்குற பல
புரோகிராமர்கள் அவர் கர்னல்ல வொர்க் பண்ண
ஆரம்பிச்சாங்க. லினக்ஸ் கர்னல் மட்டும் வச்சு
ஒன்னும் பண்ண முடியாது, அதேபோல GNU
ப்ரோக்ராம்கள் கர்னல் இல்லன்னா வொர்க்
ஆகாது, இந்த GNU வையும் Linux ஐயும் சிலபேர்

எடுத்துக்கிட்டு தன்னோட தேவைக்கு ஏத்தா மாதிரி தன்னோட ஆப்ரேட்டிங் சிஸ்டம் இருக்கணும்னு நினச்சு வடிவமைக்கத் தொடங்கினாங்க. அவங்க வடிவமைத்த டிஸ்ட்ரோ (distro) அப்படின்னு ஒரு முழு GNU/Linux ஆப்பரேட்டிங் சிஸ்டமா உருவாக்கி ப்ரீயா கொடுத்தாங்க (ஏன்னா, GNU/Linux ல இருக்குற எல்லா சாப்ட்வேர்களும் ஸ்டால்மன்னோட GPL லைசென்ஸில் வெளியிட்ட சாப்ட்வேர்ஸ். அதுங்கல விக்க முடியாது, அதனால GNU/Linux ஐயும் விக்க முடியாது). காலப்போக்குல GNU/Linux ச வெறும் லினக்ஸ் (Linux) அப்படின்னு கூப்பிட ஆரம்பிச்சுட்டாங்க.

**கார்த்திகா::** ச்சான்சே இல்ல, லினக்ஸ் பின்னாடி இப்படி ஒரு கதையா? நான் ஒரு லினக்ஸ் அட்மின்னு சொல்லவே கேவலமா இருக்கு.

**மதன்::**

இப்பத்தான் லினக்ஸ் பற்றி தெரிஞ்சிக்கிட்டீங்கள்ல இனி கவலைப் படாதீங்க, இன்னைக்கு உலகத்துல லினக்ஸ் இல்லாத இடமே இல்லை, செல்போனிலிருந்து சூப்பர் கம்யூட்டர் வரைக்கும் லினக்ஸ் தான், உங்க கையிலிருக்கும் ஆன்றாய்டு போன்ல இருந்து நாசா மார்ஸ்சுக்கு அனுப்பிய ரோவர் வரைக்கும் லினக்ஸ் தான். ஆனா இதப்பத்தி யாருக்குமே தெரியாது, ஏன், நம்ம IT ப்பீல்ட்லயே முக்காவாசி பேரு லினக்ஸ், விண்டோஸ்மாதிரி வெறும் OS தான்னு நினைச்சிக்கிட்டு இருக்காங்க. அது வெறும் OS இல்லைங்க, அது ஒரு உணர்வு, லினக்ஸிற்குப் பின்னாடி ஒரு சரித்திரமே இருக்கு, ஓப்பன் சோர்ஸ் புரட்சிக்கு சாட்சியா கம்பீரமா நிக்கிற ஒரு சின்னம்தான் லினக்ஸ்.

**கார்த்திகா::** வசனம்லாம் செமையா வருது

**மதன்::** இன்னும் சொல்லிக்கொண்டே போகலாம், ஆரம்பிச்சா விடிஞ்சிடும், இப்ப டைம் மிட்நைட் 00:05, இன்னும் வீட்டுக்குப் போகலையா?

**கார்த்திகா::**

என்னது? நைட்டு பன்னெண்டா? செத்தேன், உங்க ப்ரெண்ட் சொன்னது கரெக்ட், நான் அப்பவே கிளம்பியிருக்கனும், இப்ப புரிஞ்சிக்கிட்டேன் எதுக்கு உங்கள மொக்கன்னு கூப்பிடுறாங்கன்னு, பட் ஹாட்ஸ் ஆப் டூ யூ, நான் ஹிஸ்டரி கிளாஸ்ல கூட இப்டி இன்ட்ரஸ்டா கத கேட்டதில்ல, நீங்க பண்ண இன்சல்டுக்கு அப்பவே எந்திரிச்சுப் போயிருப்பேன், என்னமோ தெரியல நீங்க எக்ஸ்ப்லெயின் பண்ண விதம் என்ன உட்கார வச்சிடுச்சு

**மதன்::** அப்ப இதுதான் லாஸ்ட்டா?

**கார்த்திகா::** பார்ப்போம், எனிவே, எ பிக் தேங்ஸ்

**மதன்::** எப்படிப் போவீங்க, என் பைக் எடுத்துட்டுப் போறீங்களா?

**கார்த்திகா::** என்ன பாத்தா உங்களுக்கு காமெடி பீஸ் மாதிரி இருக்கா?

**மதன்::** இல்லங்க, உங்க பர்ஸ்னால்டி வச்சு பாக்கும் போது ஹார்லி டேவிசன் ஓட்டுவீங்களோன்னு ஒரு கெஸ்தான்

**கார்த்திகா::**

சிரிச்சிட்டேன், போதுமா, வெளிய போனா ஆட்டோ இருக்கு, அப்படி இல்லன்னா என் ஃப்ரெண்டுக்கு கால் பண்ணி அவளோட டியோவ எடுத்துட்டு வரச் சொல்லிடுவேன்.

**மதன்::** ஹாஸ்டலுக்குப் போனப்புறம் ஒரு மெசேஜ் அனுப்புங்க, எப்படியோ நீங்க லேட்டாப் போறதுக்கு நான் காரணம் ஆகிட்டேன், நீங்க பத்திரமாப் போயிட்டீங்கன்னு தெரிஞ்சிக்கிட்டா எந்த டென்ஷனும் இருக்காது பாருங்க, அதான்

**கார்த்திகா::** அது ஹாஸ்டல் இல்ல அப்பார்ட்மெண்ட், நானும் என் ப்ரண்டும் தங்கியிருக்கோம். என்ன பத்தி நீங்க கவலைப்பட வேணாம். நீங்க பத்திரமா வீட்டுக்குப் போங்க, நடு ராத்திரி மோகினி பிசாசுங்க அதிகம் சுத்துமாம், பசங்கள பாத்தா விடாதுங்களாம்

**மதன்::** நானும் சிரிச்சிட்டேன்

**கார்த்திகா::** ஓகே, பாய்

**மதன்::** சியூ

‘அந்தப் பொண்ணு அவளுக்கு ஏற்கனவே பாய் ப்ரெண்ட் இருக்கான்னு சொல்லிட்டுப் போறா, எப்டிரா உன்னால சாதாரணமா இருக்க முடியுது’ ஆரம்பித்தது மனசாட்சி. ‘அவளுக்கு ஆள் இருந்தா

என்ன, இல்லாட்டி என்ன, நான் ரொம்ப நாளா யார்கிட்டயாவது சொல்லணும்னு இருந்த விஷயத்த இன்னைக்குத் தான் முழுசா சொல்லியிருக்கேன், அது போதும் எனக்கு' என்று சந்தோஷத்துடன் தன் மனசாட்சியிடம் கூறினான்.

**தொடரும்..**

# மேன் கமாண்டால் வந்த சிக்கல்

வழக்கம் போல் வேலையில் மூழ்கியிருந்த மதனுக்கு அவன் அம்மா சொன்னது நினைவு வந்தது, ‘ஏன்டா மதன் உன் ஆபீஸ்ல எந்தப் பொண்ணையும் பார்க்க மாட்டியா? உன் அப்பா எவ்வளவு கஷ்டப்படுறாரு?’, என்று கேட்ட அம்மாவிடம், ‘மா! நீ கூட கலாய்க்கிற பாத்தியா?’ என்று கூறியிருந்தான். ஆனால் அவன் அம்மா கேட்டதோ உண்மையான ஆதங்கத்தில் என்று இவனுக்கு நன்றாகத் தெரியும். சிந்தனையில் இருந்தவன் ‘என்ன பிரதர் ரொம்ப தீவிரமா யோசிச்சிட்டு இருக்கீங்க போல?’ என்ற குரலைக் கேட்டுத் தலையை உயர்த்திப் பார்க்க அவன் முன் கார்த்திகா நின்றிருந்தாள். அவளிடம் ‘ஆயுசு 100 ன்னு எப்ப சொல்லுவாங்க தெரியுமா உங்களுக்கு?’ என்று திடீரென ஒரு கேள்வியைக் கேட்டான், அதற்குக் கார்த்திகா ‘நம்ம யாரையாச்சும் நினைச்சிட்டு இருக்கும்போது அவங்க நேர்ல வந்து நின்னா சொல்வதுதானே?’ என்று கேட்டாள், ‘இல்ல, யாருக்காவது ஆயுள் தண்டனை கொடுக்கணும்னா சொல்றது’ என்று கடித்தான். ‘ஜோக் ரொம்ப மொக்கையா இருக்கு’ என்று மூக்கை அறுத்தாள் கார்த்திகா.

‘அத விடுங்க, வந்த வேலைய பார்ப்போம். ஆமா, உங்க லேப்டாப்ல விண்டோஸ் தானே வச்சிருக்கீங்க?’ என்று கேட்டான், ‘ஆமாம்’

என்று சொன்னாள், 'நான் உங்களுக்கு லேட்டஸ்ட் லினக்ஸ் மிண்ட் லைவ் சீடி கொடுக்குறேன், வீட்டுக்குப் போய் நீங்களே இன்ஸ்டால் பண்ணுங்க. ஓகேவா?' என்றான், அதற்கு 'நானா? இன்ஸ்டாலேஷனா?' என்று தயங்கினாள். 'பயப்படாதீங்க, முதல்ல உங்ககிட்ட இருக்கும் பாட்டுங்க, படங்க, கேம்ஸ் செட்டப் பைல் அப்புறம் சாப்ட்வேர் செட்டப் பைல் எல்லாத்தையும் பேக்கப் எடுத்துக்கோங்க, அப்புறம் மிண்ட் இன்ஸ்டால் பண்ணுங்க, அப்படியே நீங்க விண்டோஸ தூக்கிட்டாலும், என்கிட்ட விண்டோஸ் டிவிடி இருக்கு ரீ இன்ஸ்டால், பண்ணிக்கலாம்' என்றான். 'ஓகே, நான் டிரை பண்றேன்' என்றாள் சற்று தைரியமாக. உடனே 'நீங்க விண்டோஸ் யூஸ் பண்றீங்களா?' என்று ஆர்வத்துடன் கேட்டாள் கார்த்திகா, அதற்கு 'எஸ், ஆனா kvm கெஸ்ட்டா' என்று பதில் அளித்தான், 'அப்படின்னா' என்றவளைப் பார்த்து, 'அது விஎம்வேர் இல்ல விர்சுவல் பாக்ஸ் மாதிரி' என்றான். இப்பொழுதுதான் கார்த்திகாவுக்குப் புரிந்தது மதன் விண்டோஸ்சை விர்ச்சுவலைசேக்ஷன் மூலம் லினக்ஸில் இயக்குகின்றான் என்று.

'சரி, ஷெல் பத்தி உங்களுக்கு என்ன தெரியும்' என்றான், 'ஷெல் னா அது ஒரு ப்ரோக்ராம், அது மூலமா பல ப்ரோக்ராம்கள் ஸ்டார்ட் பண்ண முடியும் அதானே?', என்றாள். 'எக்ஸாட்லி, அதுமட்டுமில்லாம அதுல ஒரு ப்ரோக்ராமிங் லாங்வேஜ்ல இருக்குற எல்லா பரப்பர்டிசும் இருக்கு, அதனாலத்தான் நம்மால ஷெல்

ஸ்க்ரிப்ட்ஸ் எழுத முடியுது. இன்னைக்கு லினக்ஸ் யூசர்ஸ் பல வகையான ஷெல்ஸ் யூஸ் பண்றாங்க, ஆனா shell அப்படிங்கற கான்செப்ட் நான் முன்னால சொன்ன CTSS ல தான் உருவாச்சு. பெல் லேப்ஸ் வெளியிட்ட v7 யுனிக்ஸ்ல இருந்த shell க்கு பேரு sh, இத எழுதினவர் பேரு Stephen Bourne, இதுதான் பின்னால வந்த பல shell கலுக்கு அடித்தளமா அமைந்தது. அப்புறம் வந்த bsd யுனிக்ஸ்ல இருந்த shell க்குப் பேரு csh, அப்புறம் வந்த sunos/solaris ல இருக்குற shell க்குப் பேரு ksh, அப்புறம் வந்த லினக்ஸ்லயும் ஓஎஸ்எக்ஸ்லயும் இருக்குற shell க்குப் பேரு bash, அப்புறம் tcsh, pdksh, dash, ash, zsh, fish ன்னு பல shells இருக்கு.' என்றான். 'இத்தனையும் நான் தெரிஞ்சிக்கனுமா?' கவலைப்பட்டாள். 'இத்தனையும் தெரிஞ்சுக்க வேணாம், sh முதல்ல தெரிஞ்சிக்கோங்க, அது மத்த எல்லாத்தையும் ஈஸியா கத்துக்க வழி காட்டும்' என்றான்.

'shell ஓட பிரைமரி ஒர்க் ஒரு command டை எக்ஸிக்யூட் பண்றதுதான், ஒவ்வொரு command க்கும் அத எப்படி எக்ஸிக்யூட் பண்ணனும்னு ஒரு syntax இருக்கும். ஒரு command டோட syntax தெரிஞ்சிக்க இருக்குற முதல் வழி, அதோட manual page ஐப் படிக்கிறது தான்' என்றான். 'manual page படிக்க man கமாண்ட் யூஸ் பண்ணனும் கரெக்டா?' என்றாள். 'பரவால்ல, தெரிஞ்சு வச்சிருக்கீங்க' என்றான். 'ப்ராஜக்ட்ல அதுதான் முதல்ல சொல்லிக்கொடுத்தாங்க' என்றாள். 'அப்ப உங்களுக்கு syntax னா என்னனு புரியும்?' இது மதன். 'புரியும்,

இருந்தாலும் ஒருமுறை சொல்லுங்க' இது கார்த்திகா. 'ஓகே, ஒரு சின்ன எக்ஸாம்பிள்'

```
$ mycommand [-abcd] [--all|--big|--cracking|--doors] arg1
[arg2]..
```

'மேல இருக்கும் mycommand அப்படிங்கற ஒரு command டொட syntax. இதுல [-abcd] ங்கறது mycommand டோட short options. இங்கே முக்கியமா கவனிக்கவேண்டியது [] ஸ்கொயர் ப்ராக்கெட்ஸ். இந்த ப்ராக்கெட்ஸ் என்ன சொல்லுதுன்னா, mycommand க்கு -a, -b, -c, -d இதுல எதாச்சும் ஒன்னு கொடுக்கலாம். அடுத்து இருக்குது [–all|–big|–cracking|–doors], இது mycommand டோட long options. முதல்ல பார்த்த short options களுக்கு ஈக்வலானவை, -a ஃபார் –all, -b ஃபார் –big, -c ஃபார் –cracking, -d ஃபார் –doors', மதன் தொடர்ந்தான், 'இந்த long option களும் ஸ்கொயர் ப்ராக்கட்டுக்குள்ள இருக்கு, அதனால கொடுக்கிறது, கொடுக்காதது, நம்ம இஷ்டம். அடுத்து இருக்கும் arg1, இது mycommand டோட first argument. அடுத்து இருக்கும் [arg2], இது mycommand டோட second argument, இங்க arg2 ஸ்கொயர் ப்ராக்கட்டால மூடப்பட்டிருக்கும், அதுக்கு அர்த்தம் mycommand டுக்கு arg2 வ கொடுக்கலாம், கொடுக்காட்டி விட்டுடலாம், ஆனா, arg1 கண்டிப்பாகக் கொடுத்தே ஆகணும்.' மதன் முடித்தான்.

'ஓகே, அப்ப [] உள்ள எது இருந்தாலும் அது ஆப்ஷனல், நாம கொடுக்கலாம், இல்லாட்டி விட்டுடலாம், [] இல்லாம இருந்தா,

கண்டிப்பாகக் கொடுத்தே ஆகனும், சிங்கிள் '-' இருந்தா அதுக்கு பேரு short options, அதுவே '–' இருந்தா, அதுக்கு பேரு long options. புரிஞ்சது, ஆனா ஒரு டவுட், கடைசியில் '..' இருக்கு அதுக்கு என்ன அர்த்தம்?' என்றாள் கார்த்திகா, 'அப்படின்னா, [arg2] [arg3] [arg4] [arg5] [arg6] இப்படி எவ்வளவு argument வேணும்னாலும் நாம கொடுக்கலாம்', மதன் விளக்கினான்.

'இப்ப ஒரு ரியல் யுனிக்ஸ் கமாண்ட் பார்ப்போம்'

```
$ man ls
```

'இந்த மேனுவல் நல்லா கவனிச்சிங்கன்னா, டாப் லெப்ட் கார்னர்ல LS(1) னு இருக்கும். யுனிக்ஸ்ல இருக்க எல்லா மேனுவல்களையும் எட்டுப் பகுதிகளாப் பிரிச்சிருக்காங்க,

1. General Commands (பொதுவான கமாண்ட்கள்)
2. System Calls (கர்னல் பங்ஷன்கள், C language ல் பயன்படுத்தலாம்)
3. Library Functions (கர்னல் அல்லாத மற்ற C பங்ஷன்கள்)
4. Special Files (சிறப்புக் கோப்புகள்)
5. File formats and Conversions (கோப்பு வகைகள்)
6. Games (மின் விளையாட்டுகள்)
7. Miscellaneous (மற்றவை)
8. System Administration Commands (அட்மின் கமாண்ட்கள்)

சோ, LS(1) அப்படின்னா, ls command, பகுதி 1, அதாவது, General Commands வகையான கமண்ட் அப்படின்னு அர்த்தம். இதுவே useradd கமாண்டோட மேனுவல் பேஜ் பார்த்தா அதுல USERADD(8) அப்படின்னு இருக்கும்,ஏன்னா, அது அட்மின் கமாண்ட் செக்க்ஷன்ல இருக்கும், இந்த வகையான அட்மின் கமாண்ட்களை root யூசரால மட்டும்தான் எக்ஸிக்யூட் பண்ண முடியும்’, மதனின் விளக்கம் சற்று நின்றது.

‘சரி, section(1) ல இருக்குற அத்தனை கமாண்ட்களையும் பார்க்கனும்னா என்ன பண்ணனும்?’, என்று கேட்டாள் கார்த்திகா, மதன் அதற்கு,

```
$ ls /usr/share/man/man1
```

‘இந்த கமாண்ட ரன் பண்ணா அது section(1) ல இருக்குற அத்தனை கமான்டுங்களையும் காட்டும். இதேபோல man2, man3 அப்படின்னு எட்டு செக்ஷன்கள்ல இருக்குற கமாண்டுங்களையும் பார்க்கலாம். அதுமட்டும் இல்லாமல் உங்களுக்கு ஏதாவது ஒரு கமாண்டோட ஒரு பகுதிதான் நியாபகம் இருக்கு, ஆனா அந்த கமாண்ட்டோட முழு மேனுவலையும் பாக்கணும்னா அந்தப் பாதி கமாண்ட man -k க்குக் கொடுங்க, அது நீங்க கொடுத்த பாதி கமாண்ட்ல ஸ்டார்ட் ஆகுற எல்லா கமாண்ஸுகளையும் காட்டும்’ மதன் விளக்கினான்.

‘அப்ப man -k ls அடிச்சா ls இருக்குற அத்தன கமாண்டையும் காட்டும், கரைக்ட்டா?’ என்றாள் கார்த்திகா, அதற்கு மதன் ‘எக்ஸாக்ட்லி, சரி, இப்ப ls மேன் பேஜ பார்ப்போம், எந்த ஒரு ப்ராப்பர் மேன் பேஜ்லயும் கீழ இருக்குற sections கண்டிப்பாக இருக்கும்,

1. NAME (கமாண்டோட பேர்)
2. SYNOPSIS (கமாண்டோட syntax)
3. DESCRIPTION (கமாண்ட் பத்தின விரிவான விளக்கம்)
4. RETURN VALUE (கமாண்டோட ரிட்டர்ன் வேல்யூ)
5. AUTHOR (கமாண்ட எழுதினவர் பேர்)
6. SEE ALSO (கமாண்ட் சம்பந்தப்பட்ட மத்த கமாண்ட்கள்)

SYNPOSIS செக்ஷன்ல கமாண்டோட syntax கொடுத்திருப்பாங்க, அந்த syntax ல இருக்குற long & short options கல DESCRIPTION section ல விளக்கி இருப்பாங்க, RETURN VALUE செக்க்ஷன்ல அந்த கமாண்ட் shell க்கு என்ன ரிட்டர்ன் வேல்யூ அனுப்புதுன்னு சொல்லி இருப்பாங்க, AUTHOR செக்க்ஷன்ல அந்த கமாண்ட யார் எழுதினாங்கன்னு சொல்லி இருப்பாங்க’, என்று மதன் மேலும் விளக்கினான். ‘புரிஞ்சது, SEE ALSO செக்க்ஷன் பத்தி சொல்லல?’, கார்த்திகா கேட்டாள், ‘அதுக்குத்தான் வறேன். அது ரொம்ப

முக்கியமான செக்ஷன், அதுல அந்த கமாண்ட் சம்பந்தப்பட்ட மத்த கமான்ட்கள் கொடுத்திருப்பாங்க' என்றான் மதன்.

'man பேஜ்ல இவ்வளவு இருக்கா?' வியந்தாள் கார்த்திகா, 'இதுக்கே அலுத்துக் கிட்டா எப்படி, இன்னும் நான் ஒரு கமாண்ட் கூடச்சொல்லித் தரல' என்றான் மதன். 'அதான் முக்கியமான கமாண்ட சொல்லிக் கொடுத்துட்டீங்களே, man' என்றாள் கார்த்திகா. 'man கமாண்ட் நல்லா புரிஞ்சது, என்ன ஒன்னு, இந்த man கமாண்ட எழுதினவர் ஏன் அதுக்கு manual அப்படின்னு பேர் வைக்காம, man அப்படின்னு பேரு வெச்சாரு? உங்க ஆளுங்க ஏன் எல்லாரும் misogynist களாவே இருக்காங்க? பொண்ணுங்களுக்கு மூளை இருக்கவே இருக்காதுன்னு ஏன் முடிவு பண்றீங்க?' சிறிது கடுமையாகக் கேட்டாள் கார்த்திகா. 'தாயே பத்ரகாளி, அந்தக் காலத்துல இருந்த டெலிப்போன் நெட்வர்க்ல டேட்டா ட்ரான்ஸ்பர் மெதுவா நடக்கும் அப்ப யுனிக்ஸ ஆக்ஸஸ் பண்ணவங்க ரொப்ப தூரத்ல இருக்குர சர்வர டெலிபோன் லைன் மூலமா ஆக்ஸஸ் பண்னாங்க, கமாண்டுங்க சின்னதா இருந்தா சீக்கிரமா ட்ரான்ஸ்பர் நடக்கும்னு எல்லா unix கமாண்ட்களுக்கும் சின்னதா பேர் வெச்சாங்க', விளக்கியவன், 'அது ஏன் feminist ங்க சாதாரண மேட்டரகூடப் பொண்ணுங்களுக்கு ஆப்போசிட்டா இருக்குறதா நெனச்சுக்கறீங்க? உங்க பாயின்ட் ஆப் வியுக்கு ஆப்போசிட்டா யாராச்சும் கேள்வி கேட்டா உடனே அவன் misogynist, அப்டித்தானே?

இருக்குற எல்லா விக்டம் கார்டையும் யூஸ் பண்ணி அவன பப்ளிக்ல கேவலப்படுத்த வேண்டியது?' மதனும் சற்று சூடாகக் கேட்டான்.

'நீங்க அப்படியே உத்தமங்க மாதிரி நடிக்காதீங்க, இன்னும் யுனிக்ஸ் கம்யூனிட்டில பொண்ணுங்கள மட்டமாத்தானே பார்க்கறீங்க? நீங்க எப்படியும் ஏதாவது ஒரு லினக்ஸ் க்ரூப்ல மெம்பரா இருப்பீங்க அங்க எத்தன பொண்ணுங்க மெம்பரா இருக்காங்க? என் கணக்குப்படி ஒருத்தி கூட இருக்க மாட்டா. அப்படியே இருந்தாலும் உங்க ஆளுங்க அவங்கள மதிக்க மாட்டாங்க', என்று வாதாடினாள், 'அப்படித்தான் நீங்களே முடிவு பண்ணிக்கறீங்க, எங்க ஆளுகளுக்குப் பொண்ணுங்க கூட சேர்ந்து வேலை பாக்குற குடுப்பன இல்ல, அதனால அவங்க பொண்ணுங்க கிட்டப் பேசக் கொஞ்சம் தயங்குவாங்க, அதுக்காக இந்த பீல்டுல பொண்ணுங்க இல்லாததற்குக் காரணம் மிசோஜினிசம்தான், பசங்க பொண்ணுங்கள மதிக்கறதில்லன்னு சொல்றது டூமச்! எந்த பொண்ணு +2 ல புரிஞ்சி படிச்சி அதிகம் மார்க் வாங்குதுங்க, முக்கால்வாசி எக்ஸாம் ஹால்ல படிச்சத வாந்தி எடுக்குறவளுங்கதானே. அதுமாதிரி இருக்குறவங்களுக்கு யுனிக்ஸ் முதல்ல கொஞ்சம் கஷ்டமாத்தான் இருக்கும். அதனாலத்தான் பொண்ணுங்க யுனிக்ஸ் பக்கம் அதிகம் வர்றதில்ல, இது பொண்ணுங்களுக்கு மட்டும் இல்ல மக்கப் அடிச்சு மார்க் வாங்குற பசங்களுக்கும் யுனிக்ஸ புரிஞ்சிக்க டைம் ஆகும்' என்று கூறினான். 'நீங்க சொல்றது முழு உண்மையில்ல, ப்ரூப்

கொடுத்தாலும் உங்கள நீங்க மாத்திக்கப் போறதில்ல, உங்ககிட்ட எதுக்கு வீணாப் பேசிக்கிட்டு' என்றாள் கார்த்திகா, 'உண்மைய சொன்னா கசக்கத்தான் செய்யும்' என்றான் மதன்.

'பைதவே, நான் ஒன்னும் feminist இல்ல' என்றாள் கார்த்திகா. 'தெரியுங்க, feminist டா இருந்திருந்தா நான் பேசுனதுக்கு இந்நேரத்துக்கு எச்ஆர் கிட்ட என் மேல ஹராஸ்மண்ட் கம்ப்ளைன்ட் போயிருக்கும், எச்ஆரும் ரெண்டு பேரையும் கூப்டுப் பேசி என் மேல எந்தத் தப்பும் இல்லைன்னு சொல்லி அனுப்புவாங்க, ஆனா நீங்க அத ஏத்துக்காம சோசியல் மீடியாவுல போடுவீங்க, அங்க உங்களுக்குன்னே சொம்பு தூக்குற கும்பல் ஒன்னு ஐய்யய்யோ ஓடியாங்க சிங்கப்பெண்ணுக்கு அநியாயம் நடந்திருக்கு இதக் கேட்க யாருமே இல்லையான்னு கதறுவாங்க, நியூஸ் மீடியாக்களும் கம்பனிய கிழி கிழின்னு கிழிப்பாங்க, நம்ப கம்பனி மொதலாளி தப்பே செய்யலன்னாலும் என்ன வேலைய விட்டுத் தூக்குவான். இதெல்லாம் நடக்கத் தொடங்கி இருக்கும்' என்றான் மதன். 'அலோ, இப்ப ஏன் டென்ஷன் ஆகுறீங்க, எதுக்கு உங்களுக்கு feminist னா அவ்வளவு கோபம்?' கார்த்திகா கேட்க, 'எனக்கு feminist ங்க மேல கோபம் இல்லைங்க, fake feminist ங்க மேலத்தான் கோபம், இப்ப நான் சொன்னனே, அது உண்மையிலேயே நடந்துச்சு, என்னோட பழைய கம்பனில இருந்த என் மேனேஜர், அவர மாதிரி ஒரு நேர்மையானவர நான் பார்த்ததில்ல, அதனாலேயே அவர கட்டம்

கட்டி ஒரு பொண்ண வெச்சுத் தூக்குனாங்க, இந்த IT ஃபீல்டே வேணாம்னு அவரோட கிராமத்துக்குப் போய் விவசாயம் பார்க்க ஆரம்பிச்சிட்டாரு. அந்தப் பொம்பள ப்ரமோஷன் வாங்கிட்டு இன்னொருத்தன் குடிய கெடுத்துக்கிட்டு இருந்தது. ப்ராஜக்ட்ல அவர ரோல் மாடலா பார்த்த எல்லோரும் அந்த கம்பனிய விட்டு வெளிய போகனும்னு முடிவு பண்ணி அந்த கம்பனிய விட்டு வெளிய வந்தோம்' மதன் கூற 'ஐம் சாரி' கார்த்திகா கூற 'இட்ஸ் ஓகே, பொண்ணுங்களுக்கு இந்தச் சமூகத்துல எவ்வளவோ பிரச்சனைங்க இருக்கு, நான் இல்லைன்னு சொல்லல, அதுக்காக ஒரு ஆண அசிங்கப்படுத்தி, கேவலப்படுத்தி அவன் வாழ்க்கைய சீரழிச்சுத்தான் பெண் விடுதலைக்குப் போராடனும்னு ஏதாவது எழுதி வச்சிருக்கா?'. 'நீங்க உங்க மேனேஜர் மேல வெச்சிருக்குற மதிப்பால பயாஸ்டா பேசுறீங்க, உங்க மேனேஜர் உண்மையிலேயே தப்பு செஞ்சிருப்பாரு, அதனாலத்தான் கம்பனி வெளிய அனுப்பி இருக்கும்' கார்த்திகா கூற 'டிபிக்கல் femimist மைண்ட், அப்படித்தான் யோசிக்கும், என் மேனேஜரோட பாஸ் அவர் கிட்ட வந்து உன் மேல எந்தத் தப்பும் இல்ல, இருந்தாலும் வெளிய கம்பனி ரெப்யூட்டேஷன் போகுது அதனால நீயே ரிசைன் பண்ணிடுன்னு கால்ல விழுந்தானாம், போய்த் தொலைங்கடான்னு ரிசைன் பண்ணிட்டு பொண்டாட்டி புள்ளைங்களோட அவரோட கிராமத்துக்குப் போனார், இதுக்கு மேலயும் அவர் தப்பு பண்ணலைன்னு ப்ரூவ் பண்ணனுமா?' மதன்

கேட்க ‘சரிங்க misogynist, இன்னைக்கு இந்தச் சண்டை போதும். லேட் ஆகுது நான் கிளம்புறேன்’, என்றாள், ‘சரிங்க feminist, அடுத்து எப்போ?’, என்றான். ‘வழக்கம் போலத்தான், நானே வறேன், மோகினி பிசாசுங்கள கேட்டதாச் சொல்லுங்க’ என்று சொல்லிவிட்டுச் சென்றாள் கார்த்திகா.

‘மவனே, இவள கல்யாணம் பண்ண, செத்தடீ’ மதனின் மனசாட்சி எச்சரித்தது, ‘எவ்வளவு தைரியமா பேசுரா, பாராட்டுடா’ மதன் தன் மனசாட்சியை நினைந்து கூறினான்.

**தொடரும்..**

# ஹோம் ஸ்வீட் ஹோம்

‘மாப்ள அப்படியே எனக்கு ஒரு மசால் தோசை’, சுரேஷின் கதறல் ஆபீஸ் கேண்டீன் க்யூவில் இருந்த மதன் காதுகளில் ஒலித்தது. வாங்கிக்கொண்டு மதன் சுரேஷின் அருகில் அமர்ந்தான். ‘feminist misogynist அப்படி எல்லாம் டயலாக் போகுதாம்? உன் நல்லதுக்குச் சொல்றேன் அட்மின் கல்யாணம் ஆனவங்க’, சுரேஷ் அறிவுறுத்த, ‘யார்றா அந்த உளவாளி?’, மதன் கேட்க,’அதான் இருக்காளே கஞ்சா குடுக்கி, அவ கிட்ட சொல்லி உன் கேபின் கிட்ட காது வைக்கச் சொல்லியிருக்கேன், ஆஃபீஸ் முழுக்க ஸ்பைங்க வச்சிருக்கா, என்ன பண்ணாலும் நியூஸ் வந்துரும்’, சுரேஷ் பெருமிதம் கொள்ள, ‘உங்க ரெண்டு பேருக்கும் வேற வேலையே இல்லையா?’, மதன் குமுற, ‘என்டர்டெயின்மென்ட் வேணும்ல’, சுரேஷ் சொல்லிக்கொண்டிருக்கும்போதே தீப்தி வந்தாள். ‘வாடி கஞ்சா குடிக்கி’, சுரேஷ் தீப்தியை வரவேற்க, ‘போடா திக்குவாயா’, தீப்தி திருப்பி அடிக்க, ‘நான் ஒன்னும் திக்குவாய் இல்லடி, எப்பவாச்சும் திக்கும் அவ்ளோதான்’, சுரேஷ் விளக்கிச் சொல்ல ‘அதுக்குப் பேர்தான் திக்குவாய். என்ன கஞ்சாகுடுக்கின்னு சொல்லாத, நானும் உன்ன சொல்லமாட்டேன்’, தீப்தி மிரட்டினாள். அப்போது மதன் குறுக்கிட்டு ‘தீப்தி, உன்ன ஏன் இப்படிக் கூப்பிடுறான்?’, மதன் கேட்க, ‘சின்னவயசுல ஒரு நாள் ஓவரா சுண்ணாம்பு வச்ச வெத்தலை

சாப்பிட்டு வாய் செவந்துருச்சு, அத பாத்துட்டு அப்போ ஆரம்பிச்சான். மானத்த வாங்குறான்', தீப்தி விளக்கினாள்.

'நீயாவது சொல்லு, யாருமா அந்த ஸ்பை, உதய் அண்ணாவா?', மதன் கேட்க, 'அவன்தான் ஆள செட் பண்ணி வச்சிருக்கான், எனக்கு எதுவும் தெரியாது', தீப்தி தப்பித்தாள். 'ஸ்பை வைக்கிற அளவுக்கு வொர்த்து இல்லடா', மதன் சொல்ல, 'அத நாங்க சொல்லனும்டா, எனக்கு என்னமோ அட்மின் மேட்டர்ல இன்னமும் சந்தேகம் இருக்கு. உண்மைய சொல்லு, அவங்களுக்கு கல்யாணம் ஆயிடுச்சா இல்லையா?', சுரேஷ் இடைமறித்தான். 'நாட் மேரிட் பட் ஆல்ரெடி கமிட்டெட்', மதன் சொன்னவுடனே சுரேஷ் மதனைப் பார்த்தான். இருவரும் சிறிது நொடிகள் பார்த்துக் கொண்டபின், 'சோ பிரன்ஷிப் தாண்டிப் போகாதுங்கற?', சுரேஷ் கேட்க, 'ஒருத்தன அழ வச்சு நான் சந்தோஷப் படுறவன் இல்லடா', மதன் திட்டவட்டமாகக் கூறினான்.

'டேய் மொக்க உன் டெஸ்குக்கு கால் வந்தது', கேபினுக்கு வந்து மதனிடம் உதய் கூறினார். யாராக இருக்கும் என்று யோசித்துக்கொண்டே மதன் கம்பூட்டரை அன்லாக் செய்ய சேட்டில் கார்த்திகா. 'ப்ரதர் கேபின் வரலாமா, ஃப்ரியா இருக்கிங்களா?', கார்த்திகா கேட்டிருந்தாள், 'ஆல்வேஸ் வெல்கம்', மதன் ரிப்ளை அனுப்பினான். அடுத்த பத்து நிமிடத்தில் மதன் கேபினில் கார்த்திகா தன் மடிக்கணினியுடன் வந்தாள்.

‘நீங்க சொன்ன மாதிரி மிண்ட் இன்ஸ்டால் பண்ணிட்டேன், கஷ்டம் ஒன்னும் தெரியல. சாதாரண விண்டோஸ் இன்ஸ்டால் மாதிரிதான் இருந்தது’, கார்த்திகா தன் மடிக்கணினியைக் காட்டினாள்.

‘உங்களுக்கு இண்ட்ரோ ஆகணும்னுதான் நீங்களே இன்ஸ்டால் பண்ணுங்கன்னு சொன்னேன்’, மதன் கூறுகையில் ‘அது மட்டும் இல்ல, என்னோட எல்லா மீடியாக்களும் பக்காவா ப்ளே பண்ணுது, எந்த எக்ஸ்ட்ரா ஸாப்ட்வேரும் நான் இன்ஸ்டால் பண்ணல. ரொம்ப ஸ்மூத், நோ லேக், மாடர்ன் லினக்ஸ் இப்படி இருக்கும்னு நான் நினைக்கல. ஐ லைக் இட்’, கார்த்திகா கூறினாள். ‘விண்டோஸுக்கும் லினக்ஸுக்கும் யூஸ் பண்றதுல வித்தியாசம் பெருசா இல்லைங்க, ஆனா இரண்டுமே அடிப்படையில வேற வேற, அதுல இருக்குற சாப்ட்வேரை இதுல எதிர்பார்க்கக்கூடாது, சரி நாம வந்த வேலைய பாப்போம், லாஸ்ட் டைம் மேன் கமாண்ட் பத்திப் பார்த்தோம், இன்னைக்கு பைல் சிஸ்டத்தைப் பத்திப் பார்ப்போம். பைல் சிஸ்டம்னா என்னன்னு தெரியும் இல்ல?’, மதன் கேட்க, ‘தெரியும் வின்டோஸ்ல fat, ntfs போல. ஒரு எம்டி டிஸ்க்க யூஸ் பண்ணனும்னா முதல்ல பண்ண வேண்டியது பைல் சிஸ்டம் ப்பார்மெட் பண்ணி நிறுவுவது அதானே?’, கார்த்திகா கேட்க, ‘நேரத்தை மிச்சம் பண்ணிட்டீங்க. எனிவே, வின்டோசுக்கு இருக்குற மாதிரி லினக்ஸுக்கும் ஏகப்பட்ட பைல் ஸிஸ்டம்ஸ் இருக்கு, அதுல முக்கியமானது ext4 இதுதான் டீப்பால்டா எல்லா டிஸ்ட்ரோவும் யூஸ்

பண்றது. உங்களோட மிண்ட்டும் அதத்தான் ரூட் பார்டிஷனுக்கு யூஸ் பண்ணி இருக்கும். ரூட் பார்டிஷன்னு சொன்ன உடனே இன்னொன்னு சொல்ல மறந்துட்டேன், லினக்ஸ்ல எல்லாமே பைல்ஸ். உங்க லேப்டாப்ல இருக்கும் பிசிக்கல் ஹார்டு டிஸ்க் /dev/sda பைலா இருக்கும், சிடி ராம் /dev/sr0 பைலா இருக்கும். நீங்க டைரக்டா ரூட் பர்மிஷனோட ரா ரீட்ரைட் பண்ணலாம்.', மதன் சொல்லி முடித்தான்.

'அப்ப /dev/sda தான் வின்டோஸ்ல c: மாதிரியா?', கார்த்திகா கேட்க, 'இல்லைங்க, /dev/sda1 தான் c: மாதிரி. முதல் டிஸ்க்கின் முதல் பார்டிஷன். ஆனா விண்டோஸ் மாதிரி c:, d: எல்லாம் லினக்ஸில் கிடையாது. ஒவ்வொரு பார்டிஷனும் பைல் சிஸ்டத்துல ஒரு போல்டரில் மேப் ஆகி இருக்கும். இந்த பைல் சிஸ்டத்தோட பேரண்ட் போல்டர் பேரு "/" , இதுக்கு பேர்தான் ரூட் போல்டர் (root directory), இந்த போல்டரத்தான் மவுண்ட்பாயின்டா வெச்சு /dev/sda1 பார்டிஷன் பைல் சிஸ்டத்தில் மேப் ஆகி இருக்கும்.', மதன் விளக்கினான். 'அப்படின்னா ஒரு டெக்ஸ்ட் எடிட்டர்ல /test.txt அப்படின்னு சேவ் பண்ணா அது c:/test.txt அப்படின்னு கிரியேட் பண்ற மாதிரி, கரெக்டா?', கார்த்திகா கேட்க, 'ஆமாம், எந்தெந்த பார்டிஷன் எந்த போல்டரில் மேப் ஆகி இருக்குன்னு /etc/fstab அப்படிங்கற பைல்ல குறிப்பிட்டிருப்பாங்க. இந்த /etc/fstab பத்தின டீடெயில்ஸ் "man 5 fstab" மேன்பேஜ்ல இருக்கு. கரண்டா மேப் ஆகி இருக்கும் எல்லா

மவுண்ட்பாயிண்ட்ஸையும் “mount” கமாண்ட் மூலமாப் பாக்கலாம்’, மதன் விளக்கினான்.

‘/test.txt சேவ் பண்றதுல ஒரு சிக்கல் இருக்கு. ஒரு சாதாரண யூசரா நீங்க /test.txt சேவ் பண்ண முடியாது, ஒவ்வொரு பைல் அல்லது போல்டருக்கும் பர்மிஷன் பிட்ஸ் அப்படின்னு ஒன்னு இருக்கு, உதாரணமா இந்த கமாண்ட் பாருங்க

```
$ ls -l /dev/video0
crw-rw-r-- 1 root video 81, 0 Apr  5 01:40 /dev/video0
$
```

இந்த அவுட்புட்ல முதல்ல இருக்குற c கேரக்டர் /dev/video0 பைல் ஒரு கேரக்டர் டிவைஸ் அப்படின்னு சொல்லுது, இந்த டிவைஸ் பைல் ஓனர் ‘root’, இந்த யூசருக்கு /dev/video0 கேமரா டிவைஸ்ல இருந்து டேட்டாவைப் படிக்கலாம், எழுதலாம், அதத்தான் c கேரக்டருக்கு அடுத்து இருக்குற rw- குறிப்பிடுது. அது மட்டும் இல்லாம ‘root’ யூசர் தவிர்த்து ‘video’ குரூப்பில் இருக்குறவங்களும் இந்த கேமரா டிவைஸ் பைல்ல இருந்து டேட்டாவைப் படிக்கலாம், எழுதலாம், அதத்தான் அடுத்து இருக்குற rw- குறிப்பிடுது. கடைசியாக இருக்குற r– பர்மிஷன் பிட்ஸ் ‘root’ யூசர் அல்லது ‘video’ குரூப் மெம்பர்ஸ் தவிர்த்து மத்தவங்களுக்கு கேமரா டிவைஸ் பைல்ல இருந்து டேட்டாவைப் படிக்க மட்டும் ரைட்ஸ் கொடுக்குது, அதுதான் அடுத்து இருக்குற r– குறிப்பிடுது. இப்ப இந்த கமாண்ட பாருங்க,

```
$ ls -ld /
drwxr-xr-x 17 root root 229 Dec 27 18:52 /
$
```

இங்க முதல் d கேரக்டர் / ஒரு போல்டர்னு சொல்லுது, அடுத்து இருக்குற rwx, ரூட் யூசருக்குப் படிக்க (r), எழுத (w) மற்றும் பயன்படுத்த (x) பர்மிஷன் இருக்கு. அடுத்து ரூட் குரூப்புக்குப் படிக்க (r), பயன்படுத்த (x) மட்டும் ரைட்ஸ் இருக்கு. இதே r-x ரைட்ஸ் தான் மத்த எல்லா யூசர்களுக்கும் இருக்கு. சோ, ஒரு சாதாரண யூசர் நீங்க / போல்டரில் பைல் கிரியேட் பண்ண முடியாது' மதன் விளக்க 'அப்ப ஒரு சாதாரண யூசர் எங்க சேவ் பண்றது', கார்த்திகா கேட்க, 'ஒவ்வொரு சாதாரண யூசருக்கும் ஒரு ஓம் போல்டர் இருக்கும் லைக் /home/karthika, நீங்க "ls -ld /home/karthika" கமாண்ட் எக்ஸிக்யூட் பண்ணிங்கனா "root root" க்கு பதிலா "karthika karthika" அப்படின்னு இருக்கும். சோ கார்த்திகா யூசர் /home/karthika/test.txt அப்படின்னு எடிட்டர்ல தாராளமா சேவ் பண்ணலாம்', மதன் விளக்கினான். 'இந்த / போல்டர் உள்ள நிறைய போல்டர்ஸ் இருக்கும் அதுல முக்கியமானதுங்க /boot, /proc, /dev, /etc, /home, /usr, /var, /tmp போல்டர்ஸ். /boot போல்டர்லதான் லினக்ஸ் பூட் ஆகத் தேவையான லினக்ஸ் கர்னல், கிரப் செகண்ட் ஸ்டேஜ் பூட் லோடர் எல்லாம் இருக்கும். /proc ஒரு மவுண்ட் பாயின்ட், இந்த போல்டரில் proc பைல் சிஸ்டம் மேப் ஆகியிருக்கும். இந்த proc பைல் சிஸ்டம் லினக்ஸ்ல இருக்குற எல்லா ப்ராசஸ் பத்தின டீட்டேயில்சும் கொடுக்கும். /dev

இன்னொரு மவுன்ட் பாயின்ட், இந்த போல்டரில் devtmpfs பைல் சிஸ்டம் மேப் ஆகியிருக்கும். இந்த devtmpfs லினக்ஸ்ல இருக்குற எல்லா டிவைஸ்களும் பைலா இருக்கும். /etc போல்டரில் நிறைய கான்பிகுரேஷன் போல்டர்கள் இருக்கும். /usr/bin போல்டரில் எல்லா ப்ரோக்ராம்கள் இருக்கும், அதேபோல /usr/lib போல்டரில் எல்லா டைனமிக் லைப்ரரிகளும் இருக்கும். /var போல்டரில் log மற்றும் cache பைல்கள் இருக்கும். /tmp போல்டரில் டெம்பரவரி பைல்கள் இருக்கும். இதுங்கள்ல முக்கியமானது /home போல்டர். இதுலதான் ஒவ்வொரு யூசருக்கும் தனித்தனி போல்டர் இருக்கும்' விளக்கி முடித்தான் மதன்.

'இப்பவே கண்ண கட்டுதே', கார்த்திகா கூற, 'அப்படித்தான் எனக்கும் இருந்தது முதல்ல, அப்புறம் லினக்ஸ் யூஸ் பண்ணப் பண்ணப் பழகிடுச்சு', மதன் ஆறுதல் கூறினான். 'எனக்கும் லைட்டா கண்ண கட்டுது, வாட் அபவுட் டீ?', மதன் கேட்க, 'லெட்ஸ் கோ', கார்த்திகாவும் மதனும் பேன்ட்ரிக்குச் சென்றனர். 'ஏன் முகத்துல இவ்வளவு பெரிய தாடி? அதுவும் டிரிம் கூடப் பண்ணாம? வேண்டுதலா?' கார்த்திகா கேட்க, 'ஆமாங்க, பொண்ணு பாத்துட்டு இருக்காங்க, பிக்ஸ் ஆயிடுச்சுன்னா ஷேவ் பண்ணிடுவேன்', மதன் கூற, 'இந்தக் கோலத்துல இருந்தா எவளும் கட்டிக்கமாட்டா, தெறிச்சி ஓடுவா', கார்த்திகா கலாய்க்க 'அப்படி ஓடாம இருக்குற பொண்ணுக்காக வெயிட் பண்ணிட்டு இருக்கேன்', மதன் கூறினான்.

‘இப்படி எடக்கு மடக்காப் பேசிட்டு இருந்தீங்க, ஜென்மத்துக்கும் கல்யாணம் நடக்காது, ப்ரம்மச்சாரிதான்’, கார்த்திகா கூற ‘ஷேவ் பண்ணியிருந்தாத்தான் ஒரு பொண்ணு கல்யாணம் பண்ணுவான்னா அப்படிப்பட்ட கல்யாணமே வேண்டாம்’, மதன் கூற ‘நீங்க பேசுறது பாத்தா ஆல்ரெடி கமிட்டெட் மாதிரி இருக்கு, யார் அந்தப் பொண்ணு? ப்ரப்போஸ் பண்ணிட்டிங்களா?’, கார்த்திகா கேட்க ‘எங்க பண்ண விடுறீங்க, அதன் இப்ப இருக்குறவங்க எல்லாம் பிளஸ் டூ முடிக்கிறதுக்குள்ள ரிசர்வ் ஆகிடுறீங்களே, அப்புறம் எங்க இருந்து ப்ரொபோஸ் பண்றது, உங்களையே எடுத்துக்கோங்க, எப்ப கமிட் ஆனிங்க? ஸ்கூல்லயா இல்ல காலேஜ்லயா? நீங்க இருக்கிற அழகுக்கு எனக்குத் தெரிஞ்சு காலேஜ் வரைக்கும் விட்டிருக்க மாட்டானுங்க, மினிமம் டூ டு த்ரீ ப்ரபோசல் டெய்லி நீங்க கமிட்டெட்னு தெரிஞ்சும் வருமே?’, மதன் விரக்தியில் பேச ‘காம் டவுன் மிஸ்டர் மதன், சிங்கிளா இருக்குறது எவ்வளவு கஷ்டம்னு எனக்கும் தெரியும், அதுவும் உங்களமாதிரி முரட்டு சிங்கிளா இருக்கிறது ரொம்ப கஷ்டம் தான், இருந்தாலும் யூ ஹவ் டு டேக் ஸ்டெப்ஸ் டு இம்ப்ரஸ் எ கேர்ள்’ கார்த்திகா விளக்க ‘ஆணியே புடுங்க வேணாம், போலாமா?’ மதனும் கார்த்திகாவும் மதனின் கேபினை நோக்கி நடக்க ஆரம்பித்தனர் ‘கேப்ல என்ன அழகுன்னு சொன்னதுக்கு தேங்க்ஸ், ஆல்சோ பொண்ணுங்க கமிட்டெட்னு சொன்னா உடனே நம்பாதீங்க, சில பேர் சேப்டிக்காக கமிட்டெட்னு சொல்றவங்களும் இருக்காங்க, ஒன்ஸ் தே

ஸ்டார்ட் டிரஸ்ட் தட் பர்ஸன், தன் தே வில் ரிவீல் த ட்ருத்' கார்த்திகா புன்னகையுடன் கூற 'சுத்தி வளைக்காதிங்க, ஸ்ட்ரெயிட்டா சொல்லுங்க நானும் சிங்கிள்தான்னு', மதனும் புன்னகைத்தான்.

'உங்க நேட்டிவ் சென்னையா?' கார்த்திகா கேட்க 'இல்லைங்க, போதி தர்மர் பிறந்த ஊர், காஞ்சிபுரம், அப்பா மளிகைக் கடை, அம்மா சமையக்கட்டு, தங்கச்சி அவ ஹஸ்பண்ட் கூட வயல்ல வேலை பாத்துட்டு இருப்பா, நான் இங்க உங்க கூடப் பேசிட்டு இருக்கேன்', மதன் கூற 'என்னது வயல்ல வேலை பாத்துட்டு இருப்பாளா?' கார்த்திகா ஆச்சரியத்துடன் கேட்க 'ஏங்க எல்லாரும் இப்படி அதிர்ச்சி ஆவறீங்க, அவ ஹஸ்பண்ட் விவசாயம் பார்த்தா அவ வயல்ல தான வேல பாக்கணும்', மதன் எதிர்க் கேள்வி கேட்க 'எந்தப் பொண்ணும் போற வீட்ல கஷ்டப் படனும்னு விரும்ப மாட்டா, நீங்களும் உங்க அப்பாவும் உங்க தங்கச்சிக்கு இஷ்டம் இல்லாமல் கட்டி வச்சிட்டீங்களா?' கார்த்திகா கேட்க '"சோறு வேணும்னா யாராவது சேத்துல இறங்கி தான ஆகனும், அப்படி இறங்கி கஷ்டபட்றவர கட்டிக்க இஷ்டம் தாம்பா" இது என் தங்கச்சியைப் பொண்ணு பாக்க வரும் போது அவ என் அப்பாகிட்ட சொன்னது, என் அப்பா அவருக்கு சீதனமாக எங்க கிட்ட இருந்த ஐந்து ஏக்கர் நிலத்தை அவ பேர்ல எழுதிக் கொடுத்துட்டாரு, இப்ப மாமா தான் அவரது பத்து ஏக்கர் மட்டும் இல்லாம எங்களோட ஐஞ்சி ஏக்கர்லயும் பயிர் பண்றாரு', மதன் பெருமிதத்துடன் கூற 'உங்க தங்கச்சி

உண்மையிலேயே வித்தியாசமானவங்க, இட் நீட் சம் கட்ஸ் யு நோ' கார்த்திகா கூற 'தட்ஸ் மை சிஸ்டர்', மதன் தன் தங்கையை எண்ணிப் பெருமிதம் கொண்டான்.

'எங்க அப்பாவுக்கு இதுல டபுள் சந்தோஷம், எப்படியும் நான் நெலத்துல இறங்கப் போறது இல்ல, அவருக்கும் வயசாயிடுச்சு, பேசாம நெலத்த வித்துடலாமான்னு யோசிச்சிட்டு இருந்தாரு, இப்ப மருமகனே பாத்துக்கறதால அவருக்கு ரொம்ப நிம்மதி' மதன் கூறினான். 'இதுல உங்களுக்கு வருத்தம் இல்லையா? என்ன இருந்தாலும் ஐந்து ஏக்கர் நிலம்', கார்த்திகா கேட்க 'என்னால அந்த நிலத்துக்கு எந்த பிரயோஜனமும் இல்லீங்க, அது மட்டும் இல்லாம காஞ்சிபுரத்தில் இருக்கும் வீடு, பெட்ரோல் பங்க், கல்யாண மண்டபம், அப்புறம் எங்க கடை எல்லாம் சேர்த்து பாத்தா நிலத்தை விட டபுள் மடங்கு வேல்யூ, சோ ஆல் ஆர் ஹப்பி' மதன் கூற 'எப்படியோ, செட்டில்மென்ட் ஆயிடுச்சு, பின்னாடி உங்களுக்கு வாக்கப்படப் போறவளுக்கு சொத்து சண்ட போட வாய்ப்பு இல்ல' கார்த்திகா கூற 'வாய்ப்பே இல்ல' மதன் புன்னகைத்தான்.

இருவரும் மதனின் இருக்கைக்கு வந்தனர். 'உங்க கூட பேசிக்கிட்டு இருந்தா டைம் போறதே தெரியரதில்லைங்க. இட்ஸ் ஆல்ரெடி லன்ச் ப்ரேக். ஐ ஆவ் டு கோ.' கார்த்திகா கூற, 'நானும் வந்தவுடனே கேட்கனும்னு நினைச்சேன், இன்னைக்கு என்ன மார்னிங்கே

வந்துட்டீங்க?’, மதன் கேட்க ‘ஓ அதுவா, ஆப்டர்நூன் ஷிப்டுக்கு மாறிட்டேன், தேவையில்லாம உங்கல மிட்னைட் வரைக்கும் காக்க வெச்சு கண்ட கண்ட பிசாசுங்களுக்குப் பலி கொடுக்க வேணாம் பாருங்க அதான்’ கார்த்திகா சிரித்துக்கொண்டே கூற ‘மொரட்டு சிங்கிள்ங்க, பேயே வந்தாலும் தில்லுக்கு துட்டு விளையாடலாமான்னு கேட்பேன்’ மதனும் கிண்டலடித்தான்.

**தொடரும்..**

# முதல் ஐலக்சி மீட்டப்

‘பா, நானா கட்டிக்க மாட்டேன்னு சொல்றேன், என் ஜாதகத்துல அப்படி இருந்தா அதுக்கு நான் என்ன பண்றது. போன் பண்றப்பல்லாம் இந்த டாபிக் எடுக்காம இருக்க மாட்டீங்களா? வைப்பா போன, நான் அப்புறம் பேசுறேன்’ கார்த்திகா தன் தந்தையிடம் கடுப்பாகப் பேசிவிட்டு தன் மொபைலை வைத்தாள், ‘என்னடி வழக்கம்போல கல்யாணப் புலம்பலா?’ இது கார்த்திகாவின் தோழி கயல்விழி, ‘கடுப்பேத்றாங்க, பேசாம எவனாச்சும் கூட்டிட்டு ஓடிடலாமான்னு இருக்கு’ இது கார்த்திகா ‘எத்தனைப் பேர் உனக்கு ப்ரொபோஸ் பண்ணாங்க, யாரையாச்சும் ஒருத்தன பிக்கப் பண்ணியிருக்கலாம்ல, அத விட்டுட்டு அவங்க கிட்ட எல்லாம் எனக்கு மாமா பையன் இருக்கான்னு பொய் சொல்லிட்டுத் திரிஞ்ச, இப்ப படு,’ இது கயல் ‘சும்மா இருடி, நீ வேற கடுப்பேத்தாத, எனக்கு உண்மையிலேயே ஒரு மாமா பையன் இருந்திருந்தா இந்த பிரச்சனையே இல்லாமல் இருந்திருக்கும்’ இது கார்த்திகா ‘கிழிஞ்சிருக்கும், எங்க வீட்ல கிழியுதே அப்படி, அதர் சைட் ஆப் த ரிவர் இஸ் ஆல்வேஸ் கிறீன் பேப்’ இது கயல் ‘தத்துவம் சொன்னதெல்லாம் போதும் உன் மாமா என்ன சொல்றாரு, அப்பா பேச்சை மீறி உன்னைக் கட்டிக்கிட்டா சொத்து போயிடுமோன்னு பயப்படுறாரா?’ இது கார்த்திகா ‘பெரிய மாமாவுக்கு என்ன சின்ன

வயசுலருந்தே பிடிக்கும்டி அதனாலதான் அவ்வளவு பிரச்சன நடந்தும் மாமாக்கு வேற ஒரு பொண்ண பாக்கல. பிராப்ளம் இஸ் மை மாம். இந்த முறை மாமா லீவ்ல வீட்டுக்கு வரும்போது ஒன்னு என் அம்மா சம்மதத்துடன் கல்யாணம், இல்லன்னா லீவ் முடிஞ்சு ஜம்முவுக்கு ரிடர்ன் போகும்போது நானும் எஸ்கேப். ஆர்மி கோட்ரஸ்ல மாமாவும் நானும் ஒன்னா வரணும்னு ரொம்ப ஆவலா எதிர்பார்த்துட்டு இருக்காங்கலாம்' இது கயல் 'போகும்போது ரிஜிஸ்டர் மேரேஜ் பண்ணிட்டு போ, லிவின் டுகெதர்னு சொல்லிட்டு திரிஞ்ச செருப்படி வாங்குவ' இரு கார்த்திகா 'சாட்சி கையெழுத்து போடப் போறவளே நீதாண்டி, சீக்கிரம் இன்னொரு சாட்சி கையெழுத்தையும் ரெடி பண்ணு' இது கயல் 'அசிங்கமாப் பேசாதடி, வா சாப்பிடப் போகலாம் பசிக்குது' கார்த்திகாவும் கயலும் காலை உணவுக்கு கேன்டீன் சென்றனர்.

'வாட் எ சர்ப்ரைஸ், சார்ட்டடே அதுவுமா ஆபிஸ்ல?' மதனின் நண்பன் சுரேஷ் கார்த்திகா அமர்ந்திருந்தது கண்டு அருகில் வந்து பேசினான் 'ஹாய், வாங்க, டேக் எ சீட், போர் அடித்தது அதன் ஆபிஸ் போலாம்னு வந்துட்டோம்' கார்த்திகா சுரேஷை அமரச் சொன்னாள் 'கயல் இது சுரேஷ், மதனோட பிரண்ட்' கார்த்திகா அறிமுகப்படுத்த 'மதன்?' கயல் கேட்க 'ஐ ஆல்ரெடி டோல்ட் யூ ரைட்? தட் யுனிக்ஸ் கய்?' கார்த்திகா புரியாமல் திகைக்க 'ஓ அந்த தேவ்தாஸ்? கல்யாணம் பண்ணிக்க தாடி வளக்குறாரே? சாரி, ஐ மீன், எங்க உங்க பிரண்ட்,

வரலையா?' கயல் சமாளிக்க 'அவன் எங்கயாச்சும் ஒரு மீட்டப்ல மொக்க போட்டுட்டு இருப்பான், மாசத்துல இருக்குற நாலு சார்டடேவும் ஆளு பிஸி, பர்ஸ்ட் சாட்டர்டே எந்த மீட்டப்னு தெரியல, செகண்ட் சார்டடே ஐலக்சி [https://ilugc.in], தேர்ட் சார்ட்டடே மேட்-ராஸ் [https://www.meetup.com/mad-rs/], போர்த் சாட்டர்டே சென்னைபை [https://chennaipy.org/]' சுரேஷ் கூற 'ஐலக்சி தெரியும், மத்த குருப்லாம் இப்பத்தான் கேள்விப் படுறேன். நீங்க போகலையா?' கார்த்திகா கேட்க, 'நீங்க வேற, அவன் ரூம்ல போடுற மொக்க போதாதா, நம்மாளுதான் ஒரு ஆதிவாசி, எப்ப பாத்தாலும் பிளாக் அண்ட் வொயிட் டெர்மினல்ல இருப்பான், எப்பவாச்சும் படம் பார்க்கறப்ப அவன் லேப்டாப் கலர்புல்லா இருக்கும், ஆனா அங்க போனா இவன விடப் பெரிய ஆதிவாசிங்கல்லாம் இருக்கானுவ, படத்த கூட ஆஸ்கி கேரக்டர்ல பாக்குறானுவ,' சுரேஷ் சொன்னதைக் கேட்டதும் கார்த்திகாவும் கயலும் சிரிக்க ஆரம்பித்துவிட்டனர். 'உண்மையாவா? டெர்மினல்ல படம் பாக்க முடியுமா?' கார்த்திகா ஆர்வத்துடன் கேட்க 'இத அவன் கிட்ட கேட்றாதீங்க, அதுக்கு ஒரு ஹிஸ்டரி வெச்சிருப்பான்' சுரேஷ் சொல்லிக் கொண்டிருக்கும் போதே அவன் கைப்பேசியில் மணி அடித்தது, மறுமுனையில் தீப்தி கூப்பிட 'ராட்சஷி கூப்பிட்டா, போல கொன்றுவா, நான் வர்றேன்' சுரேஷ் நகர ஆரமிபித்தான்.

இன்று மாதத்தின் இரண்டாவது சனிக்கிழமை. கார்த்திகா தன் கைப்பேசியின் மீட்டப் செயலியில் ஐலக்சி மீட்டப் குருப்பின் மீட்டிங் எங்கு எப்பொழுது என்று கண்டு தெரிந்துகொண்டாள். ‘பேப் இன்னைக்கு ஈவினிங் மூணு மணிக்கு எங்கயும் போகாத, நாம IIT போறோம்’ கார்த்திகா கயலிடம் கூற ‘எங்க மீட்டப்பா? ஆள விடு, நான் தூங்கனும், வேணும்னா வண்டிய எடுத்துட்டுப் போ’ கயல் மறுக்க ‘தூங்குறதுலயே இருக்காதடி குண்டச்சி,’ கார்த்திகா கூற ‘ஆமா நா குண்டு, நீ அப்படியே சைஸ் ஜீரோ ஹிப் வெச்சிக்கிட்டு திரியற, நான் குண்டுன்னா நீயும் குண்டுதான்டி,’ கயல் கூற ‘என்ன இப்பவும் அழகா இருக்கன்னு சொல்றவங்க இருக்காங்கடி’ கார்த்திகா கூற ‘அழகுதான், ஆனா ஒல்லியில்ல, உன்ன அழகுன்னு சொன்னவங்களையே வேணும்னா மறுபடியும் கேட்டுப்பாரு’ கயல் வாதாடினாள். ‘நான் போயிட்டு வறேன்’ கார்த்திகா தன் ரூமிலிருந்து கிளம்பினாள்.

IIT மெட்ராஸ் கேம்பஸ், ஏரோஸ்பேஸ் இன்ஜினியரிங் பில்டிங், ரூம் நம்பர் 3, மதன் உள்ளே வந்து வழக்கம் போல தன் லேப்டாப் விரித்து அதில் மூழ்கினான். முதல் டாக் ஆரம்பித்து நடந்து கொண்டிருக்கையில் ஃபுல் ஸ்லீவ் வொயிட் ஷார்ட் குர்தி, பிளாக் ஜீன்ஸ், ரிம்லெஸ் ஸ்பெக்ட்ஸ், ஷோல்டர் ஸ்ரேப் லேப்டாப் பேக் வெச்சிக்கிட்டு ஒரு பொண்ணு உள்ள வர அந்த ருமே ஸ்டன் ஆச்சு. அதுல ஒருத்தனுக்கு மட்டும் ஹார்ட் பீட் ஏகத்துக்கும் எகிறி

இருந்துச்சு. ஆனா அந்தப் பொண்ணோட கண்கள் தேடினதும் அந்த ஒருத்தனத்தான். அவள் அவனைப் பார்த்துவிட்டு அருகில் வந்து அமர்ந்ததும் அவன் ஹார்ட் பீட் இரு மடங்கு உயர்ந்தது, சிறிது புன்னகையுடன் முதல் டாக் பிரசன்டர் தன் லைவ் டெமோவைத் தொடர்ந்தார். அங்கிருந்த சீனியர்கள் மதனைப் பார்த்து புன்னகைத்து விட்டு லைவ் டெமோ கவனிக்கத் தொடர்ந்தனர். ஏனென்றால் அவர்களுக்குத் தெரியும் மதன் யார் என்று, அவன் அருகில் ஒரு அழகான பெண் அமர்வது ரிச்சர்டு ஸ்டால்மேனுக்கு பக்கத்தில் மேக்புக் ப்ரோ இருப்பதற்குச் சமம்.

முதல் டாக் முடிந்து இரண்டாவது டாக்கிற்கு அடுத்த பிரசன்டர் தயாராகிக் கொண்டிருந்தார், அப்போதுதான் கார்த்திகாவும் மதனும் பேச ஆரம்பித்தனர். ‘என்ன மிஸ்டர் மதன் கண்டுக்கவே மாட்டென்றீங்க?’ கார்த்திகா ஆரம்பிக்க ‘தட் என்ட்ரீ, அப்படியே சினிமால ஹீரோயின் காலேஜ் கிளாஸ் ரூமில என்டர் ஆகும்போது ஒரு கேமரா ஆங்கிள் வைப்பாங்களே, அவ்வளவு பியூட்டி புல்லா இருந்துச்சு’ மதன் கூற, ‘ஆங்கிள் மட்டும்தான் ப்யூடிபுல்லா?’ கார்த்திகா கேட்க ‘நீங்க அழகா இருக்கீங்கன்னு நான் சொல்லித்தான் தெரியனுமா. அதான் இந்த ரூமே ஸ்டன் ஆச்சே’ மதன் கூற ‘இருந்தாலும் உங்க ரெஸ்பான்ஸ் என்னன்னு தெரிஞ்சிக்கனும்ல’ கார்த்திகா வெட்கத்துடன் கேட்க ‘இந்த இடத்துல இத சொல்லக்கூடாது இருந்தாலும் சொல்றேன், இந்த பிளாக் அண்ட்

வொயிட் ட்ராஸ் செம்மையா இருக்கு. அதுவும் இந்த ஸ்பெக்ட்ஸ், இப்பதான் ஃபர்ஸ்ட் டைம் நீங்க ஸ்பெக்ட்ஸ் போட்டு பாக்குறேன்' மதன் கூற 'யாரையாவது இம்ப்ரஸ் பண்ணனும்னா இப்படி ஸ்பெக்ஸ் போட்டு வருவேன்' கார்த்திகா கூற 'அந்த யாரோ இம்ப்ரஸ் ஆனாரா?' மதன் கேட்க 'அத நீங்கதான் சொல்லனும்' கார்த்திகா கூற 'ஸ்பெக்ட்ஸ் போட்டா நீங்க வேற லெவல்' மதன் கூற 'போதுங்க, டாக் ஆரம்பிச்சாச்சு' கார்த்திகா மதனின் கவனத்தைத் திசை திருப்பினாள்.

ஒரு வழியாக எல்லா டாக்குகளும் முடிவுக்கு வந்தது. வழக்கப்படி ஒருங்கிணைப்பாளர் மீட்டிற்கு வந்த எல்லோருடைய பெயர், பணி, புதியவராக இருந்தால் எவ்வாறு ஐலக்சியின் அறிமுகம் கிடைத்தது என்பதை வரிசையாகக் கேட்டுக்கொண்டிருந்தார். மதனின் தருணம் வந்தது. 'நான் மதன், ஒரு பிரைவேட் கம்பெனியில் டெவலப்பரா வொர்க் பண்றேன், ரெகுலராக மீட்டப்புக்கு வருவேன்,' சபைக்குச் சொல்லி முடித்துக் கொண்டான். இப்போது பக்கத்தில் இருந்த கார்த்திகாவின் தருணம். 'நான் கார்த்திகா, மதன் வொர்க் பண்ற அதே பிரைவேட் கம்பெனியில் லினக்ஸ் அட்மினாக இருக்கேன். காலேஜ் படிக்கும்போது ஐலக்சி பற்றித் தெரியும், ஆனா இப்பத்தான் லினக்ஸில் இண்ட்ரஸ்ட் வந்திருக்கு, சோ, நிறைய கத்துக்க வந்திருக்கேன்' கார்த்திகா முடிக்க 'மதன் கம்பல் பண்ணி கூட்டி வந்தானா?' ஒருங்கிணைப்பாளர் கேட்க 'இல்லைங்க, அவருக்கு நான்

வருவேன்னு தெரியாது’ கார்த்திகா பதில் கூற ‘எனிவே வெல்கம் டு தி அதர் சைட், தேரார் லாட்ஸ் ஆப் ஆப்பர்சூனிட்டி இன் ஓப்பன் சோர்ஸ் பார் உமன், லைக் அவுட்ரீச், பை லேடிஸ், ரெயில்ஸ் கர்ல்ஸ், யு கேன் லுக் அட் ஒப்பன் சோர்ஸ் டைவர்சிட்டி வெப்சைட் [https://opensourcediversity.org/#projects], உங்களுக்கு ஆர்வம் மட்டும் இருந்தா போதும், நீங்க நிறைய கான்றிப்யூட் பண்ணலாம், வருங்காலத்துல நீங்களும் இங்க ஒரு பிரசண்டரா வருவீங்கன்னு நம்புறேன்’ ஒருங்கிணைப்பாளர் கார்த்திகாவிடம் சொல்லிவிட்டு மற்றவர்களைக் கேட்க ஆரம்பித்தார்.

மீட்டப் முடிந்து எல்லோரும் கிளம்ப, மீட்டப்புக்கு வரும் வொர்க்கிங் புரபஷ்னல்ஸ், அங்கு வரும் ஸ்டூடன்டுகளுக்கு ஒரு மினி ட்ரீட் வைப்பது வழக்கம். அன்றும் மதனும் சீனியர்களும் அருகில் இருக்கும் IIT கேண்டீனில் டீ மற்றும் ஸ்நாக்ஸ் வாங்க எத்தனை ஜூனியர்கள் வருகிறார்கள் என கணக்கெடுக்க ஆரம்பித்தனர். ‘ நீங்களும் டீ சாப்பிட கேன்டீன் வறீங்களா? டிரஸ்ட் மீ, யூ கெட் லாட் ஆப் நாலேஜ் இன் திஸ் கைன் டாப் ஆப்லைன் டிஸ்கஷன்ஸ்’ மதன் ஆர்வத்தைத் தூண்ட ‘அப்கோர்ஸ் எஸ்,’ கார்த்திகா கூற ‘வண்டி வச்சிருக்கீங்களா? இல்ல லிப்ட் வேணுமா? ஏன்னா கேன்டீன் கொஞ்சம் தூரம் போகனும்’ மதன் கேட்க ‘ஐ ஹவ்’ கார்த்திகா கூறிவிட்டு தன் டியோவைக் காட்டினாள். ‘என் பின்னாடி பாலோ பண்ணுங்க, ‘ மதன் சொல்லிவிட்டு தன் ஹார்னெட்டைக்

கிளப்பினான். இருவரும் கேன்டீன் வந்தடைந்தனர். அங்கு இவர்களுக்கு முன்பு டீ பார்ட்டி ஆரம்பித்து இருந்தது 'வாடா மொக்க, ஸிட், நீங்களும் உட்காருங்க கார்த்திகா' ஒருங்கிணைப்பாளரும் மதனின் தோழருமானவர் இருவரையும் அமரச் சொன்னார். 'அப்புறம், எங்கிருந்து வரீங்க? மதன் கொலீகா? ஒரே ப்ராஜக்ட்டா? எங்க படிச்சீங்க? ஐலக்சி எப்படி தெரியும்?' ஒருங்கிணைப்பாளர் கேள்விகளைத் தொடுக்க 'என்னோட நேட்டிவ் ஆசனூர், சத்தியமங்கலம் பக்கத்துல இருக்கு, படிச்சது பிஐடில [https://www.bitsathy.ac.in/] பிஇ, அப்போ அங்க ஐலக்சி ஒரு வொர்க்ஷாப் நடத்துனாங்க, அது மூலமாத் தெரியும். வேல கிடச்சு லினக்ஸ் அட்மினா இருக்கேன், அப்ப ஒரு டாஸ்க் ஹேண்டில் பண்ணும்போது மதன் இன்றடியூஸ் ஆனார். அவர் ஒரு நாள் லினக்ஸ் எப்படி உருவாச்சுன்னு சொன்னாரு, அதுல இருந்து புல் டைம் லினக்ஸ் யூசரா மாறிட்டேன், இன்னைக்கு ஐலக்சி போகலாம்னு தோனுச்சு, வந்தேன்' கார்த்திகா மதனுடனான அறிமுகத்தை விவரித்தாள் 'வி நீட் லாட் அப் விமன் டு பார்டிசிபேட் இன் ஓப்பன் சோர்ஸ், அவங்க வராததுக்கு என்ன காரணம்னு தெரியல' ஒருங்கிணைப்பாளர் கூற 'இன்ட்ரஸ்ட் இல்லாததுதான் காரணம். நானே மதன் மீட் பண்ணாம இருந்திருந்தா இங்க வந்திருப்பேனான்னு சந்தேகம்' கார்த்திகா விலக்கினாள். 'எனிவே, நைஸ் டாக்கிங் டு யு கார்த்திகா' ஒருங்கிணைப்பாளர் கார்த்திகாவிடம் கூறிவிட்டு 'என்னடா மொக்க, வாட் யூ ஆர் அப் டூ?'

மதனை ப்பார்த்துக் கேட்டார். ‘போன வாரம் இன்ட்ரஸ்டிங்கான ஒரு ப்ராப்ளம்னா,’ மதன் தன் கான்வர்சேஷனை ஆரம்பித்தான். மதனும் அங்கு கூடியிருந்தவர்களும் லினக்ஸ் உலகத்தில் நடக்கும் தற்போதைய நடப்புகளிலிருந்து அவர்கள் சந்தித்த தொழில்நுட்ப பிரச்சனைகள் வரை அலசினர். இதைப் பார்த்துக்கொண்டிருந்த கார்த்திகாவுக்கு அவளும் ஒரு நாள் இவர்களுடன் விவாதிக்க வேண்டும் என்ற ஆர்வம் தோன்றியது.

ஒரு வழியாக மினி டீ பார்ட்டியும் முடிவுக்கு வரும் போது இரவு மணி ஒன்பது. மதனும் கார்த்திகாவும் எல்லோரிடமும் விடைபெற்று தங்கள் வாகனங்களிடம் வந்தனர். ‘ப்பா, எவ்ளோ டாபிக் டிஸ்கஸ் பண்றீங்க, அமேசிங்’ கார்த்திகா டிஸ்கஷனில் விவாதித்ததை எண்ணி வியப்படைந்தாள். ‘இது என்ன பிரமாதம், கான்ப்ரன்ஸ் எல்லாம் வந்து பாருங்க விடிய விடிய பேசுவோம்’ மதன் பெருமிதப்பட்டான். ‘ஆமா, அப்பவே கேட்கனும்னு இருந்தேன், நான் இங்க இருக்கேன்னு உங்களுக்கு எப்படி தெரியும்?’ மதன் கேட்க ‘சுரேஷ் காலையில கேன்டீன்ல மீட் பண்ணாரு அவர் சொல்லித்தான் நீங்க இங்க வருவீங்கன்னு தெரிஞ்சிக்கிட்டேன், வந்தேன், இருந்தீங்க’ என்று கார்த்திகா கூறினாள். ‘சரி இப்படியே வண்டி தள்ளிக்கிட்டு ரெண்டு கிலோமீட்டர் நடந்தா கிண்டி கேட் வந்துரும் போலாமா?’ மதன் கேட்க ‘ஏன் வண்டிய ஓட்டிக்கிட்டு போனா வராதா?’ கார்த்திகா பதில் கேள்வி கேட்க ‘சீக்கிரம் வந்துடும்’ மதன் புன்னகையுடன் கூற

‘பரவால்ல ஓட்டிக்கிட்டே போகலாம், வேணும்னா டின்னர் எங்கயாச்சும் போகலாம்’ கார்த்திகா சிரிப்புடன் கூறினாள். மதனும் கார்த்திகாவும் அங்கிருந்து கிளம்பினர்.

இருவரும் ஓஎம்ஆர் சாலையில் சென்றுகொண்டிருந்தனர். ‘நீங்க நான் வெஜ் சாப்பிடுவீங்களா?’ மதன் கேட்க ‘நீங்க சாப்பிடுவீங்களா?’ கார்த்திகா கேட்க ‘எவ்வளவு சாப்பிட சொன்னாலும் சாப்டுவேன், பட் நீங்க சாப்பிடலனா நானும் சாப்பிடல’ மதன் கூற ‘நல்ல வேளை எங்க தயிர்சாதம்ன்னு சொல்லிடுவீங்ளோன்னு இருந்தேன்’ கார்த்திகா நிம்மதியானாள். இருவரும் ஒரு நல்ல முஸ்லிம் ரெஸ்டாரன்டில் நுழைந்தனர். இருவருக்கும் ஒரு டேபிள் ஒதுக்கப்பட்டது. ‘என்ன சாப்பிடுறீங்க?’ மதன் கேட்பதற்குள் ‘ஒரு பெப்பர் பார்பிக்யூ சிக்கன், ஒரு மட்டன் பிரியாணி’ கார்த்திகா முந்திக்கொள்ள மதன் சிரித்துக்கொண்டே சர்வரைப் பார்த்து ‘இன்னொரு மட்டன் பிரியாணி சேர்த்து கொண்டு வாங்க’ என்று ஆர்டரைக் கொடுத்தான். ‘பார்பிக்யூ சிக்கன் எனக்கு மட்டும் தான் நீங்க கை வைக்க கூடாது’ கார்த்திகா ஆணையிட மதன் கார்த்திகாவின் ஆர்வத்தைப் பார்த்து ‘நான் வெஜ் அவ்வளவு புடிக்குமா?’ கேட்க ‘பாய் கடை பிரியாணின்னா சும்மாவா?’ கார்த்திகா கூற இருவரும் சிரித்தனர். ‘செம க்யூட்டா இருக்கீங்க’ மதன் கூற ‘அதான் அப்பவே சொல்லிட்டீங்களே இப்ப என்ன?’ கார்த்திகா கேட்க ‘அப்ப கண்ணுக்கு அழகாத் தெரிஞ்ச கார்த்திகாவைப் பார்த்துச் சொன்னேன் இப்ப பார்பிக்யூ சிக்கனுக்காக

சண்ட போட்ற கார்த்திகாவைப் பார்த்துச் சொல்றேன்' மதன் கூற 'போதும்,' கார்த்திகா வெட்கத்தில் தலை குனிய என்றென்றும் புன்னகை படத்தில் இருந்து எனைச் சாய்த்தாளே பாடல் ஒலித்தது. 'இதுல சிச்சுவேஷன் சாங் வேர, யூ ஆர் மேட்' கார்த்திகா வெட்கத்துடன் கூற மதன் சிரித்தபடி கார்த்திகாவையும் தன் செல்போனிலிருந்து வரும் பாடலையும் ரசித்துக்கொண்டிருந்தான்.

'எனிவே ஐ மஸ்ட் அப்பாலஜைஸ் ஃபர்ஸ்ட், இத்தன நாளாப் பழகி இருக்கேன், ஆனா உங்க நேட்டிவ் எது, உங்க பேமிலி பத்தி எதுவும் கேட்டதில்லை. ஐம் சாரி' மதன் மன்னிப்பு கேட்க 'இட் இஸ் ஆல் ரைட், நான்தான் உங்க கிட்ட சொல்லி இருக்கணும், அப்பவே சொன்ன மாதிரி, நேட்டிவ் சத்தியமங்கலம் பக்கத்தில் இருக்கும் ஆசனூர், அப்பா ஸ்கூல் எட் மாஸ்டர், அம்மா அதே ஸ்கூல்ல டீச்சர், நான் வீட்டுக்கு ஒரே பொண்ணு, கேம்பஸ்ல செலக்ட் ஆகி நம்ம கம்பெனில வேல, சோழிங்கநல்லூர்ல ரூம், ரூம்ல ஒரு பிரண்ட் தூங்கிக்கிட்டு இருப்பா, இங்க ஒரு பிரண்ட் கூட டின்னர்' கார்த்திகா விவரிக்கும் போதே அவள் செல்போன் அடித்தது, மறுமுனையில் கயல் 'எங்கடி இருக்க? சீக்கிரம் வண்டி எடுத்துட்டு வா சாப்பிடப் போலாம்' கயல் கூற 'ஆல்ரெடி பிரியாணி உள்ள போயிட்டு இருக்கு, மதன் கூட' கார்த்திகா கூற 'இது எப்ப, சொல்லவேல்ல?,' கயல் கூற 'வரும்போது வாங்கிட்டு வறேன், என்ன வேணும்?' கார்த்திகா கேட்க 'தாங்காது, பக்கத்துல போய்ச் சாப்பிட்டுக்குறேன், எப்ப வருவ?

வருவியா?’ கயல் கலாய்க்க ‘சரி வை,’ கார்த்திகா காதோடு காதாகப் பேசிவிட்டு வைத்தாள். ஆர்டர் வந்தது, இருவரும் சாப்பிட ஆரம்பித்தனர். ‘எப்படி இருந்தது மீட்டப்?’ மதன் கேட்க ‘மோர் தன் ஐ எக்பெக்டட், அதுவும் அந்த கேன்டீன்ல நடந்த கான்வர்சேஷன், வேர லெவல், நீங்களும் டாக் கொடுப்பீங்களா?’ கார்த்திகா கேட்க ‘சம்டைம்ஸ், ஏதாவது இன்ட்ரஸ்டிங்கா பண்ணிட்டு இருந்தா மீட்டப்ல அத பத்தி டாக் கொடுப்பேன்’ மதன் விளக்கினான். ‘உங்களுக்கு எப்படி லினக்ஸ் இன்றடியூஸ் ஆச்சு?’ கார்த்திகா கேட்க ‘அப்ப நான் பிளஸ் ஒன், சி ப்ரோக்ராமிங் சிலபஸ்ல இருந்துச்சு, அது வரைக்கும் விண்டோஸ்ல போர்லாண்ட் சி கம்பைலர் யூஸ் பண்ணி மட்டும் ப்ரோக்ராம் பண்ணிட்டிருந்த நான் முதன் முதலா cc கமாண்ட யூஸ் பண்ணியும் சி ப்ரோக்ராம் கம்பைல் பண்ணலாம்னு பாலகுருசாமியின் ப்ரோக்ராமிங் இன் ஆன்சி சி புக் மூலமாத் தெரிஞ்சிக்கிட்டேன், அந்த cc கமாண்ட பத்தி ஆராயும்போது தான் கம்ப்யூட்டர்னா விண்டோஸ் மட்டும் இல்ல அதுக்கும் மேல யுனிக்ஸ் அப்படின்னு ஒரு ஆப்பரேட்டிங் சிஸ்டம் இருக்குன்னு தெரிஞ்சிக்கிட்டேன், அப்புறம் B.Sc., Computer Science படிக்கும்போது எங்க காலேஜ்ல இருந்த லைப்ரரி எனக்கு யுனிக்ஸ் பத்தி படிக்க உதவுச்சு’ மதன் சொல்லிக்கொண்டிருக்கும்போதே கார்த்திகா குறுக்கிட்டு ‘B.Sc.? அப்ப உங்க புல் குவாலிபிகேஷன்?’ கார்த்திகா கேட்க ‘M.Sc., Computer Science, அதுவும் M.Sc. கரஸ்ல

பண்ணது' மதன் கூற 'நம்பவே முடியல, நீங்க ஏதாவது ஒரு IIT ல BE ஆர் ME முடிச்சிருப்பீங்கன்னு இருந்தேன்' கார்த்திகா கூற 'IIT னா என்னன்னே எனக்கு காலேஜ் பைனல் இயர் படிக்கும் போது தான் தெரியும், அதுவும் இல்லாம எனக்கும் மார்க்குக்கும் ரொம்ப தூரம்' மதன் சிரிக்க 'இன்ட்ரஸ்டிங், ஏன் M.Sc.?' கார்த்திகா கேட்க 'B.Sc. முடிச்சதுமே கூலிக்கு வேலை செய்ய ஆள் தேவைன்னு என்ன கூப்டாங்க நானும் போயிட்டேன் அப்புறம் எங்கிருந்து M.Sc. ரெகுலர்ல படிக்குறது' மதன் கூற 'சுத்தமாப் புரியல, கூலிக்கு வேலை செஞ்சீங்களா? அப்புறம் எப்படி ஐடி இண்டஸ்ட்ரில?' கார்த்திகா கேட்க 'நான் கூலி வேலைன்னு சொன்னது B.Sc. முடிச்சிட்டு மெட்ராஸ்ல வேலை தேடி அலஞ்சிட்டிருந்தப்ப ஆப் கேம்பஸ்ல செலக்ட்டாகி ஜாயின் பண்ண என்னோட ஃபர்ஸ்ட் ஐடி கம்பெனில நான் பண்ண வேலைய தாங்க' மதன் விளக்கிக் கூறினான். 'ஏன் B.Sc. முடிச்சதுமே வேலை தேடி அலஞ்சீங்க, யூசுவலா ஹையர் ஸ்டடீஸ் முடிச்சிட்டு தானே வேலை தேடுவாங்க?' கார்த்திகா கேட்க '"வாங்கியிருக்கும் மார்க்குக்கு ஆயிரம் ஆயிரம்மா செலவு பண்ணி இவன நான் மேல படிக்க வைக்கனுமாடி? மரியாதையா கடையில வந்து உட்காரச் சொல்லு, தொழில் கத்துக்கட்டும், படிச்சு கிழிச்சது போதும்" இது எங்கப்பா என் அம்மாகிட்ட நான் பிளஸ் டூ முடிச்சதுமே சொன்னது, எப்படியோ என் அம்மா கன்வென்ஸ் பண்ணி அப்பாவ நான் B.Sc. படிக்க ஒத்துக்க வெச்சாங்க, B.Sc. கே

அவ்ளோ, M.Sc. ன்னு எங்கப்பா முன்னாடிப் போய் நின்றிருந்தேன் என்ன கொன்னுட்டு ஜெயிலுக்குப் போயிருப்பாரு’ மதன் கூற கார்த்திகா முகத்தில் புன்னகை ‘மெயினா ஹயர் ஸ்டடிஸ் படிக்க எனக்கே இன்ட்ரஸ்ட் இல்ல, அதான் வேலை தேட மெட்ராஸ் வந்தேன், நாயா பேயா அலைஞ்சு ஒரு வேலை வந்தது, அப்புறம் M.Sc. கரஸ்ல போட்டு இரண்டு வருடம் வேலை பாத்துக்கிட்டே படிச்சு முடிச்சேன்’ மதன் முடித்தான். ‘படிக்க புடிக்கலைன்னா அப்பா சொன்ன மாதிரி கடைய பாத்துட்டு இருந்திருக்கலாம்ல?’ கார்த்திகா கேட்க ‘எனக்கு எக்ஸாம் மனப்பாடம் பண்றது இதெல்லாம் தாங்க வராது, ஆனா ப்ரோக்ராமிங்னா உயிர், அதுவும் C ரொம்பப் பிடிக்கும், கூடவே யுனிக்ஸ், லினக்ஸ், ஓப்பன் சோர்ஸ் எல்லாம் வந்து ஒட்டிக்கிச்சு, விட முடியல, அதுக்காக எங்க கடைய எனக்குப் புடிக்கலைன்னு அர்த்தம் இல்ல, கடையை விட என்னோட இண்ட்ரஸ்ட் முக்கியமாப் பட்டது, இதெல்லாம் வீட்ல சொன்னா புரியுமோ இல்லையோ அதான் பைனான்ஷியல் இன்டிபென்டன்ஸ் வேணும்னு வேலைக்கு வந்துட்டேன்’ மதன் தன் கதையைக் கூறினான். ‘இப்படியும் பசங்க இருக்கீங்களா? அன்பிலீவபிள்’ கார்த்திகா மதனின் கதையைக் கேட்டு வியந்தாள்.

இருவரும் சாப்பிட்டு முடித்தனர். மதன் பில் கட்டிவிட்டு இருவரும் தங்கள் வண்டிகளின் அருகில் வந்தனர். ‘தேங்ஸ்’ மதன் கூற ‘எதுக்கு’ கார்த்திகா கேட்க ‘யூ மேட் திஸ் டே மெமரபிள்’ மதன் புன்னகையுடன்

கூற ‘பார் மீ டூ, டுடே இஸ் ஸ்பெஷல்’ கார்த்திகா சொல்லி முடிப்பதற்குள் மரியான் படத்திலிருந்து இன்னும் கொஞ்ச நேரம் இருந்தாதான் என்ன பாடல் மதனின் செல்போனில் இருந்து ஒலிக்க கார்த்திகாவின் முகம் மீண்டும் வெட்கத்தில் ஜொலிக்க ஆரம்பித்தது. பாடல் முடியும் வரை இருவரும் பாடலைக் கேட்டபடி ஒருவரை ஒருவர் பார்த்து சிரித்துக் கொண்டிருந்தனர். ‘என்ன போக விட மாட்டீங்க போல, டேம் தட் விஜய் பிரகாஷ் வாய்ஸ், ஐ லவ் திஸ் சாங்’ கார்த்திகா கூற ‘ஹவ் எ குட் ஸ்லீப்’ மதன் தன் வண்டியில் அமர ‘யூ டூ’ கார்த்திகாவும் வண்டியில் அமர்ந்தாள். இருவரும் கை அசைத்துவிட்டு விடைபெற்றனர்.

கார்த்திகா தன் ரூமிற்கு வந்தாள். கதவைத் திறந்த கயலுக்குக் கார்த்திகாவைப் பார்த்ததும் ஆச்சரியம் ‘பேப்,என்னடி இப்படி இருக்க? போமோது நார்மலா தானடி போன? பார்லர் போனியா? யூ லுக் அமேசிங்,’ கயல் கூறிக் கொண்டிருக்கும் போதே புதிய முகம் படத்திலிருந்து நேற்று இல்லாத மாற்றம் என்னது பாடலைப் பாடிக்கொண்டே கார்த்திகா உள்ளே சென்றாள். பாடிக்கொண்டே உள்ளே போகும் கார்த்திகாவைப் பார்த்துக்கொண்டிருந்த கயல் ‘இவளே இப்படி போராள்னா அந்தப் பையன் இப்ப எப்படி இருக்கானோ?’, கயல் மதனை எண்ணி வருத்தப்பட்டாள்.

மதனும் தன் ரூமை அடைந்தான். கதவைத் திறந்த சுரேஷ் மதன் தானாகச் சிரித்துக் கொண்டிருந்ததைப் பார்த்து ‘என்னடா ஆச்சு, தனியா சிரிச்சிக்கிட்டு இருக்க?’ சுரேஷ் கேட்க ‘ரொம்ப தேங்க்ஸ்டா,’ மதன் மொட்டையாகப் பதில் அளிக்க ‘எதுக்கு?’ சுரேஷ் கேட்க மதன் எதுவும் சொல்லாமல் சுரேஷின் கன்னத்தைக் கிள்ளி விட்டு உள்ளே சென்றான். சிரித்துக்கொண்டே உள்ளே செல்லும் மதனைப் பார்த்து ‘சரக்க மோந்து பார்த்துட்டானோ?’ சுரேஷ் புலம்பியவாறே உள்ளே சென்றான்.

**தொடரும்..**

# யூனிவர்சின் நிறம்

‘டேய் நாயே, எழுந்திரிடா, சாப்பிடப் போகலாம், பசிக்குது’ மதன் சுரேஷை எழுப்ப ‘சண்டேடா, மதியம் வரைக்கும் தூங்கலன்னா சண்டேக்கு மரியாதையே இல்லடா’ சுரேஷ் புலம்ப ‘நைட்டெல்லாம் வாட்சப்ல மொக்க போடுறது, டே டைம்ல தூங்குறது’ மதன் கூற ‘லவ் பண்றவங்க இது கூட பண்ணலன்னா அப்றம் அந்த லவ்வுக்கு அர்த்தம் இல்லடா, அதெல்லாம் உன்ன மாதிரி சாமியாருக்குப் புரியாது’ சுரேஷ் கூற ‘நான் சாமியாராவே இருந்துட்டு போறேன், சாப்டவா போலாம், இப்பவே மதியம் ரெண்டு மணி, ஆந்ரா மெஸ் மூடிடப் போறாங்க’ மதன் கூறிவிட்டுத் தன் பைக் நோக்கி நடந்தான். ‘டேய் இரு வறேன்’ சுரேஷும் மதன் கூடவே சென்றான்.

இருவரும் ஆந்திரா மெஸ்ஸில் சாப்பிடத் தொடங்கினர் ‘அப்புறம் மாப்பிள, நேத்து நைட் எதுக்கு தேங்ஸ் சொன்ன’ சுரேஷ் கேட்க ‘அது, சும்மா, சொல்லனும்னு தோனுச்சு, சொன்னேன்’ மதன் எதையோ மறைக்க ‘நானே ஒரு டகால்டி, எனக்கே டகால்டியா?’ சுரேஷ் மிரட்ட மதன் எதுவும் பேசாமல் சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டு தொடர்ந்தான் ‘கார்த்திகா நேத்து மீட்டிங் வந்திருந்தாங்க’ மதன் கூறியவுடன் தண்ணீர் குடித்துக் கொண்டிருந்த சுரேஷுக்குப் புரை ஏற இருந்தது, எப்படியோ அதைச் சமாளித்து விட்டுப் பேச

ஆரம்பித்தான் ‘நேத்து அந்தப் பொண்ணு உன்ன பத்தி விசாரிக்கும்போதே தோனுச்சு, அப்ப நைட் தேங்ஸ் சொன்னதுக்கும் அவங்கதான் காரணமா, ஏதோ சொன்ன இன்னொருத்தன அழ வச்சு நான் சந்தோஷப்பட மாட்டேன்னு, இப்ப என்ன?’ சுரேஷ் கோபமாகக் கேட்க ‘அந்தப் பொண்ணும் சிங்கிள் தாண்டா பசங்கல அவாய்ட் பண்றதுக்காகச் சும்மா பாய்ப்ரண்ட் இருக்கான்னு சொல்லியிருக்காங்க, அதுவும் இல்லாம அவங்க கூட நேத்து ஈவினிங் முழுக்க ஸ்பென்ட் பண்ணியிருக்கேன், அவங்களோட மொபைல ஹேன்ட்பேக்ல இருந்து ஒரே ஒரு டைம்தான் எடுத்தாங்க, அவங்க ரூம்மேட் கிட்ட சாப்பாடு வாங்கறத பத்திப் பேசினாங்க, நீதான் லவ்ல எக்ஸ்பர்ட் ஆச்சே, அந்தப் பொண்ணுக்கு லவ்வர் இருக்கான்னே வச்சிப்போம், ஐஞ்சு மணிநேரமா ஒரு மெசேஜ் கூடவா அனுப்பாம இருப்பான்? அதுவும் சார்டடே ஈவினிங்? இதெல்லாம் விட்ரா, லவ் பண்றவங்க லவ் பண்றத விட்டுட்டு எதுக்கு லினக்ஸ் மீட்டிங் எல்லாம் வரனும்? சொல்ரா?’ மதனும் கோபத்துடன் கேள்வி கேட்க ‘கடைசியா ஒன்னு சொன்ன பாரு, ஹன்றட் பர்சென்ட் பேக்டு, லவ்வர் கூட ஊர் ஊராச் சுத்தவே நேரம் சரியா இருக்கு, இதுல எங்கிருந்து லினக்ஸ் பக்கம் ஒதுங்குறது’ சுரேஷ் புலம்ப ‘சொந்தக் கதையா? நேத்து என்ன அதே ஈசியார், அதே மாயாஜால் ஈவினிங் ஷோவா?’ மதன் கேட்க ‘என் கதைய விட்ரா, ஃபர்ஸ்ட் டைம் டேட்டிங் போயிருக்க, கிப்ட் ஏதாவது வாங்கிக் கொடுத்தியா?’ சுரேஷ்

கேட்க ‘இதுக்குப் பேர்தான் டேட்டிங்காடா?’ மதன் கூற ‘வாய்ல பீடிங் பாட்டில் வெக்கிறேன் குடிக்கிறியா?’ சுரேஷ் கடுப்பாக ‘ஜஸ்ட் ஒன் அவர் தான்டா பிரைவேட்டாப் பேசியிருப்போம் மத்தபடி மீட்டிங்ல தான் இருந்தோம்’ மதன் கூற ‘நெக்ஸ்ட் டைம் இது மாதிரி மீட் பண்ணும் போது கிப்ட் ஏதாவது வாங்கிக் கொடுடா லேட்டர் உதவும்’ சுரேஷின் அனுபவம் பேசியது ‘அட்வைஸ்?, கேட்டுத் தொலையிறேன், வா போலாம்’ மதனும் சுரேஷும் பைக்கில் அமர்ந்து ரூமை நோக்கிப் புறப்பட்டனர்.

‘டைம் என்னடி,’ கார்த்திகா கேட்க ‘ஏன் ஸ்டொமக்ல பெல் அடிக்குதா?’ கயல் தன் துணிகளை பால்கனியில் ஆற வைத்த வாறே கார்த்திகாவைக் கேட்க ‘கடுப்பேத்தாத சொல்லுடி’ கார்த்திகா கூற ‘யாரு நான் கடுப்பேத்துறனா?, எத்தன தடவ எழுப்புறேன் எந்திரிக்கவே மாட்டேங்கற, நைட்டெல்லாம் அந்த லேப்டாப்ல என்னடி பண்ணிட்டு இருந்த? எப்ப தூங்குன, மதியம் மூணு மணிக்கு எந்திரிக்கிற, இப்படி நீ நைட்டெல்லாம் தூங்காம இருந்தது இப்பத்தான்டி பர்ஸ் டைம்’ கயல் கேட்க ‘அதுவா, அது, சொன்னா உனக்குப் புரியாது’ கார்த்திகா மழுப்ப ‘அந்தப் பையன் கூடச் சேர்த்ததுல இருந்து ஒரு மார்க்கமாவே இருக்க, நேத்து நைட் வேற பாட்டெல்லாம் பாடிக்கிட்டு வர, என்ன செட்டாயிருச்சா?’ கயல் கேட்க ‘அப்படி எல்லாம் இல்லடி, வி ஆர் ஜஸ்ட் குட் பிரண்ஸ்’ கார்த்திகா வெட்கத்துடன் கூற ‘நேத்து பிரண்டு, இன்னைக்கு குட்

பிரண்டு, நாளைக்கு பாய்பிரண்டு, அப்புறம் அஸ்பண்டு’ கயல் கிண்டலடிக்க ‘பஞ்ச் டயலாக் கேட்குற மூட்ல இல்லடி, சாப்பிடப் போலாம் பசிக்குது’ கார்த்திகா கூற ‘டேபிள்ள பீசா இருக்கு, போ’ கயல் கூற ‘எப்படி ஆர்டர் பண்ண, நீ சாப்டியா?’ கார்த்திகா கேட்க ‘என்னோட கோட்டா அப்பவே முடிஞ்சது’ கயல் கூற இருவரும் டைனிங் டேபிளுக்கு வந்தனர். ‘நேத்து என்னடி அப்படி இருந்த?’ கயல் கேட்க ‘என்னடி சொல்ற, நேத்து நான் வேற லெவல்ல இருந்ததா சொல்லிட்டிருந்தானேடி,’ கார்த்திகா பதற ‘அவனுக்கு ட்ரஸ்சிங் சென்செல்லாம் கூட இருக்கா, நேத்து அந்த ட்ரெஸ்ல செமையா இருந்த’ கயல் கூற ‘தேங்ஸ்’ கார்த்திகா கூறிவிட்டு தன் துணிகளை வாஷிங் மெஷினில் போட்டுத் துவைக்க ஆரம்பித்தாள்.

மறுநாள் மதன் வழக்கத்திற்கு மாறாக சிறிது சீக்கிரமே ஆபிஸ்க்கு வந்து தன் வேலைகளில் மூழ்கியிருந்தான், அப்போது கார்த்திகா தன் லேப்டாப்புடன் வந்து ‘ஹாய்’ கூற ‘வாங்க, என்ன ஏதோ அவசரமா வந்திருக்கீங்க’ மதன் கேட்க ‘அதெல்லாம் ஒன்னும் இல்ல, லாஸ்ட் டைம் பைல் சிஸ்டத்த பத்தி சொல்லும்போது mount, cd, ls, chmod பத்திச் சொன்னீங்கள்ல, இந்த கமாண்ட்களோட மேனுவல் பேஜ் படிச்சு யூஸ் பண்ணிப் பாத்தேன், அது மட்டும் இல்லாம கூகுள் பண்ணும்போது pwd, mkdir, rmdir, cp, mv, touch, stat, rm, chown, dh, du, find கமாண்ட்களும் இம்பார்டன்ட்னு சொல்லுச்சு. அதுங்களோட மேனுவல் பேஜ் படிச்சேன், எனக்குப் புரிஞ்சது சொல்றேன்

கரெக்டான்னு சொல்லுங்க’ கார்த்திகா கூற மதனும் தலை அசைத்தான்.

‘பர்ஸ்ட் ஒரு டேர்மினல் ஓப்பன் பண்ணா முதல்ல நாம பாக்குறது கமாண்ட் ப்ராம்ப்ட், உதாரணத்துக்கு

```
[karthika@karthikalaptop0 ~] $
```

போல இருக்கும், @ சிம்பலுக்கு முன்னாடி இருக்கிறது இப்ப லாகின் ஆகி இருக்கும் யூசரோட யூசர் நேம், @ சிம்பலுக்கு அடுத்து இருக்குறது இப்ப யூஸ் பண்ணிட்டு இருக்குற கம்ப்யூட்டரோட நேம். ஸ்பேஸ் கேரக்டருக்கு அடுத்து இருக்கும் ~ சிம்பல் டெர்மினலோட கரண்ட் போல்டர் ஓம் போல்டர்னு குறிப்பிடுது, அதாவது /home/karthika போல்டரைக் குறிக்குது’ கார்த்திகா விளக்கினாள். ‘கரெக்ட், அதுமட்டுமில்லாம யுனிக்ஸ்ல ஒவ்வொரு ப்ராசஸ்சுக்கும் கரண்ட் போல்டர்னு ஒன்னு இருக்கு, டெர்மினலும் ஒரு ப்ராசஸ், ஆரம்பிக்குறப்போ அதோட கரண்ட் போல்டர் கரண்ட் யூசரோட ஓம் போட்டருக்கு செட் பண்ணிக்கும்.’ மதன் மேலும் விளக்கினான்.

‘அடுத்து pwd, இது பைல் சிஸ்டத்துல நாம இப்ப எந்த போல்டரில் இருக்கோம்னு சொல்லும். அந்த போல்டரோட முழு பாத் (full path) சொல்லும். கரக்டா?’ கார்த்திகா கேட்க ‘இத இன்னொரு விதமாகவும் செல்லலாம், pwd கமாண்ட், டெர்மினல் ப்ராசஸ்சோட கரண்ட்

போல்டரோட முழு பாத்தையும் காட்டும்’ மதன் வேறொரு விதமாகக் கூறினான்.

```
$ pwd
/home/karthika
$
```

‘அடுத்து cd, இது ஒரு போல்டரில் இருந்து இன்னொரு போல்டருக்கு மாற உதவும்’ கார்த்திகா கூற ‘இப்படியும் சொல்லலாம், டெர்மினல் ப்ராசஸ்சோட கரண்ட் போல்டர சேஞ்ச் பண்ண யூஸ் பண்ற கமாண்டு அப்படின்னும் சொல்லலாம்’ மதன் விளக்க ‘என்ன குழப்பாதீங்க, சிம்பிளா சொல்லனும்னா, cd /home/karthika/Downloads கமாண்ட் Downloads போல்டருக்குள்ள போக உதவும்’ கார்த்திகா கூற ‘அதைத்தான் நானும் சொல்றேன், cd /home/karthika/Downloads கமாண்ட், கரண்ட் டெர்மினல் ப்ராசஸ்சோட கரண்ட் போல்டரை /home/karthika/Downloads போல்டருக்கு மாத்தும்’ மதன் கூறிவிட்டுப் புன்னகைத்தான். கார்த்திகா ஏன் மதன் ஒவ்வொருமுறையும் ப்ராசஸ் பற்றி குறிப்பிட்டு அதற்கு முக்கியத்துவம் கொடுக்கின்றான் என்று புரியாதவளைப்போல் யோசித்தவாறே இருந்தாள்.

‘அது மட்டும் இல்லைங்க யுனிக்ஸ்ல ஒரு பைல் அல்லது போல்டரோட இடத்த இரண்டு வகையாக் குறிப்பிடலாம், ஒன்னு அப்சல்யூட் பாத் (absolute path), அடுத்தது ரிலேட்டிவ் பாத் (relative path), உங்க ஹோம் போல்டரில் இருக்குற Downloads போல்டருக்கு

போகனும்னா cd /home/karthika/Downloads அப்படின்னு கொடுக்கலாம், இல்லாட்டி உங்க ஹோம் போல்டரில் இருந்துகிட்டு வெறும் cd Downloads அப்படின்னு கொடுக்கலாம். வெறும் Downloads அப்படின்னு குறிப்பிடுவதற்குப் பேரு ரிலேட்டிவ் பாத், /home/karthika/Downloads அப்படின்னு குறிப்பிடுவது அப்சல்யூட் பாத். ரிலேட்டிவ் பாத் கொடுக்கும்போது ஆட்டோமேட்டிக்கா cd கமாண்ட் கரண்ட் போல்டர கணக்குல எடுத்துக்கும். இன்னும் சிம்பிளா cd ~/Downloads கமாண்டும் Downloads போல்டருக்குள்ள போக உதவும், இங்க ~ சிம்பிள் உங்க ஹோம் போல்டரைக் குறிக்குது, அதனால இங்க நீங்க யூஸ் பண்றது ரிலேட்டிவ் பாத் இல்ல, அப்சல்யூட் பாத்.’ மதன் விளக்கினான்.

```
$ cd /home/karthika/Downloads
$ pwd
/home/karthika/Downloads
$ cd ~
$ pwd
/home/karthika
$ cd Downloads
$ pwd
/home/karthika/Downloads
$ cd
$ pwd
/home/karthika
$ cd ~/Downloads
$ pwd
/home/karthika/Downloads
$ cd
$
```

‘cd கமாண்டோட இன்னொரு விஷயம், நீங்க எந்த போல்டருக்குல்ல இருந்தாலும் வெறும் cd டைப் பண்ணிட்டு என்டர் அழுத்தினீங்கன்னா உடனே நீங்க உங்க ஹோம் போல்டரில் இருப்பீங்க, அதேபோல் மறுபடியும் லாஸ்டா இருந்த போல்டருக்கு போகனும்னா cd - கமாண்ட் கொடுத்தா போதும், ஆட்டோமேட்டிக்கா நீங்க லாஸ்டா இருந்த போல்டருக்கு மாறிடுவீங்க’ மதன் கூற ‘இன்ட்ரஸ்டிங், cd கமாண்ட்ல இவ்வளவு இருக்கா?’ கார்த்திகா வியந்தாள்.

```
$ pwd
/home/karthika/Downloads
$ cd
$ pwd
/home/karthika
$ cd -
$ pwd
/home/karthika/Downloads
$ cd
$ pwd
/home/karthika
$
```

‘அடுத்து ls, இந்த கமாண்ட டெர்மினல் ஓப்பன் பண்ணிட்டு ஒரு முறையாவது யூஸ் பண்ணாம இருக்க மாட்டீங்க. வெறும் ls கமாண்ட் கரண்ட் போல்டரில் இருக்கும் பைல் மற்றும் போல்டர்களை லிஸ்ட் பண்ணும். அதுவே ls -R கமாண்ட், உள்ளுக்குள்ள எத்தன போல்டர் இருந்தாலும் அத்தனை போல்டரில் இருக்கும் பைல் மற்றும் போல்டர்களையும் லிஸ்ட் பண்ணும். அப்புறம் ls -l கமாண்ட்

டீட்டேயில்டு லிஸ்ட் பண்ணும், இந்த ls கமாண்டுக்கு ஒரு போல்டரோட பாத் கொடுத்தா, அது கரண்ட் போல்டர விட்டுட்டு கொடுத்த போல்டரில் இருக்கும் பைல் மற்றும் போல்டர்களை லிஸ்ட் பண்ணும். உதாரணத்துக்கு ls -l ~/Downloads கமாண்ட் கரண்ட் போல்டரை விட்டுட்டு, ஹோம் போல்டரில், அதாவது /home/karthika போல்டருக்குல்ல இருக்குற Downloads போல்டர லிஸ்ட் பண்ணும்.' கார்த்திகா விளக்கினாள். 'கரெக்ட், அது மட்டும் இல்லாம -l ஆப்ஷன் கொடுக்கும் போது அவுட்புட்ல ஒவ்வொரு லைனில் முதல்ல இருக்கிற பத்து கேரக்டர்கள் தான் அந்த என்ட்ரிக்கு சொந்தமான பைல் அல்லது போல்டருக்கான பர்மிஷன் பிட்ஸ், இத நான் முன்னாடியே உங்ககிட்ட சொல்லியிருக்கேன்' மதன் கூற 'நியாபகம் இருக்கு' கார்த்திகாவும் தலையசைத்தாள்.

```
$ ls
Videos Documents Downloads
$ ls -R
Videos Documents Downloads
./Downloads:
test.txt
$ ls -l
drwxr-xr-x 2 karthika karthika 6 Sep 23 09:38 Videos
drwxr-xr-x 3 karthika karthika 21 Jul 10 12:06 Documents
drwxr-xr-x 3 karthika karthika 21 Jul 10 12:06 Downloads
$ ls -l Downloads
-rw-r--r-- 1 karthika karthika 11 Jul 17 01:25 test.txt
$
```

'அடுத்து mkdir, இது மூலமா ஒரு போல்டர் கிரியேட் பண்ணலாம். அது மட்டும் இல்லாம mkdir -p one/two/three கமாண்ட் மூனு

போல்டர்களை ஒன்னுக்குள்ள ஒன்னா கிரியேட் பண்ணும். கரக்டா?’

கார்த்திகா கேட்க மதனும் ஆமாம் என்று தலை அசைத்தான்.

```
$ mkdir -p one/two/three
$ ls -R one
one:
two

one/two:
three

one/two/three:
$
```

‘அடுத்து rmdir, இது ஒரு போல்டர் ரிமூவ் பண்ண யூஸ் பண்றது. அது மட்டும் இல்லாம rmdir -p one/two/three கமாண்ட் முதல்ல three போல்டரை டெலிட் பண்ணும் அப்புறம் two போல்டரை டெலிட் பண்ணும் கடைசியா one போல்டரை டெலிட் பண்ணும். முக்கியமா rmdir கமாண்ட் போல்டருக்குள்ள ஏதாவது கன்டென்ட் இருந்தா அந்த போல்டரை டெலிட் பண்ணாது’ கார்த்திகா கூற ‘க்ரேட்’ மதன் பாராட்டினான்.

```
$ rmdir -p one/two/three
$ ls -R one
ls: cannot access 'one': No such file or directory
$
```

‘அடுத்து cp, இது ஒரு பைல் அல்லது போல்டர காப்பி பண்ண உதவுது. பார் எக்ஸாம்பிள்

```
$ cp /etc/fstab /home/karthika/fstab
$
```

கமாண்ட் /etc க்குள்ள இருக்குற fstab பைல என்னோட /home/karthika போல்டருக்கு காப்பி செய்யும் அது மட்டும் இல்லாம

```
$ cp -r /etc /home/karthika/etc
$
```

கமாண்ட் /etc போல்டர் மட்டும் இல்லாம அதுக்குள்ள இருக்கிற அத்தனை பைல்களையும் போல்டர்களையும் /home/karthika போல்டருக்குள்ள காப்பி செய்யும்' கார்த்திகா கூற மதன் கரெக்ட் எனத் தலை அசைத்தான்.

'அடுத்து mv, இது ஒரு பைல் அல்லது போல்டரோட நேம் சேஞ்ச் அல்லது வேற ஒரு போல்டருக்கு மூவ் பண்ண யூஸ் பண்ற கமாண்ட். பார் எக்ஸாம்பிள்,

```
$ mv /home/karthika/one.txt /home/karthika/two.txt
$
```

கமாண்ட் என்னோட ஹோம் போல்டரில் இருக்குற one.txt பைல் நேமை two.txt அப்படின்னு மாத்திடும், அதே

```
$ mv /home/karthika/two.txt /home/karthika/Downloads/
$
```

கமாண்ட் நேம் சேஞ்ச் பண்ணின two.txt பைல என்னோட ஹோம் போல்டரில் இருக்குற Downloads போல்டருக்கு மூவ் பண்ணிடும்' கார்த்திகா கூற மதன் கார்த்திகாவை வியப்புடன் பார்த்து ஆமாம் என்று தலை அசைத்தான்.

‘அடுத்து touch, இது ஒரு பைல் அல்லது போல்டரோட லாஸ்ட் ஆக்ஸஸ் டைம், லாஸ்ட் மாடிஃபைடு டைம் சேஞ்ச் பண்ண உதவும்.

```
$ touch -d 1900-01-01 /home/karthika/emptyfile.txt
$
```

கமாண்ட் என்னோட ஹோம் போல்டரில் emptyfile.txt பைல் ஆல்ரெடி இருந்தா அதோட லாஸ்ட் ஆக்ஸஸ் டைம் அண்ட் லாஸ்ட் மாடிஃபைட் டைம 1900-01-01 டேட்கு மாத்திடும், பைல் ஆல்ரெடி இல்லைன்னா கிரியேட் பண்ணிட்டு அப்புறமா டைம்ஸ்டாம்புகள மாத்திடும்’ கார்த்திகா கூற மதனும் ‘கரெக்ட்’ என்று கூறித் தலை அசைத்தான்.

‘அடுத்து stat, இந்த கமாண்ட் ஒரு பைல் அல்லது போல்டரோட டீட்டெயில்ஸ் பாக்க யூஸ் பண்ணலாம்.

```
$ stat /home/karthika
  File: /home/karthika
  Size: 4096 Blocks: 8 IO Block: 4096 directory
Device: 254,0 Inode: 269123004 Links: 21
Access: (0710/drwx--x---) Uid: ( 1000/ karthika) Gid: ( 1000/
karthika)
Access: 2021-11-05 04:48:07.031256486 +0530
Modify: 2021-11-05 18:18:12.595115460 +0530
Change: 2021-11-05 18:18:12.595115460 +0530
 Birth: 2021-09-23 09:06:54.099246949 +0530
$
```

கமாண்ட் என்னோட ஹோம் போல்டரோட சைஸ், செக்யூரிட்டி பிட்ஸ், கடைசியாக ஆக்சிஸ் பண்ண டைம், கடைசியாக சேஞ்ச் ஆன

டைம், லாஸ்ட் கிரியேஷன் டைம், ஓனர் யார், எந்த எந்த குரூப் ஆக்ஸஸ் பண்ணலாம் போன்ற நிறைய டீடெயில்ஸ் பாக்கலாம்' கார்த்திகா கூற மதன் ஆமாம் என்று தலை அசைத்தான்.

'அடுத்து rm, வெரி டேஞ்சரஸ் கமாண்ட், ஒரு பைல் அல்லது போல்டர ரிமூவ் பண்ண யூஸ் பண்ற கமாண்ட்.

```
$ rm /home/karthika/emptyfile.txt
$
```

கமாண்ட் என்னோட ஹோம் போல்டர்ல இருக்கும் emptyfile.txt பைல தூக்கிடும்.

```
$ rm -fr /home/karthika
$
```

கமாண்ட் கேள்வியே கேட்காம என்னோட ஹோம் போல்டரையே தூக்கிடும்' கார்த்திகா கூற 'முக்கியமா

```
$ rm -fr /
$
```

கமாண்ட் பாரபட்சம் பாக்காம என்டையர் பைல் சிஸ்டத்தையே தூக்கிடும்' மதன் கூற 'இல்லையே rm மேன் பேஜ்ல –no-preserve-root அப்ஷன கொடுத்தாத்தான் ரூட் போல்டரைத் தூக்கும் இல்லனா ரூட் போல்டரைத் தூக்காதுன்னு போட்டிருக்கே?' கார்த்திகா கூற 'மேன் பேஜ் படிச்சிருக்கீங்களா இல்லையான்னு டெஸ்ட் பண்ணேன்' என்று கூறி மதன் சமாளித்தான்.

‘அடுத்து chmod, இது நீங்க ஏற்கனவே சொன்ன மாதிரி ஒரு பைல் அல்லது போல்டரோட பர்மிஷன் பிட்களை மாத்த உதவும். பார் எக்ஸாம்பிள்

```
$ chmod u+rwx,g+rx,o+rx /home/karthika/emptyfile.txt
$
```

கமாண்ட், emptyfile.txt பைலோட யூசர் (u) பர்மிஷன படிக்க (r), எழுத (w) மற்றும் செயல்படுத்த (x) அனுமதிக்கும் (+), அப்புறம் emptyfile.txt பைலோட குரூப் பர்மிஷன படிக்க (r), செயல்படுத்த (x) அனுமதிக்கும் (+), அதே போல மற்றவர்களுக்கு (o) படிக்க (r) மற்றும் செயல்படுத்த (x) அனுமதிக்கும். இங்க (+) சிம்பலுக்கு பதில் (-) சிம்பல் போட்டா அனுமதி மறுக்கப்படும். இப்படி ugo+-rwx கேரக்டர்ஸ் பயன்படுத்துவதற்கு பதிலா அதே பர்மிஷன

```
$ chmod 755 /home/karthika/emptyfile.txt
$
```

கமாண்ட் யூஸ் பண்ணியும் செட் பண்ணலாம், இங்க முதல்ல இருக்கிற 7, யூசர் பர்மிஷன் பிட் செட் பண்ணும், 7=4+2+1, அதாவது படிக்க (4), எழுத (2) மற்றும் செயல்படுத்த (1) அனுமதிக்கும், அடுத்து இருக்கும் 5, குரூப் பர்மிஷன் பிட் செட் பண்ணும், 5=4+1, அதாவது படிக்க (r) மற்றும் செயல்படுத்த (x) மட்டும் அனுமதி அளிக்கும். அடுத்து இருக்கும் 5, அதர்ஸ் பர்மிஷன் செட் பண்ணும். கரெக்டா?’

கார்த்திகா கேட்க ‘அமேசிங், சூப்பரா எக்ஸ்ப்ளெயின் பண்றீங்க, சீக்கிரம் ilugc ல கிளாஸ் எடுங்க’ மதன் பாராட்டினான்.

‘அடுத்து chown, இது ஒரு பைல் அல்லது போல்டரோட ஓனர் அண்டு குரூப் சேஞ்ச் பண்ண யூஸ் பண்றது, பார் எக்ஸாம்பிள்

```
$ chown karthika:karthika /tmp/rootfile.txt
$
```

கமாண்ட் /tmp/rootfile.txt பைலோட ஓனர் karthika அன்ட் குரூப் karthika அப்படின்னு மாத்திடும். கரெக்டா?’ கார்த்திகா கேட்க ‘கரெக்ட், அது மட்டும் இல்லாம

```
$ chmod -R karthika:karthika /home/karthika
$
```

கமாண்ட் /home/karthika போல்டர் மட்டும் இல்லாம அதுக்கு உள்ள இருக்குற எல்லா பைல் அண்ட் போல்டரோட யூசர் மற்றும் குருப்ப karthika யூசருக்கும் karthika குரூப்பிற்கும் மாத்திடும்’ மதன் விளக்கிச் சொன்னான்.

‘அடுத்து dh, இந்த கமாண்ட் பைல் சிஸ்டத்தோட மேப் ஆயிருக்குற ஒவ்வொரு பார்டிஷனோட யூசேஜ் செல்லும்’ கார்த்திகா கூற ‘முக்கியமா df -h கமாண்ட் பார்டிஷனோட சைஸ் கிகாபைட்(G)/ மொகாபைட்(M)/கிலோபைட்(K) கணக்கில் காட்டும்’ என்று மதன் விளக்கினான்.

```
$ df -h
Filesystem Size Used Avail Use% Mounted on
dev 3.9G 0 3.9G 0% /dev
run 3.9G 1.4M 3.9G 1% /run
/dev/sda2 239G 171G 68G 72% /
tmpfs 3.9G 728K 3.9G 1% /dev/shm
tmpfs 3.9G 16K 3.9G 1% /tmp
/dev/sda1 250M 73M 178M 30% /boot
tmpfs 784M 88K 784M 1% /run/user/1000
$
```

‘அடுத்து du, இந்த கமாண்ட் கரண்ட் போல்டரில் இருக்கும் ஒவ்வொரு பைலோட சைஸ் காட்டும், அது மட்டும் இல்லாம

```
$ du -sh .
637M .
$
```

கரண்ட் போல்டரோட சைஸ் காட்டும்’ கார்த்திகா கூற மதன் ஆமாம் என்று தலை அசைத்தான்.

‘அடுத்து mount கமாண்ட், இது சிஸ்டத்துல எந்தெந்த டிவைஸ் எந்தெந்த போல்டர்ல மேப் ஆகி இருக்குன்னு காட்டும்’ கார்த்திகா கூறினாள்.

```
$ mount
proc on /proc type proc (rw,relatime)
sysfs on /sys type sysfs (rw,relatime)
dev on /dev type devtmpfs
(rw,relatime,size=500092k,nr_inodes=125023,mode=755)
/dev/sda1 on / type ext4 (rw,relatime)
tmpfs on /rwroot type tmpfs (rw,relatime,size=10088960k)
tmpfs on /dev/shm type tmpfs (rw,nosuid,nodev)
devpts on /dev/pts type devpts
(rw,nosuid,noexec,relatime,gid=5,mode=620,ptmxmode=000)
tmpfs on /run type tmpfs (rw,nosuid,nodev,mode=755)
```

```
tmpfs on /sys/fs/cgroup type tmpfs
(ro,nosuid,nodev,noexec,mode=755)
cgroup on /sys/fs/cgroup/systemd type cgroup
(rw,nosuid,nodev,noexec,relatime,xattr,name=systemd)
cgroup on /sys/fs/cgroup/net_cls,net_prio type cgroup
(rw,nosuid,nodev,noexec,relatime,net_cls,net_prio)
tmpfs on /tmp type tmpfs (rw,nosuid,nodev)
$
```

‘லாஸ்டா find, இது கரண்ட் போல்டரில் இருக்கும் எல்லா பைல் அண்ட் போல்டர் நேம்கள காட்டும், அப்புறம் கரண்ட் போல்டருக்கு உள்ள இருக்குற ஒவ்வொன்னு உள்ளேயும் போய் அதுக்குள்ள இருக்கிற பைல் அண்ட் போல்டர காட்டும் இப்படியே எல்லா பைல் நேம் அண்ட் போல்டர் நேம்கள காட்டும்’ கார்த்திகா கூற ‘அது மட்டும் இல்லைங்க, find வச்சிப் பல விஷயங்களைப் பண்ணலாம், உதாரணத்துக்கு

```
$ find . -mtime +730
/home/karthika/emptyfile.txt
$
```

கமாண்ட் உங்க கரண்ட் போல்டருக்குள்ள ஏதாவது ஒரு சப்போல்டர்ஸ்குள்ள ஒரு பைல் அல்லது போல்டர் ரெண்டு வருஷத்துக்கு முன்னாடி மாடிஃபை ஆகியிருந்தா அந்த பைல் அல்லது போல்டர் நேம் மட்டும் காட்டும். நாம touch கமாண்ட் வெச்சு emptyfile.txt பைல் மோடிபைட் டைம்ஸ்டாம்ப 1900-01-01 டேட்டுக்கு மாத்தினோம்ல, அத இந்த find கமாண்ட் தேடிக் கண்டுபிடிச்சுக் காட்டிடும்’ மதன் விளக்கினான்.

‘இன்னும் கொஞ்ச நாள்ல எனக்கே வாத்தியாராம்மாவா வருவீங்க போல’ மதன் கூற ‘மிசோஜினிஸ்ட்’ கார்த்திகா கடுப்புடன் கூறச் ‘சும்மாச் சொன்னேன்’ மதன் கூற ‘பொழச்சுப் போங்க, மன்னிச்சிட்டேன், ஆமா உங்க டெஸ்க் பக்கத்துல ஒரு அண்ணா இருப்பாரே எங்க?’ கார்த்திகா கேட்க ‘உதய் அண்ணாவா, அவருக்கு ஈவினிங் ஸ்டேட்டஸ் கால் இருக்கு, ஈவினிங் ஆறு மணிக்குத் தான் வருவாரு’ மதன் கூற ‘டீ’ கார்த்திகா கேட்க ‘லெட்ஸ் கோ’ மதனும் சம்மதித்து இருவரும் பேன்டிரிக்குச் சென்றனர்.

‘சோ, மதனுக்கு மியூசிக் ரொம்பப் பிடிக்குமோ?’ கார்த்திகா கேட்க ‘உங்களுக்குப் பிடிக்காதா? விஜய் பிரகாஷ் எல்லாம் தெரிஞ்சிருக்கு?’ மதன் பதில் கேள்வி கேட்க ‘எனக்கும்தான், யார் பேவரெட் கம்போசர்?’ கார்த்திகா கேட்க ‘நீங்க சொல்லுங்க’ மதன் கேட்க ‘பர்டிகுலர் இல்ல, பட் ஏஆர்ஆர், ஹரிஸ், அனி இவங்க சாங்ஸ் மிஸ் பண்ண மாட்டேன். நீங்க?’ கார்த்திகா கூற ‘இசைஞானி அப்படின்னு ஒருத்தர் இருக்காரே அவர பிடிக்காதா?’ மதன் கேட்க ‘புடிக்காதுன்னு சொல்லமுடியாது, பட் ஐ லைக் ஏஆர்ஆர் மோர் தன் எனிவொன், அதுவும் இல்லாம நாம வளரும்போது இளையராஜா சாங்ஸ் அவ்வளவா வந்தது இல்லையே? நீங்க சொல்லுங்க, யார் பேவரெட் கம்போசர்?’ கார்த்திகா மடக்க ‘பெரிய லிஸ்டுங்க, போயிட்டே இருக்கும், எல்லா கம்போசர்ட்ட இருந்தும் ஏதாவது ஒரு நல்ல மெலோடி அல்லது பெப்பியா ஒரு சாங் வரும் அந்த சாங்ஸ்தான்

எனக்கு புடிச்சது' மதன் சமாளிக்க 'எனக்கென்னமோ அன்னைக்கு நைட் சாப்பிட்டுக் கெளம்பும் போது நீங்க போட்ட சிச்சுவேஷன் சாங்க வெச்சு பாத்தா என்ன மாதிரி ஏஆர்ஆர் ரசிகன் தான்னு தோணுது' கார்த்திகா மதனை மீண்டும் மடக்க மதன் புன்னகைத்தான், 'அப்படி வாங்க வழிக்கு, ஏஆர்ஆர் ரசிகன நான் ஈஸியா கண்டுபிடிச்சிடுவேன்' கார்த்திகா கூற 'நீங்க இளையராஜா ரசிகையா இருப்பீங்களோன்னு ஒரு முன்னெச்சரிக்கை தான்' மதன் சிரித்தபடியே கூறினான்.

'சரி இப்ப கலர், எந்த கலர் ரொம்ப பிடிக்கும்' கார்த்திகா கேட்க 'என்னங்க இன்டர்வியூல கேக்குற மாதிரி கேக்கறீங்க' மதன் வியக்க 'அப்படித்தான் வச்சுக்கோங்க, பதில் சொல்லுங்க' கார்த்திகா மிரட்ட 'பிளாக், பியூர் பிளாக்' மதன் கூற 'நெனச்சேன் இதத்தான் சொல்லுவீங்கன்னு, அது ஏன் எல்லா பசங்களும் ஒரே ஆன்சர் சொல்றீங்க, என்னோட கஸின்சும் எப்ப கேட்டாலும் இதே ஆன்ஸர்தான், எதுக்குடா புடிச்சிருக்குன்னு கேட்டா பிளாக்னாலே கெத்துதான்பானுங்க, அப்படி என்ன இருக்கு அந்த பிளாக்ல?' கார்த்திகா கேட்க 'ரொம்ப சிம்பிள், மத்த எந்த கலர் பாக்கனும்னாலும் உங்களுக்கு லைட் சோர்ஸ் தேவ, ஆனா பிளாக்கிற்குத் தேவையில்லை, இந்த யூனிவர்சே பிளாக்குக்குள்ளதாங்க இருக்கு' மதன் கூற கார்த்திகா தலையை ஒருபுறம் சாய்த்தபடி சிறிது முறைப்பும் புன்னகையும் கலந்து 'பஞ்ச் டைலாக்கு?' என்று கேட்க

‘இல்லைங்க, பேக்ட்’ மதனும் அசராமல் பதில் அளித்தான்.

‘உங்களுக்கு என்ன கலர் பிடிக்கும்னு சொல்லவே இல்லையே?’ மதன் கார்த்திகாவிடம் கேட்க ‘வைட், மில்கி வைட்’ கார்த்திகா கூற ‘லைட் சோர்ஸ்?’ மதன் கார்த்திகாவைப் பார்த்து கேட்க ‘லைட் சோர்சாவே இருந்தாலும் பிளாக்குக்கு உள்ளத்தானே இருக்கேன்’ கார்த்திகா சிரித்துக்கொண்டே தலை குனிந்தபடி தன் வாயில் டீ கோப்பையை வைத்துக்கொண்டு மதனின் ரியேக்ஷன் என்னவென்று புருவத்தை உயர்த்திப் பார்த்தாள். மதனும் புன்னகையுடன் கார்த்திகா பார்ப்பதைப் பார்த்தான். இருவரும் சிறிது நேரம் பேசிக் கொள்ளவில்லை ஆனால் அவர்கள் கண்கள் பேசாமல் இருக்கவில்லை.

**தொடரும்..**

# நெஞ்சில் உள்ளாடும் ராகம்

கார்த்திகா காலையிலேயே மதனின் க்யூப்பிக்கல் வந்திருந்தாள். ‘லினக்ஸ் கமாண்ஸ் படிக்க படிக்க வந்துக்கிட்டே இருக்கு எப்படி நியாபகம் வெச்சிருக்கீங்க?’ கார்த்திகா கேட்க ‘எல்லாத்தையும் நியாபகம் வச்சிருக்க முடியாது, நாம ரெகுலரா யூஸ் பண்றது மட்டும் தான் நம்ம நியாபகத்துல இருக்கும், நாம ரெகுலரா லினக்ஸ யூஸ் பண்ண கத்துக்க வேண்டியது ரெண்டு விஷயம், ஒன்னு பைல் சிஸ்டம் ஸ்ட்ரக்சர், ரெண்டாவது ப்ராசஸ். நேத்திக்கு நீங்க சொன்ன கமாண்ஸ் எல்லாம் பைல் சிஸ்டம் சம்பந்தப்பட்ட கமாண்ஸ், இப்ப நீங்க தெரிஞ்சுக்க வேண்டியது ப்ராசஸ், உங்களுக்கு ப்ராசஸ்னா என்னன்னு தெரியுமா?’ மதன் கேட்க ‘காலேஜ்ல ஆப்பரேட்டிங் சிஸ்டம் பத்தி படிக்கிறப்ப கேள்விப்பட்டிருக்கேன். ஆனா முழுசா என்னன்னு தெரியாது’ கார்த்திகா கூற ‘ப்ராசஸ் தான் ஒரு ஆப்பரேட்டிங் சிஸ்டத்தின் நாடித் துடிப்பு, நீங்க C ல அலோ வேர்ல்ட் ப்ரோக்ராம் எழுதி இருக்கீங்களா?’ மதன் கேட்க ‘என்னங்க, C ப்ரோக்ராமிங் கத்துக்கிறவங்க அந்த ப்ரோக்ராம் தான் முதல்ல எழுதுவாங்க, எனக்கும் C ப்ரோக்ராமிங் தெரியும்’ கார்த்திகா கூற ‘அப்ப எப்படி நீங்க C ல அலோவேர்ல்ட் எழுதுவீங்கன்னு சொல்லுங்க பாப்போம்?’ மதன் கேட்க ‘எனக்கு விண்டோஸ்ல தான் எப்படின்னு தெரியும், லினக்ஸ்ல தெரியாது’ கார்த்திகா கூற ‘விண்டோஸ்ல தான்

சொல்லுங்க' மதன் கூற 'டெஸ்க்டாப்ல டர்போசி (TurboC), டிசிசி (TCC) இல்ல டிசி (TC) அப்படின்னு ஒரு ஐகான் இருக்கும், அத டபுள் கிளிக் பண்ணா ஒரு விண்டோ ஒப்பன் ஆகும், அதுல பைல்->நியூ க்ளிக் பண்ணா ஒரு எம்டி பைல் கிரியேட் ஆகும், அதுல C ப்ரோக்ராம் எழுதி ஆல்ட் எப்னைன் (alt-f9) அழுத்துனா கம்பைல் ஆகும், கம்பைல் எரர் கிளியர் பண்ணி கன்ட்ரோல் எப்னைன் (ctrl-f9) அழுத்துனா நாம எழுதின ப்ரோக்ராம் ரன் ஆகி அலோ வேர்ல்ட் அப்படின்னு அவுட்புட் காட்டும்' கார்த்திகா கூறினாள். 'ரைட், முதல்ல டெஸ்க்டாப்ல டிசின்னு ஒன்னு டபுள் கிளிக் பண்றீங்களே, அது என்னன்னு தெரியுமா?' மதன் கேட்க 'டர்போ சி கம்பைலர்' கார்த்திகா கூற 'அது வெறும் கம்பைலர் மட்டும் இல்லைங்க, டர்போசி (TurboC) அப்படிங்கறது ஒரு இன்டக்ரேட்டட் டெவலப்மென்ட் என்விரான்மென்ட், சுருக்கமா ஐடிஇ (IDE) அப்படின்னு சொல்லுவாங்க, இந்த ஐடிஇ மூலம் நாம ப்ரோக்ராம் எழுத ஒரு எடிட்டரும், அந்த ப்ரோக்ராம நாம ஆல்ட் எப்னைன் (alt-f9) அழுத்தினா ஆட்டோமேட்டிக்கா கம்பைல் பண்ண ஒரு கம்பைலரும் கண்ட்ரோல் எப்னைன் அழுத்தினா ஆட்டோமேட்டிக்கா கம்பைல் பண்ணி உருவாக்குன எக்ஸிக்யூட்டபில ரன் பண்ணிக் காட்டவும் செட் பண்ணி வெச்சிருப்பாங்க. ஆனா ஒரு C ப்ரோக்ராமிங் எழுத நமக்கு ஐடிஇ வேணும்கற அவசியம் இல்ல, ஒரு சாதாரண டெக்ஸ்ட் பைல் கிரியேட் பண்ற ஒரு டெக்ஸ்ட் எடிட்டர் இருந்தாப் போதும்.

அடுத்து நாம அந்த எடிட்டர்ல எழுதின C சோர்ஸ் கோட மெஷினுக்கு புரியிற பைனரி எக்ஸிக்யூட்டபிளா மாத்த ஒரு கம்பைலர் வேணும் அவ்வளவுதான்’ மதன் விளக்கிக் கூறினான். ‘அப்படின்னா ஒரு சாதாரண நோட்பேட்ல நாம C ப்ரோக்ராம் எழுதலாமா?’ கார்த்திகா கேட்க ‘கண்டிப்பா, லினக்ஸில் ட்ரை பண்ணலாமா?’ மதன் கேட்க, ‘ஓக்கே’ என்று கார்த்திகா தன் லேப்டாப்பை ஓபன் செய்தாள்.

‘முதல்ல ஒரு டெக்ஸ்ட் எடிட்டர் ஒப்பன் பண்ணுங்க’ மதன் கூற கார்த்திகா அவள் வைத்திருக்கும் லினக்ஸ் மிண்ட் டிஸ்ட்ரோவில் இருக்கும் டீபால்ட் டெக்ஸ்ட் எடிட்டரை (xed) ஓபன் செய்தாள். ‘இப்ப நீங்க அலோ வேர்ல்ட் C ப்ரோக்ராம் டைப் செஞ்சு சேவ் பண்ணுங்க’ மதன் கூறுவதற்கு முன்பே கார்த்திகா ப்ரோக்ராமை டைப் செய்து கொண்டிருந்தாள். டைப் செய்து கார்த்திகாவின் ஹோம் டைரக்டரியில் சேவ் செய்தாள். ‘/home/karthika/helloworld.txt அப்படின்னு சேவ் பண்ணி இருக்கேன்’ கார்த்திகா கூற ‘அந்த .txt எடுத்துட்டு .c அப்படின்னு சேவ் பண்ணுங்க’ மதன் கூற ‘ஓ, ஆமாம்ல, C ப்ரோக்ராம் .c அப்படின்னு தான் எக்ஸ்டென்ஷன் இருக்கனும்ல, மறந்துட்டேன்’ கார்த்திகா கூறிக்கொண்டே helloworld.txt ஐ helloworld.c ஆக mv கமாண்ட் டெர்மினலில் ரன் செய்து மாற்றினாள். ‘லினக்ஸில் இருக்குற C கம்பைலர் .txt க்கும் .c க்கும் வித்தியாசம் பாக்காதுங்க, அத பொருத்தவர நீங்க கம்பைல் பண்ண கொடுக்கிறது ஒரு சாதாரண டெக்ஸ்ட் பைல்’ மதன் கூற

‘அப்ப .txt அப்படின்னு எக்ஸ்டென்ஷன் இருந்தாலும் கம்பைல் பண்ணுமா?’ கார்த்திகா கேட்க ‘எக்டென்ஷனே இல்லாம ஒரு டெக்ஸ்ட் பைல் கொடுத்தாலும் கம்பைல் பண்ணும், அதுக்கு தேவ ஒரு C சோர்ஸ் அவ்வளவுதான், நாம ஈஸியா கண்டுபிடிக்கத்தான் .txt அப்படின்னு இருந்தத .c க்கு மாத்த சொன்னேன்’ மதன் விளக்கினான். ‘சரி, இப்ப இந்த /home/karthika/helloworld.c பைல எப்படி லினக்ஸ்ல கம்பைல் பண்றது?’ கார்த்திகா கேட்க ‘அதுக்கு முதல்ல நீங்க C கம்பைலர உங்க சிஸ்டத்தில் இன்ஸ்டால் பண்ணனும். நீங்க உங்க சிஸ்டத்துல கமாண்ட் லைன்ல சாப்ட்வேர் பேக்கேஜ் இன்ஸ்டால் பண்ண கத்துக்கிட்டீங்களா?’ மதன் கேட்க ‘ஓ, ரீசண்டா கூட என் சிஸ்டத்த apt கமாண்ட் மூலம் apt update அப்புறம் apt full-upgrade மூலம் அப்டேட் பண்ணேன்’ கார்த்திகா கூற ‘நல்லது, இப்ப அதே apt கமாண்ட யூஸ் பண்ணி gcc கம்பைலர் பேக்கேஜ் இன்ஸ்டால் பண்ணுங்க பாப்போம்’ மதன் கூறியவுடன் கார்த்திகா உடனே apt install gcc என்ற கமாண்டை ரன் செய்து gcc கம்பைலரை இன்ஸ்டால் செய்வதற்கு ஆயத்தமானாள். ‘நில்லுங்க, gcc மட்டும் இன்ஸ்டால் பண்றதுக்கு பதிலா packaging-dev அப்படின்னு ஒரு மெட்டா பேக்கேஜ் இருக்கு, அத இன்ஸ்டால் பண்ணா இன்னும் முக்கியமான சில பேக்கேஜ்கள் இன்ஸ்டால் ஆகும், அதனால, gcc க்கு பதிலா packaging-dev இன்ஸ்டால் பண்ணுங்க’ என்று மதன் கூற அதன்படியே கார்த்திகாவும் டெர்மினலில் apt install packaging-dev டைப் செய்து

இன்ஸ்டால் செய்தாள். ‘இப்ப நீங்க இன்ஸ்டால் பண்ண C கம்பைலர் பேரு gcc, அதாவது gnu-compiler-collection, நான் லினக்ஸ் ஹிஸ்ட்ரி சொல்லும்போது கூட ஸ்டால்மேன் ஒரு C கம்பைலர் முதல்ல உருவாக்குனார், அதத்தான் லினஸ் டார்வல்ட்ஸ் லினக்ஸ் கர்னல உருவாக்கப் பயன்படுத்தினார்னு சொன்னேன்ல, அந்த கம்பைலர் இதுதான்’ மதன் விளக்கினான். ‘ஓ, அப்ப அவர் எழுதிய கம்பைலரத்தான் நான் இப்ப யூஸ் பண்ணப் போறேனா? லினக்ஸில் உண்மையிலேயே ஒவ்வொரு கமாண்டுக்கு பின்னாடி ஒரு சுவாரஸ்யமான ஹிஸ்டரி இருக்கு, அத தெரிஞ்சிக்கிட்டு அந்த கமாண்ட் யூஸ் பண்றது ரொம்ப இன்ட்ரஸ்டிங்கா இருக்கு’ கார்த்திகா உற்சாகமடைந்தாள்.

‘இப்ப gcc கமாண்ட் இன்ஸ்டால் ஆகி இருக்கா இல்லையான்னு எப்படிக் கண்டுபிடிப்பீங்க?’ மதன் கேட்க ‘ஜஸ்ட் அந்த கமாண்ட் ரன் பண்ணும் போது அந்த கமாண்ட் இன்ஸ்டால் ஆகலைன்னா command not found அப்படின்னு எரர் வரும்’ கார்த்திகா கூற ‘ரன் பண்ணாம கண்டுபிடிக்கனும்’ மதன் கேட்க ‘அப்ப கூகுளத்தான் கேட்கனும்’ கார்த்திகா கூற ‘கரெக்ட், நமக்கு ஏதாவது தெரியலைன்னா கூகுளத்தான் கேட்கனும். தேடுங்க’ என்று மதன் கூற கார்த்திகா கூகுளில் தேடி type என்ற ஒரு கமாண்ட் நாம் கொடுக்கும் கமாண்ட் இருக்கா இல்லையா என்று சொல்லும் என்று கண்டுபிடித்தாள். ‘சூப்பர், இப்ப அந்த type கமாண்ட எப்படி ரன் பண்ணுவீங்க?’ மதன்

கேட்க ‘அதான் man பேஜ் இருக்கே’ என்று கார்த்திகா கூறி man type என்று கொடுத்தாள்,ஆனால் type கமாண்டுக்கு மேனுவல் பேஜ் இல்லை என்று வந்தது. ‘என்னங்க, மேன்வல் இல்லைன்னு வருது?’ கார்த்திகா கேட்க ‘எல்லா கமாண்டுக்கும் மேனுவல் பேஜ் இருக்காதுங்க, அதுக்கு பதிலா type –help அப்படின்னு ரன் பண்ணுங்க’ மதன் கூற கார்த்திகாவும் அதன்படியே கமாண்ட் டைப் செய்து என்டர் தட்டினாள். type கமாண்டின் சிறிய ஹெல்ப் வந்தது அதில் அந்த கமாண்டுக்கு என்னவெல்லாம் ஆப்ஷன்கள் கொடுக்கலாம் என்று குறிப்பிடப்பட்டிருந்தது. ஆனால் மேனுவல் பேஜைப் போல் விவரமாக இல்லை. ‘லினக்ஸ்ல இருக்குற தொண்ணூறு சதவீதம் கமாண்ட்ஸுக்கு –help அல்லது -h ஆப்ஷன் கொடுத்தால் அந்த கமாண்ட் பத்திச் சின்னதா டீடெய்ல்ஸ் அவுட்புட் காட்டும், ஆனா அந்த டீடெயில்ஸ், ப்ராப்பர் மேனுவல் பேஜ் மாதிரி இருக்காது’ மதன் விவரித்தான். கார்த்திகா type –help அவ்ட்புட்டில் இருந்த விவரங்களைப் படித்துவிட்டு type gcc என்ற கமாண்டை ரன் செய்தாள், உடனே gcc கமாண்ட் இருக்கும் இடம் /usr/bin/gcc என்று type கமாண்ட் காட்டியது. ‘கண்டுபிடிச்சிட்டேன்’ கார்த்திகா கூற ‘சூப்பர்’ என்று மதன் பாராட்டினான்.

‘இப்ப gcc கமாண்ட் பத்தித் தெரிஞ்சுக்க என்ன பண்ணுவீங்க?’ மதன் கேட்க ‘gcc –help மொதல்ல ட்ரை பண்றேன்’ என்று கார்த்திகா அந்த கமாண்ட் இயக்க வந்த அவுட்புட்டைப் படிக்க கார்த்திகாவுக்குப்

புரியவில்லை, ‘கொஞ்சம் கஷ்டமா இருக்கு’ கார்த்திகா கூற ‘அப்ப என்ன பண்ணனும்?’ மதன் கேட்க ‘man gcc அப்படின்னு டைப் செய்து gcc யோட மேனுவல் பேஜ் படிக்கணும்’ கார்த்திகா சொல்லிக்கொண்டே gcc மேனுவல் ஓபன் செய்தாள். ‘இது கொஞ்சம் பரவால்ல, SYNOPSIS ல ஜஸ்ட் ஒரு இன்புட் பைல் மட்டும் கொடுத்தால் போதும்னு இருக்கு?’ கார்த்திகா கூற ‘ஆமாம் ஒரே ஒரு இன்புட் பைல் மட்டும் கொடுத்தால் போதும், என்ன ஆகுதுன்னு பாப்போமா?’ மதன் கூற கார்த்திகா டெர்மினலில் தனது ஹோம் டைரக்டரியில் இருந்து gcc helloworld.c என்ற கமாண்ட் எக்ஸிக்யூட் செய்தாள். ‘என்னது conio.h இல்லையா?’ கார்த்திகா கேட்க ‘உங்களோட சோர்ஸ் கோட் காட்டுங்க?’ மதன் கேட்க கார்த்திகா அவள் எழுதிய அலோ வேர்ல்ட் ப்ரோக்ராமை cat கமாண்ட் மூலம் டெர்மினலில் காட்டிவிட்டு gcc கமாண்ட் அவுட்புட்டையும் காட்டினாள்,

```
$ cat helloworld.c
#include <stdio.h>
#include <conio.h>
main() {
       printf("hello world\n");
       getch();
}
$ gcc helloworld.c
helloworld.c:2:10: fatal error: conio.h: No such file or
directory
    2 | #include <conio.h>
      |          ^~~~~~~~~
compilation terminated.
$
```

‘conio.h ஹெட்டர் விண்டோஸ்ல மட்டும்தான் இருக்கும், லினக்ஸில் இருக்காது, அது C லெங்வெஜ்ஜோட ஸ்டாண்டர்ட் ஹெட்டர் இல்ல’ மதன் விளக்கினான். ‘அப்ப அத ரிமூவ் பண்ணிடட்டா?’ கார்த்திகா கேட்க ‘ஆமாம்’ என்று மதன் கூறினான். அதன்படியே கார்த்திகா #include <conio.h> லைன் ரிமூவ் செய்து மறுபடியும் gcc helloworld.c என்று ரன் செய்தாள். ‘ரெண்டு வார்னிங், கடைசியில் ஏதோ எரர் மாதிரி இருக்கு?’ கார்த்திகா மறுபடியும் டெர்மினலில் இருந்த அவுட்புட்டைக் காட்டினாள்,

```
$ cat helloworld.c
#include <stdio.h>
main() {
       printf("hello world\n");
       getch();
}
$ gcc helloworld.c
helloworld.c:3:1: warning: return type defaults to ‘int’ [-
Wimplicit-int]
    3 | main() {
      | ^~~~
helloworld.c: In function ‘main’:
helloworld.c:5:5: warning: implicit declaration of function
‘getch’; did you mean ‘getc’? [-Wimplicit-function-declaration]
    5 |     getch();
      |     ^~~~~
      |     getc
/usr/bin/ld: /tmp/ccYcaeAk.o: in function `main':
helloworld.c:(.text+0x1a): undefined reference to `getch'
collect2: error: ld returned 1 exit status
$
```

‘ஓக்கே, முதல் வார்னிங் main பங்ஷனுக்கு டீபால்ட் ரிட்டர்ன் டைப் int அப்படின்னு சொல்லுது, அதனால நீங்க ப்ரோக்ராம் முடிவுல return 0

அப்படின்னு ரிட்டர்ன் வேல்யூ கொடுக்கணும், ரெண்டாவது வார்னிங், getch() அப்படின்னு ஒரு பங்ஷன் இம்பிளிசிட்டா டிக்லர் ஆகி இருக்குன்னு வருது, அடுத்து இருக்குற எரர், getch() அப்படிங்குற பங்ஷனே இல்லன்னு சொல்லுது' மதன் விவரமாக விளக்கினான். 'அப்ப main க்கு முன்னாடி int போட்டு கடைசீயில return 0; லைன் சேக்கனும், அப்புறம் getch() லைன தூக்கனும் அப்படித்தானே?' கார்த்திகா கேட்க 'அவ்வளவுதான்' மதன் கூறினான். அதன்படி கார்த்திகா தன் சோர்ஸ் கோட் மாற்றிக் காட்டினாள்,

```
$ cat helloworld.c
#include <stdio.h>
int main() {
    printf("hello world\n");
    return 0;
}
```

'இப்ப ஓகேவா?' கார்த்திகா கேட்க, 'ஓகே மாதிரிதான் தெரியுது, இப்ப கம்பைல் பண்ணுங்க' என்று மதன் கூற கார்த்திகா gcc helloworld.c என்று ரன் செய்தாள். 'என்ன எந்த அவுட்புட்டும் வரல?' கார்த்திகா வியப்புடன் டெர்மினலைக் காட்டினாள்,

```
$ gcc helloworld.c
$
```

'அப்படின்னா சுக்கிரன் உச்சத்துல இருக்கான்னு அர்த்தம். எந்த கம்பைலேஷன் எரரும் வரலைன்னு அர்த்தம்' மதன் புன்னகையுடன்

கூற கார்த்திகாவும் சிரித்தாள். ‘இப்ப எப்படி அலோ வேர்ல்ட் ப்ரோக்ராம் அவுட்புட் பார்க்கிறது?’ கார்த்திகா கேட்க ‘இருக்க அவசரப்படாதீங்க, இப்ப நான் சில கேள்விகள் கேட்பேன், இப்ப நீங்க என்ன பண்ணீங்க?’ மதன் கேட்க ‘ஒரு டெக்ஸ்ட் எடிட்டர் ஓப்பன் பண்ணி அலோ வேர்ல்ட் C ப்ரோக்ராம் எழுதி அதை சேவ் பண்ணி, gcc கம்பைலர் மூலம் கம்பைல் பண்ணேன்’ கார்த்திகா கூற ‘கம்பைல் அப்படின்னா என்ன?’ மதன் கேட்க ‘அதாவது டெக்ஸ்ட் பார்மேட்ல இருக்குற சோர்ஸ் கோட பைனரி எக்ஸிக்யூட்டபிலா மத்துரது, அதுக்குத்தான் கம்பைலர் தேவைப்படுது, அந்த கம்பைலர் தான் gcc’ கார்த்திகா விரிவாகக் கூற ‘இப்ப உங்க கம்பைல் கமாண்ட் எந்த ஒரு எரரையும் காட்டல, அப்படின்னா என்ன அர்த்தம்?’ மதன் கேட்க ‘அப்படின்னா சுக்கிரன், இல்ல இல்ல’ கார்த்திகா புன்னகையுடன் ‘அப்படின்னா கம்பைலர் சக்ஸஸ்புல்லா பைனரி எக்ஸிக்யூட்டபில க்ரியேட் பண்ணிடுச்சுன்னு அர்த்தம், அப்ப அந்த பைனரி எக்ஸிக்யூட்டபில் எங்க?’ கார்த்திகா கேட்க ‘இப்பத்தான் கரெக்டா கேள்வி கேட்டீங்க, எடுத்தவுடனே எப்படி ரன் பண்றதுன்னு கேக்க கூடாது, எந்த இடத்தில் கிரியேட் பண்ண பைனரி இருக்குன்னுதான் கேட்கனும்’ மதன் கூற கார்த்திகா புன்னகையுடன் ‘எங்க இருக்கு?’ என்று கேட்க ‘நீங்க எந்த டைரக்டரியில் gcc கமாண்ட் ரன் பண்ணீங்களோ அதே டைரக்டரியில் தான் இருக்கு’ என்று மதன் சொன்னவுடன் கார்த்திகா ls கமாண்ட் ரன் செய்தாள் ‘a.out

அப்படின்னு இருக்கு? இதுதான் பைனரி எக்ஸிக்யூட்டபிளா?' கார்த்திகா கேட்க 'அது பைனரி எக்ஸிக்யூட்டபிளான்னு எப்படி தெரிஞ்சிப்பீங்க?' என்று மதன் கேட்க 'கூகுள் தான்' கார்த்திகா சொல்லிவிட்டு கூகுளில் தேட file கமாண்ட் கண்டுபிடித்தாள். file கமாண்ட் மேனுவல் படித்து அதை எப்படி ரன் செய்ய வேண்டும் என்பதைக் கற்றுக் கொண்டாள். அதன்படி file a.out என்ற கமாண்ட் ரன் செய்தாள்,

```
$ file a.out
a.out: ELF 64-bit LSB shared object, x86-64, version 1 (SYSV),
dynamically linked, interpreter /lib64/ld-linux-x86-64.so.2,
BuildID[sha1]=919cf3edae2aaeb8d4524a529938be39c6304ff0, for
GNU/Linux 3.2.0, not stripped
$
```

'ஒரு மண்ணாங்கட்டியும் புரியல' கார்த்திகா கூற 'மண்ணாங்கட்டிய புரிஞ்சுக்க கொஞ்சம் டைம் ஆகும், இப்போதைக்கு அந்த அவுட்புட்ல ELF ன்னு இருக்குல்ல, அப்படின்னா a.out ஒரு ELF பைனரி பார்மெட்ல இருக்குற ஒரு எக்ஸிக்யூட்டபிள், அத நாம ரன் பண்ணலாம்னு அர்த்தம், எங்க a.out கமாண்ட ரன் பண்ணுங்க பாப்போம்' மதன் கூற கார்த்திகா a.out என்ற கமாண்ட் ரன் செய்தாள்,

```
$ a.out
bash: a.out: command not found
$
```

'கமாண்ட் இல்லையா, அதான் இருக்கே?' கார்த்திகா கேட்க 'a.out எங்க இருக்குன்னு நமக்கு தெரியும், bash ஷெல்லுக்கு தெரியணுமே,

அதுக்கு என்ன பண்ணனும்?’ மதன் கேட்க ‘ஓ, ரைட் PATH என்விரான்மென்ட் வேரியபிள் செட் பண்ணனும்’ கார்த்திகா கூற ‘அப்படியும் பண்ணலாம், இல்ல சிம்பிளா a.out எக்ஸிக்யூட்டபிளோட புல் பாத் கொடுக்கலாம்’ மதன் கூற ‘கரெக்ட், எங்கயோ படிச்சேன்’ என்று சொல்லிவிட்டு கார்த்திகா புல் பாத்தையும் கொடுத்து a.out எக்ஸிக்யூட்டபிளை ரன் செய்தாள்.

```
$ /home/karthika/a.out
hello world
$
```

‘சூப்பர்’ கார்த்திகா மிகவும் மகிழ்ந்தாள். ‘அப்ப எல்லா கமாண்டுக்கும் புல் பாத் கொடுத்து ரன் பண்ணலாம் அப்படித்தானே?’ கார்த்திகா கேட்க ‘ஆமாம்’ என்று மதன் கூறினான். கார்த்திகாவின் மகிழ்ச்சி இன்னும் குறையவில்லை. ‘இப்ப நான் ஏன் உங்களுக்கு இந்த C ப்ரோக்ராம் எப்படி கம்பைல் பண்ணி ரன் பண்றதுன்னு சொல்லிக் கொடுத்தேன் தெரியுமா?’ மதன் கேட்க ‘இருங்க நானே சொல்றேன், ஒரு கமாண்ட் அப்படிங்கறது மெஷினுக்கு புரியிற ELF பார்மெட்ல இருக்குற ஒரு பைனரி எக்ஸிக்யூட்டபிள், அது நம்ம பைல் சிஸ்டத்துல ஒரு இடத்தில் சேவ் ஆகி இருக்கும் அந்த இடத்தைக் கண்டுபிடிக்க type கமாண்ட் யூஸ் பண்ணனும். type கமாண்டால அந்த கமாண்ட் கண்டுபிடிக்க முடியலன்னா எந்த இடத்துல அந்த கமாண்ட் இருக்கோ அந்த டைரக்டரிய PATH என்விரான்மென்ட் வேரியபிள்ல சேக்கனும் அப்படி இல்லன்னா

டைரக்டா புல் பாத் கொடுத்து எக்ஸிக்யூட் பண்ணனும்' கார்த்திகா கூறி முடித்தாள். 'கரெக்ட், ஆனா நான் சொல்ல வந்தது அதுமட்டுமில்ல, நீங்க /home/karthika/a.out அப்படின்னு கமாண்ட டைப் பண்ணி என்டர் கொடுத்தீங்கள்ள, அப்ப என்ன நடந்தது?' மதன் கேட்க கார்த்திகா 'என்ன நடந்தது, hello world அப்படின்னு அவுட்புட் வந்தது. அதுக்குத்தான நாம C ப்ரோக்ராம் எழுதினோம்?' கார்த்திகா கேட்க 'அதுதான் எப்படி அந்த அவுட்புட் வந்தது?' மதன் கேட்க 'a.out கமாண்ட் எக்ஸிக்யூட் ஆச்சு, அந்த கமாண்ட் வேலை hello world அப்படின்னு பிரிண்ட் பண்றது, அதனால hello world அவுட்புட் வந்தது, அதானே?' கார்த்திகா கூற 'அந்த a.out எப்படி எக்ஸிக்யூட் ஆச்சு?' மதன் கேட்க 'தெரியல, நீங்களே சொல்லுங்க' கார்த்திகா கேட்க 'இங்க தான் நாம ப்ராசஸ் அப்படின்னா என்னன்னு தெரிஞ்சுக்கனும்' மதன் கூறிவிட்டு ப்ராசஸ் பற்றி விவரிக்க ஆரம்பித்தான்.

'நீங்க /home/karthika/a.out கமாண்ட் டைப் பண்ணி என்டர் தட்டும்போது உங்க ஷெல் அந்த a.out பைனரி எக்ஸிக்யூட்டபிள் பைலோட புல் பாத்த வாங்கி கர்னல் கிட்ட கொடுத்து எக்ஸிக்யூட் பண்ணச் சொல்லும், அப்ப லினக்ஸ் கர்னல் முதல்ல அந்த a.out பைல ரீட் பண்ணும், அது எந்த மாதிரியான பைனரி பார்மெட்ல இருக்குன்னு முதல்ல கண்டுபிடிக்கும், நாம ஏற்கனவே பாத்தா மாதிரி, அந்த எக்ஸிக்யூட்டபிள் ELF பார்மட்ல இருக்குன்னு தெரிஞ்சுக்கிட்டு

அப்புறம் அந்த பைல ரீட் பண்ணி மெமரியில் ஒரு இடத்துல அந்த a.out பைல் கண்டன்ட வெச்சிக்கும், அடுத்து a.out எக்ஸிக்யூட்டபிள் எக்ஸிக்யூட் பண்ணத் தேவையான வேற சில லைப்ரரிஸ் மெமரியில் லோட் செஞ்சிக்கும், இதுக்கு பேரு டைனமிக் லிங்கிங். அடுத்து அந்த a.out எக்ஸிக்யூட்டபிள எக்ஸிக்யூட் பண்ணத் தேவையானது எல்லாம் லோட் பண்ணதும் அந்த எக்ஸிக்யூட்டபிளோட என்ட்ரி பாயின்ட், அதாவது நம்ம C ப்ரோக்ராம்ல main() பங்ஷன் இருக்குல்ல, அந்த பங்ஷன இன்வோக் பண்ணும், இப்படித்தான் நாம க்ரியேட் பண்ண a.out எக்ஸிக்யூட்டபிள கர்னல் மெமரியில ஏத்தி ஒரு ப்ராசசா மாத்தி எக்ஸிக்யூட் பண்ணும், ஒவ்வொரு ப்ராசசுக்கும் ஒரு id இருக்கு அதுக்கு பேரு ப்ராசஸ் ஐடி அத pid அப்படின்னு சொல்லுவாங்க, ஒரு ப்ராசசோட டீட்டெய்ல் தெரிஞ்சிக்க cat /proc/<pid>/status கமாண்ட் ரன் பண்ணித் தெரிஞ்சிக்கலாம், a.out எக்ஸிக்யூட்டபில கர்னல் கிட்ட கொடுத்து எக்ஸிக்யூட் பண்ண சொல்லுச்சில்ல நம்ம ஷெல், அதுதான் நம்ம a.out ப்ராசசுக்கு பேரண்ட் ப்ராசஸ், அந்த ஷெல்லுக்கு நம்ம a.out ப்ராசஸ், ஒன் ஆப் த சைல்ட் ப்ராசஸ். ஒவ்வொரு ப்ராசசுக்கும் ஒரு பேரண்ட் ப்ராசஸ் இருக்கும், அந்த பேரண்ட் ப்ராசஸ்ஸ சைல்ட் ப்ராசஸ்ல இருந்து தெரிஞ்சுக்க ஈசியா சைல்ட் ப்ராசஸ்ல பேரண்ட் ப்ராசஸோட pid ய ppid அப்படின்னு சேவ் பண்ணி இருப்பாங்க. ppid மூலமா எந்த ஒரு ப்ராசசோட பேரண்ட் ப்ராசசையும் கண்டுபிடிச்சிடலாம்’ மதன் விளக்கினான்.

கார்த்திகா மீண்டும் a.out ரன் செய்தாள். ‘நம்ம a.out ப்ராசஸோட pid எப்படித் தெரிஞ்சிக்கிறது?’ கார்த்திகா கேட்க, ‘அதுக்கு C ல getpid() அப்படின்னு ஒரு பங்ஷன் இருக்கு’ மதன் கூறியதும் கார்த்திகா சோர்ஸ் கோடை எடிட்டரில் ஓப்பன் செய்து மாற்றி ‘கரெக்டா?’ என்று கேட்டாள்,

```
#include <stdio.h>

int main() {
    getpid();
    printf("hello world\n");
    return 0;
}
```

‘இல்ல, இங்க கொடுங்க’ என்று மதன் அவள் லேப்டாப்பை வாங்கி சோர்ஸ் கோடைச் சரி செய்து அதை கம்பைல் செய்து ரன் செய்தும் காட்டினான்,

```
$ cat helloworld.c
#include <stdio.h>
#include <unistd.h>

int main() {
    pid_t pid;
    pid_t ppid;

    pid = getpid();
    ppid = getppid();
    printf("hello world\n");
    printf("pid: %d\n", pid);
    printf("ppid: %d\n", ppid);
    return 0;
}
$ gcc helloworld.c
$ /home/karthika/a.out
```

```
hello world
pid: 9810
ppid: 8300
$
```

‘அப்ப cat /proc/9810/status கமாண்ட் ரன் பண்ணா a.out ப்ராசஸ் சோட டீடெயில்ஸ் வரும் கரெக்டா?’ கார்த்திகா கேட்க ‘ரன் பண்ணிப் பாருங்க’ என்று மதன் கூற கார்த்திகா உடனே cat /proc/9810/status என்று டைப் செய்து என்டர் தட்டினாள்,

```
$ cat /proc/9810/status
cat /proc/9810/status: No such file or directory
$
```

‘என்ன /proc/9810/status அப்படிங்குற பைலே இல்லன்னு சொல்லுது? ஓகே, நம்ம a.out கமாண்ட் எக்ஸிக்யூட் ஆகி முடிஞ்சிருச்சு அதனாலயா?’ கார்த்திகா கேட்க ‘கரெக்ட், 8300 ட்ரை பண்ணிப் பாருங்க’ என்று மதன் கூற கார்த்திகா cat /proc/8300/status என்று டைப் செய்து என்டர் தட்டினாள்,

```
$ cat /proc/8300/status
Name:         bash
Umask:        0002
State:        S (sleeping)
Tgid:         8300
Ngid:         0
Pid: 8300
PPid:         8293
TracerPid:    0
Uid: 1000     1000    1000    1000
Gid: 1000     1000    1000    1000
FDSize:       256
Groups:       4 24 27 30 46 114 134 1000
NStgid:       8300
```

```
NSpid:       8300
NSpgid:      8300
NSsid:       8300
VmPeak:         10980 kB
VmSize:         10980 kB
VmLck:              0 kB
VmPin:              0 kB
VmHWM:           5392 kB
VmRSS:           5392 kB
RssAnon:         1724 kB
RssFile:         3668 kB
RssShmem:           0 kB
VmData:          1708 kB
VmStk:            132 kB
VmExe:            888 kB
VmLib:           1564 kB
VmPTE:             52 kB
VmSwap:             0 kB
HugetlbPages:               0 kB
CoreDumping: 0
THP_enabled: 1
Threads:     1
SigQ:        0/7587
SigPnd:      0000000000000000
ShdPnd:      0000000000000000
SigBlk:      0000000000010000
SigIgn:      0000000000380004
SigCgt:      000000004b817efb
CapInh:      0000000000000000
CapPrm:      0000000000000000
CapEff:      0000000000000000
CapBnd:      0000003fffffffff
CapAmb:      0000000000000000
NoNewPrivs:  0
Seccomp:     0
Speculation_Store_Bypass:    vulnerable
Cpus_allowed:        3
Cpus_allowed_list:   0-1
Mems_allowed:        00000000,00000000
Mems_allowed_list:   0
voluntary_ctxt_switches:     512
nonvoluntary_ctxt_switches:  529
$
```

‘இது நம்ம ஷெல் கமாண்ட் bash ஓட டீடெயில்ஸ், நிறைய இன்பர்மேஷன்ஸ் இருக்கு, ஒன்னும் புரியல’ கார்த்திகா கூற ‘கொஞ்சம் கொஞ்சமாகத்தான் புரியும், எனக்கும் இதுல இருக்குற எல்லா இன்பர்மேஷனும் தெரியாது, சோ உங்களுக்கு ப்ராசஸ், பேரண்ட் ப்ராசஸ், சைல்ட் ப்ராசஸ் அப்படின்னா என்னன்னு புரிஞ்சதில்ல?’ மதன் கேட்க ‘புரிஞ்சது, ஒரு டவுட், bash டீடெய்ல்ஸ்ல ppid ன்னு வேற ஒரு நம்பர் இருக்கே, அது ஷெல்ல கிரியேட் பண்ண ப்ராசஸ் pid யா?’ கார்த்திகா கேட்க ‘ஆமாம்’ மதன் கூற ‘அப்ப ppid ட்ராக் பண்ணிக்கிட்டு போனா, நாம பூட் பண்ணவுடன் ஸ்டார்ட் ஆன முதல் ப்ராசஸ் டீடெய்ல் கிடைச்சிடும் இல்ல?’ கார்த்திகா கேட்க ‘ஆமாம், ஆனா இப்படி ppid ட்ராக் பண்ணிக்கிட்டுப் போறத விட சிம்பிளா cat /proc/1/status அப்படின்னு போட்டு பூட் ஆனவுடனே ஸ்டார்ட் ஆன முதல் ப்ராசஸ் டீடெய்ல் பாத்துடலாம்’ மதன் கூறியவுடன் கார்த்திகா cat /proc/1/status என்று கமாண்ட் ரன் செய்தாள், ‘systemd? இதுதான் எல்லாத்துக்கும் பேரண்ட் ப்ராசசா?’ கார்த்திகா கேட்க ‘ஆமாம், அதுதான் நாம பூட் பண்ணவுடன் ஸ்டார்ட் ஆகும் முதல் ப்ராசஸ், அந்த ப்ராசஸ் தான் பல சைல்ட் ப்ராசஸ் ஸ்டார்ட் பண்ணும். pid 1 ப்ராசஸ் இன்னிட் ப்ராசஸ்னு சொல்லுவாங்க. அதோட பைனரி எக்ஸிக்யூட்டபிள் எங்க இருக்குன்னு கண்டுபிடிங்க பாப்போம்?’ மதன் கார்த்திகாவிடம் கேட்க ‘நேம் systemd அப்படின்னு இருக்கு’ சொல்லிவிட்டு type

systemd என்ற கமாண்டை ரன் செய்ய /bin/systemd என்று வந்தது, ‘இன்னும் ஈஸியா ஒரு வழி சொல்றேன் sudo ls /proc/1/exe கமாண்ட் ரன் பண்ணுங்க’ மதன் கூற கார்த்திகாவும் அதையே செய்தாள்,

```
$ sudo ls -l /proc/1/exe
lrwxrwxrwx 1 root root 0 Mar 28 04:03 /proc/1/exe ->
/lib/systemd/systemd
$
```

‘ஓ, அப்ப pid 1 எக்ஸிக்யூட்டபில் /lib/systemd/systemd தானா?’ என்று கார்த்திகா கேட்க ‘ஆமாம்’ என்று மதன் கூறினான். கார்த்திகா உடனே ls -l /proc/1 என்று ரன் செய்ய பல பைல்கள் இருந்தன ‘இந்த பைல்கள்ல இருந்து அந்த pid 1 ப்ராசஸுக்குனடான எல்லா டீட்டெய்ஸும் எடுத்துடலாம்போல?’ கார்த்திகா கேட்க ‘எக்ஸாக்ட்லி, பிக்கப் பண்ணிட்டீங்க’ மதன் கார்த்திகாவைப் பார்த்து புன்னகையுடன் கூறினான்.

‘வந்துட்டாங்களா, நாம கன்டின்யூ பண்ணா மாதிரித்தான், இன்னைக்கு எந்த க்யூப்பிக்கல் மாட்டப்போறங்களோ, ஆமா நம்ப க்யூப்பிக்கல்ல நீங்களும் நானும் மட்டும் தான் இருக்கோமா? உதய் அண்ணா இருந்திருந்தா நல்லா இருந்திருக்கும்’ மதன் புலம்ப ஆரம்பிக்க ‘ஏன் பயப்படுறீங்க, எச்ஆர் தான, சும்மா ஏதாவது பண்ணச் சொல்லுவாங்க, அப்புறம் அவங்களே போயிடுவாங்க,’ கார்த்திகா கூற ‘சும்மாப் போனா பரவாயில்லயே, வீடியோ எடுத்து நம்ம கம்பெனி இன்டர்னல் சோசியல் நெட்வொர்க்ல போட்டு

வெறுப்பேத்துவாங்களே’ மதன் கூற ‘அதெல்லாம் கன்டன்ட் நல்லா இருந்தா தான் ஏத்துவாங்க, மொக்கையா இருந்தாப் போட்றதில்ல. இருங்க எந்த க்யூப்பிக்கல் மாட்டுதுன்னு பாப்போம்’ கார்த்திகா மதனை சமாதானப்படுத்தி விட்டு எச்ஆர் என்ன செய்கிறார்கள் என்று கவனித்தாள்.

‘ஹலோ லேடீஸ் அண்ட் ஜென்டில்மேன், சாரி ஃபார் இன்ட்ராப்டிங் யுவர் பிசி வொர்க், நடுவுல கொஞ்சம் பிரேக் எடுத்துக்குறதும் அவசியம், அடுத்த 30 மினிட்ஸ் எங்களுக்காக நீங்க ஒத்துக்குவீங்கன்னு நம்புறேன். இங்க ரெண்டு பவுல் இருக்கு, ஒரு பவுலில் இங்க இந்த ப்ளோர்ல இருக்குற எல்லா க்யூப்பிக்கல் நம்பரும் இருக்கு, இன்னொரு பவுல்ல சில டாஸ்க் இருக்கு. இங்க இருக்கிறவங்கள்ல யாரையாச்சும் வரவழைச்சு க்யூப்பிக்கல் நம்பர் செலக்ட் செய்யச் சொல்வோம், செலக்ட் ஆன க்யூப்பிக்கல்ல இருந்து ஒருத்தர் வந்து டாஸ்க் ஒன்னு செலக்ட் பண்ணனும். அந்த டாஸ்க்ல இருக்கும்படி செய்யனும், எல்லாருக்கும் புரிஞ்சதில்ல, என்ன ஆரம்பிக்கலாமா?’ எச்ஆரில் இருந்து வந்த நான்கு நபர்களில் சீனியர் லேடி எச்ஆர் ஒருவர் பேசினார். சொன்னபடியே அருகில் இருந்த ஒரு எம்ப்ளாய் க்யூப்பிக்கல் நம்பர் செலக்ட் பண்ண க்யூப்பிக்கல் நம்பர் 16 என்று வந்தது.

‘ஷிட்’ மதன் பதற ‘சரி, சமாளிப்போம் டாஸ்க் என்ன வருதுன்னு பாப்போம்’ கார்த்திகா சொல்லிக்கொண்டு இருக்கும்போதே கேமரா மதனின் க்யூப்பிக்களை போக்கஸ் பண்ண ஆரம்பித்திருந்தது. அந்த சீனியர் எச்ஆர் மதனிடம் வந்து ‘ஹவ் ஆர் யூ ஜென்டில்மேன், சொல்லுங்க, உங்க பேர் என்ன, என்ன ஒர்க் பண்றீங்க?’ சீனியர் எச்ஆர் கேட்க ‘மதன், சீனியர் டெவலப்பர்’ மதன் கூற ‘வாவ், இப்பத்தான் புரியுது ஏன் தாடி இவ்ளோ வளர்ந்திருக்குன்னு, க்ரேட், ஷேவ் பண்ணுங்க ஹன்சம்மா இருப்பீங்க’ சீனியர் எச்ஆர் மதனிடம் கூறிவிட்டு கார்த்திகா பக்கம் திரும்பினார் ‘ஹாய் ஸ்வீட்டி, உங்க பேர் என்ன, என்ன ஒர்க் பண்றீங்க?’ சீனியர் எச்ஆர் கேட்க ‘கார்த்திகா, சிஸ் அட்மின்’ என்று கார்த்திகா கூற ‘சரி இப்ப ரெண்டு பேர்ல யாராவது ஒருத்தர் போய் டாஸ்க் செலக்ட் பண்ணுங்க’ எச்ஆர் கேட்டுக்கொள்ள மதன் கண்களாலேயே கார்த்திகாவைப் போய் டாஸ்க் எடுக்கச் சொன்னான். அவளும் டாஸ்க்கை எடுத்தாள்.

‘க்யூப்பிக்கல்லில் இருக்கும் ஒவ்வொருவரும் ஒரே மியூசிக் கம்போசர் கம்போஸ் பண்ண பாடலைப் பாட வேண்டும். டாஸ்க்கை எடுத்தவர் கடைசியாகப் பாட வேண்டும். யாருடைய பாடல் நன்றாக இருக்கிறதோ அவருக்கு கிப்ட் வவுச்சர் அன்பளிப்பாகக் கொடுக்கப்படும்’ கார்த்திகா டாஸ்கைப் படித்துவிட்டு மதனைப் பார்த்துச் சிரித்தாள். ‘சோ, ஜென்டில்மேன், வாங்க நீங்கதான் ஃபர்ஸ்ட் பாட போறீங்க, பாடுவீங்களா?’ சீனியர் எச்ஆர் கிண்டலாகக் கேட்க

‘ட்ரை பண்றேன்’ மதனும் ஒன்றும் தெரியாதவாறு மைக்கைக் கையில் வாங்கினான். கார்த்திகாவின் எண்ணம் மதன் எப்படியும் ஒரு நல்ல ஏஆர்ஆர் பாடலைப் பாடுவான், நாமும் ஒரு நல்ல பாடலைப் பாடி விடலாம் என்று எண்ணியிருந்தாள். ஆனால் நடந்ததோ அவள் எதிர்பார்த்ததற்கு முற்றிலும் வேறுபட்டது.

மைக்கை வாங்கிய மதன் எதிரில் நின்றிருந்த கார்த்திகாவைப் பார்த்து ‘ரெடி?’ என்று சைகையில் கேட்க கார்த்திகாவும் பெஸ்ட் ஆப் லக் என்று கை கட்டை விரலை உயர்த்திக் காண்பித்தாள். சில நொடிகள் கடந்தன. அந்த ப்ளோரில் இருந்தவர்கள் கவனம் மதன் மீது திரும்பியது. அனைவரும் அமைதியாயினர். அப்போது கவிக்குயில் படத்திலிருந்து ‘சின்னக் கண்ணன் அழைக்கிறான்’ பாடலை மதன் பாட ஆரம்பித்தான். இந்தப் பாடலின் பல்லவியைக் கேட்டதும் தனி அறையில் அமர்ந்திருந்த எஸ்விபி தன் அறையிலிருந்து வெளிவந்து மதனின் க்யுப்பிக்கல் அருகில் நின்றார். மேனேஜரில் இந்து வாட்ச்மேன் வரை அங்கிருந்த அனைவரும் மதனின் குரலாலும் பாடலின் இராகத்தாலும் கவரப்பட்டனர். அதுவரை கண்களை மூடி பாடிக்கொண்டிருந்த மதன் முதல் சரணத்தை முடித்து கண் திறக்க எதிரில் இருந்த கார்த்திகா அவனை பிரமிப்புடன் பார்த்துக் கொண்டிருப்பதைப் பார்த்து புன்னகையுடன் ‘நெஞ்சில் உள்ளாடும் ராகம் இது தானா கண்மணி ராதா’ என்று கார்த்திகாவைக் கேட்பதைப்

போல் இரண்டாவது சரணத்தைப் பாட கார்த்திகா வெட்கத்தில் தன் வாயைக் கைகளால் மூடிக்கொண்டு மதன் பாடுவதை இரசித்தாள்.

பாடலைப் பாடி முடித்தவுடன் மதன் கார்த்திகாவைப் பார்த்து மாட்டிக்கொண்டாயா என்ற தோனியில் தன் வலது புருவத்தை இரு முறை உயர்த்திக் காட்டிப் புன்னகைத்தான். மதனின் அருகில் இருந்த அனைவரும் மதனை ஆறத் தழுவிப் பாராட்டினர். கைதட்டல்கள் நின்றபாடில்லை. கார்த்திகாவும் அருகில் வந்து கை கொடுத்துவிட்டு காதில் 'என்ன மாட்டி விட்டுட்டீங்க ல்ல,' என்று கூறிவிட்டுத் தன் இடத்திற்கு வந்தாள். அப்போது மைக் வாங்கிய எஸ்விபி 'இங்க இருக்கிறவங்க எத்தனைப் பேருக்கு இந்தப் பாட்ட கேட்டிருப்பீங்கன்னு எனக்குத் தெரியாது, பட் இந்த பாடலை பாலமுரளி கிருஷ்ணாவுக்கு அப்புறம் இவ்வளவு அழகாப் பாடி இப்பத்தான் கேட்கிறேன். அதுவும் இளையராஜா இசை இல்லாமல் வெறும் ராகமும் குரலுமே இவ்வலவு நல்லா இருக்குன்னா, இளையராஜா சேர்ந்தார் அவ்வளவுதான், பென்டாஸ்டிக் மேன், ஆப்டர் எ லாங் டைம் இந்த பாட்ட உன் மூலமாகக் கேட்டேன், பியூட்டிஃபுல்' எஸ்விபி மதனை மனதாரப் பாராட்டினார். ஒருவழியாகக் கைதட்டல்கள் நின்றன. மைக் சீனியர் எச்ஆரிடம் வந்தவுடன் மதனைப் பார்த்து 'மிஸ்டர் ஹல்க், நான் உங்கள சாதாரணமா எடை போட்டுட்டேன், ஒன் ஆப் மை ஃபேவரிட் இளையராஜா கிளாசிக்ஸ், தேங்க்யூ' மதனுக்கு நன்றி

தெரிவித்துவிட்டு கார்த்திகாவிடம் ‘ஸ்வீட்டி, ஹி ரெயிஸ்டு த பார் வெரி ஹய், வி ஹவ் டு பிரேக் இட், ப்ரூவ் தட் கேர்ள்ஸ் ஆர் த பெஸ்ட் இன் சிங்கிங்’ என்று கூறி மைக்கைக் கார்த்திகாவிடம் கொடுத்தார்.

மைக் கார்த்திகாவிடம் வந்தது. கார்த்திகாவும் எதிரில் நின்றிருந்த மதனைப் பார்த்து ‘ரெடி?’ என்று சைகையில் கேட்க மதனும் பெஸ்ட் ஆப் லக் என்று கை கட்டை விரலை உயர்த்திக் காண்பித்தான். அந்த ப்ளோரில் இருந்தவர்கள் இப்போது கார்த்திகா மீது கவனம் செலுத்தினர். மவுனம் படர்ந்தது சில நொடிகள் ஆயிற்று. அப்போது தளபதி படத்திலிருந்து ‘யமுனை ஆற்றிலே ஈரக் காற்றிலே கண்ணனோடுதான் ஆட’ பாடல் ஒலித்தது. கார்த்திகா தன் கண்களை மூடிக்கொண்டு அங்கிருந்தவர்களைத் தன் குரல் மூலம் வேறொரு உலகிற்கு அழைத்து சென்று கொண்டிருந்தாள். அதுவும் ‘ஆயர்பாடியில் கண்ணன் இல்லையோ’ வரிகளைப் பாடி விட்டு ‘பாவம் ராதா’ வரிகளுக்கு வரும்போது எல்லோரும் தங்களை மறந்து தலை அசைத்துக் கொண்டிருந்தனர். கடைசி பல்லவியில் ஒவ்வொரு வரிக்கும் சிறு நொடிகள் இடைவெளி விட்டு பாடிய போது அங்கிருந்த அனைவரும் மெய்சிலிர்த்துப் போயினர்.

கார்த்திகா பாடலைப் பாடி முடித்து தன் கண்களைத் திறந்ததும் அந்த இடம் முழுக்க கரவொலியால் நிரம்பியது. கைதட்டல்கள் கூடவே

கார்த்திகா கார்த்திகா என்ற முழக்கங்களும் அந்தக் கட்டிடத்தை அதிரச் செய்தது. க்யூப்பிக்கல் அருகில் இருந்தவர்கள் அனைவரும் கார்த்திகாவுக்குக் கை கொடுத்துப் பாராட்டு தெரிவித்தனர். சீனியர் எச்ஆர் கார்த்திகாவின் நெற்றியில் முத்தமிட்டுப் பாராட்டினார். ஒருவழியாக எல்லோரும் அவளை விட்டுச் சற்று விலக அப்போதுதான் மதன் அவள் கண்களுக்குத் தெரிந்தான். கார்த்திகா மதனைப் பார்த்தவுடன் சிரித்துக்கொண்டே இளையராஜா பாடல்களை என்னாலும் பாட முடியும் என்றபடி மதன் செய்ததைப் போல தன் வலது புருவத்தை இருமுறை உயர்த்திக் காட்டினாள். கார்த்திகாவைப் பார்த்த மதன், என்னைவிட நீ திறமைசாலி என்பதை ஒப்புக் கொள்கிறேன் என்றபடி தன் கண்களை மூடித் திறந்து தலையை முன்புறம் சாய்த்து அசைத்தான். மைக் இப்போது எஸ்விபி கைக்கு வந்தது ‘திஸ் இஸ் எவன்லி, ஐ நெவர் எக்ஸ்பட்டட் டுடே ஐ வில் பி ட்ரீட்டட் வித் டூ இளையராஜா க்லாஸிக்ஸ் பேக் டு பேக், தேங்யூ’ எஸ்வீப்பி கார்த்திகாவைப் பாராட்டிவிட்டு மைக்கை எச்ஆரிடம் கொடுக்க ‘வாவ், ஜஸ்ட் வாவ், அப்படியே மதுராவிற்குப் போய் வந்த மாதிரி இருக்கு, தேங்க்யூ’ எச்ஆர் கார்த்திகாவை மீண்டும் ஆறத்தழுவிப் பாராட்டினார்.

எச்ஆர் மீண்டும் மைக்கில் ‘இப்போது கிப்ட் கொடுக்க வேண்டிய நேரம். ரெண்டு பேரும் இப்படிப் பாடுவாங்கன்னு நான் நினைக்கல, வெரி டப் டு செலக்ட் ஒன் பிட்வீன் திஸ் டூ, பட் மதன் மூணு

நிமிஷத்துல பண்ண அதே மேஜிக்கை கார்த்திகா ரெண்டு நிமிஷத்துக்குள்ள பண்ணிட்டா, அதனால இந்த கிப்ட் கார்த்திகாவிற்குத்தான்' என்று கூறிவிட்டு கார்த்திகாவிடம் கிப்ட் வவுச்சர் கொடுத்தார். அதுவரை மதனுக்கு எதிரில் நின்றிருந்த கார்த்திகா பரிசு வாங்கிக்கொண்டு மதனுக்குப் பக்கத்தில் வந்து நின்றாள். அந்த ப்ளோரில் இருந்த அனைவரும் எழுந்து நின்று இருவருக்கும் சேர்த்து கைதட்டிப் பாராட்டினர். இருவரும் தலை குனிந்து அனைவருக்கும் தங்கள் நன்றியைத் தெரிவித்தனர். எல்லோரும் தங்கள் வேலைகளைத் தொடர அவரவர் இடத்திற்குத் திரும்பினர். இறுதியில் மீண்டும் மதனும் கார்த்திகாவும் மட்டும் மதனின் க்யூப்பிக்கல்லில் அமர்ந்தனர்.

'கங்கிராட்ஸ்' மதன் கார்த்திகாவைப் பார்த்துக் கூற 'நியாயமா இது உங்களுக்கு வந்திருக்கனும், தட் சாங் வாஸ் அமேசிங், எப்படி உங்களுக்கு அந்தப் பாட்டு தெரியும்?' கார்த்திகா கேட்க 'ஒரு டை ஆர்டு இளையராஜா பேனுக்கும் எனக்கும் வாக்குவாதம் நடந்தப்ப அவர் இந்தப் பாட்ட பத்திச் சொன்னார். பாட்ட கேட்டதுமே உள்ள ஏதோ பண்ணுச்சு, இந்தப் பாட்ட இளையராஜா மியூசிக்கில் நீங்க கேட்டிருக்கனும், அசந்து போயிடுவீங்க, இட்ஸ் எ டிவைன் கம்போசிஷன்' மதன் அந்தப் பாடலைப் பற்றிக் கார்த்திகாவுக்கு எடுத்துரைத்தான். 'நீங்க பாடும்போது அந்த வைப் இருந்தது, அதுவும் என்ன பாத்து அந்த வரிகளை நீங்க பாடும்போது உள்ள

என்னவோ பண்ணுச்சு’ கார்த்திகா கூறும்போது அவள் முகம் வெட்கத்தில் சிவந்தது. ‘ஐ ஷுன்ட் ஆவ் டன் தட்’ மதன் கூற ‘தட்ஸ் ஓக்கே, ஐ டூ ஷுன்ட் லெட் மை எமோஷன்ஸ் அவுட், பீப்பிள் மைட் ஹவ் நோட்டீஸ்டு ரைட்?’ கார்த்திகா கேட்க ‘மே பி, விடுங்க, பாத்துக்கலாம், ஆமா, நீங்கதான் இளையராஜா பாட்டு கேட்டதில்லையே அப்புறம் எப்படி யமுனை ஆற்றிலே வந்தது?’ மதன் கேட்க ‘என்னத்தான் ஏஆர்ஆர் ரசிகையா இருந்தாலும் தமிழ்நாட்டில் இருந்துகிட்டு இளையராஜா சாங்ஸ் கேட்காம இருக்க முடியுமா, எனக்கும் ஃபர்ஸ்ட் டைம் யமுனை ஆற்றிலே கேட்கும்போது உள்ள ஏதோ பண்ணுச்சு, இளையராஜா பாட்டு பாடனும்னு சொன்ன உடனே டக்குன்னு நியாபகம் வந்துச்சு, அதான் பாடிட்டேன். எப்படி இருந்தது நான் பாடினது?’ கார்த்திகா கேட்க ‘அதான் ப்ரைசே கொடுத்துட்டாங்களே அப்புறம் என்னங்க?’ மதன் கேட்க ‘அவங்க கெடுத்தது இருக்கட்டும் நீங்க சொல்லுங்க?’ கார்த்திகா கேட்க ‘உண்மையிலேயே கிருஷ்ணரோட லவர் கிருஷ்ணர நெனச்சுப் பாடின மாதிரி இருந்துச்சு’ மதன் புன்னகையுடன் கார்த்திகாவின் கண்களைப் பார்க்க, கார்த்திகாவும் மதனின் கண்களைப் பார்த்து விட்டு வெட்கத்தில் சிரித்த படி கீழே குனிந்து கொண்டாள்.

‘எனிவே இட்ஸ் ஆல்ரெடி லேட். தேங்க்ஸ் பார் தட் சாங்’ கார்த்திகா கூற ‘தேங்க்ஸ் பார் தட் சாங் டூ, டேக் கேர்’ மதன் கூற கார்த்திகா

அவன் க்யூப்பிக்கலை விட்டு விடைபெற்றாள். போகும் வழியில் பார்ப்பவர்கள் அவளைக் கை குலுக்கி வாழ்த்து தெரிவித்தபடி இருக்க அவளோ மதன் தன்னைப் பார்த்துப் பாடிய தருணத்தை நினைத்தபடி நடந்து சென்று கொண்டிருந்தாள்.

**தொடரும்..**

# ஒன் ஆப் அஸ்

வழக்கம் போல் கார்த்திகா அன்று காலையிலேயே மதன் கியூபிக்கலுக்கு வந்திருந்தாள். ‘நேத்து நீங்க ப்ராசஸ் பத்தி விளக்கிச் சொன்னீங்கல்ல, போய்ப் படிச்சேன். சிஸ்டத்துல என்னென்ன ப்ராசஸ் ரன் ஆகுது, அந்த ப்ராசஸ்கள எப்படிப் பார்க்கிறது, என்ன கமாண்ட் யூஸ் பண்ணனும், எல்லாம் தெரிஞ்சிக்கிட்டு வந்திருக்கேன். சொல்லட்டுமா’ கார்த்திகா கேட்க ‘ஓக்கே’ என்று மதன் கூறினான்.

‘முதல்ல ps கமாண்ட், இந்த கமாண்ட் மூலம் நம்ம சிஸ்டத்தில் ரன் ஆகிக்கொண்டிருக்கும் அத்தனை ப்ராசஸ்களையும் பார்க்க முடியும், இந்த கமாண்ட் அப்படியே எந்த ஆப்ஷனும் கொடுக்காம ரன் செஞ்சா கரண்ட் டெர்மினலோட அசோசியேட் ஆகி இருக்கும் ப்ராசஸ் மட்டும் லிஸ்ட் பண்ணும்,

```
$ ps
   PID TTY          TIME CMD
  15301 pts/8    00:00:00 bash
  15524 pts/8    00:00:00 ps
$
```

இதே கமாண்டுக்கு x ஆப்ஷன் கொடுத்தா, கரண்ட் யூசரோட எல்லா ப்ராசஸ்களையும் காட்டும்

```
$ ps x

   PID TTY      STAT   TIME COMMAND
```

```
    832 ?        Ss     0:00 /usr/lib/systemd/systemd --user
    833 ?        S      0:00 (sd-pam)
    843 ?        Sl     0:00 /usr/bin/gnome-keyring-daemon --
daemonize --login
    847 tty2     Ssl+   0:00 /usr/lib/gdm-wayland-session
/usr/bin/gnome-session
    849 ?        Ss     0:03 /usr/bin/dbus-daemon --session --
address=systemd: --nofork --nopidfile --systemd-activation --
syslog-only
    851 tty2     Sl+    0:00 /usr/lib/gnome-session-binary
    877 ?        Ssl    0:00 /usr/lib/gnome-session-ctl --
monitor
    879 ?        Ssl    0:01 /usr/lib/gnome-session-binary --
systemd-service --session=gnome
    894 ?        Rsl   32:46 /usr/bin/gnome-shell
    905 ?        Ssl    0:00 /usr/lib/gvfsd
    910 ?        Sl     0:00 /usr/lib/gvfsd-fuse
/run/user/1000/gvfs -f
    917 ?        Ssl    0:00 /usr/lib/at-spi-bus-launcher
    923 ?        S      0:00 /usr/bin/dbus-daemon --config-
file=/usr/share/defaults/at-spi2/accessibility.conf --nofork --
print-address 3
    951 ?        Ssl    0:00 /usr/lib/xdg-permission-store
    957 ?        Sl     0:00 /usr/lib/gnome-shell-calendar-
server
    964 ?        Ssl    0:00 /usr/lib/evolution-source-registry
    965 ?        S<sl  27:30 /usr/bin/pulseaudio --daemonize=no
--log-target=journal
    971 ?        Sl     0:00 /usr/lib/goa-daemon
    972 ?        Ssl    0:00 /usr/lib/gvfs-udisks2-volume-
monitor
    978 ?        Ssl    0:00 /usr/lib/evolution-calendar-
factory
   1002 ?        Sl     0:00 /usr/lib/pulse/gsettings-helper
   1027 ?        Sl     0:00 /usr/lib/goa-identity-service
   1028 ?        Ssl    0:00 /usr/lib/gvfs-mtp-volume-monitor
   1038 ?        Ssl    0:00 /usr/lib/dconf-service
   1039 ?        Ssl    0:00 /usr/lib/gvfs-gphoto2-volume-
monitor
   1046 ?        Ssl    0:00 /usr/lib/evolution-addressbook-
factory
   1050 ?        Ssl    0:00 /usr/lib/gvfs-goa-volume-monitor
   1056 ?        Ssl    0:01 /usr/lib/gvfs-afc-volume-monitor
```

```
   1071 ?        Sl     0:00 /usr/bin/gjs /usr/share/gnome-
shell/org.gnome.Shell.Notifications
   1073 ?        Sl     0:00 /usr/lib/at-spi2-registryd --use-
gnome-session
   1084 ?        Ssl    0:00 /usr/lib/gsd-a11y-settings
   1085 ?        Ssl    0:00 /usr/lib/gsd-color
   1087 ?        Ssl    0:00 /usr/lib/gsd-datetime
   1089 ?        Ssl    0:01 /usr/lib/gsd-housekeeping
   1090 ?        Ssl    0:00 /usr/lib/gsd-keyboard
   1091 ?        Ssl    0:01 /usr/lib/gsd-media-keys
   1092 ?        Ssl    0:00 /usr/lib/gsd-power
   1093 ?        Ssl    0:00 /usr/lib/gsd-print-notifications
   1096 ?        Ssl    0:00 /usr/lib/gsd-rfkill
   1097 ?        Ssl    0:00 /usr/lib/gsd-screensaver-proxy
   1098 ?        Ssl    0:00 /usr/lib/gsd-sharing
   1099 ?        Ssl    0:00 /usr/lib/gsd-smartcard
   1103 ?        Ssl    0:00 /usr/lib/gsd-sound
   1107 ?        Ssl    0:00 /usr/lib/gsd-usb-protection
   1113 ?        Ssl    0:00 /usr/lib/gsd-wacom
   1118 ?        Sl     0:00 /usr/lib/evolution-data-
server/evolution-alarm-notify
   1137 ?        Sl     0:00 /usr/lib/gsd-disk-utility-notify
   1178 ?        Sl     0:00 /usr/bin/gjs /usr/share/gnome-
shell/org.gnome.ScreenSaver
   1181 ?        Sl     0:00 /usr/lib/gsd-printer
   1264 ?        Ssl    1:33 /usr/lib/gnome-terminal-server
   1314 ?        Sl   106:13 /usr/lib/firefox/firefox
   1364 ?        Sl     0:00 /usr/lib/firefox/firefox -
contentproc -parentBuildID 20210923165649 -prefsLen 1 -
prefMapSize 246833 -appdir /usr/lib/firefox/browser 1314 true
socket
   1434 ?        Sl     2:20 /usr/lib/firefox/firefox -
contentproc -childID 2 -isForBrowser -prefsLen 5043 -
prefMapSize 246833 -jsInit 285716 -parentBuildID 20210923165649
-appdir /usr/lib/firefox/browser 1314 true tab
   1501 ?        Sl    39:07 /usr/lib/firefox/firefox -
contentproc -childID 3 -isForBrowser -prefsLen 5838 -
prefMapSize 246833 -jsInit 285716 -parentBuildID 20210923165649
-appdir /usr/lib/firefox/browser 1314 true tab
   1532 ?        Sl    37:49 /usr/lib/firefox/firefox -
contentproc -childID 4 -isForBrowser -prefsLen 7235 -
prefMapSize 246833 -jsInit 285716 -parentBuildID 20210923165649
-appdir /usr/lib/firefox/browser 1314 true tab
```

```
   1586 ?        Sl     0:00 /usr/lib/firefox/firefox -
contentproc -parentBuildID 20210923165649 -prefsLen 8441 -
prefMapSize 246833 -appdir /usr/lib/firefox/browser 1314 true
rdd
   1661 ?        Sl     0:29 /usr/lib/firefox/firefox -
contentproc -childID 6 -isForBrowser -prefsLen 8515 -
prefMapSize 246833 -jsInit 285716 -parentBuildID 20210923165649
-appdir /usr/lib/firefox/browser 1314 true tab
   1736 ?        Ssl    0:00 /usr/lib/gvfsd-metadata
   2918 ?        S      0:00 /usr/bin/ssh-agent -D -a
/run/user/1000/keyring/.ssh
   2922 ?        Ss     0:00 /usr/lib/systemd/systemd --user
   2923 ?        S      0:00 (sd-pam)
   3060 ?        Sl     1:06 /usr/bin/Xwayland :0 -rootless -
noreset -accessx -core -auth /run/user/1000/.mutter-
Xwaylandauth.Z0BOC1 -listenfd 4 -listenfd 5 -displayfd 6 -
initfd 7
   3064 ?        Sl     1:55 ibus-daemon --panel disable -r --
xim
   3066 ?        Ssl    0:01 /usr/lib/gsd-xsettings
   3072 ?        Sl     0:00 /usr/lib/ibus/ibus-dconf
   3073 ?        Sl     0:23 /usr/lib/ibus/ibus-extension-gtk3
   3075 ?        Sl     0:23 /usr/lib/ibus/ibus-x11 --kill-
daemon
   3081 ?        Sl     0:04 /usr/lib/ibus/ibus-portal
   3103 ?        Sl     0:21 /usr/lib/ibus/ibus-engine-simple
   3142 ?        Sl     0:13 /usr/lib/ibus/ibus-engine-m17n --
ibus
   3202 ?        Sl     0:00 /usr/bin/gnome-calendar --
gapplication-service
   3208 ?        Sl     0:11 /usr/bin/gnome-software --
gapplication-service
   3244 ?        Sl     0:00 /usr/lib/gvfsd-trash --spawner
:1.16 /org/gtk/gvfs/exec_spaw/0
   3285 ?        SNsl   0:01 /usr/lib/tracker-miner-fs-3
  12166 ?        Sl    39:01 /usr/lib/firefox/firefox -
contentproc -childID 33 -isForBrowser -prefsLen 9824 -
prefMapSize 246833 -jsInit 285716 -parentBuildID 20210923165649
-appdir /usr/lib/firefox/browser 1314 true tab
  12972 ?        Sl     0:00 /usr/lib/firefox/firefox -
contentproc -childID 35 -isForBrowser -prefsLen 9824 -
prefMapSize 246833 -jsInit 285716 -parentBuildID 20210923165649
-appdir /usr/lib/firefox/browser 1314 true tab
```

```
  15301 pts/8    Ss     0:00 -bash
  15555 pts/8    R+     0:00 ps x
$
```

இதே கமாண்டுக்கு a ஆப்ஷன் கொடுத்தால் சிஸ்டத்தில் இருக்கும் டெர்மினல்சோட அசோசியேட் ஆகி இருக்கும் அத்தனை ப்ராசஸ்களையும் காட்டும்

```
$ ps a
    PID TTY      STAT   TIME COMMAND
    847 tty2     Ssl+   0:00 /usr/lib/gdm-wayland-session
/usr/bin/gnome-session
    851 tty2     Sl+    0:00 /usr/lib/gnome-session-binary
   4865 pts/0    Ss     0:00 -bash
  16630 pts/0    R+     0:00 ps a
$
```

இப்போ ax ரெண்டு ஆப்ஷனையும் சேர்த்துக் கொடுத்தா சிஸ்டத்துல கரண்டா ரன் ஆகும் அத்தனை ப்ராசஸ்களையும் காட்டும்

```
$ ps ax
    PID TTY      STAT   TIME COMMAND
      1 ?        Ss     0:01 /sbin/init
      2 ?        S      0:00 [kthreadd]
      3 ?        I<     0:00 [rcu_gp]
      4 ?        I<     0:00 [rcu_par_gp]
      6 ?        I<     0:00 [kworker/0:0H-events_highpri]
      8 ?        I<     0:00 [mm_percpu_wq]
     10 ?        S      0:00 [rcu_tasks_kthre]
     11 ?        S      0:00 [rcu_tasks_rude_]
     12 ?        S      0:00 [rcu_tasks_trace]
     13 ?        S      0:05 [ksoftirqd/0]
     14 ?        I      0:16 [rcu_preempt]
     15 ?        S      0:00 [rcub/0]
     16 ?        S      0:00 [rcuc/0]
     17 ?        S      0:00 [migration/0]
     18 ?        S      0:00 [idle_inject/0]
     20 ?        S      0:00 [cpuhp/0]
```

```
 21 ?        S      0:00 [cpuhp/1]
 22 ?        S      0:00 [idle_inject/1]
 23 ?        S      0:00 [migration/1]
 24 ?        S      0:00 [rcuc/1]
 25 ?        S      0:02 [ksoftirqd/1]
 27 ?        I<     0:00 [kworker/1:0H-events_highpri]
 28 ?        S      0:00 [cpuhp/2]
 29 ?        S      0:00 [idle_inject/2]
 30 ?        S      0:00 [migration/2]
 31 ?        S      0:00 [rcuc/2]
 32 ?        S      0:02 [ksoftirqd/2]
 34 ?        I<     0:00 [kworker/2:0H-kblockd]
 35 ?        S      0:00 [cpuhp/3]
 36 ?        S      0:00 [idle_inject/3]
 37 ?        S      0:00 [migration/3]
 38 ?        S      0:00 [rcuc/3]
 39 ?        S      0:01 [ksoftirqd/3]
 41 ?        I<     0:00 [kworker/3:0H-events_highpri]
 42 ?        S      0:00 [kdevtmpfs]
 43 ?        I<     0:00 [netns]
 44 ?        I<     0:00 [inet_frag_wq]
 45 ?        S      0:00 [kauditd]
 46 ?        S      0:00 [khungtaskd]
 47 ?        S      0:00 [oom_reaper]
 48 ?        I<     0:00 [writeback]
 49 ?        S      0:04 [kcompactd0]
 50 ?        SN     0:00 [ksmd]
 51 ?        SN     0:00 [khugepaged]
 71 ?        I<     0:00 [kintegrityd]
 72 ?        I<     0:00 [kblockd]
 73 ?        I<     0:00 [blkcg_punt_bio]
 74 ?        I<     0:00 [ata_sff]
 75 ?        I<     0:00 [edac-poller]
 76 ?        I<     0:00 [devfreq_wq]
 77 ?        S      0:00 [watchdogd]
 79 ?        I<     0:04 [kworker/1:1H-events_highpri]
 80 ?        S      0:09 [kswapd0]
 83 ?        I<     0:00 [kthrotld]
 85 ?        I<     0:00 [acpi_thermal_pm]
 86 ?        I<     0:00 [nvme-wq]
 87 ?        I<     0:00 [nvme-reset-wq]
 88 ?        I<     0:00 [nvme-delete-wq]
 90 ?        S      0:00 [scsi_eh_0]
```

```
     91 ?        I<     0:00 [scsi_tmf_0]
     92 ?        S      0:00 [scsi_eh_1]
     93 ?        I<     0:00 [scsi_tmf_1]
     94 ?        S      0:00 [scsi_eh_2]
     95 ?        I<     0:00 [scsi_tmf_2]
     96 ?        S      0:00 [scsi_eh_3]
     97 ?        I<     0:00 [scsi_tmf_3]
     98 ?        S      0:00 [scsi_eh_4]
     99 ?        I<     0:00 [scsi_tmf_4]
    100 ?        S      0:00 [scsi_eh_5]
    101 ?        I<     0:00 [scsi_tmf_5]
    108 ?        I<     0:00 [kstrp]
    114 ?        I<     0:00 [zswap1]
    115 ?        I<     0:00 [zswap1]
    116 ?        I<     0:00 [zswap-shrink]
    118 ?        I<     0:00 [charger_manager]
    121 ?        I<     0:04 [kworker/2:1H-events_highpri]
    134 ?        I<     0:04 [kworker/0:1H-events_highpri]
    152 ?        I<     0:03 [kworker/3:1H-events_highpri]
    164 ?        I<     0:00 [sdhci]
    170 ?        I<     0:00 [kdmflush]
    182 ?        I<     0:00 [xfsalloc]
    183 ?        I<     0:00 [xfs_mru_cache]
    184 ?        I<     0:00 [xfs-buf/dm-0]
    185 ?        I<     0:00 [xfs-conv/dm-0]
    186 ?        I<     0:00 [xfs-cil/dm-0]
    187 ?        I<     0:00 [xfs-reclaim/dm-]
    188 ?        I<     0:00 [xfs-gc/dm-0]
    189 ?        I<     0:00 [xfs-log/dm-0]
    190 ?        S      0:06 [xfsaild/dm-0]
    226 ?        Ss     0:01 /usr/lib/systemd/systemd-journald
    240 ?        Ss     0:00 /usr/lib/systemd/systemd-udevd
    247 ?        Ssl    0:00 /usr/lib/systemd/systemd-networkd
    275 ?        I<     0:00 [tpm_dev_wq]
    290 ?        I<     0:00 [ktpacpid]
    300 ?        I<     0:00 [wg-crypt-wg4000]
    308 ?        I<     0:00 [cfg80211]
    313 ?        I<     0:00 [cryptd]
    319 ?        Ss     0:03 /usr/lib/systemd/systemd-resolved
    320 ?        Ssl    0:00 /usr/lib/systemd/systemd-timesyncd
    327 ?        S      0:22 [irq/27-iwlwifi]
    344 ?        Ss     0:01 /usr/bin/dbus-daemon --system --
address=systemd: --nofork --nopidfile --systemd-activation --
```

```
syslog-only
    349 ?        Ss     0:00 /usr/lib/iwd/iwd
    354 ?        Ss     0:00 /usr/lib/systemd/systemd-logind
    355 ?        Ss     0:00 /usr/lib/systemd/systemd-machined
    367 ?        S      0:00 [card0-crtc0]
    368 ?        S      0:00 [card0-crtc1]
    496 ?        Ss     0:00 sshd: /usr/bin/sshd -D [listener]
0 of 10-100 startups
    498 ?        Ssl    0:00 /usr/bin/gdm
    504 ?        Ssl    0:00 /usr/lib/accounts-daemon
    509 ?        Ssl    0:00 /usr/lib/polkit-1/polkitd --no-
debug
    623 ?        Ssl    0:01 /usr/lib/upowerd
    630 ?        SNsl   0:00 /usr/lib/rtkit-daemon
    758 ?        Ssl    0:00 /usr/lib/colord
    821 ?        Sl     0:00 gdm-session-worker [pam/gdm-
password]
    832 ?        Ss     0:00 /usr/lib/systemd/systemd --user
    833 ?        S      0:00 (sd-pam)
    843 ?        Sl     0:00 /usr/bin/gnome-keyring-daemon --
daemonize --login
    847 tty2     Ssl+   0:00 /usr/lib/gdm-wayland-session
/usr/bin/gnome-session
    849 ?        Ss     0:04 /usr/bin/dbus-daemon --session --
address=systemd: --nofork --nopidfile --systemd-activation --
syslog-only
    851 tty2     Sl+    0:00 /usr/lib/gnome-session-binary
    877 ?        Ssl    0:00 /usr/lib/gnome-session-ctl --
monitor
    879 ?        Ssl    0:01 /usr/lib/gnome-session-binary --
systemd-service --session=gnome
    894 ?        Ssl   36:32 /usr/bin/gnome-shell
    905 ?        Ssl    0:00 /usr/lib/gvfsd
    910 ?        Sl     0:00 /usr/lib/gvfsd-fuse
/run/user/1000/gvfs -f
    917 ?        Ssl    0:00 /usr/lib/at-spi-bus-launcher
    923 ?        S      0:00 /usr/bin/dbus-daemon --config-
file=/usr/share/defaults/at-spi2/accessibility.conf --nofork --
print-address 3
    951 ?        Ssl    0:00 /usr/lib/xdg-permission-store
    957 ?        Sl     0:00 /usr/lib/gnome-shell-calendar-
server
    964 ?        Ssl    0:00 /usr/lib/evolution-source-registry
```

```
    965 ?        S<sl  33:42 /usr/bin/pulseaudio --daemonize=no
--log-target=journal
    971 ?        Sl     0:00 /usr/lib/goa-daemon
    972 ?        Ssl    0:00 /usr/lib/gvfs-udisks2-volume-
monitor
    975 ?        Ssl    0:03 /usr/lib/udisks2/udisksd
    978 ?        Ssl    0:00 /usr/lib/evolution-calendar-
factory
   1002 ?        Sl     0:00 /usr/lib/pulse/gsettings-helper
   1027 ?        Sl     0:00 /usr/lib/goa-identity-service
   1028 ?        Ssl    0:00 /usr/lib/gvfs-mtp-volume-monitor
   1038 ?        Ssl    0:00 /usr/lib/dconf-service
   1039 ?        Ssl    0:00 /usr/lib/gvfs-gphoto2-volume-
monitor
   1046 ?        Ssl    0:00 /usr/lib/evolution-addressbook-
factory
   1050 ?        Ssl    0:00 /usr/lib/gvfs-goa-volume-monitor
   1056 ?        Ssl    0:01 /usr/lib/gvfs-afc-volume-monitor
   1071 ?        Sl     0:00 /usr/bin/gjs /usr/share/gnome-
shell/org.gnome.Shell.Notifications
   1073 ?        Sl     0:00 /usr/lib/at-spi2-registryd --use-
gnome-session
   1084 ?        Ssl    0:00 /usr/lib/gsd-a11y-settings
   1085 ?        Ssl    0:00 /usr/lib/gsd-color
   1087 ?        Ssl    0:00 /usr/lib/gsd-datetime
   1089 ?        Ssl    0:01 /usr/lib/gsd-housekeeping
   1090 ?        Ssl    0:00 /usr/lib/gsd-keyboard
   1091 ?        Ssl    0:01 /usr/lib/gsd-media-keys
   1092 ?        Ssl    0:00 /usr/lib/gsd-power
   1093 ?        Ssl    0:00 /usr/lib/gsd-print-notifications
   1096 ?        Ssl    0:00 /usr/lib/gsd-rfkill
   1097 ?        Ssl    0:00 /usr/lib/gsd-screensaver-proxy
   1098 ?        Ssl    0:00 /usr/lib/gsd-sharing
   1099 ?        Ssl    0:00 /usr/lib/gsd-smartcard
   1103 ?        Ssl    0:00 /usr/lib/gsd-sound
   1107 ?        Ssl    0:00 /usr/lib/gsd-usb-protection
   1113 ?        Ssl    0:00 /usr/lib/gsd-wacom
   1118 ?        Sl     0:00 /usr/lib/evolution-data-
server/evolution-alarm-notify
   1137 ?        Sl     0:00 /usr/lib/gsd-disk-utility-notify
   1178 ?        Sl     0:00 /usr/bin/gjs /usr/share/gnome-
shell/org.gnome.ScreenSaver
   1181 ?        Sl     0:00 /usr/lib/gsd-printer
```

```
   1264 ?        Ssl    1:59 /usr/lib/gnome-terminal-server
   1314 ?        Sl   115:38 /usr/lib/firefox/firefox
   1364 ?        Sl     0:00 /usr/lib/firefox/firefox -
contentproc -parentBuildID 20210923165649 -prefsLen 1 -
prefMapSize 246833 -appdir /usr/lib/firefox/browser 1314 true
socket
   1434 ?        Sl     2:32 /usr/lib/firefox/firefox -
contentproc -childID 2 -isForBrowser -prefsLen 5043 -
prefMapSize 246833 -jsInit 285716 -parentBuildID 20210923165649
-appdir /usr/lib/firefox/browser 1314 true tab
   1501 ?        Sl    49:54 /usr/lib/firefox/firefox -
contentproc -childID 3 -isForBrowser -prefsLen 5838 -
prefMapSize 246833 -jsInit 285716 -parentBuildID 20210923165649
-appdir /usr/lib/firefox/browser 1314 true tab
   1532 ?        Sl    40:14 /usr/lib/firefox/firefox -
contentproc -childID 4 -isForBrowser -prefsLen 7235 -
prefMapSize 246833 -jsInit 285716 -parentBuildID 20210923165649
-appdir /usr/lib/firefox/browser 1314 true tab
   1586 ?        Sl     0:00 /usr/lib/firefox/firefox -
contentproc -parentBuildID 20210923165649 -prefsLen 8441 -
prefMapSize 246833 -appdir /usr/lib/firefox/browser 1314 true
rdd
   1661 ?        Sl     0:33 /usr/lib/firefox/firefox -
contentproc -childID 6 -isForBrowser -prefsLen 8515 -
prefMapSize 246833 -jsInit 285716 -parentBuildID 20210923165649
-appdir /usr/lib/firefox/browser 1314 true tab
   1736 ?        Ssl    0:00 /usr/lib/gvfsd-metadata
   2840 ?        Ss     0:00 /usr/lib/systemd/systemd
   2867 ?        Ss     0:00 /usr/lib/systemd/systemd-journald
   2874 ?        Ss     0:00 /usr/lib/systemd/systemd-networkd
   2879 ?        Ss     0:00 /usr/lib/systemd/systemd-resolved
   2884 ?        Ss     0:00 /usr/bin/dbus-daemon --system --
address=systemd: --nofork --nopidfile --systemd-activation --
syslog-only
   2885 ?        Ss     0:00 /usr/lib/systemd/systemd-logind
   2918 ?        S      0:00 /usr/bin/ssh-agent -D -a
/run/user/1000/keyring/.ssh
   2922 ?        Ss     0:00 /usr/lib/systemd/systemd --user
   3060 ?        Sl     1:09 /usr/bin/Xwayland :0 -rootless -
noreset -accessx -core -auth /run/user/1000/.mutter-
Xwaylandauth.Z0BOC1 -listenfd 4 -listenfd 5 -displayfd 6 -
initfd 7
   3064 ?        Sl     2:30 ibus-daemon --panel disable -r --
```

```
xim
   3066 ?        Ssl    0:01 /usr/lib/gsd-xsettings
   3072 ?        Sl     0:00 /usr/lib/ibus/ibus-dconf
   3073 ?        Sl     0:26 /usr/lib/ibus/ibus-extension-gtk3
   3075 ?        Sl     0:23 /usr/lib/ibus/ibus-x11 --kill-
daemon
   3081 ?        Sl     0:05 /usr/lib/ibus/ibus-portal
   3103 ?        Sl     0:32 /usr/lib/ibus/ibus-engine-simple
   3142 ?        Sl     0:14 /usr/lib/ibus/ibus-engine-m17n --
ibus
   3202 ?        Sl     0:00 /usr/bin/gnome-calendar --
gapplication-service
   3208 ?        Sl     0:11 /usr/bin/gnome-software --
gapplication-service
   3244 ?        Sl     0:00 /usr/lib/gvfsd-trash --spawner
:1.16 /org/gtk/gvfs/exec_spaw/0
   3285 ?        SNsl   0:01 /usr/lib/tracker-miner-fs-3
  12166 ?        Sl    41:21 /usr/lib/firefox/firefox -
contentproc -childID 33 -isForBrowser -prefsLen 9824 -
prefMapSize 246833 -jsInit 285716 -parentBuildID 20210923165649
-appdir /usr/lib/firefox/browser 1314 true tab
  17736 pts/4    R+     0:00 ps ax
$
```

நான் சொன்னதெல்லாம் கரெக்டா?' கார்த்திகா கேட்க மதன் ஆம் என்பதுபோல் தலை ஆட்டினான்.

'அடுத்து top கமாண்ட், இது ஒரு TUI (Terminal User Interface) வகை கமாண்ட்' கார்த்திகா சொல்லும்போது மதன் குறுக்கிட்டான் 'அப்படின்னா?' மதன் கேட்க 'அதாவது இந்த TUI வகையான அப்ளிகேஷன் GUI (Graphical User Interface) அப்ளிகேஷன் மாதிரியே மெனு, விண்டோ எல்லாம் இருக்கும், ஆனா எல்லாமே டெர்மினல்லையே இருக்கும்' கார்த்திகா விளக்கமளித்தாள். 'அப்ப GUI அப்படின்னா என்ன?' மதன் கேட்க 'உங்களுக்குத் தெரியாதா?

விண்டோஸ் யூஸ் பண்ணதே இல்ல? அதுல மெனு விண்டோ எல்லாம் பார்த்ததே இல்ல? சும்மா விளையாடாதீங்க, வேணும்னா கூகுள்ல சர்ச் பண்ணித் தெரிஞ்சிக்கோங்க' கார்த்திகா செல்லமாக கோபித்துக் கொண்டாள். 'top கமாண்டுக்கு வருவோம். இந்த கமாண்ட் சிஸ்டம் எவ்வளவு சிபியு யூஸ் பண்ணிக்கிட்டு இருக்கு, எவ்வளவு மெமரி யூஸ் பண்ணிக்கிட்டு இருக்கு, எந்த ப்ராசஸ் அதிகமா சிபியு யூஸ் பண்ணுது, எந்த ப்ராசஸ் அதிகமா மெமரி யூஸ் பண்ணுது இப்படி எல்லா டீட்டெய்ல்ஸ்சும் காட்டும், கரெக்டா?' கார்த்திகா கேட்க 'கரெக்ட், அது மட்டும் இல்லாம top கமாண்ட் மூலம் ப்ராசஸ்கள் பற்றிய பல விஷயங்கள நாம தெரிஞ்சிக்கலாம், ப்ராசஸ்கல கன்ட்ரோலும் பண்ணலாம்' மதன் விவரித்தான்.

```
$ top
$
```

'மெமரி சொன்னவுடனே எனக்கு இன்னொரு கமாண்ட் சொல்லத் தோனுது, free கமாண்ட், இந்த கமாண்ட் மூலமா நம்ம சிஸ்டத்துல எவ்வளவு மெமரி இருக்குன்னு தெரிஞ்சிக்கலாம்' கார்த்திகா முடிக்க 'free கமாண்டோட எந்த பீல்ட பார்த்து கரண்ட் சிஸ்டத்தோட மெமரி யூசேஜ தெரிஞ்சிப்பீங்க?' மதன் கேட்க 'இத நீங்க கேட்பீங்கன்னு எதிர்பார்த்தேன், free கமாண்ட் அவுட்புட்ல Available பீல்ட்தான் சிஸ்டத்துல எவ்வளவு மெமரி மிச்சம் இருக்குன்னு காட்டும்'

கார்த்திகா சரியாகக் கூறினாள் அதை மதனும் சரி எனத் தலை ஆட்டினான்.

```
$ free
               total        used        free      shared
buff/cache   available
Mem:         8026564     4231316     2090600      502472
1704648     3010980
Swap:              0           0           0
$
```

‘மெமரி எவ்வளவு காலியா இருக்குன்னு வேற வழியிலயும் பார்க்கலாம்’ மதன் சொல்லும்போதே ‘ஆமாம் top கமாண்டும் எவ்வளவு மெமரி காலியா இருக்குன்னு avail mem பீல்டுல காட்டும்’ கார்த்திகா கூற ‘ஆமாம், அது மட்டும் இல்லாம, இந்த கமாண்டும் அவைளபிள் மெமரி காட்டும்

```
$ cat /proc/meminfo
MemTotal:        8026564 kB
MemFree:         2075944 kB
MemAvailable:    2996384 kB
Buffers:              36 kB
Cached:          1571036 kB
SwapCached:            0 kB
Active:           645336 kB
Inactive:        4451160 kB
Active(anon):       6496 kB
Inactive(anon):  4016464 kB
Active(file):     638840 kB
Inactive(file):   434696 kB
Unevictable:      423684 kB
Mlocked:               0 kB
SwapTotal:             0 kB
SwapFree:              0 kB
Dirty:               360 kB
Writeback:             0 kB
```

```
AnonPages:       3949128 kB
Mapped:           487424 kB
Shmem:            503880 kB
KReclaimable:     135084 kB
Slab:             226396 kB
SReclaimable:     135084 kB
SUnreclaim:        91312 kB
KernelStack:       15376 kB
PageTables:        46944 kB
NFS_Unstable:          0 kB
Bounce:                0 kB
WritebackTmp:          0 kB
CommitLimit:     4013280 kB
Committed_AS:   11759676 kB
VmallocTotal:   34359738367 kB
VmallocUsed:       40268 kB
VmallocChunk:          0 kB
Percpu:             6464 kB
HardwareCorrupted:     0 kB
AnonHugePages:         0 kB
ShmemHugePages:        0 kB
ShmemPmdMapped:        0 kB
FileHugePages:         0 kB
FilePmdMapped:         0 kB
CmaTotal:              0 kB
CmaFree:               0 kB
HugePages_Total:       0
HugePages_Free:        0
HugePages_Rsvd:        0
HugePages_Surp:        0
Hugepagesize:       2048 kB
Hugetlb:               0 kB
DirectMap4k:      376448 kB
DirectMap2M:     7897088 kB
$
```

இந்த அவுட்புட்ல MemAvailable லைன் தான் கரண்ட் சிஸ்டத்தில் காலியா இருக்கும் மெமரி' மதன் கூற ' இந்த /proc பைல் சிஸ்டத்துல

ப்ராசஸ் பத்தின எல்லா டீட்டெயிஸ்சும் இருக்கும் போல' கார்த்திகா கேட்க ஆமாம் என்பதுபோல் மதன் தலை ஆட்டினான்.

'ஒரு முக்கியமான கமாண்ட விட்டுட்டீங்க, kill கமாண்ட பத்தி படிச்சீங்களா?' மதன் கேட்க, 'ஆமாம், அதச் சொல்ல மறந்துட்டேன், kill கமாண்ட் ஒரு ப்ராசஸ்க்குப் பலவிதமான சிக்னல்ஸ் அனுப்பப் பயன்படுத்தப்படும் கமாண்ட்' கார்த்திகா கூறினாள்

```
$ kill 965
```

'இந்த 965 அப்படின்ற pid என்னோட கரண்ட் ஸிஸ்டத்துல ரன் ஆகும் pulseaudio அப்படின்ற ப்ராசஸ்சோட pid, இப்ப நான் kill கமாண்டுக்கு இந்த 965 pid கொடுத்தா pulseaudio ப்ராசஸ் டெர்மினேட் ஆகிடும், அதுக்கு அப்புறம் என் ஸிஸ்டத்துல ஆடியோ கேட்காது' கார்த்திகா விளக்கினாள், 'அது மட்டும் இல்லாம kill கமாண்டுக்கு -L ஆப்ஷன் கொடுத்தா ஒரு ப்ராசஸ்சுக்கு எத்தனை விதமான சிக்னல்ஸ் அனுப்பலாம்னு காட்டும், சிக்னல்ஸ்சோட சிக்னல் நம்பரையும் காட்டும்' மதன் விவரித்தான்.

```
$ kill -L
```

'இந்த சிக்னல்ஸ்ல முக்கியமான சிக்னல்ஸ் 9) SIGKILL, 11) SIGSEGV, 15) SIGTERM, 18) SIGCONT, 19) SIGSTOP இதுல SIGTERM தான் டீபால்ட் சிக்னல், அதாவது kill கமாண்டுக்கு எந்த சிக்னல் கொடுக்கனும்னு சொல்லலைன்னா அது டீபால்டா 15) SIGTERM ஆ

தான் ப்ராசஸ்சுக்கு அனுப்பும், இந்த சிக்னல் வந்தவுடன் அந்த ப்ராசஸ்ல இருக்குற SIGKILL சிக்னலுக்கு உண்டான டீபால்ட் சிக்னல் ஹான்லர் அந்த ப்ராசஸ்ஸ டெர்மினேட் பண்ணிடும். 11) SIGSEGV சிக்னல் ஒரு ப்ராசஸ் ஏதாவது கோக்குமாக்கா வேல செஞ்சதுனா, கர்னல் பொடனியிலேயே ஒன்னு வச்சுப் போய் சாகுன்னு சாகடிக்கப் பயன்படுத்துற சிக்னல், 19) SIGSTOP சிக்னல் பயன்படுத்தி நாம ஒரு ப்ராசஸ்ச ப்ரீஸ் பண்ண முடியும், அதாவது அது எந்த வேலையும் செய்யாது, ஆனா அந்த ப்ராசஸ்ச கர்னல் டெர்மினேட் செய்யாது, அந்த ப்ராசஸ்ஸ 18) SIGCONT கொடுத்து மீண்டும் இயக்க வைக்கலாம்' மதன் கூறினான். '9) SIGKILL பத்தி சொல்லவே இல்லையே?' கார்த்திகா கேட்க, '9) SIGKILL தான் ரொம்ப டேஞ்சரான சிக்னல், ஒரு ப்ராசஸ்ச பாரபட்சமே இல்லாம உடனே சாகடிக்க பயன்படுத்துற சிக்னல், இந்த சிக்னல் ஒரு ப்ராசஸ்சுக்கு அனுப்பப்பட்டா அந்த ப்ராசஸ்ல இருக்குற சிக்னல் ஹாண்ட்லருக்கு அந்த சிக்னல் போகாம கர்னலே அந்த ப்ராசஸ்ச சாகடிச்சுடும், அதனால எப்பவும் இந்த SIGKILL பயன்படுத்தும்போது கவனமா இருக்கனும்' மதன் விரிவாக விவரித்தான். 'சிக்னல்ஸ்ல இவ்வளவு விஷயம் இருக்கா? அமேசிங்' கார்த்திகா ஆச்சரியப்பட்டாள்.

'ஆபீஸ்லையே சூப்பர் சிங்கர் நடத்தி இருக்கீங்க போல' சுரேஷ் மதனின் க்யூப்பிக்களுக்கு தீப்தியுடன் வந்தான், 'கங்கிராட்ஸ் அக்கா அசத்திட்டீங்க' தீப்தி கார்த்திகாவுக்குக் கை கொடுத்துப்

பாராட்டினாள். ‘பண்றதெல்லாம் பண்ணிட்டு என்னடா பேய் அறஞ்சா மாதிரி முழிக்கிற, உங்க வீடியோ தான் நம்ம கம்பெனி சோஷியல் மீடியா வெப்சைட்ல நம்பர் ஒன், ஓப்பன் பண்ணிப் பாரு’ என்று சுரேஷ் கூற மதனும் வெகு நாள் கழித்து அந்த வெப்சைட்டில் லாகின் செய்தான், மதனும் கார்த்திகாவும் பாடிய வீடியோ, அவர்கள் கம்பெனியின் இன்டர்னல் சோஷியல் மீடியா வெப்சைட்டில் முதல் இடத்தில் இருந்தது. இவர்கள் பாடுவதைப் பலரும் அதில் பாராட்டி இருந்தார்கள். மதன், கார்த்திகா, சுரேஷ் மற்றும் தீப்தி நால்வரும் அந்த வீடியோவிற்கு வந்திருக்கும் கமெண்டுகளைப் படிக்க ஆரம்பித்தனர்.

அதிகமான லைக்சும் ரிப்ளைகளும் பெற்ற கமெண்டில் ஒரு பெண் ‘நெஞ்சில் உள்ளாடும் ராகம் இது தானா கண்மணி ராதா’ வரிகள் பாடும்போது மதன் கார்த்திகாவைப் பார்த்து பாடியதையும் அதற்கு கார்த்திகா முகத்தைத் தன் கையால் மூடிக் கொண்டதையும் குறிப்பிட்டு ‘இப் தே ஆர் நாட் மேரிட் ஆர் நாட் கோயிங் டூ மேரி, ஐ அம் கோயிங் டு கில் தெம் போத், சோ மச் லவ் இஸ் இன் த எர்,’ என்று கமெண்ட் போட்டிருந்தார். இந்த கமெண்டுக்குப் பலரும் இருவரும் லவ்வர்களாகத்தான் இருக்க வேண்டும் இல்லையெனில் இப்படிப் பாடி இருக்க முடியாது என்று ரிப்ளை கொடுத்திருந்தனர். அடுத்த பாப்புலரான கமெண்டில் ஒருவர் ‘போத் சங் கிருஷ்ணா ராதா பேஸ்டு சாங்ஸ். மே த காட்ஸ் கிவ் தர் பிலஸ்ஸிங்ஸ் டு திஸ் கப்புல்’ என்று குறிப்பிட்டு இருந்தார்.

‘தே ஆர் ஷிப்பிங் அஸ் லைக் எனிதிங்’ மதன் கார்த்திகாவைப் பார்த்துக் கூற கார்த்திகா புன்னகைத்தாள். ‘தேங்ஸ் பார் ஆல் யுவர் விஷஸ், பட் ப்ளீஸ் ஸ்டாப் ஷிப்பிங் அஸ், ஐ நோ யு ஆர் நாட் கோயிங் டு பிலீவ், பட் வி ஆர் ஜஸ்ட் குட் பிரண்ட்ஸ் டில் நவ். ஐ ஃபியர் திஸ் மே அஃபக்ட் ஹர் ப்யூச்சர் அண்ட் ஐ ஃபீல் கில்டி அபௌட் தட்’ மதன் அந்த முதல் கமெண்டில் ரிப்ளை போட்டான். இதைப் பக்கத்தில் இருந்து பார்த்துக்கொண்டிருந்த கார்த்திகா ‘நீங்க பிரண்டுன்னு சொன்னவுடனே நம்பிடப்போறாங்களா?’ என்று மதனைப் பார்த்துக் கேட்க ‘ஸ்டில், தே நீட் டு நோ ரைட்? பின்னாடி பிரச்சனை ஆகும் கார்த்திகா?’ மதனும் கார்த்திகாவைப் பார்த்துக் கூற ‘நானே அத பெருசா எடுத்துக்கல, நீங்க ஏன் வீணாக் கவலைப்படுறீங்க?’ கார்த்திகா கேட்க ‘பிரச்சனை உனக்கு மட்டும் இல்லம்மா, நாளைக்கு என் பொண்டாட்டி இதப் பார்த்தா என்ன நெனப்பா?’ மதன் கேட்க ‘பொசசிவ் இல்லாத பொண்டாட்டியா இருந்தா இதப் பார்த்து உங்களைக் கிண்டல் பண்ணுவா, பொசசிவான பொண்டாட்டின்னா கல்யாணத்துக்கு அப்புறம் உன்ன தவிர வேற எவளையும் பாக்குறதில்லன்னு சொல்லிப் பத்து சவரன் தங்க செயின் வாங்கிக் கொடுத்து சமாளிச்சுக்கோங்க’ கார்த்திகா மதனைப் பார்த்துச் சிரித்தபடிக் கூறினாள்.

மற்றொரு கமெண்டில் ஒருவர் மதனின் மானிட்டரையும் கார்த்திகாவின் லேப்டாப்பையும் வீடியோவில் வரும் இடத்தைச்

சுட்டிக்காட்டி ‘இஸ் எனி ஒன் சீ வாட் ஐ சீ, தட் டெஸ்க்டாப் லுக் லைக் i3 அண்ட் தட் அதர் லேப்டாப் லுக் லைக் cinnamon’ என்று குறிப்பிட்டிருந்தார். அந்த கமெண்டைப் பார்த்ததும் ‘எக்ஸாக்ட்லி காம்ரேட், இட்ஸ் i3 ஆன் டாப் ஆப் btw அண்ட் அனதர் ஒன் இன் கார்த்திகாஸ் லேப்டாப், தட் இஸ் cinnamon ஆன் டாப் ஆப் Mint’ என்று ரிப்ளை கொடுத்தான். அருகில் இருந்த கார்த்திகா அதைப் பார்த்து ‘Mint புரியுது அது என்ன i3, cinnamon, btw?’ என்று கேட்க ‘cinnamon உங்கள் டெஸ்க்டாப் என்விரான்மென்ட், நீங்க லாகின் பண்ண உடனே வர்ற யுஐ (UI) ஸ்கிரீன், லினக்ஸ்ல பல டெஸ்க்டாப் என்விரான்மென்ட் இருக்கு, i3 என்னோட டெஸ்க்டாப் என்விரான்மென்ட், வெல், i3 இஸ் ஆக்சுவலி எ விண்டோ மேனேஜர்’ என்று கூற ‘அப்ப btw? Mint மாதிரி லினக்ஸ் டிஸ்ட்ரோவோட நேமா? நான் கேள்விப்பட்டதே இல்லையே?’ கார்த்திகா கேட்க ‘அதப் பத்தி அப்புறம் சொல்றேன்’ என்று மதன் பாதியிலேயே முடித்தான்.

‘வந்த வேலைய மறந்துட்டேன், கார்த்திகா, உங்ககிட்ட ஒரு ஹெல்ப் வேணும், தீப்தி உங்க ரூம்ல ஸ்டே பண்ணலாமா?’ சுரேஷ் கார்த்திகாவைக் கேட்க ‘அப்கோர்ஸ், பட் ரெண்டல் டெர்ம்ஸ் அண்ட் கண்டிஷன்ஸ் கயலுக்குத் தான் தெரியும், லெட் மீ கால் ஹர் டு கம் இயர்’ என்று கூறி கார்த்திகா மொபைல் மூலமாகக் கயலிடம் பேசி மதன் க்யூப்பிக்களுக்கு வரவழைத்தாள். ‘ஹாய் ஜீனியஸ், சூப்பர் சிங்கிங், உங்களுக்கு கம்ப்யூட்டர் மட்டும்தான் தெரியும்னு

நெனச்சேன், பாட்டுலயும் அசத்துறீங்க, கொஞ்சம் விட்டிருந்தா எங்க வீட்டு நைட்டிங்கேல் கார்த்திகாவை பீட் பண்ணியிருப்பீங்க' என்று கயல் மதனிடம் கை குலுக்கி வாழ்த்துகள் தெரிவித்தாள். 'நைஸ் டு மீட் யூ' என்று மதனும் வரவேற்றான். எல்லோரும் அமர்ந்தனர், அப்போது 'கயல், திஸ் இஸ் தீப்தி, இப்ப திருவான்மியூர்ல தங்கி இருக்கா, அவ ரூம்ல இவளும் இன்னொருத்தரும் இருக்காங்க, அந்த இன்னொருத்தருக்கு கல்யாணம் ஆகப்போகுது, ரூம் ரெண்ட் வேர எக்பென்சிவ், அதுவும் இல்லாம ரெண்டு பேருதான் தங்கனுமாம், சோ, ஈதர் ஷி நீட் டு பைண்ட் அனதர் ரும்மேட் ஆர் ஷி நீட் டு மூவ் டு சம் அதர் ரூம், நான் வர்றேன்டின்னா கேட்க மாட்டேங்குரா, செருப்ப கழட்டிக் காட்றா, அதான் உங்க ரூம்ல தீப்தி ஸ்டே பண்ணிக்கலாமான்னு கார்த்திகா கிட்ட கேட்டேன்' சுரேஷ் கூற 'அப்ப கேண்டீன்ல மீட் பண்ணப்ப ராட்ஷசின்னு சொன்னது இவங்களத்தானா, ப்ளஷர் டு மீட் யு தீப்தி' என்று கயல் தீப்தியின் கைகளைக் குலுக்க தீப்தி 'ப்ளஷர் டு மீட் யூ டூ' என்று கூறி கயல் கைகளைக் குலுக்கிவிட்டு சுரேஷை முறைக்க 'ஏ, அவங்க அதுக்கு முன்னாடி சொன்ன முக்கியமான வார்த்தைய விட்டுட்டாங்கடி, அழகான ராட்ஷசின்னுதான்டி சொன்னேன்' என்று சமாளித்தான். 'கண்டிஷன் படி நாலு பேர் வரைக்கும் தங்கலாம். சோ வெல்கம் டு அவர் ரூம்' என்று கயல் தன் சம்மதத்தை வெளிப்படுத்தினாள். 'அப்ப வந்த வேலை முடிஞ்சது, அப்புறம் அந்த மூட்டை முடிச்சு தட்டு

சாமான் எல்லாம் கொண்டுட்டுப் போய்க் கயல் ரூம்ல எறக்கிட்டு எனக்கு ரூம் அட்ரஸ் அனுப்பிடு, நைட் வந்து புது ரூம்ல எல்லாம் வசதியா இருக்கான்னு பாக்குறேன்' என்று சுரேஷ் கூற 'எதுக்கு அங்க வந்து மொக்க போடுறதுக்கா, பழைய ரூம் அட்ரஸ் கொடுத்துட்டு நான் இவ்வளவு நாள் பட்டதே போதும், தேவைப்படும் போது நானே சொல்றேன்' என்று தீப்தி சுரேஷிடம் முறைத்தவாறே கூறினாள். 'சாரி கய்ஸ், ஐ ஹவ் டு கோ, டீம் மீட்டிங்ல இருந்து பாதியில வந்துட்டேன், வி வில் டாக் லேட்டர், நைஸ் டு மீட் யூ ஆல்' என்று கூறிவிட்டு கயல் கிளம்ப 'எனக்கும் வொர்க் இருக்கு, ஈவ்னிங் வேற சீக்கிரமாக் கெளம்பனும், ரூம் ஷிப்ட் பண்ணனும், சீ யு அகெய்ன் மதன் அண்ணா, ஈவினிங் பாக்கலாம் கார்த்திகா அக்கா' என்று கூறி தீப்தி கிளம்ப 'ஏ இருடி நானும் வர்றேன், மச்சி ரூம்ல பாக்கலாம் டா, கார்த்திகா சீ யு அகெய்ன்' என்று கூறி சுரேஷும் கிளம்ப மீண்டும் மதனும் கார்த்திகாவும் வீடியோவிற்கு வந்த கமெண்ட்டுகளைப் படிக்க ஆரம்பித்தனர்.

'தட்ஸ் கிரேட் காம்ரேட், நெவர் தாட் ஷி இஸ் ஆல்சோ ஒன் ஆப் அஸ், btw I too use arch, சீம்ஸ் யு யூசிங் டீபால்ட் i3? வை டோன்ட் யூ RICE?' மதனின் ரிப்ளைக்கு ஒரிஜினல் கமண்ட் போட்டவர் விரைவாக ரெஸ்பான்ஸ் செய்திருந்தார். 'ஐ ஆம் நாட் குட் இன் ஆர்ட் காம்ரேட்' என்று மதன் ரிப்ளை செய்தான். 'சோ யூ கைஸ் ஆர் டாக்கிங் அபௌட் Archlinux, பட் வாட் இஸ் btw?' கார்த்திகா கேட்க

‘btw எக்ஸ்பான்ஷன் பை த வே, ஆர்ச் லினக்ஸ் யூஸ் பண்றவங்க, அவங்க ஆர்ச் லினக்ஸ் யூஸ் பண்றத பெருமிதமாச் சொல்லிக்காட்ட btw I use arch அப்படின்னு சொல்லி மத்தவங்கள கடுப்பேத்துவாங்க, அதுவே போகப்போக மத்தவங்க அவங்கள கிண்டல் பண்றதுக்கும் அவங்களே அவங்கள கிண்டல் பண்ணிக்குறதுக்கும் ஒரு மீம்மா மாறிடுச்சு, அதுல இருந்து வந்ததுதான் இந்த btw, Archlinux க்கு இன்னொரு நிக் நேம்’ என்று மதன் விளக்க ‘அடப் பாவிகளா, இப்படியுமா கலாய்ப்பீங்க?’ என்று கார்த்திகா புன்னகைத்தாள்.
‘ஆமா, அதென்ன நெவர் தாட் ஷி இஸ் ஆல்சோ ஒன் ஆப் அஸ், ஏன் பொண்ணுங்க லினக்ஸ யூஸ் பண்ணவே கூடாதா? திஸ் நெர்ட்ஸ் ஆர் ஆல் மிசோஜினிஸ்ட்ஸ்’ கார்த்திகா மதனைப் பார்த்து கோபத்துடன் கேட்க ‘ஒன் ஆப் ஆஸ் அப்படின்னா எங்கள்ள ஒருத்தின்னு அர்த்தம், காட் வை டோன்ட் திஸ் பெமினிஸ்ட்ஸ் சீ நார்மல் திங்ஸ் ஆஸ் நார்மல்’ மதன் பதில் கூற ‘இந்த டாப்பிக்க விட்ருவோம், இல்லன்னா தேவையில்லாம சண்ட போட்டுக்குவோம், பட் வாட் இஸ் தட் RICE?’ கார்த்திகா கேட்க ‘அதுவா, உங்கள் டெஸ்க்டாப்ப உங்களுக்குப் புடிச்ச மாதிரி கஸ்டமைஸ் பண்றது, ஒரு சாதாரண கார் வாங்கி அதுல வித விதமா ஸ்டிக்கர் ஒட்டி சைலன்சர் மாத்தி உள்ள இருக்குற ஸ்பேர் பார்ட்ஸ் மாத்தி அதோட பர்பாமன்ஸ் இம்ப்ருவ் பண்றாங்கள்ள, அதுக்கு பேர் Race Inspired Cosmetic Enhancements (RICE), இதே டெர்மினாலஜியதான் யுனிக்ஸ் உலகத்துல அவங்களோட

டெஸ்க்டாப் அவங்களுக்குப் புடிச்சாமாதிரி கஸ்டமைஸ் பண்றதுக்கு யூஸ் பண்றாங்க, நீங்க யுனிக்ஸ்பார்ன் [https://www.reddit.com/r/unixporn] ரெடிட் கம்யூனிட்டில இருக்குற போஸ்ட்டுங்க பாத்திங்கன்னா எல்லாம் இப்படி கஸ்டமைஸ் பண்ண லினக்ஸ்/யுனிக்ஸ் டெஸ்க்டாப் ஸ்கிரீன் ஷாட் போஸ்ட்டுங்களாத்தான் இருக்கும்' என்று சொல்லி முடித்துவிட்டு அந்த யூஆர்எல் பிரவுசரில் டைப் செய்ய 'நோ, ஓப்பன் பண்ணாதீங்க, அந்த யூஆர்எல் ஒரு மாதிரி இருக்கு,ஓப்பன் பண்ணா செக்யூரிட்டி டீம்ல இருந்து எவன்னா வரப்போறான்' என்று கார்த்திகா பயந்தாள். அதற்கு மதன் 'டோண்ட் வொரி, எவனா கேட்டான்னா அவனுக்கும் ஓப்பன் பண்ணி காட்டிடலாம்' என்று கூறி அந்த யூஆர்எல் ஓப்பன் செய்தான். கார்த்திகா அந்த வெப்சைட்டை பார்த்துவிட்டு வியப்புடன் 'இஸ் திஸ் லினக்ஸ்?' என்று கேட்க 'லினக்ஸ் மட்டும் இல்ல பிஎஸ்டி, மேக்' மதன் கூற 'இவ்ளோ அழகா கஸ்டமைஸ் பண்றாங்க, நீங்க மட்டும் ஏன் உங்க டெஸ்க்டாப்ப வெறும் பிளெயின் பிளாக் அண்ட் வைட்ல வச்சிருக்கீங்க?' என்று கார்த்திகா கேட்க 'RICE பண்றது சாதாரண விஷயம் இல்லைங்க, நிறைய டைம் ஸ்பென்ட் பண்ணனும், ஒரு ஓவியம் வரையற மாதிரி, இட்ஸ் அன் ஆர்ட், ஐ ஆம் நாட் குட் இன் ஆர்ட், பிசைட்ஸ், ஐ சீ ப்யூட்டி இன் சிம்ப்ளிசிட்டி' மதன் கூற 'ஐ நோ, கருப்புத்தான் எனக்குப் புடிச்ச கலருன்னு சொன்னப்பவே நீங்க இப்படித்தான் இருப்பீங்கன்னு தோணுச்சு' கார்த்திகா புன்னகையுடன் கூறினாள்.

‘எனிவே, நேரமாச்சு, சீ யூ நெக்ஸ்ட் டைம் காம்ரேட்’ கார்த்திகா புன்னகையுடன் கூற ‘காம்ரேட்?’ மதன் வியப்புடன் பார்க்க ‘பிகாஸ் ஐ ஆம் ஆல்சோ ஒன் ஆப் ஆஸ்’ என்று கார்த்திகா புன்னகையுடன் கூறிவிட்டுச் செல்ல ‘டேக் கேர் ஆஃப் மை சிஸ்டர் காம்ரேட்’ என்று மதன் தீப்தியை நல்லபடியாக பார்த்துக் கொள் என்று கூற ‘டோன்ட் வொரி, வி வில் டேக் கேர்’ என்று சொன்னபடியே மதனிடம் இருந்து விடைபெற்றாள்.

**தொடரும்..**

# மழலைக் காதல்

அன்று ஞாயிற்றுக்கிழமை மாலை, கயல் வழக்கம் போலத் தன் துணிகளை வாஷிங் மெஷினில் துவைத்து ஆற வைத்துக் கொண்டிருந்தாள், கார்த்திகா தன் லேப்டாப்பில் ஏதோ நோண்டிக் கொண்டிருந்தாள், தீப்தி படுத்துக்கொண்டு வாட்சாப்பில் சுரேஷுடன் சேட் செய்துகொண்டிருந்தாள். ‘தீப்தி, எப்பப்பாரு அந்த வாட்சப்ல இருக்கியே அப்படி என்னதான்டி பேசுவ’ கயல் கேட்க ‘நீங்க உங்க ஆள் கூட என்ன பேசுறீங்களோ, அதத்தான் நானும் பேசுறேன், என்ன நீங்க மேக்சிமம் ஒரு மணி நேரத்துக்குள்ள எல்லாத்தையும் பேசி முடிச்சிருவீங்க, ஏன்னா உங்க ஆளுக்கு டியுட்டிக்குப் போகனும் அதனால அவர் தூங்கனும். என் ஆளுக்கு அப்படி எந்த ரிஷ்டிரிக்ஷனும் இல்ல, அதான் நிறுத்தி நிதானமா மணிக்கணக்குல பேசுறோம்’ தீப்தி கூற ‘நாமலாச்சும் பரவாயில்லடி, இங்க ஒருத்தி லவ் பண்றோமா இல்லையான்னே தெரியாம சுத்திக்கிட்டிருக்கா, எப்ப இவ அடுத்த ஸ்டெப் போறது, எப்ப வாட்சப்ல மணிக்கணக்கா பேசுறது’ கயல் வருத்தப்பட ‘எனக்கும் காது கேட்குதுடீ, நானும் இங்கதான் இருக்கேன்’ கார்த்திகா தன் லேப்டாப்பைப் பார்த்தபடியே குரலை உயர்த்த ‘அவங்கதான் எப்பவோ அடுத்த ஸ்டெப்புக்குப் போயிட்டாங்களே, அங்க பாருங்க, லேப்டாப்ல டெர்மினல் ஓப்பன் பண்ணி வச்சிருக்காங்க, எனக்கு தெரிஞ்சு மதன் அண்ணா தான்

எப்பவும் டெர்மினல்ல இருப்பார்’ என்று தீப்தி சொல்ல ‘அந்த சாமியார் கூடச் சேர்ந்ததுல இருந்து இவ இப்படி மாறிட்டா, முன்னல்லாம் எப்ப பாத்தாலும் மேக்கப் போட்டுக்கிட்டு கண்ணாடி முன்னாடி இருப்பா, இப்ப என்னடான்னா அது பக்கமே போறதில்ல, முன்னாடி பத்துப் பேர் அவள பார்க்குறாமாதிரி மணிக்கணக்காத் தேடி ட்ரஸ் எடுப்பா, இப்ப யாருமே கண்டுக்காம இருக்குறாமாதிரி ட்ரஸ் எடுக்குறா, போற போக்கப் பாத்தா கல்யாணம் பண்ணிக்கிட்டு புள்ள குட்டி பெத்துக்காம கன்னியாஸ்திரியாப் போயிடுவா போல இருக்கு’ கயல் கார்த்திகாவைக் கிண்டலடிக்க ‘இப்பவே கால்ல விழுந்து ஆசிர்வாதம் வாங்கிக்கோடி, இல்லாட்டி அப்புறம் க்யூல நிக்கனும்’ என்று கார்த்திகாவும் கிண்டலடித்தாள். ‘தீப்தி, நீயும் சுரேஷும் எப்படி லாக் ஆனிங்க’ என்று கயல் கேட்க ‘அது ஒரு பெரிய கதை’ தீப்தி கூற ‘சொல்லு கேட்போம்’ என்று கயல் கூறினாள்.

‘சுரேஷ எனக்குச் சின்ன வயசுல இருந்தே தெரியும், சுரேஷ் அப்பா ஒரு இண்டஸ்ட்ரியலிஸ்ட், அவங்களுக்கு சொந்தமான ஒரு ஆட்டோமொபைல் ஸ்பேர் பார்ட்ஸ் ப்ரோடியூஸ் பண்ற கம்பெனி இருக்கு, அவங்க கம்பெனில தான் என் அப்பா வைஸ் ப்ரெசிடென்டா இருந்தார், ஏதாவது பங்ஷன் நடந்தா ரெண்டு பேமிலியும் மீட் பண்ணுவோம், அப்ப நானும் அவனும் சேர்ந்து விளையாடுவோம், அவன் வீட்ல அவன் ஒரே பையன், என் வீட்ல நான் ஒரே பொண்ணு, ஒரு கார் ஆக்ஸிடென்ல ரெண்டு பேரோட

அப்பாவும் எங்கள விட்டுப் போயிட்டாங்க, சுரேஷோட அம்மா ஒரு அயர்ன் லேடி, தனி ஆளா இருந்து அந்த கம்பனிய வேற யார் கைக்கும் போகாத மாதிரி பார்த்துக்கிட்டாங்க. எங்க அம்மாவுக்கும் அவங்க கூடவே இருக்குற மாதிரி வேல போட்டுக் கொடுத்தாங்க, என்னையும் அவங்க பெத்த பொண்ணு மாதிரி படிக்க வச்சாங்க. எனக்கு பிராக்ரஸ் ரிப்போர்ட் வரும்போது முதல்ல அவன் அம்மா கிட்ட தான் காட்டுவேன் அப்புறமாத்தான் என் அம்மா கிட்ட காட்டுவேன். லீவ் வந்தா அவங்க வீட்ல தான் இருப்பேன் அவன் கூடத்தான் விளையாடுவேன், அவனுக்கு ப்ரண்ட்ஸ் சர்கல் ரொம்ப அதிகம், எப்ப பாத்தாலும் ப்ரண்ட்ஸ் கூடத்தான் சுத்திக்கிட்டு இருப்பான், ப்ரண்ட்சுங்களுக்காக எது வேணும்னாலும் செய்வான். அவன் ப்ரண்சுங்களோட ஆளுங்களோட அவன் ப்ரண்ட்ஸ்கள சேர்த்து வைக்கப் படாத பாடு பட்டிருக்கான், சில சமயம் அவனுங்களுக்காக அடியெல்லாம் வாங்கியிருக்கான், ஆனா அவன் ப்ரண்ட்சுங்க இவன எப்பவும் ஒரு ஜோக்கராத்தான் டிரீட் பண்ணுவாங்க, அவங்க ஆளுங்களும் இவன வந்துட்டான்டி ப்ரோக்கர்னு என் காது பட கிண்டல் பண்ணியிருக்காளுங்க, எனக்கு பயங்கரமா கோவம் வரும், அவன போய் நாலு சாத்து சாத்தி அவங்க கூட சேராதடான்னு சொல்லுவேன், ஆனாலும் மறுநாள் அந்த நன்றிகெட்ட நாயிங்க கூடத்தான் சுத்துவான், இப்படியேத்தான் ஸ்கூல்ல இருந்து வேலையில ஜாயின் பண்ண வரைக்கும்

ப்ரண்ட்ஸ்சே கதின்னு இருந்தான், எனக்கும் அவன மத்தவங்க இப்படி ட்ரீட் பண்றாங்களேன்னு பாவமா இருக்கும் அதுவே நான் வளர வளர லவ்வா மாறிடுச்சு' தீப்தி தொடர்ந்தாள்.

'ஒரு நாள் அவனும் அவன் அம்மாவும் வீட்ல இருக்கும்போது நேரா அவன் அம்மா கிட்ட போய் உங்க பையன் இப்படிப் பொறுப்பில்லாம சுத்திக்கிட்டு இருக்கான், நீங்க கண்டுக்காம இருக்கீங்க, உங்களுக்கு உங்க கம்பெனி ஒழுங்கா உங்ககிட்ட இருக்கனும்னா அவன மாத்தணும், அதுக்கு ஒழுங்கு மரியாதையா என்ன அவருக்கு கல்யாணம் பண்ணி வைங்க. அப்பத்தான் அவனுக்கு பொறுப்பு வரும்னு சொன்னேன்'. தீப்தி சொன்னதும் 'வாட்?' என்று கயலும் கார்த்திகாவும் வியப்பில் ஒரு சேரக் கேட்டனர். 'ஆமா, நான் தான் பர்ஸ்ட் என் லவ்வ எக்ஸ்போஸ் பண்ணேன், அதுவும் அவன் அம்மாகிட்ட, அப்ப அவன் பி.ஈ பைனல் செம்,நான் பர்ஸ்ட் செம், ரெண்டு பேரும் ஒரே காலேஜ்' தீப்தி கூற 'அப்புறம் என்னாச்சு' என்று கயல் கேட்க 'நான் முன்னாடியே சொன்னேன்ல, என் அத்தை ஒரு அயர்ன் லேடின்னு, அவங்களுக்கு போல்டா இருக்குறவங்கள ரொம்பப் பிடிக்கும், அதனால என்னையும் அவங்களுக்கு ரொம்பப் பிடிக்கும், அவங்க என் பையன ஒரு பொறுப்பான பொண்ணுகிட்டத்தான் ஒப்படைக்கிறேன்னு சொல்லி அவன் கைய என் கையில கொடுத்தாங்க' தீப்தி கூற 'அப்புறம் என்னாச்சு' என்று கயல் ஆவலுடன் கேட்க 'எனக்குப்

பொறுப்பில்லைன்னுதான சொல்றா, எனக்கும் ஒரு சாப்ட்வேர் கம்பெனி தொடங்கனும்னு லட்சியம் எல்லாம் இருக்கு, அதனால முதல்ல நான் ஒரு கம்பெனி நடத்துறதுக்கு உண்டான தகுதிய வளர்த்துக்குறேன், எப்ப இவ எனக்குத் தகுதி இருக்குனு சொல்றாளோ அப்ப நான் நம்ம கம்பனி பொறுப்ப ஏத்துக்குறேன் அப்படியே இவள கல்யாணமும் பண்ணிக்குறேன் அப்படின்னு சொல்லி, படிப்ப முடிச்சி நம்ம கம்பனியில சாதாரண வேலைக்காரனா வேலைக்குச் சேர்ந்து இப்ப ஒரு ப்ராஜக்ட் மேனேஜரா இருக்கான்' தீப்தி கூற 'என்னது சுரேஷ் ப்ராஜக்ட் மேனேஜரா?' கயலுக்கும் கார்த்திகாவிற்கும் இதைக் கேட்டதுமே வியப்படைந்தனர். 'ஏன் யாரும் நம்பமாட்டேங்குறீங்க, நம்ம கம்பனியோட ஒரு முக்கியமான ப்ராஜக்ட்டுக்கு இவன்தாங்க ப்ராஜக்ட் மேனேஜர்' தீப்தி அழுத்தமாகக் கூற 'அப்ப சுரேஷ் மதன விடப் பெரிய ஆளா?' என்று கார்த்திகா கேட்க 'இல்லக்கா, ரெண்டு பேரும் ஒரே ஏஜ் தான். சுரேஷும் மதன் அண்ணாவும் ஒரே பே கிரேட் தான், ஆனா ரெண்டு பேரும் வேறவேற லைன், மதன் அண்ணா ஹார்ட்கோர் ப்ரோக்ராமர், சோ இப்ப அவர் சீனியர் டெவலப்பர். சுரேஷ் வெரி டேலன்டட் இன் மேனேஜ்மென்ட், நல்லாப் பேசுவான், அதான் அவன் இப்ப ஒரு ப்ராஜக்ட் மேனேஜர். மதன் அண்ணனுக்கு அடுத்து ஆர்கிடெக்ட் ஆகனும்னு எய்ம், சுரேஷுக்கு அடுத்து வைஸ் ப்ரெசிடென்ட் ஆகனுன்றது எய்ம். பட் எப்ப வேணும்னாலும் அவன் கம்பெனிக்கு

சிஇஓ ஆயிடுவான்' என்று தீப்தி கூற 'பசங்க வெளிய பாக்குறதுக்கு கேர்லஸ்ஸா பொண்ணுங்க பின்னாடி சுத்திக்கிட்டு இருக்குறாமாதிரித்தான்டி இருக்கு, பட் உள்ளுக்குள்ள ஒரு வெறியோடத் தான் இருக்காங்க' கயல் சுரேஷின் கதையைக் கேட்டு ஆச்சரியப்பட்டாள்.

'மதனுக்கும் சுரேஷுக்கும் எப்படிப் பழக்கம்' கார்த்திகா கேட்க 'சுரேஷ் வேலைக்கு ஜாயின் பண்ண புதுசுல நம்ம ஆஃபீஸ் சோழிங்கநல்லூர்ல இருந்ததால நார்த்ல இருந்து சவுத் மெட்ராஸ் வர ரொம்ப டைம் ஆகுது ரூம்ல தங்கலாம்னு டிசைட் பண்ணான். உதய் அண்ணா, சுரேஷ், நான் எல்லாரூம் ஒரே ஏரியா, உதய் அண்ணா நம்ம கம்பனியில வொர்க் பண்ணிட்டு ஆல்ரெடி சோழிங்கநல்லூர்ல ரூம் எடுத்துத் தங்கி இருந்தார். சோ சுரேஷ் அவர் ரூம்ல போய் ஸ்டே பண்ணான். அப்பத்தான் உதய் அண்ணா ப்ராஜக்ட்ல மதன் அண்ணா ஜாயின் பண்ணார், அவருக்கும் ரூம் தேவைப்பட்டதால உதய் அண்ணா ரூமுக்கு வந்துட்டார். மதன் அண்ணாவ பத்தித்தான் உங்களுக்கே தெரியுமே, வெரி இன்ட்ரோவர்ட், அதனால முதல்ல இவங்களுக்குள்ள செட்டே அகல, ஒரு வீக்கெண்ட் சுரேஷ் அவன் கூட இருந்த மத்த பொறுக்கிங்க பேச்ச கேட்டு கார் எடுத்துட்டு கோவா போய் நல்லாக் குடிச்சிட்டு மட்டையாயிட்டான், சனிக்கிழமை நைட் 11.30க்கு எங்க வீட்டுக்கு அவங்க வீட்ல இருந்து வேலைக்காரம்மா போன் பண்ணாங்க, பெரியம்மா நெஞ்ச புடிச்சிக்கிட்டு

இருக்காங்கன்னு, அம்மாவையும் அத்தை ஆபீஸ் வேலையா டெல்லிக்கு அனுப்பி இருந்தாங்க, பதறி அடிச்சிட்டு நான் போய் அவங்கல ஆஸ்பிட்டல்ல அட்மிட் பண்ணேன், மைல்டு கார்டியாக் அரஸ்ட், ப்ளட் வெசில்ஸ்ல அக்யுமிலேஷன் இருக்கு அத க்ளியர் செய்ய உடனே ஆப்ரேஷன் பண்ணனும் டூ லேக்ஸ் இம்மீடியட்டா கட்டுங்க ஆப்பரேஷன் அரேன்ஜ் பண்ணணும்னாங்க, என்கிட்ட அந்த நேரத்துல அவ்வளவு பணம் இல்ல, அத்தையோட அசிஸ்டென்ஸ் நம்பரும் என்கிட்ட இல்ல, இவனுக்கும் இவனோட ப்ரன்ஸ்சுன்னு இவன கெடுத்துக்கிட்டுத் திரிஞ்ச பொறம்போக்கு நாய்ங்களுக்கும் எத்தனையோ முறை ட்ரை பண்ணேன், எடுக்கல, உதய் அண்ணா நியாபகம் வந்தது அவருக்கு அடிச்சேன், அவருக்கு மறுநாள் பொண்ணு பாக்கனும்னு அவரோட நேட்டிவ் வில்லேஜ்ல இருந்தார், என்ன பண்றதுன்னு தெரியாம முழிச்சிட்டு இருந்தேன், அப்பத்தான் மதன் அண்ணா கால் பண்ணார், அவருக்கு உதய் அண்ணா போன் பண்ணிச் சொல்லியிருக்கார். போன்ல பேசின மதன் அண்ணாகிட்ட எல்லா டீட்டேயிஸ்சும் சொன்னேன். இம்மீடியட்டா அவரோட அப்பா கிட்ட பேசி அவர் அப்பா அக்கவுண்டில் இருந்து என் அக்கவுன்டுக்கு டூ லேக்ஸ் ட்ரான்ஸ்பர் பண்ணார். நான் அத ஆஸ்பிட்டல்ல கட்டி ஆப்பரேஷனுக்கு அறேன்ஜ் பண்ணேன். காஞ்சிபுரத்தில் இருந்து வித்தின் பார்ட்டி பைவ் மினிட்ஸ்ல எங்க ஆஸ்பிட்டலுக்கு மதன் அண்ணாவும் அவர் அப்பாவும்

வந்துட்டாங்க. மறுநாள் காலையில சுரேஷ்கிட்ட இருந்து போன் வந்தது, நடந்த விஷயத்தைச் சொன்னேன், அவனும் அடுத்த பிளைட் பிடிச்சு மெட்ராஸ் வந்தான். அவன் அப்பா டெத்துக்கு அப்புறம் அப்பத்தான் அவன் அழுது பார்த்தேன், மதன் அண்ணாவ கட்டிப் புடிச்சு அழுதான், என்னோட கையப் புடிச்சுக் கிட்டு சாரி கேட்டான், அவன பாக்க ரொம்பப் பாவமா இருந்தது, நானும் அழுதேன், அன்னில இருந்து இந்தக் குடிகார ப்ரன்ட்ஷிப்புகளக் கொஞ்சம் கொஞ்சமா கட் பண்ணினான். மதன் அண்ணாவ புரிஞ்சிக்க ஆரம்பிச்சான். அவர மாதிரி சிம்பிளா இருக்க கத்துக்கிட்டான். அதுவரைக்கும் என்னோடது ஒன் சைட் லவ்வோன்னு எனக்குள்ள ஒரு டவுட் இருந்தது, அப்ப இருந்து தான் என்னோட லவ் ஒன் சைட் இல்ல டூ சைட்தான்னு கன்பார்ம் ஆச்சு, என் மேல ரொம்ப கேர் எடுத்துக்க ஆரம்பிச்சான்' தீப்தி தன் கதையைச் சொல்ல கயலும் கார்த்திகாவும் தீப்தியை வியந்து பார்த்துக் கொண்டிருந்தனர். தீப்தியின் கண்கள் ஈரமாயிருந்ததை இருவரும் உணர்ந்தனர்.

'சுரேஷ ஃபர்ஸ்ட் டைம் பாக்கும்போது, ஹி மஸ்ட் பீ எ ரிச் ப்ளேபாய் கிட்னு தோணுச்சு, உன்ன முதன்முதலாப் பாக்கும்போது ஷி மஸ்ட் பீ த விக்டிம் ஆப் ஹிஸ் ப்ளேபாய்னஸ் அப்படின்னு தோனுச்சு, பட் ஐ ஆம் சோ ராங், ஐம் சாரி தீப்தி' கயல் தீப்தி இடம் மன்னிப்பு கேட்க 'அத விடுங்க, உங்க லவ் பத்திச் சொல்லுங்க,' என்று தீப்தி கேட்க 'என் லவ் ஸ்டோரி உன் அளவுக்கு இன்ட்ரஸ்டிங் இல்லம்மா,

எத்தனையோ படத்துல வந்த டிபிக்கல் லவ் ஸ்டோரிதான், என் சொந்த மாமா பையன், நான் கட்டிக்காம வேற எவளையாச்சும் கட்டிக்க விட்ருவேனா, என் அம்மாதான் அடம் புடிக்குறாங்க, மாமா வீட்ல எல்லோருக்கும் என்ன ரொம்பப் பிடிக்கும், இன்பேக்ட் எங்கம்மா எத்தனையோ முறை பொண்ணு தர மாட்டேன்னு சொன்னாலும் பெரிய மாமா கயல் தான் என் மருமகள்னு எப்பவோ சொல்லிட்டார், என் வீட்லதான் இழுத்துக்கிட்டு இருக்கு, எப்படி முடியப் போகுதுன்னு தெரியல, கூடிய சீக்கிரம் ரிசல்ட் கிடைக்கும்னு தோனுது' கயல் தன் கதையைச் சொன்னாள். 'கார்த்திகா அக்கா, உங்க ஸ்டோரி சொல்லுங்க' என்று தீப்தி கேட்க 'நான் யாரையும் லவ் பண்ணலம்மா, என் ஜாதகத்துல டியூஸ்டே ப்ராப்ளம் இருக்கு, என் அப்பா எப்படியாச்சும் டியூஸ்டே ப்ராப்ளம் இருக்கும் ஒரு பையன பாத்து கட்டிக்கோன்னு சொல்வாரு, அவன கட்டிக்க வேண்டியதுதான், சிம்பிள்' கார்த்திகா சிரித்தவாறே கயலைப் பார்த்துக்கொண்டே கூற 'அப்ப ஆப்பிஸ்ல நீயும் மதனும் பாட்டு பாடும் போது பண்ண ரொமான்ட்சுக்கு பேரு என்னடி?' கயல் கேட்க 'வி ஆர் ஜஸ்ட் குட் பிரண்ட்ஸ் டில் நவ், இத நான் சொல்லல, அவர் அந்த வீடியோக்கு வந்த கமெண்டுக்கு ரிப்ளை போட்டிருக்கார், வேணும்னா போய்ப் பாரு' கார்த்திகா கூற 'அவன் உன் மேல இருக்குற அக்கறையில அந்த ரிப்ளை போட்டிருக்கான், லவ் பண்ணாச் சொல்லித்தொலைங்கடி, பசங்க தான் முதல்ல

சொல்லணும்னு அடம்புடிங்காதீங்க, எனக்கென்னவோ இதுங்க ரெண்டும் ஈகோ புடிச்சு அலையப்போகுதுங்கன்னு தோணுது, தீப்தி உனக்கென்னடி தோணுது?’ கயல் தீப்தியைப் பார்த்துக் கேட்க ‘அப்படி எல்லாம் இல்லக்கா, தே ஆர் நாட் எட் பீலிங் த பெயின், ஒருத்தர் இல்லைன்னா இன்னொருத்தர் இல்லைன்னு எப்ப தோனுதோ, அப்ப கண்டிப்பாச் சொல்லிடுவாங்க’ தீப்தி கூற ‘அதெல்லாம் இருக்கட்டும் தீப்தி, இங்க நாம பேசுறது நம்ம மூனு பேருக்குள்ளதான் இருக்கனும், வாட்சப்ல மொக்க போட்றதுக்கு எதுவும் டாபிக் கிடைக்கலைன்னு இங்க நடக்குறத சுரேஷுக்குச் சொன்ன, மவளே கொன்றுவேன், எங்கம்மா எம்எல்ஏ, நியாபகம் வெச்சுக்கோ’ கயல் தீப்தியைப் பார்த்துக் கூற ‘நான் அவ்வளவு சீப்பான பொண்ணு இல்லக்கா, நீங்க எங்கிட்ட தைரியமா ஷேர் பண்ணிக்கலாம்’ என்று தீப்தி உறுதிப்படுத்தினாள்.

கார்த்திகா மதனின் கியூப்பிக்கல்லில் அமர்ந்து தன் லேப்டாப்பில் வேலை செய்து கொண்டிருந்தாள். ‘ரொம்ப நேரம் ஆச்சா?’ மதன் கார்த்திகாவைப் பார்த்துக் கேட்டான். ‘இல்ல இப்பத்தான்’ கார்த்திகா பதில் அளித்தாள். ‘என்ன ரொம்பத் தீவிரமா ஏதோ பாத்துட்டு இருக்கீங்க போல’ மதன் கேட்க ‘டெர்மினல்ல பயன்படுத்தும் எடிட்டர்ஸ் பத்தி படிச்சேன், அதாங்க vi, emacs, nano’ கார்த்திகா கூறிக்கொண்டிருக்கையில் ‘ஓ, எது ஈசியா இருக்கு?’ மதன் கேட்க ‘nano தான்’ கார்த்திகா கூற மதன் சிரித்தபடி ‘எது கஷ்டமா இருக்கு?’

என்று கேட்க ‘vi’ என்றாள். ‘இந்த emacs டிரை பண்ணீங்களா?’ மதன் கேட்க ‘பண்ணேன், ரொம்ப வித்தியாசமா இருக்கு’ கார்த்திகா கூற ‘ஆமாம் emacs வித்தியாசமாத்தான் இருக்கும், ஏன்னா அது எடிட்டர் உருவத்துல இருக்குற ஒரு லேங்குவேஜ் இண்டர்ப்ரிட்டர், அதாவது பைத்தான் மாதிரி’ மதன் கூற ‘என்னது, லேங்குவேஜ் இண்டர்ப்ரிட்டரா?’ கார்த்திகா கேட்க ‘ஆமாம், emacs ஒரு லிஸ்ப் லேங்குவேஜ் இண்டர்ப்ரிட்டர், லினக்ஸ் இருக்குறவங்க emacs ஐக் கிட்டத்தட்ட ஒரு ஆப்ரேட்டிங் சிஸ்டம்னே சொல்லுவாங்க ஏன்னா அதுல இல்லாதது எதுவுமே இல்ல, அதுல இருக்குற ப்ளகின்ஸ் வேற எந்த ஒரு எடிட்டருக்கும் கிடையாது’ மதன் கூற ‘எனக்கு எத கத்துக்கிட்டா லாங் ரன்ல யூஸ்புல்லா இருக்கும்?’ கார்த்திகா கேட்க ‘emacs தான், ஆனா நீங்க சொன்ன இந்த எடிட்டர்ஸ் கத்துக்குறதுக்கு முன்னாடி ஒரு முக்கியமான எடிட்டர நீங்க கண்டிப்பாக் கத்துக்கனும், அந்த எடிட்டருக்குப் பேரு ed’ மதன் கூற ‘அப்படி என்ன அது அவ்வளவு முக்கியம்?’ கார்த்திகா கேட்க ‘ஏன்னா ஒரிஜினல் யூனிக்ஸ்ல இருந்த முதல் எடிட்டர் இதுதான்’ மதன் கூற கார்த்திகா உடனே அதன் மேனுவலை எடுத்துப் படிக்க ஆரம்பித்தாள். கார்த்திகா மேனுவலைப் படிப்பதை பார்த்த மதன் கார்த்திகா எப்படி லினக்ஸ் கற்பது என்பதை உள்வாங்கிக்கொண்டுவிட்டாள் என்பதை உணர்ந்தான். ‘எந்த மேனுவல் பேஜ் பார்க்குறீங்க?’ மதன் கேட்க ‘man ed கமாண்ட் போட்டு வர மேனுவலைத்தான்’ கார்த்திகா கூற ‘அது

வேணாம் https://man.freebsd.org/ போய் ed கொடுத்து சர்ச் பண்னுங்க, அதுல வர ed மேனுவல படிங்க’ மதன் கூற கார்த்திகாவும் அதன்படிச் செய்தாள்.

‘ed ஒரு லைன் ஓரியன்டட் எடிட்டரா?’ கார்த்திகா கேட்க ‘ஆம், அதுக்கு இரண்டு மோட் உண்டு, ஒன்னு கமாண்ட் மோட் இன்னொன்னு இன்சர்ட் மோட், நீங்க ed கமாண்ட் கொடுத்து என்டர் கொடுத்ததுமே அது டீபால்ட்டா கமாண்ட் மோட்லதான் இருக்கும், கமாண்ட் மோட்ல ஒவ்வொரு கீ ப்ரஸ்சுக்கும் ஒரு அர்த்தம் உண்டு, கமாண்ட் மோட்ல இருந்து இன்சர்ட் மோடுக்குப் போக i அல்லது a கீ ப்ரஸ் பண்ணனும். இண்சர்ட் மோட்ல எல்லா கீ ப்ரஸ்சும் சாதாரண அர்த்தம்தான். இன்சர்ட் மோட்ல இருந்து கமாண்ட் மோடுக்கு வர ஒரு தனி லைன்ல . டாட் வைக்கனும், நாம செய்தத சேமிக்க w கீ கொடுத்து ஒரு ஸ்பேஸ் கொடுத்து பக்கத்துல பைல் நேம் கொடுக்கனும், ed ல இருந்து வெளிய வர q கொடுக்கனும்’ மதன் கூற அதன்படி கார்த்திகா செய்து பார்த்தாள்.

```
$ ed
a
hello world
.
w helloworld.txt
12
q
$
```

‘சூப்பர், செம்மைய இருக்கு, உங்களமாதிரி ஆளுங்களால மட்டும்தான் சிம்பிளா ஒரு நோட்பேட்ல செய்யுறத இப்படிப் பட்ட ஒரு எடிட்டர வெச்சிக்கிட்டு இவ்ளோ இண்ட்ரஸ்டிங்கா பண்ண முடியும்’ என்று சொல்லிக்கொண்டே அவள் ed எடிட்டரில் உருவாக்கிய கோப்பை cat பயன்படுத்தி என்ன இருக்கின்றது என்று பார்த்தாள்.

```
$ cat helloworld.txt
hello world
$
```

‘இருங்க இப்ப நான் அதே பைல எடிட் பண்ணிப் பார்க்குறேன்’ என்று சொல்லிவிட்டு அதே கோப்பை ed இல் மீண்டும் திறந்தாள்.

```
$ ed
e helloworld.txt
12
a
hello madhan
.
w
25
q
$ cat helloworld.txt
hello world
hello madhan
$
```

கார்த்திகா cat பயன்படுத்தி அந்தக் கோப்பைப் பார்ப்பதைக் கண்ட மதன் ‘ஏன் cat யூஸ் பண்ணிப் பார்க்குறீங்க, ed லயே 1,$p அப்படின்னு கமாண்ட் மோட்ல இருக்கும்போது கொடுத்தா முழு

பைலயும் காமிக்கும், அதாவது முதல் வரில இருந்து கடைசி வரி வரைக்கும் காண்பிக்கச் சொல்றோம், இத இன்னும் சிம்பிளா ,p கொடுத்தும் பார்க்கலாம்' மதன் கூற அதன்படிக் கார்த்திகா செய்தாள்

```
$ ed
e helloworld.txt
25
1,$p
hello world
hello madhan
,p
hello world
hello madhan
q
$
```

கார்த்திகா செய்வதைப் பார்த்துக்கொண்டிருந்த மதன் 'இனிதான் ed யோட பவர பார்க்கப் போறீங்க, அந்த பைல்ல world இருக்குற லைன் மட்டும் காட்ட g/world/p அப்படின்னு கொடுங்க' மதன் கூற கார்த்திகா அப்படியே செய்தாள்.

```
$ ed
e helloworld.txt
25
g/world/p
hello world
q
$
```

'ஆமா, world இருக்கும் லைன் மட்டும் காட்டுது' கார்த்திகா கூற 'இதுதான் நாம யூஸ் பண்ற grep கமாண்ட், அதாவது ed யோட g/<re>/p தான் grep கமாண்டா மாறுச்சு' மதன் கூறிவிட்டுச் சிரிக்க

கார்த்திகாவும் புன்னகைத்தாள். ‘இன்னொரு பவர் பார்க்கலாம், இப்போ world ல எடுத்துட்டு அதுக்கு பதிலா karthika அப்படின்னு வரவழைக்க 1,$s/world/karthika/g கொடுங்க, பிறகு ,p கொடுங்க’ என்று மதன் கூற கார்த்திகாவும் அப்படியே செய்தாள்.

```
$ ed
e helloworld.txt
25
1,$s/world/karthika/g
,p
hello karthika
hello mohan
q
?
```

‘இது என்ன ? காட்டுது’ கார்த்திகா கேட்க ‘நீங்க world ஐ karthika ன்னு மாத்திட்டீங்கள்ள, அத சேவ் செய்யவில்லைன்னு காட்டுது, h கொடுங்க, இப்போ என்ன தவறு நடக்குதுன்னு காட்டும்’ என்று மதன் கூற, கார்த்திகா அதைச் செய்தாள்

```
h
warning: buffer modified
```

‘இப்போ w கொடுத்து சேவ் பண்ணனும் கரைக்டா?’ கார்த்திகா கேட்க ஆம் என்பதுபோல் மதன் தலை ஆட்டினான்

```
w
28
,p
hello karthika
hello madhan
q
$
```

‘எனக்கு இந்த எடிட்டர் ரொம்பப் பிடிச்சிருக்கு’ கார்த்திகா கூற ‘அப்போ உங்களுக்கு sed கமாண்டும் மிகவும் பிடிக்கும், ஏன்னா sed என்பது stream editor அதாவது stream ed அப்படிங்குறத குறிக்குது. ed ல செய்யுற அத்தன கமாண்சையும் sed லயும் செய்யலாம்’ மதன் கூற கார்த்திகா ‘அப்போ, ed கமாண்ட் தான் grep கமாண்டுக்கும் sed கமாண்டுக்கும் அடிப்படை கரைக்டா?’ என்று கேட்க ‘அதுமட்டும் இல்ல, regex அப்படிங்குற காண்சப்ட் முதன் முதலா இம்ளிமெண்ட் பண்ண அப்ளிகேஷனும் ed எடிட்டர் தான்’ என்று மதன் விவரித்தான். கார்த்திகா மேனுவலில் regex பற்றிய விவரங்களைப் படிக்க ஆரம்பித்தாள்.

கார்த்திகா மேனுவல் பேஜ்களை ஆர்வமுடன் படிக்க ஆரம்பித்துவிட்டதை உணர்ந்த மதன் ‘கார்த்திகா, இப்ப நீங்க ஒரு முக்கியமான கட்டத்துக்கு வந்துட்டீங்க, இப்ப இத உங்க கிட்ட சொன்னா கரெக்டா இருக்கும்னு தோணுது’ என்று கூற கார்த்திகா குழப்பத்துடன் ‘என்னது?’ என்று கேட்க ‘நீங்க என் கிட்ட ஷெல் ஸ்க்ரிப்ட் தான கத்துக்க வந்தீங்க?’ மதன் கேட்க ‘ஆமாம்’ கார்த்திகா கூற ‘நான் உங்களுக்கு முன்னாடி ஒருமுறை man sh படிக்கச் சொன்னேன் நியாபகம் இருக்கா?’ மதன் கேட்க ‘ஆமாம், கடுப்புல சொன்னீங்க’ கார்த்திகா கூற ‘அதையேத்தான் இப்ப சொல்றேன், https://man.freebsd.org ல sh கொடுத்து வரும் மேனுவல போய்ப் படிங்க, அத இப்ப நீங்க படிச்சீங்கன்னா சூப்பரா ஷெல் ஸ்க்ரிப்டிங்

கத்துப்பீங்க, அதுக்குத் தேவையான எல்லாம் இப்ப உங்ககிட்ட இருக்கு' என்று மதன் கூற 'சரி, நான் அதப் படிக்க ஆரம்பிக்கிறேன். அப்போ, இதோட நம்ம இந்த டிரெய்னிங் முடிச்சிக்கலாமா?' கார்த்திகா முகம் சிறிதானதை மதன் உணர்ந்தான். 'ஆமாம், டிரெய்னிங் இதோட முடிச்சிக்கலாம், இனி ஷெல் ஸ்க்ரிட்டிங் கத்துக்க இங்க நீங்க வரனும்னு அவசியம் இல்ல' மதன் கூற 'அப்போ இனிமே என்ன பார்க்க வரவேணாம்னு சொல்ரீங்க?' கார்த்திகா கேட்க 'அப்படி இல்ல, ஆஸ் எ ப்ரண்டா நீங்க எப்ப வேணும்னாலும் வரலாம், ஷெல் ஸ்க்ரிப்டிங் கத்துக்க இங்க வரனும்னு அவசியம் இல்லைன்னு சொல்ல வந்தேன்' மதன் கூற 'ஓக்கே, என்ன டிரெயின் பண்ணதுக்கு குருதட்சணையா என்ன செய்யனும்?' கார்த்திகா கேட்க 'நீங்க எப்பவும் லினக்ஸ் பயன்படுத்தனும்' மதன் சிரித்துக்கொண்டே கூற கார்த்திகாவும் சிரித்துக்கொண்டே 'மாறவே மாறாதீங்க, இப்படியே இருங்க' என்று கூறினாள். இருவரும் புன்னகையுடன் அமர்ந்திருந்தனர். 'காப்பி?' கார்த்திகா கேட்க இருவரும் எழுந்து தேநீர் அருந்த பேன்ட்ரிக்குச் சென்றனர்.

**தொடரும்..**

# குலசாமி

‘எங்கடா இருக்க ரூம்லயா?’ தீப்தி சுரேஷை போனில் கேட்க ‘இல்லடி வீட்டுக்கு வந்திருக்கேன்’ சுரேஷ் கூற ‘கோயிங் டு பி பிக் ப்ராப்ளம் இன் மை ரூம், கயல் அக்காவோட அம்மாகிட்ட கயல் அக்காவோட மாமா பையன் மறுபடியும் போய்ப் பொண்ணு கேட்டிருக்கார், கொடுக்கலைன்னா மெட்ராஸ்ல இருக்கிற உங்க பொண்ண கூட்டிட்டுப் போய்த் தாலி கட்டி அப்படியே ஸ்ரீநகர் கூட்டிட்டுப் போயிடுவேன்னு சொல்லி இருக்கார். அவங்க அம்மா உன்னால முடிஞ்சத பாத்துக்கோன்னு சொல்லி இருக்காங்க, இந்த விஷயம் கயல் அக்காவோட மாமா பையன் கயல் அக்கா கிட்ட இன்னைக்குக் காலையில போன் பண்ணிச் சொன்னார். அக்காவ நைட் ரெடியா இருக்கச் சொன்னார், அவர் மெட்ராஸ் வந்ததும் ரெண்டு பேரும் இன்னைக்கு நைட் ஸ்ரீநகர் போறாங்க, இது எப்படியோ அவங்க அம்மாவுக்குத் தெரிஞ்சு அவங்க ஆல்ரெடி மெட்ராஸ் வந்துட்டாங்களாம், இன்னும் கொஞ்ச நேரத்துல இங்க கயல் அம்மா வந்துடுவாங்க போல இருக்கு, இங்க பிரச்சனை ஆகும் போல இருக்கு, நீ இங்க சீக்கிரம் வாடா’ தீப்தி சுரேஷுக்குச் சொல்ல ‘நான் அங்க வரதுக்கு எப்படியும் டைம் ஆகும்டி, கயல உடனே எங்க ரூமுக்குப் போகச் சொல்லு, நான் மதனுக்கு போன் பண்ணிக் கயல கூட்டிட்டு சென்ட்ரலுக்கு வரச்சொல்றேன், கயல அப்படியே அவங்க

மாமா பையன காண்டாக்ட் பண்ணி சென்ட்ரலுக்கு வரச் சொல்லு, நானும் டைரக்டா சென்ட்ரல் வந்துட்றேன்' என்று சுரேஷ் சொல்லிக்கொண்டிருக்கும்போதே 'ஷிட், அவங்க அம்மா அடியாளுங்களோட வீட்டுக்கு வந்துட்டாங்கடா' தீப்தி சொல்லிவிட்டு போனை கட் பண்ணிவிட்டாள். சுரேஷுக்கு என்ன பண்ணுவது என்று தெரியவில்லை. உடனே மதனிடம் இந்த விஷயத்தைச் சொல்லி தீப்தியின் நம்பரைக் கொடுத்து தீப்தியிடம் அவர்கள் ரூம் இருக்கும் இடத்தைக் கேட்டு உடனே அங்கு போகச் சொன்னான்.

மதனும் தீப்தியை காண்டக்ட் செய்யப் பல முறை முயற்சித்தான், ஆனால் தீப்தி கட் செய்து கொண்டே இருந்தாள், இறுதியாக ஒரு முறை ட்ரை செய்து விட்டு எடுக்கவில்லை என்றால் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய்விடலாம் என்ற முடிவில் மதன் ட்ரை செய்ய தீப்தி எடுத்துவிட்டாள். 'தீப்தி நான் மதன்' மதன் சொல்வதற்குள் தீப்தி அவள் ரூம் இருக்கும் அட்ரஸ்ஸைச் சொல்லிவிட்டு போனை கட் செய்தாள். மதன் கொஞ்சமும் தாமதிக்காமல் அவர்கள் ரூம் இருக்கும் இடத்திற்குச் சென்றான். மதன் கேட்டைத் திறந்து உள்ளே செல்ல கயலின் அம்மா கயலின் கைகளைப் பிடித்து இழுத்தபடிக் கயலைக் கூட்டிக்கொண்டு வெளியில் வந்தார். கயல் அம்மாவுடன் பத்து அடியாட்கள் இருந்தனர்.

‘என்னங்க இப்படி இழுத்துட்டு வரீங்க, பர்ஸ்ட் கைய விடுங்க’ என்று மதன் கயலின் அம்மாவிடம் கூறினான். அப்போது அங்கிருந்த ஒரு அடியாள் ‘யார்ரா நீ, தூரமாப்போ தேவயில்லாம உசுர விட்றப்போற’ என்று மதனைப் பார்த்துச் சொல்லிவிட்டு ‘சார் பாக்குறதுக்கு சோடா புட்டி போட்டுக்கிட்டு டீசண்டா இருக்காரு, ஒதுங்கிப் போயிருவாரு’ என்று இன்னொரு அடியாளைப் பார்த்தவாறு கூறிவிட்டு அந்த அடியாள் மதனுக்கு முன்பாக நின்று கொண்டான். ‘சார், நான் சொல்றதைக் கொஞ்சம் பொறுமையா’ மதன் சொல்லி முடிப்பதற்குள் மதனின் கழுத்தில் வீச்சருவாவை அந்த அடியாள் வைத்தான். அடுத்த நொடி அந்த அடியாளின் காதிலும் மூக்கிலும் வாயிலும் இரத்தம் கொட்டிக் கொண்டிருந்தது. அந்த அடியாள் பாதி சுயநினைவுடன் நிற்க முடியாமல் மதனுக்கு முன் மண்டியிட்டு இருந்தான், அவன் கையில் இருந்த வீச்சரிவாள் இப்போது அவன் கழுத்தில் இருந்தது. ‘சோடாபுட்டி போட்டிருக்குறவனுக்குச் சண்ட செய்யத் தெரியாது, வீச்சு புடிக்க தெரியாதுன்னு, எந்த நாய்டா சொன்னது’ என்று மதன் பாதி சுயநினைவுடன் இருக்கும் அந்த அடியாளிடம் கழுத்தில் அருவாவை வைத்தவாறு கேட்டான். இதைப் பார்த்த அனைவருக்கும் வாரிப்போட்டது. கீழே விழுந்து கொண்டிருந்த அந்த அடியாளின் சட்டையைப் பிடித்து நிறுத்தி அவன் கழுத்தில் வீச்சரிவாளை வைத்துக் கொண்டு ‘பத்து என்றதுக்குள்ள அந்தப் பொண்ணு அவ ரூமுக்குப் போகலன்னா, இங்க இருக்கிறவங்க முக்காவாசி பேருக்கு

நாளைக்குப் பாட கட்ட வேண்டியிருக்கும், நான் இருப்பேனா இல்லையான்றது பத்தி எனக்குக் கவலை இல்ல, அந்தப் பொண்ணோட விருப்பம் இல்லாம அவள கூட்டிக்கிட்டு ஒருத்தன் இங்கிருந்து உயிரோட போக மாட்டீங்க. யாருக்குச் சாவு மேல பயம் இல்லையோ அவன் மொதல்ல வந்து என்ன கிழி' என்று மதன் கூறினான். எல்லோரும் அவரவர் இருந்த இடத்தில் அப்படியே சில நிமிடம் நின்றிருந்தனர், யாரும் அசையவில்லை. மதன் ஒரு சிறு அசைவைக் கண்டாலும் அவன் பிடித்து வைத்துக் கொண்டிருக்கும் அடியாளின் கழுத்தை வெட்டிவிட்டு ருத்ர தாண்டவம் ஆடும் நிலையில் இருந்தான். அப்பொழுது, 'தம்பி, அவசரப்படாத' என்று கயலின் அம்மா கயலின் கைகளை விட்டவாறே மதனிடம் கூறினார். 'போய் வண்டியில ஏறுங்கடா, அந்தச் செத்த பொணத்தையும் தூக்கிட்டுப் போய் வண்டியில போடுங்க' கயலின் அம்மா மதனிடம் அடிவாங்கியவனை வண்டியில் ஏற்றி விடச்சொல்லி அடியாட்களையும் அவர்கள் வந்த வண்டியில் அமரச்சொன்னாள். கயல், கயலின் அம்மா, மதன் மூன்று பேரும் மாடியில் இருந்த ரூமுக்குச் செல்ல தயாரானார்கள், அதுவரை நடந்துகொண்டிருந்ததைப் பார்த்துக்கொண்டிருந்த கார்த்திகாவும் தீப்தியும் கயலை நோக்கி ஓடி வந்து அவளை மீண்டும் ரூமிற்குக் கூட்டிச் சென்றனர்.

ரூமில் கயல், கார்த்திகா, தீப்தி, கயலின் அம்மா, மதன் இருந்தனர். ‘சொந்த அண்ணன் மகன், அப்புறம் ஏன் வேணாங்குறீங்க?’ மதன் கேட்க ‘ஏன்னா அவன் ஆர்மில இருக்கான்’ மதன் அம்மா பதில் கூற ‘ஆர்மில இருக்குறவங்க வாழலையா, புள்ள குட்டி பெத்துக்கலையா, சந்தோஷமா இல்லையா?’ மதன் கேட்க ‘இல்லையா, இல்ல, சந்தோஷமா இல்ல, நான் ஒரு மிலிட்டரிக்காரனுக்கு வாக்கப்பட்டவதான், இவளுக்கு ஏழு வயசுதான் இருக்கும், கார்கில்ல போயிட்டாரு, என்னத்தான் சொத்து சொகம் பேரு பதவின்னு இருந்தாலும் தாலியறுத்தவ வாழ்க்கை நரகம் தான், அந்த கஷ்டமெல்லாம் சொன்னா உங்களுக்குப் புரியாது, எனக்கும் என் அண்ணன் பையன ரொம்பப் புடிக்கும், சின்ன வயசுல அவன் என் அண்ணன் வீட்ல இருந்ததை விட என் வீட்லதான் அதிகமா இருந்திருக்கான், நான் எவ்வளவு சொல்லியும் என் பேச்சக் கேட்காம செத்தா என் புருஷன் மாதிரி நாட்டுக்காகச் சாகனும்னு மிலிட்ரில போய் சேர்ந்துட்டான், என் நெலம என் பொண்ணுக்கு வரக்கூடாதுன்னு நினைக்கிறேன், இது தப்பா?’ கயல் அம்மா மதனிடம் கேட்க ‘சாகனும்னு இருந்தா மிலிட்ரில போய்த் தான் சாகனும்னு இல்லைங்க, கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி என் கழுத்துல கத்தி இருந்துச்சு, உங்க ஆளு என்ன வெட்டியிருப்பான், அடுத்து அவன் கழுத்துல கத்தி இருந்துச்சு, நான் அவன வெட்டியிருப்பேன், யாரு எப்ப சாவாங்கன்னு யாருக்கும் தெரியாதுங்க, மிலிட்ரிக்குப்

போனா சாவு வரும், தன் சொந்த குடும்பத்துலயே செத்திருக்காங்கன்னு தெரிஞ்சும் நாட்டுக்காக உயிரக் கொடுக்கனும்னு போயிருக்காரு பாருங்க, அவர்தாங்க நாம எல்லாருக்கும் குலசாமி, அவருக்கு கோயில் கட்டிக் கும்புடலனாலும் பரவாயில்ல, அட்லீஸ்ட் அவர் மனசுக்கு புடிச்சவங்களையாவது கல்யாணம் பண்ணிக்க விடுங்க' மதன் சொல்லிக்கொண்டிருக்கும்போதே கயலின் மாமன் மகன் உள்ளே வந்தான். அவனைப் பார்த்ததும் கயல் போய்க் கட்டிப் பிடித்துக் கொண்டு அழுதாள். கயலின் அம்மா இருவரையும் பார்த்துச் சிறிது நேரம் மௌனமாக இருந்தாள். 'டேய் குரு, ஏதோ ஒரு ஊர்ல ஏதோ ஒரு சாமிக்கு முன்னாடியெல்லாம் தாலி கட்ட வேண்டாம், நாளைக்கு ஊருக்கு வந்து சேருங்க, நம்ம ஐயனாருக்கு முன்னாடி அடுத்த முகூர்த்தத்தில் கல்யாணம், அண்ணன் கிட்ட நான் பேசுறேன்' கயலின் அம்மா அண்ணன் மகனைப் பார்த்துச் சொல்லிவிட்டு மதனைப் பார்க்க மதன் கையெடுத்து கும்பிட்டு நன்றி தெரிவித்தான். கயலின் அம்மா அங்கிருந்து சென்றார்.

கயல் கண்களில் கண்ணீர் நின்றபாடில்லை. மதனிடம் வந்து கையெடுத்துக் கும்பிட்டு நன்றி தெரிவித்தாள். 'ப்ளீஸ் ஸ்டாப்' மதன் கயலைப் பார்த்து கூற கயல் தன்னை ஆறுதல் படுத்திக் கொண்டு 'இவர் லெப்டினன்ட் குருமூர்த்தி' அவள் மாமன் மகனை மதனுக்கு அறிமுகம் செய்தாள். 'வருஷக்கணக்கா எங்க வீட்ல இருக்கிறவங்க சொல்லிக் கேட்காதவங்க, எப்படி நீங்க சொல்லிக் கேட்டாங்க' குரு

மதனைக் கேட்க ‘சத்தியமா தெரியல, ஏதோ நாலு வார்த்த உங்கள பத்தி நல்ல விதமாச் சொன்னேன், அதுல மாறி இருப்பாங்க போல’ மதன் கூற ‘அதெல்லாம் ஒன்னுமில்ல, என் அம்மாவ பத்தி எனக்குத் தெரியாதா, இங்க வந்து பேசுறதுக்கு முன்னாடி ஒருத்தன அடிச்சிப் படுக்கவைச்சீங்களே அவன் யாரு தெரியுமா?’ கயல் புதிர் போட ‘உங்க அம்மாகிட்ட வேல பாக்குற அடியாள் தானே?’ மதன் கேட்க ‘எங்கம்மாகிட்ட வேல செய்றவங்க யாரும் தேவையில்லாமல் பேச மாட்டாங்க, ஆள எடபோடாம கிட்டக் கூட நெருங்க மாட்டாங்க, அவன் எங்க அம்மா எனக்கு பாத்த மாப்ள, ஊர்ல பெரிய மில் ஓனரோட பையன், ஏற்கனவே என்ன பொண்ணு கேட்டு வந்திருக்கான், அப்போ அம்மா யோசிச்சுச் சொல்றேன்னு சொல்லி இருக்கு, நேத்து போய் இவர் என்னத் தூக்கிடுவேன்னு சொன்னதும் அவசர அவசரமா அவுங்க வீட்ல எங்கம்மா பேசியிருக்கனும், அதான் எங்கம்மா கூடவே அவனும் ஒட்டிக்கிட்டு இங்க வந்துட்டான், வந்த இடத்துல வாய வெச்சுக்கிட்டு சும்மா இருந்திருக்கலாம்ல, இவன் நேத்து வந்ததுல இருந்து இவந்தான் இனிமே எல்லான்ற மாதிரி ஆடிட்டு இருந்தான், நான் எங்கம்மா கூட வரமாட்டேன்னு சொன்னப்ப என்னையே அடிக்க வந்தான், நீங்க வந்தீங்க, ரெண்டே அடில படுக்கவெச்சிட்டீங்க, அதுலத்தான் எங்கம்மா பயந்திருக்கும், அவசரப்பட்டு தப்பானவனுக்குக் கட்டிக்கொடுக்க இருந்தோமேன்னு யோசிச்சிருக்கும்’ கயல்

விளக்கமாகக் கூற ‘யாரு அந்த ஊளநாய் வந்திருந்தானா?’ குரு கயலிடம் கேட்க ‘நல்லா வாங்கிட்டுப் போனான், மதன் நல்லா வச்சு செஞ்சாரு’ கயல் கூற ‘தேங்க்ஸ் பிரதர் இந்த உதவிய எப்பவும் மறக்க மாட்டேன்’ குரு மதனிடம் சொல்லிக் கொண்டிருக்கையில் சுரேஷ் அவசர அவசரமாக ரூம் உள்ளே நுழைந்தான். எல்லோரும் சுரேஷையே பார்த்தனர். ‘தீப்தி என்னடி ஆச்சு, அம்மா, அடியாள் ஏதேதோ சொன்ன’ என்று சுரேஷ் கூற ‘அதெல்லாம் சால்வ் ஆயிடுச்சு, கயல் அம்மா கயலுக்கும் அவங்க அண்ணன் பையனுக்கும் கல்யாணம் பண்ண சம்மதிச்சுட்டாங்க’ தீப்தி கூற ‘அதான பாத்தேன், என் மச்சான் மதன் உலக நல்லிணக்கத்துக்காக சமாதானப்புறா பறக்க விட்டவனாச்சே, பேசியே கன்வன்ஸ் பண்ணியிருப்பான், அதனாலத்தான் அவன மொதல்ல அனுப்புனேன், நான் மட்டும் இங்க மொதல்ல வந்திருந்தேன் இங்க நாலு பொணமாவது விழுந்திருக்கும்’ சுரேஷ் சொல்ல எல்லோரும் சுரேஷையே முறைத்துப் பார்த்தனர். ‘இது யாரு, கயல் அம்மாவோட பாடிகார்ட்ல ஒருத்தரா?’ என்று சுரேஷ் குருவைக் பார்த்துக் கேட்க ‘இது கயலோட பாடிகார்ட், லெப்டினன்ட் குருமூர்த்தி’ மதன் கூற ‘ஓ, மில்ட்ரிகார், நீங்கதானா, கங்கிராட்ஸ்’ என்று சுரேஷ் வாழ்த்தினான். ‘அடுத்து என்ன பிளான்?’ சுரேஷ் கேட்க ‘நாளைக்குக் காலையில நாங்க ரெண்டு பேரும் ஊருக்குப் போறோம், அதுவரைக்கும் நான் எங்கயாச்சும் ஓட்டல்ல தங்கனும்’ என்று குரு சொல்ல ‘என்ன பிரதர் எங்க ரூம் இருக்கும்

போது எதுக்கு ஓட்டல் எல்லாம், வாங்க போகலாம்' என்று சுரேஷ் கூற 'வெயிட், தெரிஞ்சோ தெரியாமலோ ஃபர்ஸ்ட் டைம் எங்க ரூமுக்கு வந்திருக்கீங்க, அதுவும் ஒரு பெரிய பிரச்சனையை சால்வ் பண்ணி இருக்கீங்க, ஒரு கப் காப்பி கூட கொடுக்கலைன்னா மரியாதை இருக்காது, ஃபைவ் மினிட்ஸ், ப்ளீஸ்' என்று கார்த்திகா வற்புறுத்திக் கேட்டுக்கொண்டாள். குரு, மதன் மற்றும் சுரேஷ் மூவரும் சோபாவில் அமர்ந்தனர். கயல், கார்த்திகா, தீப்தி மூவரும் கிச்சனுக்குச் சென்றனர்.

கார்த்திகா பாலை அடுப்பில் வைத்துச் சூடேற்றிக் கொண்டிருந்தாள். 'ஏன்டி தீப்தி, உன் ஆளும் இன்னைக்குத் தான் ஃபர்ஸ்ட் டைம் இந்த ரூமுக்கு வரான், என் ஆளும் இன்னைக்குத்தான் ஃபர்ஸ்ட் டைம் இந்த ரூமுக்கு வரான், உனக்கும் எனக்கும் தோணுச்சா அவங்களுக்கு காப்பி கொடுக்கனும்னு, ஒருத்திக்கு மட்டும் அவளோட ஜஸ்ட் குட் ப்ரண்ட் டில் நவ் க்கு காப்பி கொடுக்கனும்னு தோனி இருக்கே, அதுக்குப் பேரு என்னடி' கயல் கார்த்திகாவைச் சீண்ட 'மண்ணாங்கட்டி, மூடிட்டு அந்த சன்ரைஸ் பாட்டில் எடுக்குறியா' கார்த்திகா வெட்கம் கலந்த கோபத்துடன் கயலிடம் கூறினாள். சில நிமிடங்கள் கழித்து எல்லோருக்கும் காப்பி பரிமாறப்பட்டது. மதன் காப்பி குடித்த வாறே தனியாக பால்கனிக்கு வந்தான். 'நெவர் எவர் டு தட் ஸ்டுப்பிட் திங் அகெய்ன்' கார்த்திகா காப்பி குடித்தவாறே மதன் அருகில் வந்து கூறினாள். 'எத சொல்றீங்க' மதன் கேட்க 'அவன்

கழுத்துல நீங்க கத்தி வெச்சது, கழுத்த வெட்டிட்டீங்கன்னே நெனச்சேன், ஹவ் டிட் யூ டூ தட்' கார்த்திகா கேட்க 'பயம்தான், கழுத்துக்குக் கத்தி வரும்போது சும்மா இருக்க முடியுமா, ஒன்னு பயந்து ஓடனும் இல்ல கத்தி வெச்சவன போடனும், நல்ல வேல அந்த டைம்ல மூள கொஞ்சம் வேல செஞ்சுக்கிட்டிருந்தது' மதன் கூற 'ஐ வாஸ் சோ ஸ்கேர்ட், கயல் அம்மா எல்லாரையும் வண்டிக்குப் போகச் சொன்னப்ப தான் உயிரே திரும்பி வந்துச்சு' கார்த்திகா கூற 'எனக்கும் அப்பத்தான் வெறி அடங்குச்சு' மதன் கூற 'எனிவே, தேங்க் யூ வெரி மச் காம்ரேட்' கார்த்திகா மதனுக்கு நன்றி தெரிவித்தாள். 'கமான்' மதன் கார்த்திகாவிடம் பரவாயில்லை என்று சொன்னான்.

'டேய், நீ கூட்டிட்டு வரியா, இல்ல நான் கூட்டிட்டுப் போகவா' சுரேஷ் மதனைப் பார்த்துக் கேட்க 'நீ ரூமுக்கு வரியா, வீட்டுக்குப் போகல?' மதன் சுரேஷைக் கேட்க 'இன்னைக்கு நைட்டு ரூம், கெஸ்ட் வரார்ல' சுரேஷ் சொல்ல 'உன் பைக்ல ஏத்திக்கோ நான் பின்னாடியே வர்றேன்' மதன் கூறினான். அப்போது கார்த்திகா 'தீப்தி ரொம்ப கொடுத்து வச்சவ' சுரேஷைப் பார்த்துச் சொல்ல 'எதுக்குங்க' என்று சுரேஷ் கேட்க 'அவசரம்னா ஹெல்ப்புக்கு ஆள் அனுப்ப ஒரு கேரிங் பாய் ப்ரண்ட் நீங்க அவளுக்குக் கிடைச்சு இருக்கீங்க' கார்த்திகா கூற 'நகைச்சுவை?' சுரேஷ் சந்தேகத்துடன் கேட்க 'நோ, சீரியஸ்லி, தேங்க்ஸ் பார் யுவர் டைம்லி ஹெல்ப்' கார்த்திகா மனதார நன்றி தெரிவிக்க 'நமக்குள்ள எதுக்கு தேங்ஸ் எல்லாம்' என்று

கார்த்திகாவிடம் சொல்லிவிட்டு ‘சீ யு நெக்ஸ்ட் டைம் கயல்’ என்று கயலிடம் சொல்லி விட்டு ‘ரூமுக்குப் போயிட்டு கால் பண்றேன், தூங்காத’ என்று தீப்தியிடம் சொல்லிவிட்டு சுரேஷ் பைக்கை நோக்கிச் சென்றான். ‘காலைல வந்து கூட்டிட்டுப் போறேன், ரெடியா இரு’ குரு கயலிடம் சொல்லிவிட்டு ‘பாய்’ என்று கார்த்திகாவையும் தீப்தியையும் பார்த்துச் சொல்லிவிட்டு குரு சுரேஷுடன் சென்றார். ‘எங்க வீட்ல நல்லா காப்பி போட்டு கொடுக்குற பொண்ணாத் தேடிக்கிட்டு இருக்காங்க’ மதன் கார்த்திகாவிடம் கூற ‘அப்ப ஒரு நல்ல காப்பி மெஷின கட்டிக்கோங்க’ கார்த்திகா சிறு புன்னகையுடன் கூற ‘இந்த காப்பியும் மெஷினும்’ மதன் கூற ‘என்னது?’ கார்த்திகா மிரட்டலாக கேட்க ‘இல்ல, நீங்களும் நல்லாத்தான் காப்பி போடுறீங்க அப்படின்னு சொன்னேன்’ மதன் கார்த்திகாவைப் பார்த்துக் கூற, ‘இந்த காப்பி மெஷின் உங்களுக்குப் புடிச்சா மட்டும் போதுமா, உங்க வீட்ல இருக்கிறவங்களுக்கும் பிடிக்கனுமே, உங்க வீட்டுக்கு இந்த மெஷின தூக்கிட்டுப் போங்க, இது போடுற காப்பி உங்க வீட்ல இருக்கிறவங்களுக்குப் புடிக்குதான்னு பார்ப்போம்’ கார்த்திகாவும் மதனை பார்த்தவாறே புன்னகையுடன் கூறினாள். ‘நான் கிளம்புறேன், பாய் சிஸ்டர்ஸ்’ என்று தீப்தியையும் கயலையும் பார்த்துக் கூறிவிட்டு விடைபெற்றான். மதனும் கார்த்திகாவும் பேசியதைப் பார்த்துக்கொண்டிருந்த கயல் கார்த்திகாவைப் பார்த்து முறைத்துக் கொண்டே ‘இதுக்குப் பேரு என்னடி?’ என்று கேட்க, கார்த்திகா சற்று

தாமதித்து ‘பிரண்ட்ஷிப்’ என்று வெட்கத்துடன் கூற ‘மவள’ என்று சொல்லிக்கொண்டே கயல் கார்த்திகாவைப் பிடித்து சோபாவில் தள்ளி விட்டுச் செல்லமாக அடிக்க ஆரம்பித்தாள். தீப்தி இருவரையும் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்தாள்.

**தொடரும்..**

# பதினாறும் பெற்று

அன்று திங்கட்கிழமை, மதியம் உணவு இடைவேளையில் சுரேஷ், தீப்தி, மதன், கார்த்திகா நால்வரும் ஒன்று கூடினர். ‘நேத்தி கயலும் குருவும் வீட்டுக்கு வந்திருந்தாங்க, அம்மாவ பாத்து இன்விடேஷன் கொடுத்தாங்க’ சுரேஷ் ஆரம்பிக்க ‘உங்க வீட்டுக்குமா, எங்க வீட்டுக்கும் போய் அம்மாவ பாத்து இன்விடேஷன் கொடுத்திருக்காங்க, அம்மா போன் பண்ணிச் சொன்னாங்க’ தீப்தி கூற ‘வர சண்டே மேரேஜ், நீ போறியா இல்ல நாங்க போகட்டுமான்னு எங்க வீட்லயும் கேட்டாங்க’ மதன் கூற ‘போன்ல சொன்ன மாதிரி மெட்ராஸ் வந்து மூனு பேர் வீட்லயும் நேர்ல பாத்துக் கொடுத்துட்டுத் தான் போயிருக்கா, எங்க வீட்டுக்கும் நேர்ல போய்க் கொடுத்திருக்கா, அப்ப யார் யார் கல்யாணத்துக்கு வரப்போறீங்க?’ கார்த்திகா கேட்க ‘அம்மா நோ சான்ஸ், சோ எங்க வீட்ல நான், அநேகமா, தீப்தி வீட்லயும் தீப்தியாத்தான் இருக்கனும், நானும் அவளும் ஒன்னா வந்துடுவோம், இல்ல தீப்தி’ சுரேஷ் தீப்தியைப் பார்த்து பரிதாபத்துடன் கேட்க ‘வழியாத, உன் கூடத்தான் வர்றேன்’ தீப்தி செல்லமான கோபத்துடன் கூற ‘அப்ப உங்க வீட்ல?’ கார்த்திகா மதனைப் பார்த்து கேட்க ‘வேற யாரு, நான்தான், உங்க வீட்ல?’ மதன் கார்த்திகாவைப் பார்த்துக் கேட்க ‘வெள்ளிக்கிழமை நைட்டே சென்னைல இருந்து கிளம்பறேன், சத்தியமங்கலம் போயிட்டு

அங்கிருந்து அப்பா அம்மா பிக்கப் பண்ணிட்டு நேராக கோபி வர்றேன்' கார்த்திகா கூற 'மச்சி நீயும் எங்க கூடவே வாடா, சாட்டர்டே மார்னிங் நாலு மணிக்குக் கிளம்பறோம், டுவல்வ்கெல்லாம் கோபிச்செட்டிபாளையம் ரீச் ஆயிடுவோமாம், கூகுள் சொல்லுச்சு' சுரேஷ் கூற 'எதுக்கு டிஸ்டர்பன்ஸ், என்ஜாய் யுவர் ஜர்னி' மதன் கூற 'போடாங், நீயாவது குரூப்பா ட்ராவல் பண்றதாவது, நீ ஒரு இத்துப்போன ஜென்மம்டா, சாமியாரே' சுரேஷ் மதனைத் திட்டிக் கொண்டிருக்க 'டைம் ஆச்சுடா, கேபினுக்குப் போகலாம் வா, ஸி யூ அகெய்ன் கார்த்திகா, பாக்கலாம் தீப்தி' என்று சொல்லிவிட்டு மதன் சுரேஷை இழுத்துக் கொண்டு சென்றான்.

சனிக்கிழமை காலை நான்கு மணி, சுரேஷ் அவனது வீட்டிலிருந்து பிஎம்டபிள்யூ எக்ஸ் த்ரீ எடுத்துக்கொண்டு தீப்தியின் ரூமிற்கு வந்தடைந்தான். 'உள்ள வாடா, பியூ மினிட்ஸ்' தீப்தி கூற 'மேக்கப்பெல்லாம் அங்க போய்ப் பாத்துக்க, இப்பவே ஏன்டி லேட் பண்ற' சுரேஷ் காரில் இருந்தவாறே கூறினான். சிறிது நேரம் கழித்து தீப்தி தன் லக்கேஜை காரின் பின்புறம் வைத்தாள். 'சீக்கிரம் உள்ள ஏறு' சுரேஷ் கூற 'இருடா, ஒருத்தர் வரணும்' தீப்தி சொல்லிக்கொண்டிருக்கும்போதே கார்த்திகா தன் லக்கேஜுடன் வந்து கொண்டிருந்தாள் 'நேத்தி நைட் ஊருக்குப் போகலையா?' சுரேஷ் ஆர்வத்துடன் கேட்க 'ஆப்பிஸ்ல ப்ரொடக்ஷன் டிப்லாய்மெண்ட், ரொம்ப லேட் ஆயிடுச்சு, ப்ரைடேன்றதனால ரீப்ளேஸ்மெண்ட் கூட

யாரும் இல்லை அதான் போக முடியல, உங்க கூட வரலாம்ல, தப்பா நினைச்சுக்க மாட்டீங்களே, உங்க கேர்ள் ப்ரண்ட் கூடப் போறீங்க, அதான் கேட்கவே கொஞ்சம் கூச்சமா இருக்கு' கார்த்திகா தயக்கத்துடன் கேட்க 'என்னங்க நீங்களும் அந்தச் சாமியார் மாதிரி கேட்குறீங்க, எனக்கு கார்ல பத்து பேராச்சும் இல்லைன்னா டிராவல் பண்ணவே பிடிக்காது, அந்த நாய்தான் வரல, நீங்களாச்சும் வரீங்களே, கெட் இன்' சுரேஷ் கூற தீப்தியும் கார்த்திகாவும் காரில் அமர்ந்தனர். 'வெயிட், எங்க இருக்கான்னு தெரியல, நைட்டே கிளம்பிட்டு இருப்பான், எதுக்கும் ஒரு முற கால் பண்ணிப் பாப்போம்' சுரேஷ் மதனைக் கைப்பேசியில் அழைத்தான்.

'எங்கடா இருக்க' சுரேஷ் கேட்க 'தூங்குறவன எழுப்பிக் கேட்குற கேள்வியாடா இது, ரூம்லதான்' மதன் மறுமுனையில் இருந்து பதில் அளிக்க 'பைவ் மினிட்ஸ் ரெடியா இரு, நான் வந்து பிக்கப் பண்ணிக்கிறேன்' சுரேஷ் கூற 'டேய் வென்று, நீங்க போங்க, நான் எதுக்குத் தேவையில்லாம, ஆல்ரெடி டிக்கெட் புக் பண்ணிட்டேன் டா, எட்டு மணிக்கு வண்டலூர்ல பிக்கப்' மதன் கூற 'அதைக் கிழிச்சுப் போட்டு ரெடியா இரு' சொல்லிவிட்டு சுரேஷ் கைப்பேசித் தொடர்பினைத் துண்டித்தான். சுரேஷ் தன் காரை அவனும் மதனும் தங்கியிருந்த ரூமிற்கு ஓட்டினான். சுரேஷ் காரில் கார்த்திகாவை காருக்குப் பின்புறம் இருக்கும் பொருட்கள் வைக்கும் இடத்தில் அவன் சொல்லும்வரை ஒளிந்திருக்கச் செய்தான். கார் ரூமை

வந்தடைந்தது. மதன் தன் டிராவல் பேகுடன் ரூமைப் பூட்டிவிட்டு கார் அருகில் வந்தான். ‘மச்சி எப்படா பிஎம்டபிள்யூ வாங்குன, சொல்லவேல்ல’ மதன் சுரேஷின் காரை வியப்புடன் பார்க்க ‘ரொம்ப முக்கியம் ஏர்றா உள்ள’ சுரேஷ் திட்ட மதன் காரின் பின் சீட்டில் உட்கார்ந்தான். கார் சோழிங்கநல்லூரில் இருந்து புறப்பட்டு கேளம்பாக்கம் வழியாக வண்டலூர் சென்றுகொண்டிருந்தது. காரில் தீப்தியும் சுரேஷும் இருந்தனர். கார்த்திகா காரின் பின்புறத்தில் மறைந்திருந்தாள். ‘எம்மா தீப்தி அவந்தான் லூசுத்தனமா என்ன கூப்புட்ரான்னா, நீ சும்மா இருக்கிறதா? கப்புல்ஸ் போகும்போது இன்னொருத்தர் இடைஞ்சலா இருக்க கூடாதும்மா’ மதன் தீப்தியைப் பார்த்துக் கூற ‘அந்த ஈர வெங்காயம் எல்லாம் எங்களுக்கும் தெரியும் மூடிட்டு வா’ சுரேஷ் மதனைக் கடித்துக்கொள்ள மதன் சுரேஷின் காதோரமாக ‘என்னடா மயிரு தெரியும், நீங்க ரெண்டு பேரும் ரொமான்ஸ் பண்ணிட்டு வருவீங்க, அதப் பாத்து நான் காண்டாகிறதுக்கா, நான் பாட்டுக்குச் சிவனேன்னு ஒழுங்கா பஸ்ல போயிருப்பேன், இப்பவும் ஒண்ணும் கெட்டுப் போகல என்ன மரியாதையா வண்டலூர்ல எறக்கி விட்டுடு’ மதன் சுரேஷின் காதில் சொன்னது தீப்திக்கும் கார்த்திகாவுக்கும் கேட்டது. கார்த்திகா மறைந்துகொண்டு மவுனமாகச் சிரித்துக்கொண்டிருந்தாள். ‘அண்ணா, நாங்க ரெண்டு பேரும் ஒண்ணா இருந்தா ரொமான்ஸ் விடச் சண்டை

தான் அதிகமா வரும்’ தீப்தி கூற மதன் பின் இருக்கையில் ஒரு வழியாக அமர்ந்தான்.

‘கார்த்திகா கால் பண்ணாங்களா? ஊருக்கு போயிட்டாங்களாமா?’ சுரேஷ் மதனிடம் கொக்கி போட. ‘அவங்க எதுக்கு எனக்கு கால் பண்ணப் போறாங்க, நான் என்ன அவங்களோட பாய்ப்ரண்டா?’ மதன் கூற ‘அடங்கப்பா, அப்ப கயல் அம்மாவோட ஆளுங்க கார்த்திகா ரூமுக்குப் போனப்ப நீ எதுக்குப் பதறிப்போய் அங்க ஓடுன, எதுக்கு அருவா எல்லாம் எடுத்த?’ சுரேஷ் கேட்க ‘சுத்தி வளச்சு எங்க வர்றேன்னு தெரியுது, மூடு, நீங்க ரெண்டு பேரும் என்ன வேணாலும் நெனச்சிக்கோங்க, நானும் கார்த்திகாவும், வி ஆர் குட் பிரண்ட்ஸ், ஓகே, மேபி, ஷி இஸ் ஒன் ஆப் மை பெஸ்ட் பிரண்ட்ஸ், உங்கள மாதிரி’ மதன் சமாளிக்க ‘கமான் அண்ணா, டோன்ட் பீ அப்ரைட், யூ ஹவ் டு ஓபன் அட் ஒன் பாயின்ட்’ தீப்தி கூற ‘நீ வேற, எனக்கு எங்க வீட்ல பொண்ணு பாத்துட்டு இருக்காங்க, அந்தப் பெண்ணுக்கு அவங்க வீட்ல மாப்ள பாத்துட்டு இருக்காங்க, ஏதோ ரீசனால ரெண்டு பேருக்கும் கல்யாணம் தள்ளிப் போகுது, சோ நாங்க ரெண்டு பேரும் ஆல்ரெடி இன் தட் அரேன்ஜ்டு மேரேஜ் சோன், என்னதான் எங்க ரெண்டு பேருக்கும் நடுவுல வேவ்லென்த் இருந்தாலும் இட்ஸ் டூ லேட், தேவ இல்லாம ஒரு பொண்ணோட வாழ்க்கையில விளையாடக்கூடாதும்மா’ மதன் சொல்லிக்கொண்டிருக்கையில் சுரேஷ் குறுக்கிட்டு ‘இப்டியே

பேசிக்கிட்டு இரு, எவன்னா வந்து கொத்திட்டு போகப்போறான், உன் ஏஜ் தான்டா நானும் ஏன் நான் லவ் பண்ணலையா?’ சுரேஷ் கேட்க ‘உங்க கதை வேறு’ மதன் கூற ‘என்னடா உங்க கத எங்க கத, எல்லாத்துக்கும் பேரு லவ் தான்டா, அதச் சொன்னா தான்டா அடுத்த ஸ்டேஜுக்குப் போக முடியும், அதெல்லாம் விட்ரா, மனசாட்சிய தொட்டுச் சொல்லு அந்தப் பொண்ண கட்டிக்க உனக்கு விருப்பம் இல்லைன்னு?’ சுரேஷ் கேட்க மதன் சிறிது நேரம் பேசவில்லை பிறகு ‘மகாலஷ்மிடா, அவங்க எந்த வீட்டுக்குப் போனாலும் அந்த வீட்டை நல்லாப் பாத்துப்பாங்க, எங்க வீட்டுக்கு வந்தா நான் கொடுத்து வெச்சவன்’ மதன் சொன்னவுடன் சுரேஷ் காரைச் சட்டென்று நிறுத்தினான். சுரேஷும் தீப்தியும் ஒருசேரப் பின்புறம் பார்க்கப் பின் சீட்டில் மதன் இவர்களைப் பார்க்க மதனுக்குப் பின்புறம் கார்த்திகா மதனைப் பார்த்துக்கொண்டிருந்தாள். சுரேஷும் தீப்தியும் ஒருவரை ஒருவர் பார்த்துவிட்டு மதனையும் அவன் பின்னால் இருக்கும் கார்த்திகாவையும் பார்த்தனர். பின்னால் கார்த்திகா இருப்பதைக் கவனிக்காத மதன் சுரேஷை பார்த்து ‘என்னடா?’ மதன் கேட்க சுரேஷ் சுதாரித்துக் கொண்டு ‘உணர்ச்சிவசப்படாத தீப்தி, இதுக்கு முன்னாடி எப்படி இருந்தியோ அப்படியே இரு, கேட்க வேண்டியது இன்னும் நிறைய இருக்கு, அவசரப்படாத’ என்று சுரேஷ் தீப்தியைச் சொல்வதுபோல் கார்த்திகாவுக்குக் கட்டளையிட்டு மறுபடியும் மறைந்திருக்கச் சொன்னான். ‘டேய் நாதார்ஸ், அதான் ஆச பட்றேல்ல,

போய் நேரா அவங்க கிட்ட சொல்லலாம்ல?' சுரேஷ் கேட்க 'லூசு மாதிரி பேசாதடா, அந்தப் பொண்ணோட மைன்ட்ல என்ன இருக்குன்னு யாருக்குடா தெரியும், அதுவரைக்கும் மூடிட்டு நான் என் வேலைய பாக்குறேன், நீங்க உங்க வேலைய பாருங்க' மதன் தெளிவுடன் கூறினான். 'உன்ன திருத்தவே முடியாதுடா, வண்டி நிறுத்துனது நல்லதாப் போச்சு, வா, டீ குடிக்கலாம்' சொல்லிவிட்டு சுரேஷ் காரை விட்டு இறங்கி டீக் கடைக்கு அருகில் சென்று கொண்டிருந்தான். 'கௌம்பி ஆஃப்பனவர் கூட ஆகல' மதனும் காரை விட்டு கீழே இறங்கி டீக் கடைக்கு அருகில் செல்ல சுரேஷ் 'மாப்ள நீ போயிட்டே இரு பர்ஸ் வண்டியிலேயே மறந்துட்டேன்' மதனிடம் சொல்லிவிட்டு மறுபடியும் காரின் அருகில் வந்தான். பின்னால் ஒளிந்திருந்த கார்த்திகாவிடம் 'சாரி கார்த்திகா, உங்கள கஷ்டப் படுத்திட்டேன், டோர் ஓப்பன் பண்ணாதீங்க, அப்படியே வந்து பேக் சீட் லெப்ட் சைடு உட்காருங்க, அவன் உங்களப் பாத்தா என்ன ரியாக்ஷன் வருதுன்னு பார்ப்போம், பைதவே, மச்சான் உங்கள பத்தி என்ன நெனச்சிட்டு இருக்கான்னு சொல்லிட்டான், இட் இஸ் அப் டு யூ நவ், ஐ ஹோப் யூ வில் டேக் குட் டிசிஷன்' என்று கார்த்திகாவிடம் சொல்ல, கார்த்திகா புன்னகைத்தாள். 'உங்களுக்கு டீ?' சுரேஷ் கார்த்திகாவைப் பார்த்து கேட்க 'இட்ஸ் ஓகே, எக்ஸ்ட்ரா டீ வாங்கினா கண்டுபிடிச்சுருவாரு, யூ கேரி ஆன்' கார்த்திகா கூறினாள். 'நீ ஏன் இன்னும் உள்ள இருக்க, எறங்கி வா' சுரேஷ் தீப்தியை காரை

விட்டு இறங்கி வரச் சொன்னான். தீப்தி, சுரேஷ், மதன் மூவரும் தேநீர் அருந்திவிட்டு காரில் அமர வந்தனர். தீப்தியும் சுரேஷும் முன் இருக்கைகளில் அமர்ந்தனர். காரின் இடது புறப் பின் இருக்கையில் கார்த்திகா அமர்ந்திருந்தாள்.

காரின் வலதுபுறக் கதவைத் திறந்த மதனுக்கு அதிர்ச்சி காத்திருந்தது. ‘வாட்?’ மதன் கார்த்திகாவைப் பார்த்ததும் மறுபடியும் கதவை மூடிவிட்டு, ‘என்னடா, உள்ள வாடா?’ சுரேஷ் கார் ஓட்டுநர் இருக்கையில் அமர்ந்த படி கேட்க ‘மச்சி, சின்னப்புள்ளத்தனமா இருந்தாலும் பரவாயில்லை, நான் உன்கிட்ட இப்ப ட்ரீம்லயா பேசிட்டு இருக்கேன்?’ மதன் கேட்க ‘உளராதடா, மூடிட்டு உள்ள வா, போகலாம்’ என்று சுரேஷ் சொல்ல ‘உள்ள கார்த்திகா உட்கார்ந்து இருக்காங்க’ மதன் சொல்லிக்கொண்டே காரில் அமர்ந்து கார்த்திகாவைப் பார்த்தபடி இருந்தான். கார்த்திகாவும் சிலை போல் அமர்ந்திருந்தாள். ‘ஏன்டா ஏதேதோ பேசுர?’ சுரேஷ் சொல்ல ‘மச்சி ஒரு வேல, நாம இன்செப்ஷன்ல இருக்குறோமோ, உன்கிட்ட பம்பரம் இருக்கு?’ மதன் சொன்னவுடன் கார்த்திகாவால் சிரிப்பை அடக்க முடியவில்லை, சிரித்துவிட்டாள், இதைப் பார்த்து தீப்தியும் சுரேஷும் சிரித்தனர். ‘எல்லாம் நீ போட்ட ப்ளானா?’ மதன் சுரேஷைக் கேட்க ‘இன்னும் கொஞ்ச நேரம் ஓட்டி இருக்கலாம், தப்பிச்சுட்டான்’ சுரேஷ் கூற ‘அவர் என்ன பர்ஸ்ட் டைம் பாத்தவுடனே என்ன நடக்குதுன்னு அவருக்குத் தெரிஞ்சிடுச்சி, ஹி ஜஸ்ட் பிளேய்டு அலாங், பம்பரம்னு

சொன்னவுடனே என்னால கண்ட்ரோல் பண்ண முடியல’ கார்த்திகா கூற ‘நேத்தி நீங்க ஊருக்குப் போகலையா? எங்க இருந்தீங்க இவ்வளவு நேரம்?’ மதன் கேட்க ‘ப்ரொடக்ஷன் டிப்லாய்மெண்ட், லேட்டாயிடுச்சு, போகமுடியல, உங்க பின்னாடித்தான் மறஞ்சிருந்தேன்’ கார்த்திகா கூற ‘அப்ப நான் பேசுனதெல்லாம்’ மதன் சற்று தயக்கத்துடன் கேட்க ‘ஹன்றட் பர்சன்ட் கரெக்ட், எங்க அப்பா அம்மா சொல்றவன தான் கல்யாணம் பண்ணிக்குவேன், ஆஸ் யூ செட், வி ஆர் இன் தட் அரேன்ஜ்டு மேரேஜ் சோன்’ கார்த்திகா தெளிவாகச் சொன்னாள். ‘அப்ப ரெண்டு பேரும் ஒரு முடிவோடத்தான் இருக்கீங்க, வீட்ல சொல்றவங்கலத்தான் கல்யாணம் செஞ்சிப்பீங்க?’ சுரேஷ் கார்த்திகாவும் மதனையும் பார்த்துக் கேட்க இருவரும் ஆமாம் என்று தலை ஆட்டினர். சுரேஷ் இருவரையும் பார்த்துவிட்டு ‘நாசமாப் போங்க, வாழ்த்துக்கள்’ என்று சொல்லிவிட்டு காரை நகர்த்தினான்.

‘ஆனா மதன் என்ன மகாலஷ்மி அப்படி இப்படின்னு சொன்னதெல்லாம் கொஞ்சம் ஓவர் தான், உங்க அளவுக்கு நான் வொர்த் இல்ல மிஸ்டர் மதன், நீங்கள்ளாம் வேற லெவல், உங்க வருங்கால வைஃப் கொடுத்து வெச்சவங்க, ப்ரண்ஸ்காக உயிரையே கொடுக்குறவரு, வைஃப்னா கேட்கனுமா, கண்ணுக்குள்ள வச்சுப் பாத்துப்பாரு’ கார்த்திகா மதனைக் கிண்டலடிக்க ‘அம்மா தாயே, போதும் இதோட நிறுத்திக்குவோம்’ மதன் கார்த்திகாவிடம் கெஞ்சிக்

கேட்டுக் கொண்டான். ‘என்னைக்காவது என்ன பத்தி நல்லவிதமாச் சொல்லி இருக்கியாடி, கார்த்திகாவைப் பாத்துக் கத்துக்கோடி’ சுரேஷ் தீப்தியைப் பார்த்துக் கூற ‘என்னைக்காவது என்ன மகாலஷ்மின்னு சொல்லி இருக்கியாடா, மதன் அண்ணாவப் பாத்து கத்துக்கோடா’ என்று தீப்தி பதிலடி கொடுத்தாள். கார் மேல்மருவத்தூர் தாண்டிச் சென்றுகொண்டிருக்க தீப்திக்குத் தூக்கம் வந்தது. ‘டேய் நான் பின்னாடி போறேன்டா, தூக்கம் வருது’ தீப்தி சுரேஷிடம் கூற ‘டீ குடிச்சுக் கூடவாடி தூக்கம் வருது? உன்ன கட்டிக்கிட்டு நான் தாண்டி விடிய காலையில எழுந்து மொரவாசல் செய்யனும் போல இருக்கு’ சுரேஷ் கூற ‘அப்படியே பெட் காப்பி கூடப் போட்டுக் கொடுக்கணும், வண்டிய நிறுத்துடா. நான் இறங்கிப் பின்னாடி போறேன், அண்ணாவ முன்னாடி வரச்சொல்லு’ என்று பாதித் தூக்கத்தில் தீப்தி சொன்னாள். அதன்படி மதனும் தீப்தியும் இடம் மாறினர். பின்னால் போன தீப்தி நன்றாக அசந்து தூங்கி விட்டாள். அவள் தூங்குவதைப் பார்த்து கார்த்திகாவும் தூங்கிவிட்டாள். நேரம் காலை 9 மணி, கார் தற்போது சேலம் புறவழிச்சாலையில் சென்றுகொண்டிருந்தது. ‘பசிக்குதுடா, பிரேக் எடுப்போமா?’ சுரேஷ் மதனைப் பார்த்துக் கேட்க ‘இன்னும் எவ்வளவு தூரம், ஒன் ஆர்க்குள்ளன்னா ஸ்டிரெய்ட்டாப் போயிடலாம்’ மதன் கூற ‘கூகுள் மேப்ஸ் சொல்றபடிப் பார்த்தா அனதர் ஒன் அண்ட் ஆப் ஆர், எனக்குத் தாங்காது நீ வேணும்னா

விரதம் இருந்துக்கோ’ சுரேஷ் சொல்லிட்டு அடுத்து வந்த ஒரு ரெஸ்டாரண்டில் காரை நிறுத்தினான்.

‘எங்கடா இருக்கோம்’ தீப்தி கார் நின்றவுடன் எழுந்துகொண்டாள். ‘சேலம் பைபாஸ், பேஸ் வாஷ் பண்ணிட்டு வா, சாப்பிடலாம், கார்த்திகாவையும் எழுப்பிக் கூட்டிட்டு வா, நாங்க உள்ள போறோம்’ சுரேஷ் தீப்தியிடம் சொல்லிவிட்டு மதனுடன் ரெஸ்டாரண்ட் உள்ளே சென்றான். தீப்தியும் கார்த்திகாவும் முகத்தைக் கழுவிக் கொண்டு சுரேஷும் மதனும் அமர்ந்திருந்த டேபிளில் வந்து அமர்ந்தனர். ‘என்னடா சொல்லியிருக்க’ தீப்தி கேட்க ‘எங்க ரெண்டு பேருக்கும் ஐஞ்சு ஐஞ்சு இட்லி, உங்களுக்கு வேணுன்றத ஆடர் பண்ணிக்கோங்க’ சுரேஷ் கூற ‘எனக்கும் மூணு இட்லி’ என்று கார்த்திகா கூற ‘அப்ப எனக்கு ரெண்டு ஆனியன் ஊத்தப்பம்’ என்று தீப்தி கூறினாள். எல்லோரும் சாப்பிட்டு விட்டு காருக்கு வந்தனர். ‘மச்சி இன்னும் கொஞ்ச தூரம்தான், நீ ஓட்றா, டயர்டா இருக்கு’ சுரேஷ் மதனிடம் வண்டி சாவியைக் கொடுத்தான். ‘டேய், நான், இந்த மாதிரி வண்டி ஓட்டிப் பழக்கம் இல்லடா, எக்பென்சிவ் வண்டி, ஏதாவது’ மதன் தயங்க ‘மூடிட்டு ஒட்றா, என்ன ஆனாலும் நான் பாத்துக்கறேன்’ சுரேஷ் தெம்பைக் கொடுத்தான். சுரேஷும் தீப்தியும் பின் இருக்கையில் அமர கார்த்திகா முன் இருக்கையில் இடதுபுறம் அமர மதன் ஓட்டுநர் இருக்கையில் அமர்ந்தான். காரை இயக்கிய மதன் சற்றுக் கடினமாக ஆக்ஸிலரேட்டரை அழுத்த காரின் முன்பக்கம்

சற்று எழும்பி நின்றது. உள்ளே இருந்த மற்ற மூவருக்கும் வாரிப்போட்டது. அதைச் சற்றும் பொருட்படுத்தாமல் மதன் 'ஓவ், ஓவ், என் செல்லக்குட்டியில்ல, முரண்டு பிடிக்காம ஒழுங்காப் போகணும் சரியா' என்று காருடன் பேசிக்கொண்டிருந்தான். 'டேய் என்னடா பண்ற, ஒரு செகண்ட் வாரி போட்டுச்சு, நான் வேணும்னா தீப்திய ஓட்டச் சொல்லட்டுமா?' சுரேஷ் பதற்றத்துடன் கேட்க 'இப்பத் தான் ஃபர்ஸ்ட் டைம் பிடிக்கிறேன், அதான் மொரண்டு பிடிக்குது' மதன் கூறினான். முதல் நகர்வில் கார் கட்டுப்பாடுகளின் தன்மை என்னவென்று மதன் புரிந்துகொண்டான். அடுத்த நகர்வில் கார் மதனின் எண்ணத்திற்கேற்ப அழகாக நகர்ந்தது. 'இப்ப என்னடா சொல்ற' மதன் சுரேஷைப் பார்த்துக் கேட்க 'ஒத்துக்குறேன், நீ டிராக்டர் ஓட்டுறவன்னு' சுரேஷ் கிண்டலடித்தான். 'வண்டி செம்மையா இருக்கு, பாட்டு பாடுமா' மதன் கேட்க 'ப்ளூடூத் வழியாப் பாட்ட கொடுத்துப் பாடச் சொன்னாப் பாடும்' சுரேஷ் கூற மதன் தன் மொபைலை காரின் சவுண்ட் சிஸ்டத்தில் இணைத்தான். அதுவரை மதன் ஹர்மன் கார்டன் என்ற பெயரைக் கேள்விப்பட்டதில்லை ஆனால் பாம்பே படத்தில் வரும் அந்த அரபிக் கடலோரம் பாடலை ப்ளே செய்தவுடன் முதலில் வந்த பாஸ் இசை ஹர்மன் கார்டன் என்றால் என்ன என்று புரியவைத்தது. காரில் இருந்த அனைவரையும் மெய்சிலிர்க்க வைத்தது. 'டேம், ஐம் அவுட் ஆப் திஸ் வேர்ல்ட்' மதன் பாடலை இரசித்தபடி காரை ஓட்டினான். 'பாஸ் பூஸ்டட்?' கார்த்திகா

மதனைப் பார்த்துக் கேட்க ‘எஸ்’ என்று மதன் சொல்லி முடிக்க அந்த அரபிக் கடலோரம் என்ற பாடலின் வரி தொடங்கியது. காரில் இருந்த நால்வரும் அந்தப் பாடல் வரிகளைக் கூடவே சேர்ந்து பாட ஆரம்பித்தனர். சுரேஷ் பின் இருக்கையில் அமர்ந்தவாறு தன் ஆள்காட்டி விரலை டேஷ்போர்டின் அருகில் வைத்து வட்டமாகச் சுற்ற காரின் ஆடியோ சிஸ்டம் அவன் விரல் அசைவை சென்சார் மூலம் உணர்ந்து தானாகச் சத்தத்தை அதிகரித்தது. ‘எவன்னா கத்தப்போராண்டா, வால்யும் கம்மி பண்ணிக்கலாம்டா’ மதன் கூற ‘இந்தப் பாட்டெல்லாம் வால்யும் கம்மியா வச்சு கேட்கக் கூடாதுடா, தெய்வக் குத்தம் ஆயிடும்’ என்று சொல்லிவிட்டு மறுபடியும் பாடலைப் பாடியபடி இருந்தான். பாடல் முடிவடையும் தருவாயில் ‘அடுத்து என்னோட சாங்’ என்று தீப்தி முன்பதிவு செய்தாள். பாடல் முடிந்ததும் தீப்தி தன் மொபைலை கனெக்ட் செய்து ஸ்வதேஸ் படத்தில் வரும் யூன் ஹி சலா சல் ராஹி பாடலை இசைக்கச் செய்ய சில நொடிகளில் மதன் என்ன பாடல் என்பதை உணர்ந்து ‘சிஸ்டர், பர்பெக்ட், தேங்க்ஸ் பார் தி சாங்’ என்று சொன்னவாரே காரின் வேகத்தைக் கூட்டினான். பாடலில் ரும்தும்தானன கோரஸ் வந்தவுடன் சுரேஷும் மதனுடன் சேர்ந்து பாட ஆரம்பித்தான். இருவரும் அந்தப் பாடலில் வரும் இரு நடிகர்களைப் போல் பாடிக்கொண்டு வந்தனர். ‘வாச் ஆவுட், திஸ் இஸ் ஒன் ஆப் த பெஸ்ட் ரிப், ஏஆர்ஆர் இஸ் கிரேசி ஹியர்’ என்று மதன் பாடலின் நான்காவது

நிமிடத்தில் வரும் இசையைக் குறிப்பிட்டான். அந்த இசை ஆரம்பிக்க அனைவரும் கேட்டு மகிழ்ந்தனர். பாடல் முடிய ‘இப்ப என்னோட டர்ன்’ என்று கார்த்திகா தன் மொபைலை காருடன் இணைத்து மே மாதம் படத்தில் வரும் மார்கழிப் பூவே பாடலை இசைக்கச் செய்தாள். பாடல் ஆரம்பித்ததும் வந்த பாஸ் இசை காரில் இருந்த சப்ஊஃபர்களை உலுக்கியது. ‘காட் டேமிட், வேற லெவல்’ சுரேஷ் ரசித்துக் கூற ‘பாஸ் பூஸ்டட்?’ மதன் கார்த்திகாவைப் பார்த்து கேட்க ‘அப்கோர்ஸ் எஸ்’ என்று கார்த்திகா சொல்ல மார்கழிப்பூவே என்ற பாடலின் வரிகள் ஆரம்பித்தன. கார்த்திகாவும் தீப்தியும் ஒன்றாகப் பாட ஆரம்பித்தனர். ‘என்னடி இப்படி பாட்ற, ஐ கான்ட் பிலீவ்’ என்று சுரேஷ் தீப்தியைப் பார்த்துக் கூற ‘நீ கூடத்தான் கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி செம்மையாப் பாடுன’ என்று தீப்தி சொல்ல ‘கூட இருக்குறவன் கிட்ட இருந்து தொத்திக்கிச்சு’ சுரேஷ் கூற ‘எனக்கும் அப்படித்தான்’ என்று தீப்தி கூறிவிட்டு தொடர்ந்து கார்த்திகாவுடன் சேர்ந்து பாடினாள். பாடல் முடியும் தருவாயில் ‘இந்த முறை என்னோட சாய்ஸ், யாராவது கனெக்ட் பண்ணீங்க, கொன்றுவேன், இந்தப் பாட்ட நீங்க ரெண்டு பேரும் பாடக்கூடாது, நானும் தீப்தியும்தான் பாடுவோம்’ என்று சுரேஷ் மதனையும் கார்த்திகாவையும் செல்லமாக மிரட்டினான். ஓடிக்கொண்டிருக்கும் பாடல் முடிந்தவுடன் சுரேஷ் தன் மொபைலை காருடன் இணைத்து மான் கராத்தே படத்தில் வரும் உன் விழிகளில் பாடலை இசைக்கச்

செய்துவிட்டு பாடலில் வரும் கதாநாயகன் போல் தீப்தியைப் பார்த்து உருக ஆரம்பித்தான். கார்த்திகா சுரேஷ் செய்யும் சேட்டையையும் தீப்தி அதற்குக் காட்டும் வெட்கத்தையும் கண்டு இரசித்துக்கொண்டிருந்தாள். கார்த்திகா பின்னால் பார்த்துக் கொண்டிருப்பதைப் பார்த்த மதன் காரை மெதுவாக ஓட்டிக்கொண்டே பின்னால் சுரேஷும் தீப்தியும் செய்யும் ரொமான்ஸை இரசிக்க ஆரம்பித்தான். ஒவ்வொரு முறையும் நீ தினம் சிரிச்சாப் போதுமே வரிகள் வரும்போது சுரேஷ் தன் இரு கைகளை விரித்து தீப்தியைப் பார்த்து பாடியபோது தீப்தி வெட்கத்துடன் புன்னகைத்தது இருவருக்கும் இடையில் இருந்த காதலைக் கார்த்திகாவிற்கும் மதனுக்கும் அழகாய் எடுத்துக்காட்டியது. கார்த்திகா பின்னால் நடப்பதைப் பார்த்துக் கொண்டே அடிக்கடி மதனை ஓரக்கண்ணால் பார்த்து வெட்கத்துடன் சிரிக்க மதனும் கார்த்திகாவைப் பார்த்தபடி அவள் புன்னகையை இரசித்தான். ஒரு வழியாகப் பாடல் முடிவுக்கு வந்தது. ‘நான் அப்பவே சொல்லல, நம்மளமாதிரி சிங்கிள்ஸ்ஸ வெறுப்பேத்துவாங்கன்னு’ மதன் கார்த்திகாவைப் பார்த்துச் சொல்ல ‘யார் நீங்க, ரெண்டு பேரும், சிங்கிள்ஸ்?’ சுரேஷ் கார்த்திகாவையும் மதனையும் பார்த்து கேட்க ஆமாம் என்று இருவரும் ஒருசேர அப்பாவித்தனமாகத் தலையாட்டினர். அதற்கு சுரேஷ் ‘நாங்க பண்ணதவிட, நீங்க பண்றது தான்டா ஓவரா இருந்துச்சு, அதெப்புர்ரா கண்ணாலேயே பேசிக்கறீங்க?’ என்று சொன்னவுடன் கார்த்திகாவும்

மதனும் முகத்தை காரின் முன்புறம் திருப்பிக்கொண்டனர். மதன் வேறு எதுவும் பேசாமல் காரை நகர்த்தினான். காரில் ஒருவருக்கொருவர் மாறிக்கொண்டே பாடல்களை தங்கள் மொபைலில் இருந்து இசைத்தவாறு கோபிச்செட்டிப்பாளையத்தில் உள்ள கயலின் வீட்டிற்கு வந்தடைந்தனர்.

மதன் கயல் வீட்டின் முன் காரை நிறுத்தினான். கார்த்திகா முதலில் இறங்கி கயல் வீட்டை நோக்கி நடந்தாள். கார்த்திகா வருவதைப் பார்த்ததும் கயல் ஓடிவந்தாள். 'இப்பத்தான் வழி தெரிஞ்சுதா' கயல் கார்த்திகாவைக் கேட்க 'நான் கரெக்டா மதியம் தான் வருவேன்னு சொன்னேன், வந்துட்டேன், என்ன, அப்பா அம்மா கூட வர்றேன்னு சொன்னேன், இப்போ' கார்த்திகா கார் இருக்கும் இடத்தைப் பார்க்க 'இப்போ?' கயல் கார்த்திகாவைக் கேட்டவாறே காரைப் பார்க்க மதன் காரிலிருந்து இறங்கி வந்து கொண்டிருந்தான். மதனைப் பார்த்துவிட்டு கயல் கார்த்திகாவைப் பார்க்க 'பெஸ்ட் ப்ரண்ட்ஸோட வந்திருக்கேன்' சிரித்துக்கொண்டே கார்த்திகா சமாளித்தாள். 'யோவ் மொக்க, இப்பத்தான் வர்றதா?' குரு மதனைப் பார்த்ததும் அவன் அருகே வந்து கேட்க 'ஒரே நைட்ல யோவ் வரைக்கும் வந்துட்டீங்களா?' கயல் குருவைப் பார்த்துக் கேட்க 'பின்ன, அன்னிக்கு நைட் இவர்தான் எங்களுக்கு ஊறுகா' குரு கயலிடம் கூறிவிட்டு 'எங்க நம்ம பாட்னர்' குரு சுரேஷைப் பற்றி மதனிடம் கேட்க 'பின்னாடி இருக்கான்' மதன் குருவிடம் சொல்ல குரு காரின்

அருகில் சென்று பின் கதவைத் திறந்தார். ‘யோவ் முதலாளி, இறங்கி வாய்யா’ குரு சுரேஷை அழைத்தான். சுரேஷும் தீப்தியும் காரை விட்டு இறங்கினர். ‘மில்டிரி, இவங்க ரெண்டு பேர் கூட சேராத, மில்டிரி வீட்டுக்காரம்மா உங்களுக்குத் தான் சொல்றேன் அவங்க கூட சேராதீங்க’ சுரேஷ் மதன், கார்த்திகாவைப் பற்றிக் குருவிடமும் கயலிடமும் கூற ‘என்ன பண்ணாங்க?’ குரு கேட்க ‘பண்றதெல்லாம் பண்ணிட்டு கடைசியில நாங்க சிங்கள்ஸ்தான்றாங்கயா, இத்தன வருஷமா நானும் தீப்தியும் லவ் பண்றோம், எங்களையே ஓவர்டேக் பண்ணப் பாக்குறாங்க’ சுரேஷ் குருவிடம் முறையிட்டான். ‘ஆமாமா, ஒரே ஏஆர்ஆர் சாங்ஸ் தான், அதுவும் மேல் வாய்ஸ் வரும்போது அண்ணா அக்காவைப் பாக்குறதும், ஃபீமேல் வாய்ஸ் வரும்போது அக்கா அண்ணாவப் பாக்குறதும், ரொமான்ஸ் வேற லெவல்’ தீப்தி தன் பங்கிற்குக் கயலிடம் போட்டுக்கொடுக்க ‘அடிப்பாவி, பாட்ட போட்டுட்டு நீங்கதானடி பின்னாடி ரியாக்ஷன் பண்ணிட்டு வந்தீங்க, அவ ஏற்கனவே ஓட்றதுக்கு ரீசன் தேடிக்கிட்டிருக்கா, நல்லா எடுத்துக்கொடுக்குறம்மா, தேங்ஸ்’ கார்த்திகா தீப்தியிடம் கூறினாள். ‘நீங்க கண்டிப்பாச் செஞ்சிருப்பீங்கடி’ கயல் பேசிக்கொண்டிருக்கும்போதே கயலின் அம்மா, குருவின் அப்பா மற்றும் முக்கிய சொந்தங்கள் வீட்டில் இருந்து வெளியே வந்து கொண்டிருந்தனர்.

‘அந்தத் தம்பிதான் வீச்சருவாள பிடிச்சது’ கயலின் அம்மா மதனைத் தன் அண்ணனான குருவின் அப்பாவிற்கு அடையாளம் காட்டினார். குருவின் அப்பா மதனை நோக்கி கம்பீரமாக நடந்து வந்தார். குரு அப்பாவிற்குப் பக்கத்தில் நடந்து வந்து கொண்டிருந்த கயல் அம்மாவின் சீனியர் அடியாள் ‘நீங்க பார்த்து இருக்கணுமே, ரெண்டே அடிதான், ஊல வாயனுக்குக் காதுல மூக்குல வாயில பிச்சிக்கிட்டு வருது, பாத்தா ஊல வாயன்கிட்ட இருந்த அருவா இந்தத் தம்பி கிட்ட இருக்கு, வீசுன வேகத்துக்கு ஒன்னு போச்சுன்னே நெனச்சேன். தம்பி கண்ட்ரோலாத்தான் இருந்துச்சு’ என்று மதனுக்கு சர்டிபிகேட் கொடுத்தார். ‘பாத்தா அப்படி தெரியலையே’ குரு அப்பா அந்த அடியாளிடம் சொல்லிக்கொண்டே மதனுக்கு அருகில் வர, ‘அப்டி நெனச்சுத்தான் அந்த ஊல வாயன் ஏமாந்தான், தம்பி பயங்கர பாஸ்ட்டு’ அந்த அடியாள் மறுபடியும் மதனைப் பற்றிக் கூறினார். மதனுக்கு எதிரில் வந்து நின்ற குருவின் அப்பா மதனை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தார். ‘வருஷக்கணக்கா நான் போராடிப்பாத்தும் என் தங்கச்சியை என்னால ஒத்துக்க வைக்க முடியல, நீ எப்படி தம்பி ஒத்துக்க வெச்ச?’ குரு அன்று கேட்ட அதே கேள்வியைக் குருவின் அப்பாவும் கேட்க ‘உங்க தங்கச்சி தான் அதுக்கு பதில் சொல்லனும்’ என்று மதன் கூற ‘அப்ப விட்டிருந்தா நிறையபேர் மேல போயிருப்பாங்க, என்னையே தம்பி முடித்திருந்தாலும் முடிச்சிருக்கும், அவசரப்பட்டு நான் பண்ண முட்டாள்தனத்தைத்

தம்பி தான் அந்த ஊல பயல அடிச்சி புரியவச்சது, அதுமட்டும் இல்லாம, குரு உள்ள வந்தவுடனே கயல் அவன கட்டிப்புடிச்சி அழுதாப் பாருங்க, என் புருஷன் லீவுக்கு ஊருக்கு வந்தவுடன் நான் கட்டிப் புடிச்சு அழுவுற மாதிரி இருந்துச்சு, நம்ம சாமிய நெனச்சுக்கிட்டு வாயில என்ன வார்த்த வருதோ வரட்டும்னு விட்டேன், அது நல்ல வார்த்தையா வந்தது' கயலின் அம்மா விளக்கிச் சொன்னார். கயலின் அம்மாவைப் பார்த்ததும் மதன் வணங்கினான். 'என்னய்யா கல்யாணத்துக்கு வர, தாடி எடுக்க மாட்டியா?' என்று கயலின் அம்மா கேட்க 'அது வேண்டுதல் தாடி, அவருக்கு கல்யாணம் நிச்சயம் ஆச்சுன்னா எடுத்துடுவாராம்' கார்த்திகா கிண்டலாக மதனைப்பற்றிக் கயல் அம்மாவிடம் கூற 'அப்படியெல்லாம் ஒன்னும் இல்லங்க, சும்மா இருக்கட்டுமேன்னு விட்டுட்டேன்' மதன் சமாளித்தான். 'ஏன்டி கார்த்தி இப்பத்தான் வர்றதா' கயல் அம்மா கார்த்திகாவைக் கேட்க 'ஆப்பிஸ்ல வேல முடியலம்மா, அதான்' என்று கார்த்திகா சமாளித்தாள். 'இவதான உங்க ரூமுக்குப் புதுசா வந்தவ, பேரு கூட ஏதோ சொன்னாளே, மறந்து போச்சு, என்ன உன் பேரு?' கயல் அம்மாவின் பார்வை தீப்தி பக்கம் திரும்பியது. 'தீப்தி' என்று தீப்தி தன் பெயரைச் சொல்ல 'நீ போன் போட்ட பைய எங்க?' கயல் அம்மா கேட்க தீப்தி சுரேஷைக் காண்பித்தாள். 'வணக்கம்மா' சுரேஷ் கயல் அம்மாவைப் பார்த்ததும் வணங்கினான். 'கயல் உங்க கதைய சொன்னா, சீக்கிரம் கல்யாண

பத்திரிக்கை அனுப்புங்க' கயல் அம்மா சுரேஷைக் கேட்டுக்கொள்ள சுரேஷும் சரி என்பது போல் தலை ஆட்டினான். 'ஏண்டி கார்த்தி கல்யாணத்துக்கு வர்றீங்க சேல கட்டி வர்ரதில்ல, எடுத்து வந்திருக்கியா? நீயும் தான்டி தீப்தி, சேல இருக்கா?' கயல் அம்மா கார்த்திகாவிடமும் தீப்தியிடமும் கேட்க 'கல்யாணம் ஆன பொண்ணுங்க தான கட்டிக்கணும்னு கொண்டு வரல' என்று கார்த்திகா கூற 'எனக்கு சாரி கட்டிக்க தெரியாது ஆண்டி' என்று தீப்தி கூற 'என்ன பொண்ணுங்களோ இந்தக் காலத்துப் பொண்ணுங்க' என்று கயல் அம்மா சொல்லிக்கொண்டே 'டேய் இங்க வா' என்று ஒருவரை அழைத்தார். 'முக்கியமான விருந்தாளிங்க, நம்ம ஜவுளிக் கடைக்குக் கூட்டிட்டுப் போய் இந்த ரெண்டு பொண்ணுங்களுக்கும் நல்ல பட்டுப்புடவை, பிளவுஸ் எல்லாம் அப்பவே அளவு எடுத்து தச்சிக் கொடுத்திடனும், அப்புறம் அந்தப் பசங்க ரெண்டு பேருக்கும் நல்ல பட்டு வேட்டி சட்ட, நல்லா இருக்கனும், கூட்டிட்டுப் போ, அப்படியே அவங்களுக்கு நம்ம ஓட்டல்ல ரூம் கொடுத்துடு' என்று கட்டளையிட்டார். 'அடியே கார்த்தி, போயிட்டு ப்ரஷ்ஷாயிட்டு ஆறு மணிக்கெல்லாம் இங்க வந்துருங்க, ஆறு ஏழரை நிச்சயதார்த்தம், அது முடிஞ்சு நேரா மண்டபத்துல ரிஷப்ஷன், காலைல நம்ம கோயில்ல கல்யாணம், சரியா?' என்று கயல் அம்மா கேட்க 'சரிம்மா' என்று கார்த்திகா கூறினாள். கார்த்திகாவும் தீப்தியும் கயல் அம்மாவிடம் விடை பெற்று கயல், குரு, மதன் மற்றும் சுரேஷ் பேசிக்கொண்டிருந்த

இடத்திற்கு வந்தனர். ‘பட்டுப்புடவ கட்டிக்கனுமாம்டா’ தீப்தி சுரேஷிடம் கூற ‘அதுலயாவது அழகா இருக்கியான்னு பாப்போம்’ என்று சுரேஷ் கிண்டலடிக்க ‘அப்ப நான் அழகா இல்லையா?’ தீப்தி பத்ரகாளியாக மாறுவதை உணர்ந்த சுரேஷ் அந்த இடத்தை விட்டு நகர்ந்து கொண்டே ‘இல்லடி, சும்மா, ஜோக், அங்கேயே இரு, கிட்ட வராத, எதுவா இருந்தாலும் பேசித் தீர்த்துக்கலாம்’ என்று சொன்னபடியே ஓட்டம் பிடிக்க தீப்தியும் அவனைத் துரத்திக்கொண்டே சென்றாள்.

நால்வரும் கயல் குடும்பத்திற்கு சொந்தமான பிரம்மாண்டமான ஜவுளிக் கடைக்கு வந்தனர். ‘அப்ப நீங்க சேரி எடுத்துட்டு இருங்க, நாங்க மேல போயிட்டு வேஷ்டி ஷர்ட் எடுத்துட்டு வந்துடறோம்’ என்று மதன் கூற ‘ஓகே’ என்று கார்த்திகா ஒப்புக்கொண்டாள். கார்த்திகாவும் தீப்தியும் பட்டுப்புடவை இருக்கும் இடத்திற்குச் சென்றனர். மதனும் சுரேஷும் மாடியில் இருந்த வேட்டி சட்டை இருக்கும் இடத்திற்குச் சென்றனர். குறுகிய காலத்தில் மதனும் சுரேஷும் அழகான பட்டு வேட்டி சட்டையுடன் கீழே வந்துவிட்டனர். ஆனால் கார்த்திகாவும் தீப்தியும் எடுத்து முடித்த பாடில்லை. ‘இன்னுமா எடுக்கறீங்க, எப்படியும் இன்னைக்கு மட்டும் தான் இந்த சாரிய கட்டப்போறீங்க, மத்த நேரம்லாம் ஷெல்ப்ல தூங்க போகுது, இதுக்கு இவ்வளவு நேரமா’ மதன் கூற ‘டிபிக்கல் மென்ஸ் மைன்ட்’ கார்த்திகா மதனைப் பார்த்து முறைத்துக் கொண்டே கூற ‘அப்ப நீங்க

வெயிட் பண்ண வைக்கிறதுக்கு பேரு என்னவாம்?' மதன் எதிர்க் கேள்வி கேட்க 'சண்ட போட்டுக்காதிங்கடா, சட்டு புட்டுன்னு போய் ஒன்னு செலக்ட் பண்ணுங்க, நான் போய் தீப்திக்கு ஒன்னு செலக்ட் பண்ணிக் கொடுக்கிறேன்' என்று சுரேஷ் கூறிவிட்டு தீப்தியிடம் சென்றான். 'கஷ்டபப்பட்றேன்ல, சஜஷன் கொடுக்கலாம்ல' கார்த்திகா மதனைப் பார்த்துக் கூற 'இதுவேறயா, எனக்குத் தெரிஞ்சது ரெண்டு கலர் தான், அந்த கலர்ல பட்டுப்புடவைங்க வர்றதில்லைன்னு நினைக்கிறேன்' மதன் தயக்கத்துடன் உதவ ஆரம்பித்தான். கார்த்திகா பார்த்துப் பார்த்து எடுத்து வைத்திருந்த கோல்ட் கலர் பட்டுப்புடவையை மதனிடம் காட்டினாள். 'அக்ஷுவலி, பட்டுப்புடவைங்கள்ளையே கோல்டு கலர் புடவைங்கத்தான் பெஸ்டுன்னு சொல்லுவாங்க, ஆனா, இன்னைக்கு அது உங்களுக்கு வேணாம், ரொம்பப் பிடிச்சிருந்தா எடுத்து வச்சுக்கோங்க, பட் போட்டுக்கிட்டு ரிஷப்ஷன் போகாதீங்க' மதன் தன் கருத்தைக் கூறினான். 'ஏன், இத போட்டுட்டுப் போனா என்ன, பெஸ்டுன்னு நீங்களே சொல்றீங்க?' கார்த்திகா கேட்க 'என்னங்க இது கூடத் தெரியாம இருக்கீங்க, எப்பவுமே ஒரு கல்யாணத்துல கல்யாண பொண்ண ஓவர்டேக் பண்ணக்கூடாது, அவங்கள விடக் கொஞ்சம் கம்மியாத் தான் கல்யாணப் பொண்ணோட ப்ரண்ட்ஸ் இருக்கனுமாம், இதப் போட்டிங்கன்னா உங்களுக்கும் கயலுக்கும் சண்ட வந்துரும் பாத்துக்கோங்க' மதன் விவரமாகக் கூறினான். 'இதெல்லாம்

உங்களுக்கு எப்படித் தெரியும்' கார்த்திகா கேட்க 'எனக்கும் ஒரு தங்கச்சி இருக்கா. அவதான் இதெல்லாம் சொல்லுவா' மதன் தன் தங்கையைப் பற்றிக் கூற 'உங்க வீட்ல யார பாக்குறேனோ இல்லையோ, உங்க தங்கச்சிய பாத்தே ஆகனும்' கார்த்திகா கூறிவிட்டு 'இவ்ளோ நேரம் பாத்துப் பாத்து எடுத்தேன், வேணான்டிங்க, மறுபடியும் தேடனுமா' கார்த்திகா சகித்துக்கொண்டாள். அப்போது 'அண்ணே அசூர் ப்ளூல எடுத்துப் போடுங்க' மதன் கடைக்காரரிடம் சொல்ல அவரும் எடுத்து வைத்தார். 'இந்தாங்க' என்று மதன் அழகிய வேலைப்பாடுடன் இருந்த ஒரு அசூர் ப்ளூ கலர் பட்டுப் புடவையை எடுத்துக் கொடுத்தான். கார்த்திகாவிற்கு அந்தப் பட்டுப்புடவை மிகவும் பிடித்திருந்தது ஆனால் வெளியில் காட்டிக் கொள்ளவில்லை. இதற்கிடையில் சுரேஷும் தீப்தியும் வந்தனர். 'போலாமா' கார்த்திகா மற்ற மூவரையும் பார்த்துக் கேட்க 'அந்த கோல்டையும் எடுத்துக்கோங்க, ஆசப்பட்டு எடுத்தீங்க' மதன் கூற 'நீங்க வேற, இதுவே எவ்வளவு ஆகுமோ, என்கிட்ட பட்ஜெட் இல்ல' கார்த்திகா கூற 'பரவால்ல, என்னால தான வேற ஒன்ன செலக்ட் பண்ணீங்க, அதையும் எடுத்துக்கோங்க, உங்களுக்குப் பிடிச்சதுக்கு நான் ஸ்பான்சர் பண்றேன்' மதன் கூற 'அதெல்லாம் ஒன்னும் வேணாம், கல்யாணத்துக்கு அப்புறம் வாங்கிக் கொடுங்க போதும்' கார்த்திகா மதனைப் பார்த்து கூறிவிட சுரேஷ் தீப்தி இருவரும் கார்த்திகாவையும்

மதனையும் பார்த்து முறைக்க ஆரம்பித்தனர். சுதாரித்துக்கொண்ட கார்த்திகா மதனை பார்த்து 'ஐ மீன், உங்க கல்யாணத்துக்கு அப்புறம், உங்க பொண்டாட்டிக்குக் வாங்கிக் கொடுங்கன்னு சொன்னேன்' என்று சற்று விவரமாகச் சொன்னாள். ஆனாலும் சுரேஷும் தீப்தியும் இருவரையும் பார்த்து முறைப்பதை நிறுத்தவில்லை. ' அதான் டீட்டெயில்லா எக்ஸ்ப்ளெயின் பண்ணிட்டாங்கல்ல, அப்புறம் என்ன மொறப்பு? இன்னும் ப்ளவுஸ் எல்லாம் தெக்கனுமாம் வா போகலாம்' மதன் சுரேஷை இழுக்க 'டேய், டேய், எங்கள மாதிரி ஒப்பனா கமிட் ஆனவங்க சாபம் உங்கள மாதிரி சிங்கள்சுன்னு சொல்லிட்டு சில்மிஷம் பண்றவங்கள சும்மா விடாதுடா' சுரேஷ் சொல்லிக்கொண்டே அடுத்த இடத்திற்குச் சென்றான். கார்த்திகாவிற்கும் தீப்திக்கும் ஒரு லேடி டெய்லர் வந்து அளவெடுத்து அவர்கள் புடவைக்கு மேட்சிங்கா பிளவுஸ் தைத்துக் கொடுத்தார். ஒருவழியாக கேஷியர் இடம் நால்வரும் வந்தனர். 'அண்ணா எல்லாம் ஒரே பில்லா போடுங்க' என்று சுரேஷ் கூற 'ஆமாம், ஒண்ணா போடுங்க பட் இந்தாங்க, இந்த கார்டை ஸ்வைப் பண்ணுங்க' என்று மதன் தன் டெபிட் கார்டை நீட்டினான். 'அதெல்லாம் இல்ல எல்லாம் தனித்தனியா போடுங்க' கார்த்திகா கூற 'இருங்க, இருங்க' கேஷியர் குறுக்கிட்டு 'முதலாளி அம்மா வீட்டு விசேஷத்துக்கு வந்த விருந்தாளிங்க கிட்ட போய் யாராவது வியாபாரம் பன்னுவாங்களா, நான் உங்க கிட்ட காசு வாங்கினேன்னு

கேள்விப்பட்டாங்கன்னா என்ன வேலையில இருந்து தூங்கிடுவாங்க, நீங்க போயிட்டு வாங்க' என்று கூறி கேஷியர் அனுப்பி வைத்தார்.

வெளியில் வந்தவர்கள் நேராக அவர்கள் தங்கப்போகும் ஹோட்டலுக்கு சென்றனர். அங்கே இரண்டு ரூம்கள் இவர்களுக்காக தயாராக இருந்தது. 'அப்போ நீயும் கார்த்திகாவும் அந்த ரூம் எடுத்துக்கோங்க, நானும் தீப்தியும் இந்த ரூம் எடுத்துக்கறோம், ஈவினிங் பாப்போம் பாய்' சுரேஷ் சொல்லிக்கொண்டே தீப்தியை ஒரு ரூமுக்குள் இழுக்க 'என்னடா பண்ற?' மதன் சுரேஷைப் பார்த்துக் கேட்க 'ஓ, இன்னும் எங்களுக்கு கல்யாணம் ஆகல இல்ல, தீப்தி பேசாம இப்பவே ஒரு கோயிலாப் பாத்து கல்யாணம் பண்ணிக்கலாமா, இந்த பிரச்சனையே இருக்காது பாரு' சுரேஷ் கிண்டலாகக் கூற 'கால்ல என்ன இருக்குன்னு பாரு' என்று தீப்தி தன் கால்களைக் காட்ட 'புது செருப்பு தீப்தி, எப்ப வாங்குன, ஒரு முறை கூட இதுல நான் அடி வாங்கலையே, வா உள்ள போய் அடி வாங்குனா எப்படி இருக்குன்னு பாக்கலாம்' சுரேஷ் சொல்லிக்கொண்டே தீப்தியின் தோள்மீது கை போட்டவாறு அவள் ரூமிற்குள் நுழைய முயல 'விட்டாப் பேசிட்டே இருப்பான் நீங்க உள்ள போங்க' மதன் தீப்தியிடமும் கார்த்திகாவிடமும் கூறிவிட்டு சுரேஷைப் பிடித்துக்கொண்டான். ஒருவழியாக கார்த்திகாவும் தீப்தியும் அவர்கள் ரூமிற்குச் சென்றனர். 'ஏன்டா ஒரு லவ்வர் அவனோட ஆள் கூட ஒன்னா ஒரே ரூம்ல இருந்தா உங்களுக்குப்

பொறுக்காதே' சுரேஷ் அவனுக்கும் மதனுக்கும் ஒதுக்கிய ரூமிற்குள் நுழைந்தவாறு கேட்டான். 'உங்க அம்மா கிட்ட செருப்படி வாங்குறதுக்கா, இங்கயே தூங்கிட்டு இரு, நான் வெளிய போய் ஷேவ் பண்ணிட்டு வர்றேன்' மதன் கூற சுரேஷ் உடனே எதையோ தேட ஆரம்பித்தான். 'என்னடா தேட்ர' மதன் கேட்க 'இங்க, மதன், மதன்னு ஒரு மானஸ்தன் இருந்தான், அவனுக்கு நிச்சயதார்த்தம் ஆனா தான் தாடி எடுப்பேன்னு சொல்லிட்டுத் திரிஞ்சான், அவனத்தான் தேடிக்கிட்டு இருக்கேன்' சுரேஷ் கிண்டலடிக்க 'அவன் செத்துட்டான். மூடிட்டுப் பட்றா' என்று சொல்லிவிட்டு மதன் சலூன் கடைக்குச் சென்றான்.

சுரேஷ் வந்த அசதியில் நன்றாகத் தூங்கிவிட்டான். நல்ல தூக்கத்தில் இருக்கும் போது சுரேஷின் போன் அடித்தது, மறுமுனையில் மதன், எடுத்து பேசினான். 'நாதாரி எத்தன கால் பண்றது, டோர் உள்பக்கம் லாக் ஆயிருக்கு, வந்து தொரடா' மதன் மறுமுனையில் கத்த சுரேஷ் அரைத் தூக்கத்தில் எழுந்து வந்து கதவை திறந்தான். திறந்தவனுக்கு அதிர்ச்சி காத்திருந்தது. 'ப்ப்ப்பா, என்னடா இப்படி இருக்க? டோட்டலா மாரிட்ட' சுரேஷ் மதனைப் பார்த்துக் கூற 'ஷேவ் பண்ணது குத்தமாடா?' மதன் கேட்க 'இந்த மூஞ்சையாடா மறச்சு வெச்சிருந்த, நல்ல ஐட்டு, பிரவுன் கலரு, கொஞ்சம் முருக்குனா மாதிரி மீச, நீளமான சைட் பர்ன்ஸ், மசில் ஏத்துன பாடி, இத வெச்சு எத்தன பேர கவர் பண்ணியிருக்கலாம் தெரியுமா, தாடி வெச்சு

மறச்சிக்கிட்டியேடா, போடா சாமியாரே' சுரேஷ் வருத்தப்பட 'டேய் ஓவரா பில்டப் பண்ணாதடா' மதன் கூற 'டேய் சத்தியமா, செம டிஃப்ரன்ஸ் தெரியுது, செம்ம ஹன்சம்மாயிட்ட, கார்த்திகா பாத்தாங்க, பாத்தவுடனே கல்யாணம் பண்ணிப்பாங்க' சுரேஷ் கலாய்க்க 'போதுன்டா ஓட்னது, போய் ரெடியாகு, கெளம்பலாம், பக்கத்துல அப்பவே கிளம்பிட்டாங்க போல, ரூம் கிளீன் பண்றவங்க உள்ள இருந்தாங்க, கார்த்திகா தீப்தி யாரும் இல்ல' என்று மதன் கூற 'அப்படியா, எப்ப போனாங்க, எப்படிப் போனாங்க, இரு போன் பண்றேன்' சுரேஷ் சொல்லிவிட்டு தீப்திக்கு போன் போட்டான். 'எங்கடி இருக்க' சுரேஷ் தீப்தியைக் கேட்க 'டேய் கயல் வண்டி அனுப்பி இருந்தாங்க, அவங்க ரூம்ல வந்து ரெடியாகச் சொன்னாங்க, இப்ப எல்லாரும் கயல் வீட்லதான் இருக்கோம், நீங்க சீக்கிரம் ரெடியாகி வாங்க' என்று சொல்லிவிட்டு தீப்தி போனை கட் பண்ணிவிட்டாள். 'அடிப்பாவி, நல்லா வேட்டி சேலையுமா மாப்ள பொண்ணு மாதிரி ஒரு என்ட்ரீ கொடுக்கலாம்னு பாத்தா' சுரேஷ் புலம்பியவாறே பாத்ரூமுக்குள் நுழைந்தான். சிறிது நேரத்தில் மதனும் சுரேஷும் வாங்கிய பட்டு வேட்டி பட்டுச்சட்டை போட்டுக்கொண்டு காரில் கயல் வீட்டை வந்தடைந்தனர்.

கார் வந்ததை வெளியில் தன் நண்பர்களுடன் நின்றுகொண்டிருந்த குரு பார்த்தார். 'யோவ் மொக்க, நீயா?' குரு மதனைப் பார்த்துக் கேட்க 'சாதாரண ஷேவ் தாம்பா' மதன் கூற 'செம்மையா இருக்கு, வா

ஊர்க்காரப்பயலுங்கல்லாம் உன்ன பாக்கனுமாம், நீ அருவா எடுத்தத கேள்விப்பட்டிருக்கானுக' என்று கூறி குரு மதனைக் குருவின் நண்பர்களுக்கு அறிமுகப்படுத்தி வைத்தான். 'மதன் சாருக்கு கல்யாணம் ஆயிடுச்சுங்களா?' குருவின் நண்பர் ஒருவர் கேட்க 'பொண்ணு பாத்துட்டான், கூடிய சீக்கிரம் பண்ணிப்பான்' என்று சுரேஷ் மதனை வாரிவிட 'அதெல்லாம் இல்லைங்க, வீட்ல பாத்துட்டு இருக்காங்க' என்று மதன் சமாளித்தான் 'நீங்க சொல்றத பாத்தா லவ் பண்றார் போல?' என்று அந்த நண்பர் கூற 'பன்றார், ஆனா இல்ல' இப்போது குரு சுரேஷுடன் சேர்ந்து மதனைக் கலாய்க்க 'அப்படியெல்லாம் ஒன்னும் இல்லைங்க' மதன் கூறினான். அப்போது சுரேஷுக்கு தீப்தியிடமிருந்து கைப்பேசி அழைப்பு வந்தது 'சொல்ரீ' சுரேஷ் கேட்க 'எங்க இருக்க' தீப்தி மறுமுனையில் கேட்க 'வந்துட்டோம் வீட்டுக்கு வெளியில குரு கூட இருக்கோம்' சுரேஷ் சொல்ல 'அங்கயே இரு வர்றேன்' என்று சொல்லி தீப்தி கட் செய்தாள். சிறிது நேரத்தில் தீப்தி பச்சை நிறப் பட்டுப் புடவையில் அழகான தேவதை போன்று வெளியில் வர சுரேஷ் அவளைப் பார்த்தவுடன் அவள் அழகில் மயங்கி அவளை நோக்கி நடக்க ஆரம்பித்தான். 'செல்லக்குட்டி, செம்மையா இருக்கு, யார் கட்டிவிட்டது?' சுரேஷ் கேட்க 'கார்த்திகா அக்காதான், நீயும் வேட்டி சர்ட்ல செம்மையா இருக்கடா' தீப்தி சுரேஷின் அழகைப் பார்த்துப் பாராட்டினாள். 'பங்ஷன் ஸ்டார்ட் ஆக இன்னும் எவ்வளவு நேரம்

ஆகும்?’ சுரேஷ் கேட்க ‘தெரியலடா, மூத்தவர் ஒருத்தர் வந்துக்கிட்டு இருக்காராம், அவர் வந்தாதான் நிச்சயதார்த்தம் ஸ்டார்ட் பண்ணுவாங்களாம். ஆமா நீ மட்டும் இருக்க, மதன் அண்ணா எங்க’ தீப்தி சுரேஷிடம் மதனைப் பற்றிக் கேட்க ‘அந்த கூட்டத்துக்குள்ள இருக்கான்’ என்று தீப்தியிடம் சொல்லிவிட்டு ‘டேய் நல்லவனே?’ என்று மதனைக் கூப்பிட்டான். மதன் அந்தக் கூட்டத்தில் இருந்து வெளியே வர மதனைப் பார்த்த தீப்தி அசந்து போனாள். ‘அண்ணா, நீங்களா?’ தீப்தி ஆச்சர்யத்துடன் கேட்க ‘உன் பங்குக்கு நீயும் ஏதாவது சொல்லு’ மதன் கூற ‘சொல்ல வேண்டியவங்க கிட்ட சொல்றேன்’ என்று சொல்லிவிட்டு உள்ளே ஓடினாள். ‘அதெப்டிரா ரெண்டு பேரும் அரக்கிறுக்காவே இருக்கீங்க’ மதன் சுரேஷைப் பார்த்துக் கேட்க ‘கரெக்டா நான் செய்யனும்னு நெனச்சத செய்ரா’ என்று சுரேஷ் சிரித்துக்கொண்டே கூறினான். ‘இப்ப எதுக்கு வெளிய வந்தா, உள்ள ஓட்ரா’ மதன் சுரேஷ் பார்த்துக் கேட்க ‘எடுத்துக் கொடுத்த புடவை எப்படி இருக்குன்னு காட்டிட்டுப் போராடா, மாமா பட்டு வேட்டிச் சட்டையில் எப்படி இருக்கேன்னு பாத்துட்டுப் போராடா, அதெல்லாம் உனக்குப் புரியாது, எக்ஸ்பீரியன்ஸ் வேணுடா, எங்கள மாதிரி டீப்பா லவ் பண்றவங்களுக்குத் தான் புரியும்’ சுரேஷ் மதனுக்குப் பாடம் எடுத்தான். ‘தூ, மூடிட்டு வா, உள்ள ஸ்டார்ட் பண்ணிட்டாங்களாம்’ மதன் சுரேஷைச் செல்லமாகத் திட்டிவிட்டு

உள்ளே கூட்டிச் சென்றான். வெளியில் நின்றிருந்த இளைஞர்கள் அனைவரும் வீட்டின் உள்ளே வந்தனர்.

கயலின் வீடு மிக பிரமாண்டமாக இருந்தது. ஹாலின் மேற்குத் திசையில் கிழக்கு பார்த்தவாறு அரை வட்ட வடிவத்தில் பூஜை அறை வடிவமைக்கப்பட்டிருந்தது. அதன் பெரிய கதவுகள் சுவரின் உள்ளேயே நகரும் விதத்தில் அமைத்திருந்தனர். அறையில் பலவிதமான தெய்வச் சிற்பங்களுக்கு நடுவில் இடது புறம் சிவலிங்கமும் வலதுபுறம் பெருமாள் சிலையும் இருந்தது. மணமகன் குருவைப் பூஜை அறையின் இடதுபுறக் கதவிற்குப் பக்கத்தில் முதலாவதாக முன் வரிசையில் அமர வைத்தனர். அதே வரிசையில் மணமகனுக்குப் பக்கத்தில் மணமகனின் குடும்பத்தில் இருக்கும் ஆண்கள் அமர்ந்தனர். மணமகனுக்குப் பின் வரிசையில் இரண்டாவதாக மதனும் மூன்றாவதாக சுரேஷும் அமர்ந்தனர். ஹாலிற்கு நடுவில் நிச்சயதாம்பூலத்திற்கு வைக்கும் வரிசை தட்டுக்கள் வைக்கப்பட்டிருந்தன. அவைகளுக்கு இடப்புறம் குருவின் அப்பா அமர்ந்திருந்தார், வலப்புறம் கயலின் அம்மா அமர்ந்திருந்தார். குருவின் அப்பாவிற்குப் பக்கத்தில் அமர்ந்திருந்த புரோகிதர் மணமகளை அழைத்து வரச்சொன்னார். அப்பொழுது தங்க நிறப் பட்டுடுத்திப் பல்வேறு வகையான நகைகளை அணிந்துகொண்டு மணமகளுக்கே உரிய அந்த நாணத்துடன் கயல் வந்தாள். அவளின் வலது கையை தீப்தியும் இடது கையைக் கார்த்திகாவும் பிடித்து

அழைத்து வந்தனர். மூன்று தோழிகளும் வெவ்வேறு நிறங்களில் அழகிய பட்டுப்புடவைகளை அணிந்து கொண்டு வர அங்கிருந்தவர்கள் அனைவரும் கயல் கூட வரும் இரு தோழிகள் யார் என்று விசாரிக்கத் தொடங்கியிருந்தனர். சுரேஷ் முதன் முதலாகத் தன் கையால் எடுத்துக் கொடுத்த பச்சை நிறப் பட்டுப் புடவையில் தீப்தியின் அழகைப் பார்த்து இரசித்துக் கொண்டிருந்தான். அதுவரை கார்த்திகாவை மாடர்ன் ட்ரெஸ்ஸில் மட்டுமே பார்த்த மதனுக்கு அவன் எடுத்துக் கொடுத்த அந்த நீல நிறப் பட்டுப் புடவையில் இவ்வளவு அழகாக இருப்பாள் என்று எதிர்பார்க்கவில்லை. மணமகளைக் கூட்டி வந்து பூஜை அறையின் வலப்புறம் முதல் வரிசையில் முதலாவதாக மணமகனுக்கு நேர் எதிரில் அமர வைத்தார்கள். மணமகளுக்குப் பக்கத்தில் முதல் வரிசையில் கயல் குடும்பத்தில் இருக்கும் பெண்கள் அமர்ந்தனர். மனமகளுக்குப் பின் வரிசையில்  இரண்டாவதாக கார்த்திகாவும் மூன்றாவதாக தீப்தியும் அமர்ந்தனர்.

எல்லோரும் அமர்ந்திருந்தாலும் பெரியவர் இன்னும் வரவில்லை. ‘சிரமத்திற்கு மன்னிக்கவும், பெரியய்யா வரதுக்கு லேட் ஆகுது, அவர் வந்த பிறகுதான் ஆரம்பிக்க முடியும், அதுவரைக்கும் எல்லாரையும் உட்கார வெச்சுடலாமேன்னுதான் உட்கார வைத்தோம். அவர் வந்தவுடன் ஸ்டார்ட் பண்ணிடலாம்’ என்று குரு அப்பா சொல்லிக்கொண்டிருக்க ‘இந்த நிச்சயதார்த்தத்தையும்

கல்யாணத்தையும் தனித்தனியே நடத்தியிருக்கலாம், ஆனா குரு ஆர்மில இருக்கான், லீவு முடிஞ்சிருச்சு, கொஞ்ச நாளைக்குத்தான் கூடுதலா லீவு கொடுத்திருக்காங்க, அதான் நிச்சயதார்த்தத்தையும் கல்யாணத்தையும் ஒன்னாப் பண்றோம்' என்று கயலின் அம்மா சபைக்குத் தெரிவித்தார். 'பெரியவர் வர நாழியாகும்னா, அதுவரைக்கும் யாராவது பாடலாமே, ஹரியும் சிவனும் ஒன்னா வழிபடறேள், யாராவது அவாள நெனச்சுப் பாடலாமே, கல்யாணப்பொண்ணே, நீ பாடுவியா?' என்று புரோகிதர் கயலைப் பாடச் சொல்ல 'எனக்குப் பாட வராது, இதோ இங்க ஒருத்தி இருக்கா பாருங்க, ஆபீஸ்ல ப்ரைஸ் எல்லாம் வாங்கியிருக்கா' என்று கார்த்திகாவைக் கோத்துவிட 'எனக்குச் சாமி பாட்டெல்லாம் தெரியாது' என்று கார்த்திகா பயந்து கூறினாள். அப்போது எதிர்ப்புறம் இருந்த சுரேஷ் 'பாட்ரி, என் ராசாத்தி' என்று ஜென்டில்மேன் படத்தில் செந்தில் சொல்வதுபோல் கூற 'நீ மூட்ரி' என்று மதன் சுரேஷின் வாயைப் பொத்தி அவன் வாயை அழுத்திக்கொண்டான்.
ஜென்டில்மேன் படத்தைப் பார்த்த அங்கிருந்தவர்கள் இருவரும் அதேபோல் செய்ததைப் பார்த்துச் சிரித்தனர். 'கார்த்தி எங்களுக்காக' என்று குரு கேட்டுக்கொண்டான். 'அப்ப தீப்தியும் கூட பாடனும் அவதான் டெய்லி இந்தப் பாட்ட கேட்பா, அப்புறம் இது சாமி பாட்டு தான், ஆனா, சினிமால வந்த சாமி பாட்டு, ஓகேவா?' என்று கார்த்திகா எல்லோரிடமும் கேட்க 'பரவால்ல பாடும்மா' என்று குருவின் அப்பா

சம்மதித்தார். ‘இதுல மியூசிக் இருக்கு, நான் சொல்லும்போது ப்ளே பண்ணனும்’ என்று கார்த்திகா கூற ‘இங்க கொடுங்கக்கா’ என்று கயலின் சொந்தக்காரத் தம்பிகளில் ஒருவன் கார்த்திகாவின் மொபைலை வாங்கிக் கயல் வீட்டில் இருந்த போஸ் லைப்ஸ்டைல் 650 ஹோம் என்டெர்டென்மன்ட் சிஸ்டத்தில் இணைத்தான். நிச்சயதார்த்தத்தை வீடியோ எடுக்க வந்த கேமராமேனும் கேமராவை ஆன் செய்தார். கயல் வீட்டில் நடப்பது ரிஷப்ஷன் நடக்கப்போகும் கல்யாண மண்டபத்தில் லைவ் டெலிகாஸ்ட் ஆனது. அந்த மண்டபத்தில் ஏற்கனவே அமர்ந்திருந்த கார்த்திகாவின் அப்பாவும் அம்மாவும் வீடியோவில் கார்த்திகா பாடப் போவதைப் பார்த்துப் புன்னகைத்தனர்.

கார்த்திகாவிற்கும் தீப்திக்கும் முன்பு முன் வரிசையில் இருந்த கயலின் குடும்ப உறவினர்கள் இருவரையும் முன் வரிசைக்கு வரச் சொல்லி எழுந்தனர். கார்த்திகாவும் தீப்தியும் எழுந்து நேராக பூஜை அறையில் இருந்த தெய்வங்களை வழிபட்டுவிட்டு கயலுக்கு அடுத்தபடியாக வந்து அமர்ந்தனர். கார்த்திகா அந்தத் தம்பியிடம் இசையைத் தொடங்குமாறு சைகை காண்பிக்க அக்னியாதவாசி படத்தில் வரும் ஸ்வாகதம் கிருஷ்ணா என்ற பாடலின் இசை கயலின் வீட்டை நிரப்பியது. மதுராபுரி சதனா என்று கார்த்திகாவும் தீப்தியும் பாட கூடவே வந்த இசை அந்த இடத்தில் இருந்த அனைவருக்கும் ஒரு பிரம்மாண்ட உணர்வை ஏற்படுத்தியது. முஷ்டிகாசூர சானுறமல்ல

மல்லவிசாரத மதுசூதனா என்று கார்த்திகா பாடிக்கொண்டே எதிரில் முதல் வரிசைக்குப் பின் அமர்ந்திருந்த மதனை முதன் முறையாகப் பார்க்க மதன் ஏற்கனவே தன்னை இரசித்துக் கொண்டு இருப்பதைக் கவனித்து புன்னகையுடன் பாடினாள். தீப்தி ஏற்கனவே மதன் தன் தாடியை எடுத்துவிட்டதால் தோற்றம் மாறியிருப்பதைக் கூறியிருந்தாள். மதனின் புதிய தோற்றத்தைக் காண ஆவலுடன் இருந்த கார்த்திகாவிற்கு மதனின் அழகிய முகமும் அவன் முறுக்கு மீசையும் மிகவும் பிடித்தது. மதனும் கார்த்திகாவும் கண்களால் பேசத் தொடங்கிவிட்டதை தீப்தி பார்த்துவிட்டு பாடிக்கொண்டே கண் அசைவின் மூலம் எதிரில் இருந்த சுரேஷுக்குத் தெரியப்படுத்தினாள். மதனும் கார்த்திகாவும் பார்த்துக் கொண்டிருப்பதைப் பார்த்த சுரேஷ் மதனின் கண்களை மூடி தலையைப் பிடித்துத் தன் பக்கம் அமுக்கினான். இதைப் பார்த்து எதிரில் இருந்த மூன்று தோழிகளும் புன்னகைத்தனர். கயல் சிரிப்பதைக் கண்ட குரு பின்னால் என்ன நடக்கிறது என்று திரும்பிப் பார்க்க சுரேஷ் மதனின் கண்களை மூடிப் பிடித்துக் கொண்டிருப்பதைப் பார்த்துப் புன்னகைத்தான். கார்த்திகாவும் தீப்தியும் வீர முனிஜன விஹார மதன சுகுமார தேய்த்ய சம்ஹார தேவா என்று பாடிவிட்டு மதுர மதுர ரதி சாஹச சாஹச விரஜயுவதேஜன மானச பூஜித என்று கண்களை மூடிப் பாட இவர்கள் குரல்களின் ஒலியும் இசையும் இணைந்து கேட்பதற்கு மிக அருமையாக இருந்தது. அங்கிருந்த இசைப் பிரியர்கள் எல்லோரும்

தலையாட்டிக் கேட்டு மகிழ்ந்தனர். தகதரி குகுதன கிட தக தீம் என்று கார்த்திகாவும் தீப்தியும் பாடும்போது வந்து சேரும் கிட்டார் இசையைக் கேட்டவுடன் அங்கிருந்த இளைஞர்களும் இளம்பெண்களும் மிகவும் இரசிக்க ஆரம்பித்தனர். கடைசியாக கிருஷ்ணா என்று பாடிக் கார்த்திகாவும் தீப்தியும் பாடலை முடித்துவைக்க அங்கு இருந்தவர்கள் எல்லோரும் இருவரையும் கைதட்டிப் பாராட்டினர். கார்த்திகாவிற்கும் தீப்திக்கும் பின்னால் அமர்ந்திருந்த பெண்கள் பலபேர் இருவருக்கும் கைகொடுத்து பாராட்டுத் தெரிவித்தனர். கயலின் அம்மா எழுந்து வந்து கார்த்திகாவையும் தீப்தியையும் கட்டிப்பிடித்து பாராட்டிவிட்டு சென்று அமர்ந்தார்.

‘பெரியவர் இன்னும் வரல, கொழந்தைங்க எம்பெருமான பத்திப் பாடிட்டேள், இன்னொரு பாட்டு சிவபெருமானைப் புகழ்ந்து பாடலாமே’ என்று புரோகிதர் கூற ‘ஏன் பொண்ணுங்க மட்டும்தான் பாடணுமா, பசங்களும் நல்லாப் பாடுவாங்க, அவங்களையும் பாடச் சொல்லுங்க எங்க அளவுக்குப் பாட்றாங்களான்னு பாப்போம்’ என்று கயல் குருவிடம் ஆண்களை உசுப்பேத்துவது போல் கூற ‘பாடத் தெரியாதுன்னு நெனப்பா, நாங்கள்ளாம் களத்துல எறங்குனா வேற மாதிரி, என்ன நண்பா சொல்ற?’ என்று குரு மதனைப் பார்த்துச் சொல்ல ‘யோவ், இப்படிக் கோத்து விட்ட’ மதன் குருவைப் பார்த்து சொல்லிவிட்டு ‘எனக்கு சாமிப்பாட்டெல்லாம் தெரியாதுங்க’ என்று

சபைக்குச் சொல்லிக்கொண்டிருக்கும்போதே ‘பொய்சொல்றாங்க, இவன் தீவிர சிவ பக்தன்’ என்று சுரேஷ் மாட்டிவிட்டான். ‘ஆம்பளைங்க பாடுனா தப்பில்லப்பா, அதுவும் சிவனைப் பத்திப் பாடக் கொடுத்து வச்சிருக்கணும்’ என்று சிவனை நேசிக்கும் கயலின் அம்மா கேட்டுக்கொள்ள ‘சினிமா பாட்டு தான், அது ஒருத்தரா பாடுனா நல்லா இருக்காது, இவனும் அந்தப் பாட்ட நல்லாப் பாடுவான்’ என்று மதன் சுரேஷைக் கோத்துவிட ‘நான் என்னடா உனக்குப் பாவம் பண்ணேன், எந்தப் பாட்டுடா?’ என்று குழம்பிய வாறே சுரேஷ் ஒத்துக்கொண்டான். ‘இதுல மியூசிக் இருக்கு’ என்று கயலின் சொந்தக்காரத் தம்பியிடம் மதன் தன் மொபைலைக் கொடுத்துவிட்டு பூஜை அறைக்குச் சென்றான். சுரேஷும் அவனைப் பின் தொடர்ந்து பூஜை அறைக்குச் சென்று வழிபட்டான்.

குருவின் குடும்ப உறவினர்கள் இருவர் முன் வரிசையில் இருந்து பின் வரிசைக்குச் சென்று மதனும் சுரேஷும் அமர்ந்திருந்த இடத்தில் அமர்ந்தனர். மதனும் சுரேஷும் குருவிற்கு அடுத்தபடியாக வந்து அமர்ந்தனர். அந்த இடத்தில் இருந்த அனைவரும் என்ன பாடல் என்ற ஆர்வத்தில் இருந்தனர். மதன் இசையைத் தொடங்குமாறு சைகை காண்பிக்க ஒரு நாள் கூத்து படத்தில் வரும் எப்போ வருவாரோ பாடலின் முதலில் வரும் புல்லாங்குழலும் வீணையும் கயலின் ஹோம் சிஸ்டத்தில் மிகத் துல்லியமாக ஒலித்து அங்கிருந்தவர்கள் அனைவரையும் மெய்சிலிர்க்க வைத்தது. அடுத்து

வந்த பாஸ் பீட்ஸ் ஒவ்வொன்றும் அந்த இடத்தை அதிரவைத்தது. இளைஞர்களுக்கும் இளம்பெண்களுக்கும் மிகவும் பிடித்துப் போனது. எப்போ வருவாரோ என்ற பல்லவியை மதன் தனியாகப் பாட அவன் குரலைக் கேட்டு கார்த்திகாவால் எதிரில் பாடிக்கொண்டிருக்கும் மதனைப் பார்க்காமல் இருக்க முடியவில்லை. பல்லவியை இரண்டாவது முறை பாடும் போது சுரேஷின் குரலும் இணைந்துகொள்ள அற்புதமாக இருந்தது. அப்பர் முதல் மூவரும் என்று இருவரும் முதல் சரணத்தைக் கண்களை மூடிச் சிவனை நினைத்துப் பாடியது அங்கிருந்தவர்களை ஆச்சரியப்படவைத்தது. நற் பருவம் வந்து நாதனைத் தேடும் என்று இருவரும் இரண்டாவது சரணத்தைப் பாடும் போது இருவரின் குரலும் இசையும் தெய்வீகமாக இருந்தது. பாலகிருஷ்ணன் கோபாலகிருஷ்ணன் போற்றிப் பணிந்திடும் ஈசன் மேலே என்று மதன் தனியாகப் பாடியபோது ஒரு சிவபக்தன் உண்மையிலேயே சிவனை நினைத்துப் பாடுவது போல் இருந்தது. அடுத்து வந்த வார்த்தைகளில் சுரேஷின் குரல் வந்து சேர்ந்து காதல் கொண்டேன் வெளிப்படக் காணேனே என்று இருவரும் உருகிப் பாடியது அங்கிருந்தவர்கள் இவர்கள் இருவரும் சிவபக்தர்களாகத்தான் இருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வரச் செய்தது. கடைசி பல்லவியைப் பாடும்போது தான் மதன் கார்த்திகாவைப் பார்த்தான். அவளோ கண்களை மூடிக்கொண்டு பாடலில் மூழ்கியிருந்தாள். மதன் கார்த்திகாவைப் பார்ப்பதைப்

பார்த்த கயல் கார்த்திகாவைத் தன் கை முட்டால் தொடக் கார்த்திகா எதிரில் இருந்த மதனைப் பார்த்தாள். மதன் பாடிக்கொண்டே எப்படி இருந்தது என்று கண்களால் புருவத்தை உயர்த்திக் கேட்க மெய்மறந்தேன் என்று கார்த்திகா தன் கண்களை மூடித் தலையை அசைத்து மதனுக்கு உணர்த்தினாள். இவர்கள் இருவரும் கண்களால் பேசுவதைப் பார்த்த கயலும் குருவும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டு சிரித்தனர். பாடல் முடிந்தவுடன் குருவும், பின்னால் அமர்ந்திருந்த இளைஞர்களும், மதனையும் சுரேஷையும் தூக்கி வைத்துக் கொண்டு கொண்டாடினர். இருவரும் கீழே வந்த பின் அவர்களுக்குப் பல இளம் பெண்கள் எதிரில் இருந்து எழுந்து வந்து கை கொடுத்துப் பாராட்டு தெரிவித்தனர். அப்போது வெளியில் இருந்து ஒரு பெரியவர் குருவின் அப்பாவையும் கயலின் அம்மாவையும் கடந்து மதனையும் சுரேஷையும் நோக்கி வந்தார். குருவின் அப்பாவும் கயலின் அம்மாவும் அந்தப் பெரியவரைச் சரியாகப் பார்க்கவில்லை. பெரியவர் மதன், சுரேஷை நெருங்குகையில் குரு அவரை அடையாளம் கண்டு ‘அய்யா எப்ப வந்தீங்க’ என்று கேட்க அருகில் இருந்த கயலும் ‘அய்யா எங்களை ஆசிர்வாதம் பண்ணுங்க’ என்று சொல்லிக் குருவும் கயலும் உடனே அந்தப் பெரியவரின் கால்களில் விழுந்து வணங்கினர். ‘பதினாறும் பெற்று பெருவாழ்வு வாழனும்’ என்று அந்த பெரியவர் ஆசிர்வதித்தார். குருவின் அப்பாவும் கயலின் அம்மாவும்

பெரியவரைப் பார்த்தவுடன் அவரிடம் ஓடி வந்தனர். ‘அய்யா மன்னிச்சிடுங்க, நீங்க வந்தத கவனிக்கல’ என்று குருவின் அப்பா அந்தப் பெரியவரிடம் சொன்னார். ‘அதனால என்னப்பா, இந்தச் சின்னப் பிள்ளைங்க நல்லாப் பாட்றாங்கப்பா’ என்று பெரியவர் கார்த்திகா, மதன், சுரேஷ், தீப்தியைப் பார்த்துக் கூறினார். நால்வரையும் குரு பெரியவருக்கு அறிமுகம் செய்து வைத்தான். ‘அய்யா நீங்க எப்ப வந்தீங்க?’ என்று கயல் அம்மா கேட்க ‘இந்த இரண்டு பெண் பிள்ளைகள் பாட ஆரம்பிச்சப்பவே வந்துட்டேம்மா, எம்பெருமான நினைச்சு ரொம்ப நல்லாப் பாடினாங்க, பாடி முடிச்சதும் உள்ளே வர தோனல, என்னப் பத்தி பாடுற வரைக்கும் உள்ள வரக்கூடாதுன்னு சிவபெருமான் சொல்றாமாதிரி இருந்ததும்மா, சிவன வணங்க மறந்துட்டாங்களேன்ற எண்ணம் புரோகிதருக்கும் வந்திருக்கும், அதனாலத்தான் அவர் சிவபெருமான பத்தியும் பாடச் சொன்னார், இந்த இரண்டு ஆண் பிள்ளைகளும் சிவபெருமான பத்தி அற்புதமாப் பாடினாங்க, இப்ப இருக்குற பிள்ளைங்ககிட்ட பக்தியே இல்லைன்னு நினைச்சிருந்தேன், ஆனா, எங்களுக்கும் கடவுள் பக்தி இருக்குன்னு நிரூபிச்சிட்டீங்க’ என்று அந்தப் பெரியவர் சொல்லிக்கொண்டிருக்கும்போதே ‘எங்களையும் ஆசிர்வாதம் பண்ணுங்க’ என்று சொல்லி சுரேஷும் தீப்தியும் அந்தப் பெரியவர் காலில் விழுந்தனர். இருவரையும் ‘நீங்களும் பதினாறும் பெற்று பெருவாழ்வு வாழனும்’ என்று பெரியவர் ஆசிர்வாதம்

செய்தார். அருகில் இருந்த மதனுக்கும் கார்த்திகாவிற்கும் காலில் விழுவதா வேண்டாமா என்ற குழப்பத்தில் இருந்தார்கள், ஏனெனில் காலில் விழுந்தால் எப்படியும் பதினாறும் பெற்று என்று வாழ்த்தி விடுவார், அதனால் தயங்கினர். அப்போது ‘டேய் விழுடா’ என்று சுரேஷ் கூற ‘அக்கா நீங்களும் விழுங்க’ என்று தீப்தி கூற கார்த்திகாவும் மதனும் பெரியவர் காலில் விழுந்தனர் ‘ஆல் போல் தழைத்து, அருகு போல் வேரூன்றி, மூங்கில் போல் சுற்றம் சூழ்ந்து, வாழையடி வாழையான, பதினாறும் பெற்று பெருவாழ்வு வாழனும்’ என்று மனதார ஆசீர்வாதம் செய்தார். அங்கிருந்த எல்லோரும் பெரியவர் வந்ததை அறிந்து எழுந்து நின்று கொண்டிருந்தனர். லைவ் டெலிகாஸ்ட் செய்யப்பட்டிருந்த கல்யாண மண்டபத்தில் பார்த்துக் கொண்டிருந்த அனைவரும் எழுந்து நின்றிருந்தனர். பெரியவர் வந்திருப்பது ஊர் முழுக்கப் பரவியது. எல்லோரும் அவரைப் பார்க்கக் கயலின் வீட்டிற்குப் படையெடுத்தனர்.

ஒருவழியாகப் பெரியவர் வந்து இருக்கையில் அமர நிச்சயதாம்பூலம் இனிதே நடந்தேறியது. மறுநாள் காலை ஆறு மணியிலிருந்து ஏழு முப்பது மணிக்குள் குடும்பத்தின் குலதெய்வக் கோவிலில் திருமணம் நடைபெறும் என்று அறிவித்தனர். அங்கிருந்த எல்லோரும் ரிஷப்ஷன் நடைபெறும் கல்யாண மண்டபத்திற்குச் செல்ல தயாராயினர். அப்போதுதான் கயல், குரு, கார்த்திகா, மதன், சுரேஷ் மற்றும் தீப்தி ஒன்றாகப் பேச இடம் கிடைத்தது. ‘கயல், ஐயா யாரு?’

என்று மதன் கயலிடம் கேட்க ‘சிம்பிளா சொன்னா, ஐயா படத்துல வர அப்பா சரத்குமார் மாதிரி, வேள்பாரி பரம்பரை, எங்க முன்னோர் அவரோட முன்னோர் தயவால இந்த ஊர்ல பஞ்சம் பொழச்சவங்க. அவங்க குடும்பத்துக்கு மரியாதை செய்யாம எங்க வீட்ல எந்த நல்ல விஷயமும் நடக்காது. ஐயாவ அவ்வளவு சுலபமாப் பாக்க முடியாது. குரு அப்பாவுக்கும் ஐயாவுக்கும் நல்ல தொடர்பு இருக்கு, அதான் கூப்பிட்டவுடன் வந்துட்டாரு. ஊர்ப் பெரியவங்க எல்லாம் ஐயா வந்திருக்கார்னா மெறலுவாங்க, பாத்திங்கள்ள, ஐயா நிக்கும்போது ஒருத்தர் கூட உட்காரல, அவர்கிட்ட ஆசிர்வாதம் வாங்குவது அவ்வளவு சுலபமில்லை, அதன் அவரப் பாத்தவுடனே கால்ல விழுந்துட்டேன், ஆனா ஒருத்தி அவர் யாருன்னு தெரியாம அவர்கிட்ட முழு ஆசீர்வாதம் வாங்கிட்டா, கொடுத்து வச்சவடி நீ, சீக்கிரம் கல்யாணம் பண்ணிக்கோ, பதினாறு பெக்கனும்ல’ கயல் கார்த்திகாவைப் பார்க்க ‘பதினாறுன்னா, பதினாறு குழந்தைங்க இல்ல டீ’ கார்த்திகா கூற ‘தெரியும் டீ, உனக்கு தெரியுமான்னு பாத்தேன்’ கயல் கூற ‘அப்ப பதினாறு குழந்தைங்க இல்லையா?’ என்று தீப்தி கேட்க ‘இங்க ஒவ்வொருத்தியும் ஒரு குழந்தைக்கே முக்குறாளுங்க, உனக்குப் பதினாறு வேணுமா, சுரேஷ் பாத்துக்கோங்க’ என்று கயல் சுரேஷையும் தீப்தியையும் பார்த்துக் கூற ‘பதினாறு வேணுமா செல்லம், நாம டென்த் படிக்கும் போது சொல்லிருக்கலாம்ல’ என்று சுரேஷ் கிண்டலடிக்க தீப்தி சுரேஷின் தலையின் பின்புறம் ஒரு தட்டுத்

தட்டினாள். ‘பெரியவர் நாளை வர இருப்பாரா’ என்று மதன் கேட்க ‘அவர் அப்பவே கிளம்பிட்டாரு, ஊருக்கு வந்தா அவர பாக்கக் காத்துக்கிட்டு இருக்கிறவங்க நிறைய’ என்று கயல் கூறினாள். ‘பைதவே, இட்ஸ் லைக் ஏ ட்ரீம், என் கனவுல கூட நான் என் கல்யாணம் இப்படி ஆரம்பிக்கும்னு நெனச்சதில்ல, எங்கயோ ஓடிப்போய்த் தான் கல்யாணம் பண்ணிக்கப் போறோம்னு இருந்தோம், தேங்ஸ் பார் எவ்ரிதிங்’ என்று கயல் கார்த்திகா, தீப்தியின் கைகளைப் பிடித்துக் கொண்டு கண்கலங்கிக் கூறினாள். ‘ச்சீ, எமோஷன் ஆகாத, மேக்கப்பெல்லாம் போயிடும்’ என்று கார்த்திகா கயலை சமாதானப்படுத்தினாள். ‘சரிடி, நாங்க மண்டபத்துக்குக் கௌம்புறோம், சீக்கிரம் வந்துடுங்க’ என்று கூறிவிட்டு கயலும் குருவும் அங்கிருந்து சென்றனர். ‘சரிடா, நாமளும் மண்டபத்துக்குக் கௌம்பலாமா?’ சுரேஷ் மதனைக் கேட்க ‘நீங்க முன்னாடி போங்க, பின்னாடியே வர்றோம்’ என்று மதன் சுரேஷையும் தீப்தியையும் முதலில் போகச் சொன்னான். ‘ரொமான்ஸா, நாங்களும் பண்ணுவோம், உங்களைவிட சீனியர்டா நாங்க, வா தீப்தி நாம கார்ல போய் ரொமான்ஸ் பண்ணலாம்’ சுரேஷ் தீப்தியைக் கூட்டிக்கொண்டு காரை நோக்கிச் சென்றான். ஒரு வழியாக மதனும் கார்த்திகாவும் மனம் விட்டுப் பேச வாய்ப்புக் கிடைத்தது.

‘என்ன மிஸ்டர் மிசோஜனிஸ்ட், டோட்டலா மாறிட்டீங்க, உங்களுக்குச் செம டிமாண்ட், பின்னாடி இருந்த பொண்ணுங்க

உங்கள பத்தித் தான் பேசிட்டிருந்தாங்க, ரோம்ப ஹன்சமா இருக்கீங்களாம்’ கார்த்திகா கிண்டலடிக்க ‘நீங்களுமா’ மதன் கார்த்திகாவைப் பார்த்துக் கூறினான். ‘ஆமா, நானும் தீப்தியும் பாடும்போது சுரேஷ் எதுக்கு உங்க கண்ணை மூடினார்?’ கார்த்திகா கேட்க ‘உங்க அழகுல மயங்கிப் போயிருந்தேன்ல, கண்ணை மூடிட்டா உங்கள பாக்கமுடியாதுல்ல, அதான்’ என்று மதன் கூற ‘அப்ப என்னையேத்தான் பாத்துட்டு இருந்தீங்களா?’ கயல் கேட்க ‘பாக்காம எப்படி இருக்க முடியும், நான் எடுத்துக் கொடுத்ததாச்சே’ மதன் கூற ‘அப்போ சாரியத்தான் பாத்தீங்க, என்ன இல்ல?’ கார்த்திகா கேட்க ‘இப்ப நான் என்ன சொன்னா சந்தோஷப்படுவீங்க’ மதன் கேட்க ‘என்ன சாரில பாத்தவுடனே என்ன தோணுச்சுன்னு சொல்லுங்க’ கார்த்திகா கேட்க ‘ஒரு தேவதை நீலக்கலர் பட்டுப்புடவை கட்டிக்கிட்டு நடந்து வர்ற மாதிரி இருந்துச்சு’ என்று மதன் கூற ‘பொய்தான’ கார்த்திகா சிரித்துக் கொண்டே கேட்க ‘கண்டுபுடிச்சிட்டீங்க’ மதன் சொன்னவுடன் கார்த்திகா வெட்கத்துடன் மதனின் தோளில் செல்லமாகக் குத்தினாள். ‘நோ, சீரியஸ்லி, நீங்க மூணுபேரும் வேற வேற கலர்ல பட்டுப்புடவை கட்டிக்கிட்டு நடந்து வந்தது, இட் வாஸ் லவ்லி’ மதன் தன் தோள்களைத் தேய்த்தவாறே கூறினான். ‘தேங்ஸ்’ கார்த்திகா கூற ‘எதுக்கு’ என்று மதன் கேட்க ‘நான் முதல்ல எடுத்த கோல்ட் கலர் பட்டுப்புடவை வேணாம்னு சொன்னதுக்கு, கயல் அதே கோல்ட் கலர் தான் சூஸ் பண்ணி இருந்தா’

கார்த்திகா கூற ‘ஐ டோல்ட் யூ ரைட், எங்க ஊர்ல ஜவுளிக்கடையில் வேலை செய்றவங்க சொல்லுவாங்க, கல்யாணப் புடவை எடுக்க வர பேம்லி கிட்ட எடுத்தவுடனே கோல்ட் கலர் பட்டுப்புடவைங்கள காட்ட மாட்டாங்களாம், எல்லா கலரையும் காட்டிட்டு, எதுலயுமே சேட்டிஸ்பை ஆகலைன்னா, பிங்க் காட்டுவாங்களாம், அதுல ஃபார்ட்டி டு பிப்டி பர்சன்ட் செலக்ட் பண்ணிடுவாங்களாம், பட் ரொம்ப ரிச்சான ட்ரெடிஷனல் பேம்லியெல்லாம், கோல்ட் கலர் வெரைட்டிங்கல பாத்தாத்தான் இம்ப்ரஸ் ஆவாங்களாம்’ மதன் விவரமாகச் சொன்னான். ‘பட்டுப்புடவைங்களப் பத்தி நிறைய தெரிஞ்சு வச்சிருக்கீங்க’ கார்த்திகா கூற ‘காஞ்சிபுரத்துல பொறந்துட்டு இதுகூடத் தெரியலன்னா எப்படி’ என்று மதன் கூறினான். இருவரும் சிறிது நேரம் பேசவில்லை. கார்த்திகா மதனின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்ததை கவனித்த மதன் ‘வாட்ஸ் ராங்’ என்று கேட்க ‘நத்திங், ஜஸ்ட், உங்களோட அழகுல மயங்கிக்கிட்டு இருக்கேன், உங்களோட மீசை, க்ளீன் ஷேவ் பன்ன ச்சின், அப்படியே கடிச்சிச் சாப்பிடனும் போல இருக்கு’ கார்த்திகா சிரித்தபடி கூற ‘சாப்பிடுங்க, உங்களுக்குத்தானே’ மதன் வெட்கத்துடன் சொல்லிவிட்டு முகத்தைச் சற்றுக் கீழே இறக்கிக் கார்த்திகாவின் கண்களையே பார்க்க கார்த்திகாவும் முகத்தைச் சற்று மேலே நோக்கி மதனின் கண்களைப் பார்த்தவாறு இருந்தாள். இருவரும் தங்களை அறியாமல் நெருங்கி வந்தனர். அருகில் வந்த மதனைப் பார்த்துக்கொண்டிருந்த

கார்த்திகாவிற்கு அப்படியே கட்டிப்பிடித்து அவன் கன்னத்தைக் கடித்து விட வேண்டும் என்று தோன்றியது. இருவரின் இதயத்துடிப்பும் பல மடங்கு அதிகரித்திருந்தது. ‘கடிக்காம விடமாட்டீங்க போல’ மதன் கார்த்திகாவின் கண்களைப் பார்த்தவாறே கூற ‘ஆமாம் இப்பவே வேணும்’ கார்த்திகா மதனைப் பார்த்தவாறே கூற ‘ஆர்மோன்ஸ் ஆர் கிரேசி யு நோ’ மதன் புன்னகைத்தபடி கூற ‘எல்லாம் உங்களால தான், யாரையும் இப்படி நான் சொன்னதில்ல தெரியுமா, ஸ்டாப் கேஸிங் மீ லைக் தட், ஐம் கோயிங் வைல்ட் இன்சைட்’ கார்த்திகா மதனின் கண்களைப் பார்த்தபடிக் கூற ‘தட் லிப்ஸ் ஆர் ஆஸ்கிங் மீ டு ஈட் தம்’ மதனும் கார்த்திகாவை வைத்த கண் வாங்காமல் பார்த்த படி கூற ‘வேணுமா?’ கார்த்திகா கேட்க ‘ப்ரண்ஸ்ன்ற லிமிட் தாண்டி ஏகத்துக்கும் போயிட்டு இருக்கோம், எக்குத்தப்பா ஏதாவது நடக்குறதுக்குள்ள வாங்க மண்டபத்துக்குப் போயிடலாம்’ மதன் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு கார்த்திகாவை கூட்டிக்கொண்டு காரை நோக்கிச் சென்றான்.

‘எவ்ளோ நேரம்டா?’ சுரேஷ் கார்த்திகாவும் மதனும் வருவதைப் பார்த்து மதனிடம் கேட்க ‘அதான் வந்துட்டோம்ல, போலான்டா’ மதனும் கார்த்திகாவும் உள்ளே ஏறி உட்கார்ந்தனர். கார் கயல் வீட்டிலிருந்து கல்யாண மண்டபத்திற்குப் புறப்பட்டது. ‘கிப்ட் வாங்கலடா’ மதன் கூற ‘ஆமாம்ல, சரி நேரா ஒரு எலக்ட்ரானிக் ஷோரூம் போலாம், கைக்கு அடக்கமா வாங்கிட்டுப் போகலாம். நாலு

பேருக்கும் சேத்து காஸ்ட்லியா ஒரே ஒரு கிப்ட் தான், தனித்தனியாக வாங்கக் கூடாது ஓகேவா?' சுரேஷ் கூற மற்றவர்கள் சரி என்று ஒப்புக்கொண்டனர். அதன்படி ஒரு கிப்ட் வாங்கி பேக் செய்து கொண்டு மண்டபத்துக்கு வந்து சேர்ந்தனர். அங்கு ஏற்கனவே ரிஷப்ஷன் ஆரம்பித்து நடந்துகொண்டிருந்தது. 'ஆல்ரெடி ஆரம்பிச்சுப் போய்க்கிட்டு இருக்கு, வா நேராப் போய்க் கொடுத்துட்டு வந்துடலாம்' என்று சுரேஷ் சொல்லிக்கொண்டே கிப்டுடன் மணமக்களைப் பரிசு கொடுத்து வாழ்த்த வந்தவர்கள் வரிசையில் போய் நின்னான். சுரேஷ் பின்னால் தீப்தியும், கார்த்திகாவும் நிற்க அவள் பின் மதன் நின்றான். கல்யாணத்திற்கு வந்திருந்தவர்கள் இந்த நால்வரையும் பார்த்ததும் அவர்கள் பாடியதைப் பற்றிப் பேச ஆரம்பித்து விட்டனர். இவர்கள் அருகில் இருந்தவர்கள் இவர்களுக்குக் கை கொடுத்து வாழ்த்து தெரிவித்தனர். ஒருவழியாக நால்வரும் மேடை ஏற கீழே அமர்ந்திருந்தவர்கள் எழுந்து நின்று கைதட்ட ஆரம்பித்துவிட்டனர். கயலும் குருவும் இவர்கள் வருவதைப் பார்த்தவுடன் அருகில் சென்று வரவேற்றனர். சுரேஷ் தன்னிடம் இருந்த பெரிய கிப்ட் பாக்சை அன்புப் பரிசாகக் கயலிடமும் குருவிடமும் ஒருசேரக் கொடுத்தான். மற்ற மூவரும் அந்த கிப்ட் பாக்சைத் தொட்டபடி இருக்க மணமக்கள் அதை வாங்கியவாறு இருக்க எதிரில் இருந்த போட்டோகிராபர் அழகாய் அந்தக் காட்சியைப் படம் பிடித்தார். 'மனப்பாடம் பண்ணி

வைத்திருந்தது மறந்து போச்சே, ஆ, நியாபகம் வந்துருச்சு,ஆவ் ஏ ஹாப்பி அண்ட் ப்ராஸ்பரஸ் மேரிட் லைப்' சுரேஷ் கயலையும் குருவையும் பார்த்துக் கூறி விட்டுச் சற்றுத் தள்ளி நின்றான். 'யோவ் மில்டிரி, நெக்ஸ்ட் இயர்க் கெல்லாம் ஒரு சிங்கக்குட்டி ரிலீஸ் ஆகனும், பாத்துக்கோ' என்று குருவின் காதோரமாக மதன் சொல்லிவிட்டு 'கங்கிராட்ஸ் சிஸ்டர், மில்டிரிய ஒழுங்காப் பாத்துக்கோங்க' என்று மதன் கயலிடம் சொல்லி நகர்ந்தான். கார்த்திகாவைப் பார்த்ததும் கயல் அவளைக் கட்டிப்பிடித்துக்கொண்டாள். 'நீ இல்லாம ரூம்ல போர் அடிக்கப் போகுது டீ, ஐ மிஸ் யூ டீ' கார்த்திகா கயலிடம் கூறிவிட்டு 'வாழ்த்துக்கள் அண்ணா, கயல் ரொம்ப சாதுவான பொண்ணு, பத்திரமாப் பாத்துக்கோங்க' என்று கார்த்திகா குருவிடம் சொல்ல 'இவளா' என்று சொல்லிக்கொண்டே குரு புன்னகைத்தான். கயல் தீப்தி அருகில் வந்ததும் கட்டியணைக்க 'ஐம் கோயிங் டு மிஸ் யூ அக்கா, ஹாப்பி மேரிட் லைப்' என்று தீப்தி கூற 'தீப்தி, நீயும் நானும் ஒரு பெட் வச்சுக்கலாம், யாரு அதிகமாக் குழந்தைங்க பெத்துக்குறதுன்னு பாப்போமா' என்று கயல் கிண்டலாக தீப்தியிடம் கேட்க 'சும்மாருங்கக் கா' என்று தீப்தி வெட்கப்பட்டாள். 'ஹாப்பி மேரிட் லைப் அண்ணா' என்று தீப்தி குருவிற்குக் கைகொடுத்து நகர்ந்தாள். நால்வரும் மண மக்களுடன் இணைந்து நிற்க போட்டோகிராப்பர் நண்பர்கள் ஆறு பேரும் ஒன்றாக நின்றதை

அழகாகப் படமெடுத்தார். நால்வரும் மணமக்களிடம் விடைபெற்று மேடையிலிருந்து கீழே இறங்கி வந்தனர்.

‘அப்பா எப்ப வந்தீங்க?’ கீழே இறங்கிய கார்த்திகா தன் பெற்றோரைப் பார்த்தவுடன் அவர்களிடம் ஓடிச் சென்றாள். ‘அப்பவே வந்துட்டோம்மா, பஸ் ஸ்டேன்ட் ல இருந்து நேரா மண்டபத்துக்கு வந்துட்டோம்’ கார்த்திகாவின் அப்பா கார்த்திகாவிடம் கூறினார். மதன், சுரேஷ், தீப்தி மூவரும் கார்த்திகாவின் பெற்றோரிடம் வந்தனர். ‘அம்மா இவதான் தீப்தி’ கார்த்திகா தீப்தியைத் தன் அம்மாவிற்கு அறிமுகம் செய்தாள். ‘ரூமுக்குப் புதுசா வந்த பொண்ணு இவதானே, எப்படிம்மா இருக்க?’ கார்த்திகாவின் அம்மா விசாரிக்க ‘நல்லா இருக்கேன் ஆண்டி’ தீப்தி பதில் அளித்தாள். ‘அப்பா இவர் சுரேஷ்’ கார்த்திகா சுரேஷைத் தன் அப்பாவுக்கு அறிமுகப்படுத்த ‘ஹலோ சார்’ என்று சுரேஷ் மரியாதையுடன் கார்த்திகாவின் தந்தையிடம் பேசினான். கார்த்திகா மதனைப் பார்த்தவாறே ‘மதன்’ கார்த்திகா மதனை ஒரு தயக்கத்துடன் அறிமுகப்படுத்த ‘தெரியும்மா, ஆஃபீஸ்ல நீ ப்ரைஸ் வாங்கின வீடியோல உனக்கு முன்னாடிப் பாடினாரே அவர்தானே? அந்த வீடியோல தாடி வெச்சிருந்தார், இப்ப ஆளே மாறி இருக்கார், கொஞ்ச நேரம் முன்னாடி கூட ரொம்ப அழகாப் பாடினார்’ கார்த்திகா அப்பா மதனைப் பார்க்க ‘ஹலோ சார்’ என்று மதனும் மரியாதையுடன் கார்த்திகாவின் தந்தையிடம் கூறினான். ‘உங்களுக்கு இவர்

இன்னைக்குப் பாடினது எப்படி தெரியும்' கார்த்திகா கேட்க 'கயல் வீட்ல இருந்து மண்டபத்துக்கு லைவ் ரிலே பண்ணாங்கம்மா' கார்த்திகாவின் தந்தை விளக்கமாகக் கூறினார். 'ஏம்பா நிக்கறீங்க, உட்காருங்க' கார்த்திகா அப்பா எல்லோரையும் உட்காரச் சொன்னார். கார்த்திகா தன் பெற்றோருடன் ஒரு வரிசையில் அமர அதன் பின் வரிசையில் தீப்தி, சுரேஷ், மதன் மூவரும் அமர்ந்தனர். 'நீங்கதான கார்த்திகாவுக்கு ஏதோ கத்துக்கொடுக்குறீங்க' பின்னால் திரும்பிப் பார்த்தபடி தனக்குப் பின் இருந்த மதனிடம் கார்த்திகாவின் தந்தை கேட்க 'அதுக்குப் பேர் லினக்ஸ் சார்' மதன் கூற 'நான் கூட கேள்விப்பட்டிருக்கேன், எங்க ஸ்கூல்ல கொடுக்குற ப்ரீ லேப்டாப் ஆன் பன்னவுடன் விண்டோஸ்க்கு கீழ பாஸ் அப்படின்னு வரும், எங்க கம்ப்யூட்டர் சார் கிட்ட அதப்பத்திக் கேட்கும்போது அவர் அது ஒரு லினக்ஸ் ஆப்ரேட்டிங் சிஸ்டம்னு சொன்னாரு, ஆனா அத இதுவரைக்கும் யாரும் யூஸ் பண்ணி நான் பார்க்கல, எல்லாரும் விண்டோஸ் தான் செலக்ட் பண்ணுவாங்க, ஏன் எங்க கம்ப்யூட்டர் சாரே லினக்ஸ யூஸ் பண்ணதில்ல' கார்த்திகாவின் அப்பா கூற 'லினக்ஸ பத்தி சொல்லிக் கொடுக்க வேண்டிய வாத்தியாருக்கே அதப் பத்தித் தெரியல, விண்டோஸ் தான் யூஸ் பண்றாருன்னு சொல்றீங்க, இதுல எங்க இருந்து அவர் பசங்களுக்குக் கத்துக்கொடுக்கப் போறது' மதன் தன் ஆழ் மனத்தின் குமுறல்களைச் சற்று வெளிப்படுத்தினான் 'நீ கேட்குறதெல்லாம் சரிதான் தம்பி,

ஆனா நீ என்ன தான் வெளியில இருந்து காது கிழிய கத்துனாலும் உள்ள இருக்குற எந்த வாத்தியாரும் புதுசா எதையும் கத்துக்கப் போறதில்ல, பசங்களுக்குப் புதுசா எதையும் கத்துக்கொடுக்கப் போறதில்ல, பசங்களும் புரிஞ்சி எதையும் படிக்கப் போறதில்ல' கார்த்திகாவின் அப்பா கூற மதன் கோபத்துடன் ஏதோ கேட்க வந்து வேண்டாம் எதற்கு என்று விட்டுவிட்டு மவுனம் அடைந்தான். 'ஆனா என் பொண்ணு மாறிட்டா தம்பி, முன்னல்லாம் வீட்டுக்கு வந்தா லேப்டாப்பே தொடமாட்டா, இப்ப என்னடான்னா எப்பவும் அதையே வெச்சிக்கிட்டு கருப்பும் வெள்ளையுமா இருக்குற மானிட்டர பார்த்து டைப் பண்ணிக்கிட்டு இருக்கா, அனேகமா உங்க கிட்ட அவ லினக்ஸ் கத்துக்க ஆரம்பிச்சதுல இருந்து தான் இப்படி இருக்கான்னு நினைக்கிறேன்' கார்த்திகா அப்பா கூற மதன் கார்த்திகாவைப் பார்த்துப் புன்னகைத்தான். 'என்ன மாறி என்ன புண்ணியம் தம்பி, ஒரு நல்ல வரன் அமைய மாட்டேங்குது, நானும் எவ்வளவோ தேடிட்டேன், அவளுக்குச் செவ்வாய் தோஷம் தம்பி' கார்த்திகாவின் அப்பா போட்டு உடைக்க 'அப்பா, என்னோட பிரண்ட்ஸ் பா' கார்த்திகா மதனைப் பார்த்தவாறு தன் தந்தையை அமைதியாக இருக்கச் சொன்னாள். 'நீங்க எதுக்கும் கவலைப்படாதீங்க சார், எல்லாம் நல்லதுக்குத் தான், கூடிய சீக்கிரம் உங்க பொண்ணுக்குப் புடிச்ச ஓர் ஆணழகன் உங்களுக்கு மாப்பிள்ளையா வருவார்' என்று சுரேஷ் கார்த்திகாவின் தந்தையிடம்

கூற அருகில் அமர்ந்திருந்த தீப்தி சிரிப்பை அடக்க முடியாமல் தலையைக் குனிந்து கொண்டு உள்ளுக்குள் சிரித்தாள். மதன், சுரேஷ் இருவரும் இப்போதுதான் கார்த்திகாவிற்கு ஏன் திருமணம் நடைபெறாமல் தள்ளிப்போகிறது என்ற கேள்விக்கான விடையை அறிந்தனர். அப்போது இவர்களிடம் வந்த குருவின் தந்தை 'என்னப்பா இன்னும் இங்க இருக்கீங்க, சாப்பாடு காலியாகப் போகுது சீக்கிரம் போங்க' என்று சொல்லிவிட்டுச் சென்றார். எல்லோரும் எழுந்து சாப்பிடச் சென்றனர்.

சாப்பிட்டுவிட்டு கார்த்திகாவின் பெற்றோர், கார்த்திகா, தீப்தி, சுரேஷ், மதன் எல்லோரும் வந்து மண மேடைக்கு அருகில் ஆங்காங்கே வட்டவட்டமாக விருந்தினர் உட்கார்ந்து பேசி விட்டு சென்றிருந்த இருக்கைகளில் அமர்ந்தனர். மதன் கார்த்திகாவின் அப்பாவுக்கு நேர் எதிராக அமர்ந்திருந்தான். மதனுக்கு வலதுபுறம் சுரேஷும், சுரேஷுக்கு வலதுபுறம் தீப்தியும், தீப்திக்கு வலதுபுறம் கார்த்திகாவின் அப்பாவும், கார்த்திகாவின் அப்பாவுக்கு வலதுபுறம் கார்த்திகாவும், கார்த்திகாவுக்கு வலதுபுறம் கார்த்திகாவின் அம்மாவும், அம்மாவின் வலதுபுறம் மதனும் அமர்ந்திருந்தார்கள். 'அப்புறம் தம்பி, லினக்ஸ் பற்றி சொன்னவுடனே வேதனப்பட்டீங்க, அப்படி என்ன இருக்கு அதுல, என் பொண்ணு காட்டுற ஆர்வத்தப் பாத்தா எனக்கும் அதப் பத்தித் தெரிஞ்சுக்கணும் போல இருக்கு' கார்த்திகா அப்பா கேட்க 'ஏன் சார், ஏன், உங்களுக்கு விடியற வரைக்கும் முழிச்சிக்கிட்டு

இருக்கனும்னு ஏதாவது வேண்டுதலா, அவன் ஆரம்பிச்சான்னா ஃபைட் அகெய்ன்ஸ்ட் கேப்பிட்டலிசம், லிபரி சாப்ட்வேர், ஜிஎன்யூ, அப்படின்னு ஆரம்பிச்சிடுவான், கேட்க ரொம்ப நல்லாத்தான் இருக்கும் ஆனா விடிஞ்சிடும்' சுரேஷ் கார்த்திகாவின் அப்பாவை எச்சரித்தான். 'அப்ப கம்யூனிஸ்டா, ஃபைட் அகைன்ஸ்ட் கேப்பிட்டலிசம்னு சொல்றீங்க' கார்த்திகா அப்பா கூற 'அது ஃபைட் அகெய்ன்ஸ்ட் கேப்பிட்டலிசம் இல்ல சார், அது ஃபைட் அகென்ஸ்ட் ப்ரப்ரெய்டிசம்' மதன் கூற 'ரெண்டும் ஒன்னு தாண்டா' சுரேஷ் கூற 'இல்லடா, சோசியலிசமும் கம்யூனிசமும் எப்படியோ அப்படித்தான் ப்ரப்ரைட்டிசமும் கேப்பிட்டலிசமும், என்னோட மூலதனத்தில் கிடைக்கிற எல்லா லாபமும் எனக்குத்தான் சொந்தம்னு சொல்றது கேப்பிட்டலிசம், ஆனா அதுக்கும் ஒரு படி மேல போய் என்னோட கண்டுபிடிப்ப மூலதனமா யார் பயன்படுத்தினாலும் அவங்களுக்குக் கிடைக்கும் லாபத்தில் பங்கு கேட்குறதுதான் ப்ரப்ரைட்டிசம்' மதன் கூறினான். 'அப்ப சோசியலிசமும் கம்யூனிசமும் வேற வேற வா?' கார்த்திகா கேட்க 'அடிப்படையில ரெண்டுமே எல்லோருக்கும் எல்லாம் பொது அப்படின்னு சொல்ற பொதுவுடைமைக் கோட்பாடுகள் தான், உழைப்புக்கேற்ற ஊதியம்னு சொல்றது சோசியலிசம், தேவைக்கேற்ற ஊதியம்னு சொல்றது கம்யூனிசம்' மதன் கார்த்திகாவுக்கு விளக்கினான். 'பரவால்ல இந்தக் காலத்துப் பசங்க நிறைய தெரிஞ்சி வெச்சிருக்கீங்க, ப்ரப்ரைட்டிசம்ர வார்த்தைய

இப்பத்தான் தெரிஞ்சிக்கறேன், அத எதிர்க்குற உங்க இயக்கத்துக்குப் பேர் என்ன?' கார்த்திகா அப்பா மதனைப் பார்த்துக் கேட்க 'ப்ரீ சாப்ட்வேர் மூமன்ட், தமிழ்ல சொல்லணும்னா கட்டற்ற மென்பொருள் இயக்கம்' மதன் கூற 'சுருக்கமா, சொன்னா முதலாளித்துவத்தை எதிர்க்குறவங்க' சுரேஷ் கிண்டலடிக்க 'நாங்க ஒன்னும் நியாயமான முதலாளித்துவத்துக்கு எதிரானவங்க இல்லடா' மதன் கூற 'அதென்னப்பா நியாயமான முதலாளித்துவம்' என்று சுரேஷ் கேட்க 'தன்னோட சொத்த அடமானம் வெச்சு நாலு பேருக்கு வேலை கொடுத்து அதுல ரெண்டு பேர் சங்கக் கொடிய பிடிச்சிக்கிட்டு சொன்ன வேலை செய்யாம வெட்டியாத் திரிஞ்சாலும் அவனோட வீட்லயும் அடுப்பெரிய வெச்சு, வேல செய்யும் போது அடிபட்ட தொழிலாளிய ஆஸ்பத்திரிக்குக் கூட்டிட்டுப் போய் அவன் குணம் அடையும் வரைக்கும் அவனுக்குச் செலவு செஞ்சி, மறுபடியும் அவனுக்கு வேலை கொடுத்து, நேர்மையாக் கடினமா உழைக்கிறவன பாராட்டி, ஊக்குவித்து, அவனுக்குச் சம்பளத்தை உயர்த்திக் கொடுத்து, வர இலாபத்துல தனக்குக் கீழ வேலை செய்யுற தொழிலாளிங்களோட குடும்பத்த முன்னேத்தித் தன் குடும்பத்தையும் பாத்துக்குறாம்பாருங்க, அவந்தாண்டா நேர்மையான முதலாளி, அதுதான் நியாயமான முதலாளித்துவம்' மதன் கூற 'என்னடா எல்கேஓய் மாதிரி பேச ஆரம்பிச்சிட்ட' சுரேஷ் ஆச்சர்யத்துடன் கேட்க 'இல்லடா, டிஎக்ஸ் மாதிரி பேசுறேன்' மதன் கூற 'எல்கேஓய்,

டிஎக்ஸ், இவங்கல்லாம் யாரு?' கார்த்திகா கேட்க 'வறுமையினால ஒருத்தன ஒருத்தன் சாப்பிட்டுக்கொண்டிருந்த ஒரு நாட்டை இன்னைக்கு உலகத்தில் செக்கன்ட் சூப்பர் பவரா மாத்தினவரு டெங் ஸியோவ்பிங், இவரு தன் நாட்ட வறுமையில இருந்து எப்படிக் காப்பாத்துறதுன்னு தெரியாம முழிச்சுக்கிட்டு இருந்தப்ப, நாட்ட முன்னேத்தனும்னா முதலாளிங்க கூட அனுசரிச்சுப் போறது தப்பில்ல, அதுக்கு என் நாடே உதாரணம்னு காட்டினவரு லீ குவான் யூ' மதன் கூறினான். 'வாங்க மாப்ள சார், போட்டோவுக்கு போஸ் கொடுக்காம எங்க இந்தப் பக்கம்' இவர்களிடம் அசதியாக வந்த குருவை சுரேஷ் வரவேற்றான். 'அட போப்பா, எவ்ளோ நேரம் போஸ் கொடுக்கிறது, என்ன ஏதோ சுவாரஸ்யமாப் பேசிக்கிட்டு இருந்தீங்க போல' என்று குரு சுரேஷிடம் கேட்க 'அதுவா, ஒரு கம்யூனிஸ்ட், ஒரு கேப்பிட்டலிஸ்ட், ஒரு சோசியலிஸ்ட், மூணு பேரும் வெட்டியா அரசியல் பேசிக்கிட்டு இருக்கோம்' சுரேஷ் குருவிடம் கூற 'அப்ப நான் வர்றேன்' என்று குரு அங்கிருந்து புறப்பட 'உன் பங்குக்கு நீயும் ஏதாவது அரசியல் பேசுறது' என்று சுரேஷ் கிண்டலாகக் கேட்டுப் போகும் குருவின் கையைப் பிடித்துக் கொள்ள 'போயா யோவ், நாங்க அரசியல் பேசி இருந்தா இந்த நாடு எப்பவோ உருப்புட்டு இருக்கும்யா, நாங்க பொத்திக்கிட்டு பார்டர பாத்துக்குறதுனாலத்தான் உங்களால தைரியமா அரசியல் பேச முடியுது, என்ஜாய் டெமாக்ரசி வைல் இட் லாஸ்ட்' குரு கூறிவிட்டு

போட்டோவிற்கு போஸ் கொடுக்கச் சென்றான். ‘பொசுக்குன்னு ஒரே டைலாக்ல மிலிட்டரி ரூல்னா என்னன்னு சொல்லிட்டுப் போயிட்டானே, இவன் சொல்றத பாத்தாக் கூடிய சீக்கிரம் இந்தியாவில் மிலிட்ரி கூப் நடக்குமோ’ சுரேஷ் பயந்த வாறே கூற அங்கிருந்த எல்லோரும் புன்னகைத்தனர். அப்போது கார்த்திகா அம்மாவிற்குக் கைப்பேசி அழைப்பு வந்தது. அழைப்பைப் பேசிவிட்டு ‘அண்ணி போன் பண்ண ஆரம்பிச்சுட்டா, இன்னும் புறப்படலையான்னு கேட்குறா, நேரம் ஆச்சு, கௌம்பலாம்’ கார்த்திகா அம்மா கார்த்திகாவின் அப்பாவைப் பார்த்துக் கூற எல்லோரும் எழுந்தனர்.

‘உங்களைப் பார்த்ததுல ரொம்ப சந்தோஷம்’ கார்த்திகாவின் அப்பா மதனையும் சுரேஷையும் பார்த்துக் கூற ‘எங்களுக்கும் உங்க கூட பேசினது சுவாரஸ்யமா இருந்துச்சு சார்’ என்று சுரேஷ் கார்த்திகாவின் அப்பாவிடம் கூறினான். ‘அப்ப நீங்க ஓட்டலுக்குப் போங்க, நாளைக்குப் பாப்போம்’ கார்த்திகா சுரேஷ், தீப்தி மற்றும் மதனைப் பார்த்துக் கூற ‘நீங்க எங்க தங்கப் போறீங்க’ சுரேஷ் கார்த்திகாவையும் அவள் பெற்றோரையும் பார்த்துக் கேட்க ‘பக்கத்துல தான் சொந்தக்காரங்க வீடு, அவங்ககிட்ட வரோம்னு சொல்லியிருக்கோம்’ கார்த்திகாவின் அப்பா கூற ‘தீப்தி நீயும் எங்க கூட வந்து தங்கிக்கம்மா’ கார்த்திகாவின் அம்மா தீப்தியைப் பார்த்துக் கூற ‘பரவால்ல ஆண்டி, நான் ஓட்டல்லையே தங்கிக்கிறேன், மதன்

அண்ணாவும் சுரேஷும் பக்கத்து ரூம்ல இருப்பாங்க' தீப்தி கார்த்திகா அம்மாவின் பயத்தைப் போக்கினாள். 'சரி வாங்க அப்படியே உங்கள ட்ராப் பண்ணிட்டு ஓட்டலுக்குப் போறோம்' என்று சுரேஷ் கூற 'நீங்க போங்கப்பா, பக்கம்தான், நாங்க ஆட்டோல போறோம்' கார்த்திகாவின் அப்பா கூற 'பரவால்ல சார் வாங்க' என்று சொல்லி அவர்களை காரிடம் அழைத்துக் கொண்டு வந்துவிட்டான். அப்போதுதான் தன் காரில் ஐந்து பேர்தான் வசதியாக உட்கார முடியும் ஆறாவதாகப் பின்புறம் இருக்கும் பொருட்கள் வைக்கும் இடத்தில் அமர்ந்து வரவேண்டும் என்பது மூளைக்கு எட்டியது. 'சார் நீங்க முன் சீட்ல உட்காருங்க, நான் பின்னாடி உட்காந்து வர்றேன்' என்று மதன் கூற 'அதெல்லாம் வேணாம், நீ ஓட்டு, நான் பின்னாடி உட்காந்து வர்றேன்' என்று சுரேஷ் கூற 'தம்பிகளா இருங்க, எனக்கு அப்பப்ப கால்களை மடக்கி நீட்ட வேண்டி இருக்கும், பின்னாடி நான் நிம்மதியா என் வசதிக்கு உட்கார்ந்துட்டு வர்றேன், நீங்க ரெண்டு பேரும் போய் முன்னாடி ஏறுங்க' என்று கார்த்திகாவின் தந்தை காரின் பின்புறம் சென்று ஏறி அமர்ந்து கொண்டார். கார்த்திகா அம்மா, கார்த்திகா, தீப்தி மூவரும் காரின் பின் சீட்டில் அமர்ந்து கொண்டனர். மதன் முன் சீட்டில் உட்கார சுரேஷ் காரை ஓட்டினான். சொந்தக்காரர் வீட்டில் கார்த்திகாவையும் கார்த்திகாவின் பெற்றோர்களையும் இறக்கி விட்டனர். 'அப்போ நாங்க வர்றோம் கார்த்திகா' என்று சொல்லிவிட்டு சுரேஷ் காரை நகர்த்தினான். கார் சிறிது தூரம்

செல்வதற்குள் முன் இருக்கையில் அமர்ந்திருந்த தீப்திக்குக் கைப்பேசி அழைப்பு வந்தது. பேசிவிட்டு தீப்தி காரை வந்த வழியே திருப்பச் சொன்னாள். ‘எதுக்குடி மறுபடியும் ரிவர்ஸ் எடுக்கச் சொல்ற’ என்று சுரேஷ் கேட்க ‘அது, ஒருத்தருக்கு ஒருத்தர பார்க்காம இருக்க முடியலையாம், பிரிய மனசே வரலையாம், அதான் இறக்கி விட்ட இடத்திலேயே வந்து மறுபடியும் ஏத்திக்கிட்டுப் போகச் சொல்றங்க’ என்று தீப்தி பின்னால் இருந்த மதனைப் பார்த்து புன்னகைத்தவாறே சுரேஷிடம் கூறினாள். ‘இதெல்லாம் கொஞ்சம் ஓவர் டா டேய்’ சுரேஷ் மதனைக் கிண்டலடிக்க ‘நானாடா வரச்சொன்னேன்’ என்று மதன் சுரேஷைக் கேட்க ‘நீ டெலிபதியில் பேசி வரச்சொன்னாலும் சொல்லியிருப்படா’ கிண்டல் செய்த வாறே சுரேஷ் கார்த்திகாவை இறக்கிவிட்ட சொந்தக்காரர் வீட்டில் காரை மறுபடியும் கொண்டு வந்து நிறுத்தினான். சிறிது நேரத்திற்குள் கார்த்திகா உள்ளிருந்து அவசர அவசரமாக வந்து காரில் ஏறிக் கொண்டாள். கார் ஓட்டலை நோக்கிப் புறப்பட்டது. ‘என்னக்கா வந்துட்டீங்க’ தீப்தி கேட்க ‘அதுவா, தீப்தி தனியா இருப்பா, நானும் அவளுக்குத் துணையா ஓட்டல்ல போய் தங்கிக்கவான்னு அம்மாகிட்ட கேட்டேன், ப்ரண்சுங்களோட இருக்கணும்னு முடிவு பண்ணிட்ட, அரட்டை அடிச்சிட்டு இருக்காம நேரத்துக்குத் தூங்குங்க அப்பத்தான் காலையில எழுந்திருக்க முடியும், அப்பா சொல்லி அனுப்பிவிட்டார்’ கார்த்திகா நடந்ததை விளக்கினாள். ‘என் மேல அவ்வளவு

அக்கறையாக்கா?' என்று தீப்தி கிண்டலாகக் கார்த்திகாவைப் பார்த்துக் கேட்க 'சும்மா இருடி' என்று கார்த்திகா பின்னால் பார்த்தவாறு இருந்த தீப்தியின் முகத்தைத் தன் கையால் பிடித்து முன்னால் பார்க்கும்படிச் செய்தாள். நால்வரும் ஓட்டலை வந்தடைந்தனர்.

'செமையாத் தூக்கம் வருது, காலைல ஆறு மணி டவுட்டு தான்' சுரேஷ் கூறிக்கொண்டே மதனும் சுரேஷும் தங்கப்போகும் ரூம் கதவைத் திறக்க 'காலையில மரியாதையா சீக்கிரம் எழுந்துக்கோ, இல்ல வந்து மூஞ்சில தண்ணி ஊத்திடுவேன், குட் நைட்' என்று சொன்னவாறே தீப்தி தானும் கார்த்திகாவும் தங்கப்போகும் ரூம் கதவைத் திறந்தாள். சுரேஷும் தீப்தியும் கதவைத் திறந்தவுடன் நேராகப் போய்ப் படுத்து விட்டனர். 'எனிவே, மார்னிங் பாக்கலாம், குட் நைட்' மதனும் கதவின் அருகில் நின்று கார்த்திகாவைப் பார்த்துச் சொல்ல 'இதுக்கு நான் அங்கேயே தூங்கியிருப்பேன், குட் நைட்' என்று கோபமாகக் கூறிவிட்டு கார்த்திகா கதவை மூடினாள். மதனுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை எப்படி சமாதானம் சொல்வது என்று குழப்பத்தில் தவித்தான். அறையில் சுரேஷ் நன்றாகத் தூங்கிவிட்டான் ஆனால் மதனுக்குத் தூக்கம் வந்த பாடில்லை, பட்டு வேட்டிச் சட்டையைக் கழற்றி விட்டு கருமை நிறத்தில் நீ லென்த் ஷார்ட்சும் வெண்மை நிறத்தில் வி நெக் டீ சர்ட்டும் போட்டுக்கொண்டான். தொலைக்காட்சியைப் பார்த்தாலும் சுவாரஸ்யமாக அதில் எதுவும் வரவில்லை. அப்போது அறை

நுழைவுக்கு நேர் எதிரே ஒரு திரை இருப்பதை மதன் கவனித்தான். அந்தத் திரையை விலக்கி அழகான பால்கனி இருப்பதைப் பார்த்தான். அதில் பூங்கொடிகள் படர்ந்து அழகாய்த் தொங்கிக்கொண்டிருந்தன. மதன் உடனே கண்ணாடிக் கதவைத் திறந்து பால்கனிக்குச் சென்றான். பால்கனிக்கு வந்த மதன் தன் வலது புறம் திரும்பிப்பார்க்கையில் கார்த்திகாவும் தீப்தியும் தங்கியிருக்கும் பக்கத்து அறைக்கும் இவன் அறையைப் போலவே பால்கனி இருப்பதைக் கண்டான். அதுவும் இவன் பால்கனியில் இருந்து பக்கத்து பால்கனிக்கு சிறு இடைவெளி மட்டுமே இருந்தது. மதனுக்குக் கார்த்திகா உள்ளே என்ன செய்து கொண்டிருக்கிறாள் என்று பார்க்க ஆவலாக இருந்தது. தாவிக் குதித்துப் பக்கத்து பால்கனிக்குப் போக முடிவெடுத்து கம்பிகளில் கால்களையும் வைத்தான், ஆனால் அவன் மனசாட்சி ‘டேய், வயசுக்கு வந்த பொண்ணுங்க, அவங்க ரூமுக்கு இப்டி போறது உனக்கே கொஞ்சம் காவாலித் தனமா இல்ல?’ என்று கேட்டு அசிங்கப்படுத்தியது. மதன் தான் செய்வது தவறு என்று தெரிந்து தாவிச்செல்லும் எண்ணத்தை மாற்றிக்கொண்டான். ஆனால் அவன் மனமோ பக்கத்து அறையில் கார்த்திகா என்ன செய்கிறாள் என்ற நினைப்பிலேயே இருந்தது. பக்கத்து பால்கனியின் கண்ணாடிக் கதவுகளின் வழியே வெளிச்சம் வந்து கொண்டிருப்பதை வைத்து மதன் கார்த்திகா இன்னும் தூங்கவில்லை என்று யூகித்தான், ஆனால் அவளிடம் எப்படி

பால்கனி தாண்டிப்போய்ப் பேசுவது என்ற தயக்கத்தில் தவித்துக் கொண்டிருந்தான். அப்போது திடீரென்று யாரோ பக்கத்து பால்கனியின் கண்ணாடிக் கதவுகளைத் திறக்கும் சத்தம் கேட்டது. என்ன செய்வது என்று தெரியாமல் மதன் அவன் பால்கனியில் படர்ந்திருக்கும் கொடிகளின் உள்ளே அமர்ந்து கொண்டு தன்னை மறைத்துக் கொண்டான். அப்போது வெளிறிய சாம்பல் நிறத்தில் நைட் பேண்ட் அதே நிறத்தில் ஷார்ட் ஸ்லீவ் டீ ஷர்ட் அணிந்து கொண்டு கார்த்திகா தன் அறையின் பால்கனிக்கு வந்தாள். அவளும் வந்தவுடன் பக்கத்து அறையின் பால்கனி கண்ணாடிக் கதவுகள் திறந்திருப்பதைப் பார்த்தாள். கதவின் வழியாக சுரேஷ் தூங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்தாள், ஆனால் மதன் அவள் கண்களுக்குத் தென்படவில்லை. மின் விளக்குகள் அணைக்கப்படவில்லை, அதனால் மதன் இன்னும் தூங்கவில்லை என்று யூகித்தாள். கூப்பிடலாமா என்று கார்த்திகா பக்கத்து பால்கனிக்கு மிக அருகில் வந்து நிற்க அவள் மனசாட்சி ‘அடியேய், நீ இவ்வளவு தூரம் அவனுக்காக ஓட்டலுக்கு வந்தும், குட் நைட்னு சொன்னான்ல, மறந்துட்டியா?’ என்று கேட்டது. கூப்பிடும் எண்ணத்தை மாற்றிக் கொண்டாள். சிறிது நேரம் மதனின் அறையையே பார்த்தவாறு இருந்தாள். மதன் கீழே ஒளிந்து கொண்டு கார்த்திகா தன்னைத் தேடுவதைப் பார்த்து ரசித்துக் கொண்டிருந்தான்.

மதனைப் பார்க்க முடியாமல் தவித்த கார்த்திகா வேறு வழியில்லை என்று தன் அறையின் கண்ணாடிக் கதவுகள் அருகில் செல்ல ‘யாரையோ தேடிக்கிட்டு இருக்கீங்க போல?’ என்று ஒரு குரல் ஒலித்தது. கார்த்திகா வெட்கத்தில் புன்னகைத்தவாறே திரும்பிப் பார்க்க மதன் அவளைப் பார்த்தவாறு நின்று கொண்டிருந்தான். ‘இல்லையே, நான் சும்மாக் காத்து வாங்கிக் கிட்டு இருக்கேன், நீங்க எங்க இந்தப் பக்கம், தூங்கல?’ என்று கார்த்திகா கேட்க ‘அதுவா, என்னோட பெஸ்ட் பிரண்ட் ஒருத்தர் எனக்காக அவங்க பேரண்ஸ விட்டுட்டு இங்க வந்திருக்காங்க, அவங்க கூடச் சரியாப் பேச முடியல அதான் இப்ப பேசலாமான்னு கேட்டுட்டுப் போக வந்தேன்’ என்று மதன் கூற ‘உங்க பெஸ்ட் பிரண்டுக்கு தூரமா நின்னு பேசினாப் பிடிக்காது, கயல் வீட்ல ரெண்டு பேரும் ஒருத்தருக்கொருத்தர் பாத்துக்கிட்டே பேசினீங்கள்ல, அதுமாதிரி பேசனுமாம்’ கார்த்திகா கூற மதன் சற்றும் தாமதிக்காமல் தன் பால்கனியில் இருந்து கார்த்திகாவின் பால்கனிக்குத் தாவினான். இருவரும் ஒருவருக்கொருவர் பார்த்துக் கொள்ள ஆரம்பித்தனர். ‘எப்டியோ என் அப்பாவ இம்ப்ரஸ் பண்ணிட்டீங்க’ கார்த்திகா கூற ‘நீங்க வேற, உங்க அப்பாகிட்ட சண்ட போடாம இருந்ததுக்கு சந்தோஷப்பட்டுக் கிட்டு இருக்கேன்’ மதன் கூற ‘ஏன் எங்க அப்பா என்ன செய்தார்?’ என்று கார்த்திகா கேட்க ‘அவரு நீங்க என்னதான் கத்தினாலும் ஸ்கூல் டீச்சர்ஸ் புதுசா எதையும் கத்துக்க மாட்டாங்கன்னு சொன்னாரே, ஒரு

எச்எம்மா இருந்துக்கொண்டு இப்படி சொல்றாருன்னு ரொம்ப வருத்தமாவும் கோபமாகவும் இருந்தது, ஆனா கொஞ்ச நேரம் கழிச்சு யோசிச்சுப் பாத்தா அதுதான் ரியாலிட்டின்னு புரிஞ்சது' மதன் கார்த்திகாவின் தந்தையைப் பாராட்டினான். 'எனக்கென்னமோ அவருக்கு உங்கள ரொம்ப புடிச்சிருக்கு நினைக்கிறேன், அவருக்குப் பொதுவாவே கம்யூனிசம் மேல ஒரு ஈடுபாடு உண்டு, வீட்ல பெரிய ஜோசப் ஸ்டாலின் போட்டோ மாட்டி வெச்சிருக்கார்' கார்த்திகா கூறினாள். 'எனக்குத் தெரிஞ்சு கம்யூனிஸ்டுகளே ஸ்டாலின ரோல் மாடலா எடுத்துக்குறது இல்ல, உங்க அப்பாவுக்கு எப்படி ஸ்டாலின பிடிச்சது?' மதன் கேட்க 'வீட்டுக்கு வர டீச்சர்ஸ் எங்க வீட்ல இருக்குற பெரிய ஸ்டாலின் போட்டோ பாத்து இந்தக் கேள்விய எங்க அப்பா கிட்ட நிறைய முறை கேட்டு இருக்காங்க, அதுக்கு எங்க அப்பா, ஸ்டாலின ஒரு டிக்டேட்டரா பாத்தா ஹிட்லரை விட இவர்தான் மோசமான டிக்டேட்டர், ஆனா இவர் மட்டும் இல்லாம இருந்திருந்தா ஜெர்மனி எப்படி பிரான்ஸ ஈஸியா ஜெயிச்சதோ அதேமாதிரி ரஷ்யாவையும் ஜெயிச்சிருக்கும் அப்படின்னு சொல்லுவாரு' கார்த்திகா பதில் கூறினாள். 'இன்ட்ரஸ்டிங், ஆமா, உங்க அம்மா ரொம்ப அமைதி போல? உங்க அம்மாவப் பாத்ததும் எனக்கு எங்க எய்ட்த் சயின்ஸ் டீச்சர் தான் நியாபகத்துக்கு வந்தாங்க, ஸ்டூடன்ஸ் எல்லோருக்கும் அவங்கள ரொம்பப் புடிக்கும், ஆனா அவங்களத்தான் பசங்க நிறைய ஏமாத்துவாங்க' மதன் தன்

நினைவுகளை அசை போட்டான். ‘எனக்கும் எங்க அம்மாவ பாத்தா ரொம்ப ஆச்சரியமா இருக்கும், ஸ்கூல்ல பசங்கள சமாளிக்குறதுன்றது எவ்வளவு கஷ்டம் தெரியுமா, ஆனாலும் எங்க அம்மா ஒரு வார்த்த கூட நெகட்டிவ்வாகச் சொல்ல மாட்டாங்க, என்கிட்டயும் சரி, அவங்க கிட்ட படிக்கிற பசங்க கிட்டவும் சரி, ஷி இஸ் தி ஐடியல் விமன் ஆப் எய்ட்டீஸ் அன்ட் நைன்டிஸ்’ கார்த்திகா தன் அம்மாவைப் பற்றிப் பெருமிதம் கொண்டாள். ‘உன் கிட்டப் பழக ஆரம்பிச்சப்போ ஒரு விஷயம் ரொம்ப ஆச்சரியமா இருந்துச்சு, எப்படி இந்தப் பொண்னு கொஞ்சம் கூட ஹெட் வெயிட் இல்லாம இருக்குன்னு, இப்பத்தான் தெரியுது அதுக்கு உங்க அம்மாதான் காரணம்னு’ மதன் கார்த்திகாவைப் பார்த்துக் கூறினான். ‘நான் ஒன்னும் என் அம்மா மாதிரி சாப்ட் இல்ல’ கார்த்திகா கோபப்படுவது போல் பாவனை காட்டியபடிக் கூறினாள். ‘அமைதியா இருக்கிறவங்க எல்லாம் சாப்ட் கேரக்டர்னு யார் சொன்னது, அவங்களுக்குள்ள வேற ஒரு மிருகம் இருக்கும்’ மதன் கூற ‘உங்களுக்கு எப்படித் தெரியும்?’ கார்த்திகா கேட்க ‘நானும் இன்ட்ரோவர்ட் தான்’ மதன் சிரித்தபடி கூற ‘நம்பிட்டேன்’ கார்த்திகா சிரித்துக்கொண்டே மதனின் கண்களைப் பார்க்க ஆரம்பித்தாள். ‘ஸ்டாப், நாட் அகெய்ன்’ மதனும் கார்த்திகாவின் கண்களைப் பார்த்துக் கொண்டே கூறினான். ‘நீங்க மட்டும் கயல் வீட்ல என்ன அப்படிப் பாத்தீங்க?’ கார்த்திகா மதனின் கண்களைப் பார்த்துக் கொண்டே கேட்க ‘புடவையில ரொம்ப அழகா

இருந்தீங்க பாத்துக்கிட்டே இருக்கணும்னு தோனுச்சு’ மதன் கூற ‘அப்ப புடவை தான் அழகா இருந்துச்சு நான் அழகா இல்ல?’ கார்த்திகா கேட்க ‘மறுபடியும்மா, சரி, இப்ப நான் என்ன சொன்னா சந்தோஷப்படுவீங்க’ மதன் கேட்க ‘கயல் வீட்ல ஏன் என்னோட லிப்ஸ் வேணும்னு கேட்டீங்க?’ கார்த்திகா கேட்க ‘நீங்க என்னோட ச்சின் வேணும்னு கேட்டீங்களா, அதான் உங்க பேஸ்ல எது அழகா இருக்குன்னு பாத்தேன், எல்லாமே அழகா தான் இருந்தது, ஆனா உங்க லிப்ஸ் ரொம்ப அழகாத் தெரிஞ்சது, அதான் சொன்னேன்’ மதன் கூற ‘அப்ப ஃபேஸ் மட்டும் தான் பாத்தீங்க?’ கார்த்திகா மீண்டும் மதன் கண்களை பார்த்தவாறு கேட்க ‘ஒரு பேச்சிலர்ட்ட கேட்குற கேள்வியாங்க இது?’ மதனும் கார்த்திகாவின் கண்களை பார்த்தபடிக் கேட்க ‘பேச்சிலர்ஸ் அடல்ட் கண்டன்ட் பக்கமே போறதில்ல பாருங்க, உண்மைய சொல்லுங்க, என் பேஸ் மட்டும் தான் அழகா இருக்கா?’ கார்த்திகா மதனை விடாமல் பார்த்துக் கொண்டே கேட்க ‘நைட் டிரஸ்ல, கொஞ்சம் மெதப்பா, பப்ளியா, க்யூட்டா இருக்கீங்க’ மதன் கூற ‘முகத்த மட்டும் தான் பாத்து பேசிக்கிட்டிருந்தா மாதிரி இருந்தது, ஃபுல் பாடி ஸ்கேன் பண்ணியாச்சா?’ கார்த்திகா கேட்க ‘நீங்க வந்ததுல இருந்து அத்தான பண்ணிட்டிருக்கேன்’ மதன் கூற ‘ச்சீ, இந்த நெர்ட் பசங்கள மட்டும் நம்பவே கூடாது, ஒன்னுமே தெரியாத மாதிரி இருந்துட்டு எல்லா வேலையும் பண்றது’ கார்த்திகா கோபப்படுவது போல் நடித்தாள். ‘உள்ள இருக்குறத சொன்னாலும் தப்பு,

சொல்லலைன்னாலும் தப்பு, யூ கேர்ல்ஸ் ஆர் சோ காம்ப்ளக்ஸ்’ மதன் கூற ‘ஆமாம், நாங்க காம்ப்ளக்ஸ், நீங்க ரொம்ப சிம்பிள், வேணாம், வாய கிளராதீங்க’ கார்த்திகா மதனை எச்சரித்தாள். ‘அதெப்படிங்க கோபப்படும் போது கூட அழகா இருக்கீங்க’ மதன் கார்த்திகாவை சமாதானப்படுத்த முயற்சித்தான். ‘போதும், ஆல்ரெடி குளிருது’ கார்த்திகா கூற ‘ஆமாங்க எனக்கும் லைட்டா குளிருது’ மதன் சொல்லிக்கொண்டே கார்த்திகாவை நெருங்கி வர ‘வேணாம், கிட்ட வராதீங்க, வி ஆர் ஸ்டில் ப்ரண்ட்ஸ், பார்டர் கிராஸ் பண்ணக்கூடாது’ என்று சொல்லிக்கொண்டே கார்த்திகாவும் மதனை நெருங்கி வர ‘நீங்க மட்டும் கிட்ட வரீங்க?’ மதன் கார்த்திகாவைப் பார்த்தபடி கேட்க ‘அதுவா, நீங்க கண்ட்ரோலா இருக்கீங்களா இல்லையான்னு செக் பண்றேன்’ கார்த்திகா மதனுக்கு மிகவும் நெருக்கத்தில் வந்து கூற ‘ரொம்ப கஷ்டப்பட்டு கன்ட்ரோல் பண்ணிக்கிட்டு இருக்கேன், இன்னும் கொஞ்ச நேரம் இப்படியே போனோம்னா கண்டிப்பா பார்டர் கிராஸ் பண்ணிடுவேன், ரொமான்ஸ் பண்றத இன்னொரு நாளைக்கு கண்டினியூ பண்ணலாமா?’ மதன் சிறிது பயத்துடன் கேட்க கார்த்திகா மதனை விட்டுச் சற்று விலகினாள் ‘கொஞ்சம் ஓவராத்தான் போயிட்டு இருக்கோமோ’ கார்த்திகா மதனைப் பார்த்தபடி கேட்க ‘விட்டிருந்தா என் விர்ஜினிட்டிய வேட்டையாடி இருப்பீங்க’ மதன் பயத்துடன் கூற கார்த்திகா சிரித்துவிட்டாள். கார்த்திகா சிரிப்பதைப் பார்த்து மதனும் புன்னகைத்தான். ‘இட்ஸ் ஆல்ரெடி மிட்நைட் த்ரீ

தர்ட்டி, உங்களுக்கு தூக்கம் வரலையா?’ மதன் கேட்க ‘லைட்டா வருது, உங்களுக்கு?’ கார்த்திகா மதனைக் கேட்க ‘எனக்கும்தான், ஆறு மணிக்கு வேற எழனும், தூங்கப் போலாமா’ மதன் கேட்க ‘ஆமாம், கொஞ்ச நேரமாச்சும் தூங்கனும், இல்லைன்னா அப்பா நான் தூங்கலைன்னு கண்டுபிடிச்சுடுவாரு’ கார்த்திகா கூற ‘உங்களுக்கு உங்க அப்பா பயம், எனக்கு சுரேஷ் பயம், நாம இவ்வளவு நேரம் பேசியது சுரேஷுக்கும் தீப்திக்கும் தெரிஞ்சது, செத்தோம், ரெண்டு பேரும் நம்மல கலாய்ச்சே கொன்றுவாங்க’ மதன் கூற ‘இந்த தீப்தி வேற கயல் கிட்ட செல்லிட்டான்னா அவ டெய்லி போன் போட்டு கலாய்ப்பா, தீப்தியும் சுரேஷும் நல்லாத் தூங்கிக் கிட்டு இருக்காங்க, அவங்கள டிஸ்டர்ப் பண்ணாம போய்ப் படுத்துக்கலாம், ஓக்கேவா’ கார்த்திகா கூற ‘ஓக்கே, அப்ப நான் என் ரூமுக்குப் போறேன்’ என்று சொல்லிவிட்டு மதன் தன் பால்கனிக்கு மெதுவாகச் சிறு சத்தம் கூட வராமல் தாவினான். மதனும் கார்த்திகாவும் கண்ணாடிக் கதவுகள் முன் நின்றனர். உள்ளே செல்வதற்கு முன் மதன் கார்த்திகாவைப் பார்த்து ‘குட் நைட்’ என்று மெதுவாகக் கூறினான். கார்த்திகாவும் மதனைப் பார்த்து ‘ஸ்வீட் ட்ரீம்ஸ்’ என்று கூறினாள். இருவரும் ரூம் உள்ளே சென்று மிகவும் மெதுவாக பால்கனி கண்ணாடிக் கதவுகளை மூடி விளக்குகளை அணைத்துவிட்டுப் படுத்துக்கொண்டனர்.

‘மச்சி எழுந்துட்றா, ஆல்ரெடி சிக்ஸ் பிப்டீன், தீப்தியும் கார்த்திகாவும் வெயிட் பண்ணிட்டு இருக்காங்க’ சுரேஷ் மதனை எழுப்பிக்

கொண்டிருந்தான். ‘சிக்ஸ் பிப்டீனா, நாம கோயிலுக்குப் போறதுக்குள்ள கல்யாணம் முடிஞ்சிடும், இங்கயே இருக்கலாம்’ மதன் அரைத் தூக்கத்தில் இருந்தான். ‘எத்தன மணிக்குத் தூங்குனான்னு தெரியல, நீ வரலைன்னா நான் மட்டும் போறேன் டா’ சுரேஷ் தன்னை தயார்படுத்திக் கொண்டே கூறினான். ‘பாடு தூங்க விடமாட்டியாடா’ என்று மதன் புலம்பியவாறே பாத்ரூமுக்குள் சென்றான். சிறிது நேரத்தில் மதனும் நீல நிற டீ ஷர்ட், கருமை நிற ஜீன்ஸ் போட்டுக்கொண்டு அவசர அவசரமாக தயாரானான். சுரேஷும் நேவி ப்ளூ ஜீன்ஸ், வெண்மை நிறத்தில் கருமை நிர ஸ்ரிப்ஸ் கொண்ட செக்ட் சர்டில் தயாராகி இருந்தான். இருவரும் ஹோட்டல் ரூம் கதவுகளை மூடி விட்டு விரைவாக சுரேஷின் கார் இருக்கும் இடத்தை நோக்கி ஓடினர். அங்கே தீப்தியும் சுரேஷைப்போல் வெண்மை நிறத்தில் கருமை நிற ஸ்ரிப்ஸ் கொண்ட செக்ட் கவுனிலும் கார்த்திகா ஆரஞ்ச் நிற ஷார்ட் குர்தி, கருமை நிற ஜீன்ஸ் போட்டுக்கொண்டு நின்றிருந்தனர். ‘டேய், பேசி வெச்சி ப்ளாக் அண்ட் வைட்ல இருக்கீங்களா?’ மதன் சுரேஷைப் பார்த்துக் கேட்க ‘நீங்க மட்டும் என்ன, பேசி வச்சுக்கிட்டுத் தான பிளாக் ஜீன்ஸ்ல இருக்கீங்க’ சுரேஷும் மதனிடம் எதிர்க் கேள்வி கேட்டான். ‘எவ்ளோ நேரம் வெயிட் பண்றது கல்யாணம் முடிஞ்சிடப் போகுது’ கார்த்திகா சுரேஷிடம் கேட்க ‘இவன் கிட்ட கேளுங்க, நாய் எத்தன மணிக்கு தூங்குனான்னு தெரியல, பேக்ல இருந்து லேப்டாப் கூட வெளிய

எடுக்காம அவ்வளவு நேரம் என்ன பண்ணிட்டிருந்தான்னும் தெரியல' சுரேஷ் சொல்லிக்கொண்டே காரை ஸ்டார்ட் செய்து நகர்த்தினான். சுரேஷ் சொன்னவுடன் முன்னே உட்கார்ந்திருந்த மதன் ரியர் வியூ மிரரில் பின்னால் இருந்த கார்த்திகாவைப் பார்க்க கார்த்திகா ரியர் வியூ மிரரில் மதனைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்தாள். ஒருவழியாகத் தாலி கட்டுவதற்குள் நால்வரும் கோவிலுக்குள் வந்து சேர்ந்தனர். அங்கு கார்த்திகாவின் பெற்றோர் நின்றுகொண்டிருக்க அவர்களிடம் கார்த்திகா தான் வந்துவிட்டதைக் கை அசைத்து உணர்த்தினாள். அவர்களும் நால்வரையும் பார்த்துப் புன்னகைத்தனர். சன்னிதியின் அருகில் நின்றிருந்த குருவும் நால்வரும் வந்ததைக் கண்டு புன்னகைத்தான், பக்கத்தில் நின்றிருந்த கயல் கார்த்திகாவைப் பார்த்து எத்தனை மணிக்கு வருவது என்பதைப்போல் கைகளால் சைகை காட்டினாள். கார்த்திகா அதற்கு மன்னிப்பு கேட்பது போல் தன் காதுகளைப் பிடித்துக்கொண்டு தோப்புக்கரணம் போடுவது போல் பாவனை காட்டினாள்.
ஒருவழியாக புரோகிதர் பூஜை முடித்து தாலியை வந்திருந்த எல்லோரிடமும் எடுத்துச் செல்லும்படி உத்தரவிட்டார். எல்லோரும் தாலியைத் தொட்டுக் கொடுத்தபின் கெட்டிமேளம் முழங்க குரு கயலின் கழுத்தில் முதல் முடிச்சு போட மற்ற இரண்டு முடிச்சுகளை குருவின் அக்காமாரும் அண்ணியார்களும் சேர்ந்து நின்று போட்டனர். தலை குனிந்திருந்த கயலின் கண்களில் கண்ணீர்

மிதந்தது, அதை உணர்ந்த குரு தன் கையில் இருந்த வெள்ளை நிற கைக்குட்டையை யாரும் கவனிக்காத போது கயலின் கையில் செருகினான். கயலும் தலை குனிந்த வாறே சட்டெனத் தன் கண்களைத் துடைத்துக் கொண்டு புன்னகைத்தபடி தலை நிமிர்ந்தாள். திருமணம் முடிந்ததும் நேராகப் புது தம்பதியினரைப் பழனிக்கு அழைத்துச் செல்ல ஏற்பாடு செய்தனர். தம்பதிகளின் அருகில் நால்வரும் வந்தனர். ‘தாலி கட்டும்போது தான் வருவியா?’ கயல் கார்த்திகாவைப் பார்த்து கோபப்பட ‘நான்தான் சாரி சொல்லிட்டேன்ல’ என்றாள் கார்த்திகா. ‘நைட்டெல்லாம் தூக்கமே இல்ல, கல்யாணம் முடிஞ்சதும் கொஞ்சம் தூங்கலாம்னு பாத்தா இந்தப் பெருசுங்க வேற பழனிக்குப் போகலாம்னு பிளான் பண்ணுதுங்க, அங்க போயிட்டு எப்ப திரும்ப வந்து’ கயல் புலம்ப ஆரம்பித்தாள். ‘இன்னைக்கு ஒரு நாள்தான, அட்ஜஸ்ட் பண்ணிக்கோ டி’ கார்த்திகா சமாதானப் படுத்தினாள்.

புதுமண தம்பதிகள் தங்கள் சொந்தங்களுடன் பழனிக்குக் கிளம்பினர். கார்த்திகா, மதன், சுரேஷ்,தீப்தி ஆகியோர் நின்றுகொண்டிருந்த இடத்திற்குக் கார்த்திகாவின் பெற்றோர் வந்தனர். ‘நைட் தூங்கல, இல்ல?’ கார்த்திகாவின் அப்பா வந்தவுடன் கார்த்திகாவைப் பார்த்துக் கேட்டார். ‘அது வந்து பா, தீப்தி கூடப் பேசிக்கிட்டு இருந்தேன், டைம் போனதே தெரியல’ கார்த்திகா தீப்தியைப் பார்த்துக்கொண்டே தன் தந்தையிடம் கூறினாள். ‘அங்கிள், அக்கா தூங்கலைன்னு எப்படி

கண்டுபிடிச்சீங்க?' தீப்தி கார்த்திகா அப்பாவிடம் கேட்க 'வந்ததில இருந்து அவ உன் மேல கைய வெச்சிக்கிட்டு கொட்டாவி விட்டுக்கிட்டு இருக்கா, சரியாத் தூங்காதவங்கத்தான் அப்படி பண்ணுவாங்க, என் ஸ்டூடன்ஸ் எத்தனை பேர் பாத்திருப்பேன்' கார்த்திகா அப்பா விவரித்தார். 'அப்போ எங்க நாலு பேருல வேற யார்லாம் தூங்கலன்னு சொல்லுங்க பாப்போம்?' தீப்தி கார்த்திகா அப்பாவைக் கேட்க 'நீங்க வந்ததுல இருந்து நான் என் பொண்ண மட்டும்தாம்மா கவனிச்சுக்கிட்டு இருந்தேன், மத்தவங்கல கவனிக்கலையே' கார்த்திகா அப்பா கூற 'சும்மாதான் கேட்டேன் அங்கிள், நானும் அக்கா கூட நைட்டெல்லாம் பேசிக்கிட்டு இருந்தேனா, அதனால நீங்க சொன்ன சிம்டம்ஸ் எனக்கும் பொருந்துச்சான்னு டெஸ்ட் பண்ணிக்கக் கேட்டேன்' தீப்தி கார்த்திகாவைப் பார்த்தவாறு சிரித்துக்கொண்டே கூறினாள். 'சரி வாங்க சாப்பிடப் போகலாம்' கார்த்திகா அப்பா நால்வரையும் கூப்பிட 'நீங்க முன்னாடி போய்க்கிட்டே இருங்க சார், ஒரு சின்ன பஞ்சாயத்து, முடிச்சிட்டு வந்துட்றோம்' சுரேஷ் மதனைப் பார்த்தவாறு கார்த்திகா அப்பாவிடம் கூறினான். கார்த்திகாவின் பெற்றோர் சாப்பிடச் சென்றனர்.

'மாட்னிங்களா ரெண்டு பேரும், எனக்கு அப்பவே டவுட்டு, இவன் லேப்டாப் வெளியே எடுக்கல, வழக்கமா இவந்தான் என்னத் திட்டி எழுப்புவான், நைட் தூங்காம அப்படி என்ன பண்ணிக்கிட்டு

இருந்தான்னு அப்பவே தோனுச்சு, வர அவசரத்துல விட்டுட்டேன், இப்பத்தான் தெரியுது ரெண்டு பேரும் நைட் டியூட்டி பாத்திருக்கீங்க ன்னு' சுரேஷ் மதனையும் கார்த்திகாவையும் பார்த்து கூற 'அந்த சீன் இல்ல, தூக்கம் வராம சும்மா பால்கனி பக்கம் போனேன், கார்த்திகாவும் அவங்க ரூம் பால்கனியில நின்னுட்டு இருந்தாங்க, பேசிக்கிட்டு இருந்ததுல டைம் போனதே தெரியல, தூங்க லேட் ஆயிடுச்சு, அவ்வளவுதான்' மதன் சமாளித்தான். 'அதான் ரீசன் சொல்லிட்டோம்ல, பஞ்சாயத்த முடிச்சிக்குவோம் அடுத்து என்ன பிளான்?' கார்த்திகா சமாளித்தவாறே கேட்க 'பூகம்பமே வெடிச்சாலும் ரெண்டு பேரும் ஒன்னுமே நடக்காத மாதிரி சமாளிக்கறீங்கடா, நல்லாயிருங்க, அடுத்து என்ன, நேரா சென்னைதான்' சுரேஷ் கூற 'கார்த்திகா அக்கா அவங்க வீட்டுக்குப் போயிட்டு வருவாங்க போல' தீப்தி கார்த்திகாவைப் பார்த்துக் கூற 'வரும்போது வீட்டுக்கு வந்துட்டு இங்க வர மாதிரி பிளான், அது சொதப்பிடுச்சு, இப்ப நேரா நான் சென்னை போறேன்னு சொன்னா அப்படியே போயிடு வீட்டுப்பக்கம் வந்துராதன்பாங்க' கார்த்திகா கூறினாள். 'முதல்ல போய்ச் சாப்பிடலாம் பசிக்குது' மதன் கூற நால்வரும் சாப்பிட பந்திக்குச் சென்றனர்.

சாப்பிட்டு முடித்துவிட்டு நால்வரும் கார்த்திகாவின் பெற்றோரும் சுரேஷ் கார் இருக்கும் இடத்தை நோக்கி நடந்தனர். 'என் பொண்ணு சென்னைல எப்படி இருக்காளோன்னு டெய்லி யோசிப்போம்,

அதுவும் கயல் ரூமை விட்டுப் போறான்னு தெரிஞ்சதும் இவ எங்க போய்த் தங்கப்போராளோன்னு இருந்துச்சு, ஆனா இப்ப என் பொண்ணையும் பாத்துக்க ப்ரண்ஸுங்க மூனு பேர் இருக்கீங்கன்னு நிம்மதியா இருக்கு, கார்த்திகாவ நல்லாப் பாத்துக்கோ தீப்தி' கார்த்திகாவின் அம்மா தீப்தியைப் பார்த்துக் கூறினார். 'அய்யோ ஆண்டி, அக்காதான் என்ன பாத்துக்குறாங்க, அது மட்டும் இல்லாம அக்காவோட பிரெண்டுக்கு ஒன்னுன்னா ஓடிவந்தவங்க அக்காவுக்கு ஒண்ணுன்னா சும்மா விடுவாங்களா, நீங்க கவலைப்படாதீங்க' தீப்தி ஆறுதலாகக் கார்த்திகா அம்மாவிடம் பேசினாள். 'ஏம்பா சுரேஷ், சண்டே மார்னிங், இப்பத்தான் எட்டு பத்து ஆகுது, இப்பவே மெட்ராஸ் போய் என்ன பண்ணப் போறீங்க, வாங்க எங்க வீட்டுக்குப் போகலாம்' கார்த்திகாவின் அப்பா மூவரையும் தன் வீட்டிற்கு அழைத்தார். 'இருக்கட்டும் சார், இன்னொரு நாள் நிதானமா வறோம், கொஞ்சம் வொர்க் இருக்கு' மதன் பதிலளிக்க 'எப்படியும் லேப்டாப்ல தான வொர்க் பண்ண போறீங்க, அத எங்க வீட்ல வந்து பண்ணுங்க, டேட்டா கார்டு எல்லாம் நான் எடுத்துட்டு வந்திருக்கேன்' கார்த்திகா மதனை முறைத்தவாறு கூற 'அது வந்து' மதன் ஆரம்பிப்பதற்குள் 'அதெல்லாம் இருக்கட்டும் தம்பி, உங்க மூனு பேருக்கும் இன்னைக்கு நைட் எங்க வீட்ல தான் விருந்து' கார்த்திகா அப்பா கூற 'நைட் ஸ்டேயா, நாளைக்கு ஆபீஸ் போகணும் சார்' மதன் கூற 'காலைல நாலு மணிக்குக் கிளம்பினா மதியம் ஒன் ஆகுறதுக்குள்ள நேரா

ஆபீஸ் போயிடலாம்’ கார்த்திகா பிடிவாதமாக மதனைப் பார்த்துக் கூறினாள். மதன் அதற்கு மேல் எதுவும் பேசவில்லை. ‘ஓகே, நீங்க போய் கார்ல உட்காருங்க, குரு ப்ரண்ஸ்சும் கயல் ப்ரன்ஸ்சும் அங்க நின்னுக்கிட்டு இருக்காங்க, அவங்க கிட்ட போய் நாங்க கிளம்புறோம்னு சொல்லிட்டு வந்துடறோம்’ என்று சுரேஷ் கார்த்திகாவின் பெற்றோர்களை காரில் அமரச் சொன்னான். அவர்களும் காரில் அமர்ந்தனர். அப்பொழுதும் கார்த்திகா மதனை முறைத்தவாறே இருந்தாள். ‘இன்னும் லவ்வர்ஸ்னு கூட டிக்லர் செஞ்சிக்கல, அதுக்குள்ள ஸ்டார்ட் ஆயிடுச்சா, வெல்கம் டு த கிளப் மச்சி’ சுரேஷ் மதனைப் பார்த்துச் சொல்லும்போது யாரோ தலையில் தட்டியது போல் இருந்தது. பின்னால் தீப்தி, ‘பெரிய அப்பாவிங்க கிளப், வெல்கம் பண்றாரு, போங்க, போய்ச் சொல்லிட்டுக் கெளம்பலாம்’ தீப்தி சுரேஷை மிரட்டிவிட்டு கார்த்திகாவிடம் சென்றாள். ‘நீ சொன்னாலும் சொல்லலைன்னாலும் லவ் பண்றவனுங்க எல்லாம் அப்பாவிங்க தாண்டி’ சுரேஷ் சொல்லிக்கொண்டே மதனின் தோளில் கை போட்டுக்கொண்டு குருவின் நண்பர்களிடம் மதனை அழைத்துக் கொண்டு சென்றான்.

குரு, கயலின் நண்பர்களிடம் விடைபெற்றுக்கொண்டு நால்வரும் காருக்கு வந்தனர். அங்கு கார்த்திகாவின் அப்பா காரின் பின்புறம் பொருட்கள் வைக்கும் இடத்தில் நன்றாகக் கால்களை நீட்டியவாறு இருந்தார். கார்த்திகாவின் அம்மா காரின் பின் இருக்கையில் இடது

புறம் அமர்ந்திருந்தார். தீப்தி பின் இருக்கையில் நடுவில் வந்து அமர்ந்தாள். கார்த்திகா பின் இருக்கையில் வலது புறம் வந்து அமர்ந்தாள். மதன் காரின் முன் இருக்கையில் இடது புறம் அமர சுரேஷ் காரை ஓட்டத் தொடங்கினான். ‘ரூட் தெரியுமா, இல்ல சொல்லட்டுமா தம்பி’ என்று கார்த்திகாவின் அப்பா சுரேஷைப் பார்த்துக் கேட்க ‘கூகிள் மேப்ஸ் இருக்கு சார், கரெக்டா ஒன் அண்ட் ஆப் ஆர்ஸ்ல போயிடலாம்’ சுரேஷ் சொல்லிக்கொண்டே காரை ஓட்டினான்.

**தொடரும்..**

# அதையும் தாண்டி புனிதமானது

காரின் முன்னால் பார்த்துக் கொண்டு வந்த மதனுக்குத் திடீரென்று ரியர் வியூவ் மிரரைப் பார்க்கத் தோன்றியது, யாரும் பார்க்காதவாறு மிரரைப் பார்க்க கார்த்திகா மதனைப் பார்த்தவாறே இருந்ததைக் கண்டான். மதனைப் பார்த்ததும் கார்த்திகா வேறு இடத்தைப் பார்க்கத் தொடங்கினாள். மதன் சிறிய புன்முறுவலுடன் மிரரைப் பார்த்தவாறே இருந்தான். சில நொடிகள் கழித்து கார்த்திகா யாரும் பார்க்காதவாறு மீண்டும் மிரரைப் பார்க்க, அங்கே மதன் தன்னையே பார்த்துக் கொண்டு இருப்பதைக் கவனித்தாள். இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டு இருந்தனர். கார்த்திகா ஏன் என்னைப் பார்க்கிறாய் என்று தன் புருவத்தை உயர்த்திக் கண்களாலேயே கேட்டாள். அதற்கு மதன் நீதான் என்னை முதலில் பார்த்துக் கொண்டிருந்தாய் என்று கண்களாலேயே பதில் கூறினான். நான் உன் மீது கோபமாக இருக்கிறேன் என்னைப் பார்க்காதே என்றவாறு கண்ணசைத்துவிட்டுத் திரும்பிக்கொண்டாள். மதன் தன் நிலையை நினைத்துச் சிரித்தவாறு காரின் முன்னால் பார்க்கத் தொடர்ந்தான்.

கார்த்திகாவின் வீடு வந்தது. ஒரு அடர்ந்த மலைகளின் நடுவே அடர்ந்த காட்டில் செல்லும் ஒரு சாலையின் வழியில் அவள் வீடு இருந்தது. வீட்டின் பின்புறம் அடர்ந்த காடுகள், பார்ப்பதற்கு மிக

ரம்மியமாக இருந்தது. வீட்டின் முன்புறம் இருந்த வாழைத்தோட்டம், இரு புறங்களிலும் இருந்த வெற்றிலைத் தோட்டங்கள், தோட்டங்களைச் சுற்றி இருந்த பாக்கு மரங்களும் பார்க்க மிக அழகாக இருந்தன. ‘சார், இது மாதிரி இடத்துல வாழ கொடுத்து வச்சிருக்கனும்’ காரை விட்டு இறங்கிய சுரேஷ் கார்த்திகாவின் அப்பாவைப் பார்த்துக் கூறினான். ‘எங்க வீட்டுக்கு வரவங்க எல்லாரும் சொல்றது தான், ஆனா இங்கயும் கஷ்டம் இருக்கு தம்பி, நாலு கிலோமீட்டர் போனாத்தான் ஊரு வரும், மெட்ராஸ்ல இருக்கிற மாதிரி நாம நெனச்சப்ப எது வேண்டுமானாலும் போய் வாங்கிட்டு வர முடியாது, யான, சிறுத்த புலி, பாம்பு, எப்ப எங்க நுழையும்னு தெரியாது’ கார்த்திகாவின் அப்பா கூற ‘ஊருக்குள்ள வீடு வாங்கி இருந்தா இந்த பிரச்சனை இருந்திருக்காதே சார்’ மதன் தன் வினாவை எழுப்பினான் ‘இது என் அப்பாவோட இடம்’ கார்த்திகாவின் அப்பா ஏதோ சொல்ல வந்து சொல்லாமல் நிறுத்திவிட்டார். ‘இங்கிருந்து உங்க ஸ்கூல் எவ்வளவு தூரம் சார்’ சுரேஷ் கேட்க ‘எப்படியும் ஆறு கிலோமீட்டர் இருக்கும்’ என்று கார்த்திகா அப்பா கூறினார். ‘சரி வெளியவே நின்னு பேசிட்டு இருந்தா எப்படி, உள்ளே வாங்க’ கார்த்திகாவின் அம்மா அனைவரையும் வீட்டின் உள்ளே அழைத்தார்.

கார்த்திகாவின் அம்மாவும் அப்பாவும் முன்னே உள்ளே சென்றனர். சுரேஷ், தீப்தி, கார்த்திகா மூவரும் வீட்டின் அருகே சென்றனர். அப்போது காரின் அருகே நின்று கொண்டிருந்த மதனைப் பார்த்து

‘வாடா உள்ள போலாம், ஏன் அங்கயே நிக்கிற’ சுரேஷ் கேட்க ‘நீங்க போங்கடா, லேப்டாப் பேக் எடுத்துட்டு வர்றேன்’ மதன் கூறியதைக் கேட்டதும் கார்த்திகா வேகமாக உள்ளே சென்றாள். சுரேஷும் தீப்தியும் வீட்டின் உள்ளே நுழைகையில் கார்த்திகா வீட்டின் உள்ளிருந்து வந்துகொண்டே ‘உள்ள உட்காருங்க, கார்ல இருந்து பேக்ஸ் எல்லாம் எடுத்துட்டு வந்துர்றேன்’ சொல்லிவிட்டு காரின் அருகில் சென்றாள். சுரேஷும் தீப்தியும் ஒருவரை ஒருவர் பார்த்துப் புன்னகைத்து விட்டு உள்ளே சென்று உட்கார்ந்தனர். கார்த்திகா காரின் பின்னால் சென்று தன் பெற்றோர் எடுத்து வந்த பைகளை எடுக்க மதனின் பின்னால் வந்து நின்றாள். மதன் தன் லேப்டாப் பேகைக் கையில் எடுத்துக் கொண்டு திரும்ப கார்த்திகா தன் கைகளைக் கட்டியவாறு நின்றிருந்தாள். கார்த்திகா எதுவும் பேசவில்லை, மதன் ஒதுங்கி நிற்க கார்த்திகா தன் பைகளை எடுத்தாள். ‘என் மேல கோவமா இருக்கீங்க போல’ மதன் ஆரம்பிக்க ‘ஆமாம்’ கார்த்திகா பதில் அளித்தாள். ‘ரீசனே சொல்லாம பொண்ணுங்க கோபப்படுவாங்கன்னு கேள்விப்பட்டிருக்கேன், இப்பத்தான் பார்க்கிறேன்’ மதன் சொல்ல ‘ரீசனே தெரியாதமாதிரி பசங்க நடிப்பாங்கன்னு நானும் கேள்விப்பட்டிருக்கேன், இப்பத்தான் பார்க்கிறேன்’ கார்த்திகாவும் பதிலடி கொடுத்தாள். ‘சரி ஏதாச்சும் ஒரு க்ளூ கொடுங்க, என்ன நடிக்கிறேன்னு நானும் தெரிஞ்சிக்கிறேன்’ மதன் கேட்க ‘எங்க வீட்டுக்கு வர உங்களுக்கு அப்படி என்ன

கஷ்டம்?’ கார்த்திகா கேட்க ‘அது, அது வந்து, அது உங்களுக்குச் சொன்னாப் புரியாது’ மதன் கூற ‘எக்ஸ்க்யூஸ் மீ? நான் ஒன்னும் சின்ன கொழந்த இல்ல’ கார்த்திகா மதனை முறைத்தவாறே கேட்டாள். ‘ஒக்கே பைன், இட் வாஸ் மை மிஸ்டேக், நான் அப்படிப் பேசியிருக்கக் கூடாது, இப்ப நான் என்ன பண்ணா நீங்க பத்ரகாளி மோடில் இருந்து நார்மல் மோடுக்கு வருவீங்க’ மதன் கேட்க கார்த்திகாவால் சிரிப்பை அடக்க முடியவில்லை, மதன் தான் சிரிப்பதை கவனித்து விடக்கூடாது என்று சட்டென்று திரும்பிக் கொண்டு தான் எடுக்க வந்த பைகளை எடுத்தாள். ஒருவழியாகச் சிரிப்பை அடக்கிக்கொண்டு மீண்டும் கோபத்துடன் இருப்பதைப் போல் முகத்தை வைத்துக் கொண்டு மதனை ஒரு பார்வை பார்த்துவிட்டு வீட்டை நோக்கி நடந்தாள். மதனும் காரின் பின்புறக் கதவை மூடிவிட்டு கார்த்திகாவின் பின்னால் நடந்து வந்தான். வீட்டின் வாசப்படி அருகில் வரும்போது கார்த்திகா திரும்பி மதனைப் பார்த்து ‘உங்களுக்குத் தெரிஞ்சிருக்கும்னு நினைக்கிறேன், ஒருத்தர் வீட்டுக்குப் புதுசா வரும்போது வலது கால் எடுத்து வச்சு வரணும், என்னதான் ஏத்திஸ்டா இருந்தாலும் மத்தவங்க நம்புறத மதிப்பீங்கன்னு நினைக்கிறேன்’ என்று கூற அதற்கு மதன் ‘அத கொஞ்சம் சிரிச்சுக்கிட்டே சொல்லலாம்ல’ கூறியதும் கார்த்திகா மீண்டும் சட்டெனத் திரும்பிக்கொண்டு சிறு புன்னகையுடன் வீட்டின் உள்ளே சென்றாள். கார்த்திகா சிரித்துக்கொண்டே சென்றதை

சுரேஷும் தீப்தியும் கவனித்தார்கள். மதன் கார்த்திகா கட்டளையிட்டபடி தன் வலது காலை எடுத்து வைத்து வீட்டிற்குள் வர அங்கே சுரேஷும் தீப்தியும் அமர்ந்திருந்தார்கள். மதன் அமைதியாக சுரேஷின் பக்கத்தில் வந்து அமர்ந்தான்.

‘என்னடா, கால்ல விழுந்தியா’ சுரேஷ் மதனைக் கேட்க ‘தெய்வம்டா நீ, எப்புட்றா’ மதன் சுரேஷைப் பார்த்து வியந்தான். ‘எல்லாம் இவ கொடுத்த ட்ரெய்னிங் தான்’ சுரேஷ் தீப்தியைப் பார்த்துச் சொல்லிக்கொண்டிருக்க தீப்தியிடம் இருந்து ஒரு அடி கிடைத்தது. ‘கார்த்திகா சமாதானமாயிட்டாங்க போல’ சுரேஷ் கூற ‘எங்கடா, இன்னும் கோவமாத் தான் இருக்கா’ மதன் கூற ‘பாத்தா அப்படித் தெரியலையே, சிரிச்சிக்கிட்டே உள்ள போனாங்க?’ சுரேஷ் கூற ‘அப்படியா?’ மதன் கூற ‘கோபத்துக்கு ரீசன் தெரிஞ்சதா?’ சுரேஷ் கேட்க ‘அவங்க அப்பா வீட்டுக்குக் கூப்ட உடனே நான் வரலையாம்’ மதன் கூற ‘ஆமா, அங்க அப்படிக் கட்டையைப் போட்டா, கோபப்படாமல் என்ன செய்வாங்களாம்’ சுரேஷ் கூற ‘என்னடா நீயும் அவள மாதிரியே பேசுர, எனக்கு அவ மேல ஒரு ஃபீலிங் இருக்குடா, அது ப்ரண்ட்ஷிப் இல்ல, என்னால கேவலமா ப்ரண்ட் மாதிரியெல்லாம் நடிக்க முடியாது, அவங்க வீட்டுக்கு வந்து நான் அவகிட்ட பழகுற விதத்தைப் பார்த்து அவங்க அப்பா அம்மா வேற மாதிரிப் புரிஞ்சிக்கிட்டாத் தேவையில்லாத பிரச்சனை, அதனாலத்தான் நான் வரலைன்னு சொன்னேன்’ மதன் கூற

‘சில்லியான ரீசன், அவங்க ஒன்னும் உன்ன கார்த்திகாவேட பர்ஸ்ட் டைம் பாக்கல, ஆல்ரெடி ஆபீஸ் வைரல் வீடியோல பாத்திருக்காங்க, கல்யாணத்துல பாத்திருக்காங்க, அப்ப வராத சந்தேகம் இப்ப வரப்போகுதா, அப்படி வந்தாலும் தப்பில்ல, ரொம்ப நாள் இழுத்தடிக்காம அடுத்த லெவலுக்குப் போவீங்க’ சுரேஷ் கூற ‘என்னத்தான் இருந்தாலும் கல்யாணத்துக்கு இருக்குற ஒரு பொண்ணு தங்கியிருக்குற வீட்ல நைட் ஸ்டே பண்றது தப்புடா’ மதன் கூற ‘ஆதிவாசி, நீயெல்லாம் மில்லினியத்துக்கு வரவேயில்லையாடா, பயங்கர கன்சர்வேட்டிவ்டா நீ’ சுரேஷ் கூற ‘நாளைக்கு உனக்கு ஒரு பொண்னு பொறந்து கல்யாணத்துக்கு இருக்குறப்ப ஒரு பையன கூட்டிட்டு வந்து நைட் தங்கவெச்சா அப்ப தெரியும்டா யார் கன்சர்வேட்டிவ்னு’ மதன் கூற ‘அண்ணா, நீங்க சொல்றபடிப் பார்த்தாலும் கார்த்திகா அக்கா ஒன்னும் உங்கள கூட்டிட்டு வரலையே, அவங்க பேரன்ஸ்தான உங்கள கூப்பிட்டாங்க, அப்ப அவங்க பொண்ணு மேல அவ்வளவு நம்பிக்க வெச்சிருக்காங்க, கமான் மதன் அண்ணா, பெத்த பொண்ணு மேல நம்பிக்க இல்லாதவங்கதான் உங்களமாதிரி யோசிப்பாங்க’ தீப்தி மதனை மடக்கினாள். ‘மாப்ள, கிவப், அவளோடது வேலிட் பாண்ட்’ சுரேஷ் மதனை சமாதானப்படுத்தினான். மதன் சற்றுக் குழப்பத்துடன் அமைதியானான்.

மதன் அவனிடத்தில் எந்தத் தவறும் இல்லை என்றாலும் தவறு செய்கிறோம் என்கிற குற்ற உணர்வில் இருந்தான். சுரேஷும் தீப்தியும் கூறிய வார்த்தைகள் மதனின் பதற்றத்தைச் சற்று குறைத்தது. மதன் கார்த்திகாவின் வீட்டின் உட்புறத்தைச் சற்றே சுற்றிப் பார்த்தான். கயல் வீட்டைப் போல் பிரம்மாண்டமானதாக இல்லாவிட்டாலும் மதனின் வீட்டைப்போல் நல்ல வசதியுடன் இருந்தது. நுழைவாயிலில் இருந்து இடதுபுறத்தில் சமையல் அறையும் அதன் பக்கத்தில் ஒரு ரூமும் இருந்தது. அந்த ரூமுக்கு அட்டாச்டு பாத்ரூம் வைத்திருந்தார்கள். அதற்குப் பக்கத்தில் மாடிக்குச் செல்ல வீட்டின் உள்ளேயே வழி இருந்தது. ஹாலின் நடுவில் அரைவட்ட வடிவில் பெரிய ஷோபா ஒன்று சமையல் அறையின் எதிர்புரம் பார்த்தவாறு போடப்பட்டு இருந்தது. சமையல் அறையின் எதிர்ப்புறச் சுவரின் நடுவில் மிகப்பெரிய ஸ்மார்ட் டிவி பொருத்தப்பட்டு இருந்தது, அதனுடன் சோனி டிவிடி ஹோம் தியேட்டர் சிஸ்டம் இணைக்கப்பட்டு இருந்தது. பெரிய அளவிலான ஸ்டாலின் புகைப்படம் ஒன்று நுழைவாயிலின் எதிர் சுவரின் மேலே மாட்டப்பட்டிருந்தது. மதன் அதைப் பார்த்ததும் கண்டிப்பாகக் கார்த்திகாவின் அப்பா கம்யூனிஸ்ட் சங்கத்தில் ஏதாவது ஒன்றில் முக்கிய உறுப்பினராகத் தான் இருக்க வேண்டும் என்று நினைத்தான். மதன், சுரேஷ் சோபாவில் நடுவில் அமர்ந்திருந்தனர். தீப்தி ஷோபாவின் இடது புறம் அமர்ந்திருந்தாள்.

உள்ளே சென்றிருந்த கார்த்திகா தன் உடைகளை மாற்றிக் கொண்டு சாதாரண பச்சை நிற சுடிதாரில் வெளியே வந்து தீப்தியின் அருகில் அமர்ந்தாள். ‘உள்ள என்னோட டிரஸ்ஸஸ் இருக்கு வேணும்னா போய் மாத்திக்கோ’ கார்த்திகா தீப்தியிடம் கூறினாள். ‘பரவாயில்லை அக்கா, இதுவே கம்ஃபர்ட்டாத்தான் இருக்கு’, தீப்தி கூறினாள். ‘டேய் இசிப்பு, இங்க எங்கடா?’, கார்த்திகா அவள் வீட்டிற்கு வந்த சிறுவனைப் பார்த்துக் கேட்டாள், ‘தேன் கேட்டிருந்தாங்க, அய்யன் கொடுத்துவிட்டாரு, எடுத்து வந்தேன்’ சிறுவன் கூறினான். ‘உண்மையான பேரே அதானா?’ மதன் அந்தச் சிறுவனைப் பார்த்துக் கேட்டான். ‘அவன் பேரு சுதாகர். நான் செல்லமா இசிப்புன்னு கூப்டுவேன். நம்ம வீட்டுல இருந்து கொஞ்சம் கீழ போனா அவங்க வீடு இருக்கு. அவங்களுக்கு ஏதாவதுன்னா எங்கப்பாத்தான் போய் நிப்பாரு, அதே மாதிரிதான் எங்க வீட்ல ஏதாச்சும் ஒன்னுன்னா அவங்க வந்து நிப்பாங்க’ கார்த்திகா அந்த மலைவாழ் சிறுவனை அன்பாக அணைத்தவாறு அவனையும் அவன் சார்ந்தவர்களைப் பற்றியும் கூறினாள். ‘தீப்தி அவங்க கிராமத்துக்குப் போலாம் வரியா?’ சுரேஷ் தீப்தியைப் பார்த்துக் கேட்பதற்குள், ‘ம்ம், நான் ரெடி’ என்று தீப்தி ஆர்வத்துடன் கூறினாள். ‘நீடா’, சுரேஷ் மதனைப் பார்த்துக் கேட்டான். ‘இல்லடா நீங்க போயிட்டு வாங்க, நாளைக்கு நான் பில்ட்டு கொடுக்கணும் டா, இங்க வந்து லாக்’ மதன் முழுதாக சொல்லி முடிப்பதற்குள் கார்த்திகாவைப் பார்க்க, கார்த்திகா முகத்தில்

இருந்த கோபத்தை மதனால் உணர முடிந்தது. ‘இல்லடா நீங்க போயிட்டு வாங்க’ மதன் பொறுமையாகக் கூறிவிட்டு தன் பேகில் இருந்த லேப்டாப்பை எடுத்து எதிரில் இருந்த கண்ணாடி மேஜையின் மேல் வைத்தான். ‘அக்காவும் அண்ணாவும் நம்ம வீட்டுக்குப் புதுசா வந்திருக்காங்க, நம்ம காட்ட சுத்திக் காட்டுறியா?’ கார்த்திகா அந்தச் சிறுவனிடம் கேட்க அந்தச் சிறுவன் சரி என்பது போல் தலையாட்டி இருவரையும் அழைத்துச் சென்றான். ‘ஆண்டி நாங்க சுதாகரோட கிராமத்துக்குப் போயிட்டு வரோம்’, தீப்தி சமையல் அறையில் இருந்த கார்த்திகாவின் அம்மாவிடம் கூறினாள். ‘சரிம்மா பாத்து பத்தரமா போய்ட்டு வாங்க, டேய் சுதா, ஒழுங்கா கூட்டிட்டுப் போடா, ஓடப் பக்கம் போகாதீங்க, மழை அதிகமாப் பேஞ்சிருக்கு’ கார்த்திகாவின் அம்மா அந்தச் சிறுவனுக்கு வழிமுறை கூறினாள்.

மேலே சென்ற கார்த்திகாவின் அப்பா குளித்து முடித்துவிட்டு கீழே வந்து மதனின் பக்கத்தில் உட்கார்ந்தார். ‘தம்பி நீங்க ப்ரஷ் ஆகனும்னா கீழ இருக்குற ரூம்ல ஒரு பாத்ரூம் இருக்கு, மேலயும் பாத்ரூம் இருக்கு, எத வேணும்னாலும் யூஸ் பண்ணிக்கோங்க’ கார்த்திகா அப்பா மதனைப் பார்த்துக் கூறினார். ‘எங்க அவங்க ரெண்டு பேரும்?’ கார்த்திகா அப்பா சுரேஷையும் தீப்தியையும் கேட்க, ‘அவங்க சுதா கூடக் காட்டுக்குப் போய் இருக்காங்கப்பா’, கார்த்திகா கூறினாள். ‘மழ பேஞ்சிருக்கு, ஓடப்பக்கம் போகப்போறாங்க’ கார்த்திகா அப்பா கேட்க, ‘நான் சுதா கிட்ட

சொல்லித் தான் அனுப்பியிருக்கேன்’ கார்த்திகா அம்மா தட்டில் எல்லோருக்கும் காப்பியுடன் வந்து சோபாவில் அமர்ந்தாள். ‘எடுத்துக்கோ தம்பி’, கார்த்திகாவின் அம்மா மதனிடம் கூறினார். ‘நீங்க அவங்க கூடப் போகலையா தம்பி’, கார்த்திகாவின் அப்பா மதனைக் கேட்க, ‘வேலை கொஞ்சம் இருக்கு சார், நாளைக்குள்ள முடிக்கனும், தள்ளிப் போட முடியாது’, மதன் கூறினான். ‘ஐடி-ல இருக்குறவங்க எங்க இருந்தாலும் ஆபீஸ் வொர்க் பண்ணமுடியும்னு கேள்விப்பட்டிருக்கேன், அப்புறம் ஏன் எல்லாரும் மெட்ராஸ் போறாங்கன்னு புரியமாட்டேங்குது’, கார்த்திகாவின் அப்பா மதனைப் பார்த்துக் கேட்க, ‘இன்ப்ராஸ்ட்ரக்சர் தான் சார் காரணம். இன்டர்நெட் ஸ்பீடு மெட்ராஸ்ல இருக்கிற மாதிரி இங்க இருக்காது சார். ஆனா அவசரத்துக்கு ஆப்பீஸ் நெட்வொர்க் கனெக்ட் பண்ண இங்க இருக்குற மோபைல் நெட்வர்க் ஓகே தான் சார்’ மதன் கூறினான். ‘அப்ப கார்த்திகா இங்கேயே இருந்து கூட வொர்க் பண்ணமுடியுமா?’ கார்த்திகா அப்பா மதனிடம் கேட்க மதன் கார்த்திகாவைப் பார்த்தான், கார்த்திகா காபிக் கோப்பையைத் தன் இரு கைகளில் பிடித்தவாறு குடித்துக்கொண்டே வேண்டாம் என்று மதனைப் பார்த்துத் தலையை லேசாக அசைத்தாள். ‘அது உங்க பொண்ணோட ப்ராஜக்ட் மேனேஜர் பொறுத்தது சார். பெரும்பாலும் ப்ராஜக்ட் மேனேஜர்ஸ் அவங்க கீழ வேலை செய்றவங்கல நேர்ல கன்காணிக்கனும்னு நெனைப்பாங்க, அதுதான் அவர்களுக்கு

வசதியும் கூட' மதன் சமாளித்தான். 'என்னமோப்பா, என் பொண்ணு என் கூடவே இருக்கணும்னு ஆசையா இருக்கு, அதான் கேட்டேன்', கார்த்திகாவின் அப்பா கூற, 'எல்லா பேரன்ஸ்களுக்கும் இருக்கும் ஆசை தான் சார், யாருக்குத் தான் தன் பசங்கள விட்டுப் பிரிந்து இருக்கணும்னு ஆசைப்படுவாங்க' மதன் விளக்கினான். 'சரிப்பா, நான் ஊருக்குள்ள போயிட்டு வறேன். ஏம்மா என்ன வாங்கனும்னு லிஸ்ட் போட்டுட்டியா? ரெண்டு பை எடு' கார்த்திகாவின் அப்பா கார்த்திகாவின் அம்மாவைப் பார்த்துக் கேட்க கார்த்திகாவின் அம்மாவும் அப்பாவும் பேசிக் கொண்டே வீட்டிற்கு வெளியில் சென்றனர்.

'தேங்ஸ்', கார்த்திகா மதனைப் பார்த்துக் கூறினாள். 'எதுக்கு' மதன் கேட்க, 'விட்டிருந்தா எங்கப்பா என்ன இங்கிருந்தே வேல செய்யச் சொல்லியிருப்பாரு' கார்த்திகா கூற, 'வீட்டிலிருந்து வேலை பாக்லாம்ல, அவருக்கும் உங்களுக்கு மாப்ள பார்க்குறதுக்கு ஈஸியா இருக்கும், உங்களுக்கும் டக்குன்னு கல்யாணம் ஆகும், கொழந்த குட்டிங்க பொறக்கும், அவரும் பேரன் பேத்திங்கள எடுத்துக் கொஞ்சிக்கிட்டிருப்பார்ல' மதன் கார்த்திகாவைச் சீண்டினான். 'நகைச்சுவையா, சிரிச்சிட்டேன்' கார்த்திகா தன் முகத்தை கோபத்துடன் வைத்துக்கொண்டு கூறினாள். 'இப்படித்தான் உங்க ஊர்ல சிரிப்பாங்களா. கோபத்துல கூட அழகாத் தெரிஞ்சுத் தொலையுறீங்க' மதன் கூறிவிட்டு தன் லேப்டாப்பைப் பார்த்துக்

கொண்டிருந்தான், கார்த்திகா மெதுவாக எழுந்து மதனின் அருகில் வந்து அவன் இடதுபுறத் தோள்பட்டையை நன்றாகக் கிள்ளி விட்டு புன்னகையுடன் திரும்பி நடந்தாள். 'யாராவது பாக்கப் போறாங்க' மதன் பதற்றத்துடன் சுற்றிப் பார்த்தான். நல்லவேளையாகக் கார்த்திகாவின் அம்மா அவள் அப்பாவை ஊருக்குள் அனுப்பி வைத்துவிட்டு அப்போது தான் வீட்டினுள் வரத் தொடங்கினார்.

கீழே இருந்த ரூமுக்குள் சென்ற கார்த்திகா தன் லேப்டாப்பை எடுத்துக் கொண்டு வந்து சோபாவில் அமர்ந்தாள். 'கார்த்தி, கீழ செல்வி அக்கா பொண்ணுக்குச் சடங்காம், நான் போயிட்டு வர்றேன். அப்பா அதுக்குள்ள வந்துட்டார்னா, வாங்கிட்டு வருவதைக் கழுவி வேக வை. சரியா' கார்த்திகாவின் அம்மா கார்த்திகாவுக்குக் கட்டளையிட்டாள். கார்த்திகா அம்மாவும் அங்கிருந்து கிளம்பினார். வீட்டில் இப்போது கார்த்திகாவும் மதனும் மட்டும் இருந்தது மதனுக்கு மேலும் பதற்றத்தை ஏற்படுத்தியது. கார்த்திகா எழுந்து மதனின் பக்கத்தில் வந்து உட்கார்ந்து லேப்டாப் ஓபன் செய்தாள். கார்த்திகா லேப்டாப்பை ஆன் செய்வதைப் பார்த்துக்கொண்டிருந்த மதனுக்கு ஆச்சரியம் காத்துக்கொண்டிருந்தது. 'வாட், அமேசிங், எப்ப இதெல்லாம் பண்ணீங்க?', மதன் கார்த்திகாவை ஆச்சரியத்துடன் கேட்டான். 'எல்லாம் உங்களால தான். அந்த /r/unixporn எதுக்கு இன்ட்ரடியூஸ் பன்னீங்க, அத பாத்து அதுல இருக்குற ஏதாவது ஒரு தீம் மாதிரி என் லேப்டாப்பும் இருக்கணும்னு ஆசைப்பட்டேன்.

அதான் கொஞ்சம் கொஞ்சமாக் கத்துக்கிட்டு மாத்தினேன்' கார்த்திகா கூறினாள். 'நியோ பெட்ச் ரன் பன்னுங்க' மதன் கேட்க கார்த்திகாவும் நியோபெட்ச் என்ற கமாண்டை டெர்மினலில் ரன் செய்தாள். 'டேம். ஐ நியூ. நீங்களும் ஆர்ச் லினக்சுக்கு மாறிட்டிங்களா?' மதன் கேட்க 'அந்த வெப்சைட்ல தீம்ஸ் வடிவமைக்கும் முக்காவாசி பேரு ஆர்ச் லினக்ஸ் தான் யூஸ் பண்றாங்க. அதனால நானும் என்னதான் அதுல இருக்குன்னு ஒரு நாள் உட்கார்ந்து ட்ரை பண்ணேன். ரெண்டு ட்ரைல என்னால இன்ஸ்டால் பண்ண முடிஞ்சது. அப்புறம் எனக்குப் புடிச்ச ஒரு தீம் டவுன்லோட் செஞ்சு மாத்திப் பார்த்தேன். அழகா வந்துச்சு' கார்த்திகா விளக்கமாகக் கூறினாள். 'ம்ம்ம், அதுவும் பிஎஸ்பி டபிள்யூஎம் (bspwm), க்ரேட்' மதன் கூற 'மொதல்ல நீங்க யூஸ் பண்ற ஐத்ரீதான்(i3) யூஸ் பண்ணேன், என்னவோ தெரியல அது ரொம்ப சிம்பிளா ப்ளெய்னா இருக்குற மாதிரி இருந்துச்சு. அதான் பிஎஸ்பிக்கு மாறிட்டேன்' கார்த்திகா கூற 'ஐ த்ரீ அப்படித்தான், அதோட அழகு என்ன மாதிரி இருக்குறவனுக்குத் தான் புரியும்', மதன் கார்த்திகாவை சீண்ட 'ஆமாம், உங்களமாதிரி கிறுக்கனுங்களுக்குத்தான் அதோட அழகு புரியும்' கார்த்திகாவும் தன் பங்கிற்கு வாரினாள். 'உங்க கூட சண்ட போடும் சிச்சுவேஷன்ல இல்ல, வைபை பாஸ்வேர்ட் கொடுங்க, நாளைக்குள்ள பில்ட்டு ஒன்னு எடுக்கனும்' மதன் கார்த்திகாவின் வீட்டில் வைபை பாஸ்வேர்டைக் கேட்டான். 'எங்க வீட்ல வைஃபை இல்ல, என்னோட டேட்டா கார்டு பாஸ்வேர்டு

சொல்றேன்’ கார்த்திகா சொல்லிக்கொண்டிருக்க, ‘கண்ணுக்கு முன்னாடி வைஃபையை வெச்சிக்கிட்டு இல்லைன்னு சொல்றீங்க’ மதன் குறுக்கிட்டான். ‘என் மொபைல்ல இருக்கும் வைஃபை ஹாட்ஸ்பாட் சொல்றீங்களா? என் மொபைல்ல டேட்டா இல்ல, டேட்டா கார்டு தனியா இருக்குறதால நான் மொபைல் டேட்டா போட்றதில்ல’ கார்த்திகா கூற ‘நான் உங்க மொபைல சொல்லல, உங்க லேப்டாப் தான் சொன்னேன்’ மதன் கூறினான். ‘லேப்டாப்ல இருந்து வைஃபை டீத்தரிங் பண்ணலாமா?’ கார்த்திகா ஆர்வத்துடன் கேட்க, ‘hostapd இருக்கும் போது நாம எதுக்குக் கவலைப்படணும்’ மதன் கூறியவுடன் கார்த்திகா அந்த வார்த்தையை கூகிள் செய்தாள். ‘இன்ட்ரஸ்டிங், என் லேப்டாப்ல ட்ரை பண்ணலாமா’ கார்த்திகா கேட்க, உடனே மதன் அவள் லேப்டாப்பில் hostapd மென்பொருளை நிறுவினான். ‘இப்ப உங்க டேட்டா கார்ட் டாங்கிள உங்க லேப்டாப்போட கணைக்ட் பண்ணுங்க’ மதன் கூற அதன்படி கார்த்திகா செய்தாள். ‘இப்ப பாருங்க, என் லேப்டாப்ல நான் வைப்பை ஸ்கேன் பண்றேன். உங்க லேப்டாப்ல நாம இன்ஸ்டால் பண்ண hostapd யோட ஆக்சஸ் பாயின்ட் இப்ப தெரியும்’ மதன் சொல்லிக்கொண்டே ஸ்கேன் செய்தான். அவன் சொன்னபடி கார்த்திகாவின் லேப்டாபில் இருக்கும் ஆக்சஸ் பாயின்ட் மதனின் லேப்டாப்பில் தெரிந்தது. ‘வாவ். எங்க கனெக்ட் பண்ணுங்க’ கார்த்திகா கேட்க, மதன் அந்த வைஃபையில் இணைந்தான். ‘சூப்பர்,

என் லேப்டாப்ப வைஃப்பை ஆக்சஸ் பாயிண்டா மாத்திட்டீங்க’ கார்த்திகா ஆச்சரியப்பட்டாள். ‘ஆண்ட்ராய்டு மொபைல் ஹாட்ஸ்பாட் பன்றதுல கூட லிமிட் இருக்கு, மிஞ்சிப் போனாப் பத்து பேருக்கு மேல கனெக்ட் பண்ண முடியாது, ஆனா இப்ப உங்க லேப்டாப்ல இருக்கும் ஆக்சஸ் பாயின்ட்ல எத்தனை பேரு வேணும்னாலும் கனெக்ட் பண்ணிக்கலாம்’ மதன் கூறினான்.

‘சப்போஸ் இப்ப என் டேட்டா கார்ட் டாங்கிளுக்குப் பதிலா வேர ஒரு வைப்பையல நான் கனெக்ட் பண்ணா தான் எனக்கு இன்டர்நெட் வரும்ன்ற டைம்ல நான் இந்த hostapd யூஸ் பண்ண முடியாது. கரைக்டா? ஏன்னா வைப்பை ஒரு டைம்ல ஒரு ப்ரீக்குவன்ஸிலத்தான் வொர்க் பண்ணும். எங்கேயோ நான் படிச்சிருக்கேன். கரைக்டா?’ கார்த்திகா கேட்க, ‘ஒரு சாதாரண வைப்பை சிப் ஒரு டைம்ல ஒரு ப்ரீக்வன்ஸிலதான் வெர்க் பண்ணும், கரைக்ட்தான். ஆனா, ஒரே ஃப்ரீக்வன்சில ரெண்டு ஆக்ஸர்பாயின்ட் இருக்கக் கூடாதுன்னு யாரும் சொல்லல, iw அண்ட் hostapd வெச்சு ஒறே டைம்ல நம்ம லேப்டாப்பை வைஃபை க்லைன்டாவும் ஆட்ஸ்பாட்டாவும் யூஸ் பண்ணலாம். என்ன, உங்க லேப்டாப்ல இருக்கும் வைஃபை சிப் அதுக்கு ஒத்துழைக்கனும், உங்க லேப்டாப்ல அந்த வசதி இல்ல, இருந்திருந்தா நான் உங்க டேட்டா கார்ட் டாங்கிள்ல கனெக்ட் பண்ணச் சொல்லியிருக்க மாட்டேன், டைரக்டா உங்க மொபைல் ஆட்ஸ்பாட்லையே கனைக்ட் பண்ண சொல்லியிருப்பேன்’ மதன்

விளக்கினான். ‘உங்க லேப்டாப்ல அந்த வசதி இருக்கா? பண்ணிப் பார்க்கலாமா?’ கார்த்திகா கேட்க ‘இருக்கு, ஆனா இப்ப வேணாம். அது கொஞ்சம் டைம் எடுத்துக்கும், உங்கக் கூடப் பேசிக்கிட்டே என் பில்ட் மறந்துட்டேன்’ மதன் கூறியவாறே அவன் ஆபிஸ் வொர்க்ஸ்டேஷனில் கனெக்ட் செய்து பில்ட் ஸ்கிரிப்டை இயக்கினான்.

‘இந்த பில்ட் முடிய எப்படியும் அரை மணி நேரம் ஆகும். டிவி போடுங்க ஏதாவது பாப்போம், உங்க டிவி 4k வா? 48 இன்ச் தானே?’ மதன் கேட்க ‘ஆமாம், 48 இன்ச் 4k தான். என்ன, இங்க டிடிஎச் சிக்னல் தான் சரியா வராது, எதுக்கும் போட்றேன்’ என்று சொல்லிக்கொண்டே டிவியை ஆன் செய்தாள். கார்த்திகா சொன்னபடியே டிடிஎச் சரியாக வரவில்லை, ‘நான் சொல்லல’ கார்த்திகா புன்னகைத்தவாறே மதனைப் பார்த்துக் கூறினாள். மதன் வேறு வழியில்லை என்று அமைதியாக இருந்தான். சிறிது வினாடிகள் கழித்து ‘உங்க லேப்டாப்ல மூவி இருக்கா, படம் பாக்கலாமா? என்று கார்த்திகா மதனிடம் கேட்டுக்கொண்டே மதனின் லேப்டாப்பைத் தன் பக்கமாக இழுத்தாள். ‘ஒரு பேச்சுலர் லேப்டாப்ப இப்படித் திடீர்னு வாங்கிப் பாக்குறீங்க, தேவையில்லாத ஏதாவது பாத்துட்டீங்கன்னா என்ன திட்டக்கூடாது’, மதன் கூற ‘என்ன, மிஞ்சிப்போனா பிட்டு படம் டவுன்லோட் பண்ணி வச்சிருக்கப் போறீங்க, அவ்வளவுதானே?’ கார்த்திகா எதிர்க் கேள்வி கேட்க. ‘என்ன இன்னைக்கு

எல்லார்ட்டையும் மொக்க வாங்கிகிட்டு இருக்கேன், நேரம் சரியில்ல' மதன் முணுமுணுத்தான். 'என்ன உங்களுக்குள்ள பேசிக்கிட்டு இருக்கீங்க? படம் எல்லாம் எந்த போல்டரில் வெச்சிருக்கீங்க?' கார்த்திகா கேட்க, 'ஹோம் போல்டரில் வீடியோஸ்னு ஒரு போல்டர் இருக்கும், உங்க வீட்டு டிவி ஸ்மார்ட் டிவி தானே?' மதன் கேட்க 'ஆமாம். ஆனா என்கிட்ட எச்டிஎம்ஐ கேபிள் இல்ல' கார்த்திகா கூறினாள். 'எச்டிஎம்ஐ கேபிள் இல்லனா என்ன', மதன் சொல்லி முடிப்பதற்குள் 'இருங்க, குரோம்காஸ்ட்டா (chromecast) சொல்லவரீங்க?' கார்த்திகா கேட்க, 'ஆக்சுவலா குரோம்காஸ்டே மிராகாஸ்ட் (miracast) ஸ்டான்டர்ட ஒடைக்க கூகிள் பண்ண ஒரு புரோபிரைட்டரி ப்ரோட்டோக்காலுங்க', மதன் மீண்டும் சொல்லி முடிப்பதற்குள் 'அப்ப மிராகாஸ்ட் பண்ணப் போறோம் கரெக்டா?' கார்த்திகா கேட்க, 'இல்லைங்க, அவ்வளவு காம்ளக்ஸ்சான விஷயமெல்லாம் வேணாம். சிம்பிளா டிஎல்என்ஏ (DLNA) பண்ணலாம், உங்க லேப்டாப் கொடுங்க' மதன் கார்த்திகா லேப்டாப்பை கேட்க 'உங்க லேப்டாப்லயே பண்ணுங்க' கார்த்திகா கூற 'என்ன, அங்கேயும் பிட்டுப்படமா?' மதன் சிரித்துக் கொண்டே கேட்க 'ஓவரா பண்ணாதீங்க, என்கிட்ட இருக்கிற எல்லாப் படத்தையும் திரும்பத் திரும்ப எத்தன முற பாக்குறது, அதான் உங்க கிட்ட இருக்குற படங்களைப் பாக்கலாமேன்னு சொன்னேன். வேணும்னா என் லேப்டாப்லயே இன்ஸ்டால் பண்ணுங்க, பாதிப்

படத்தில் தூங்கிட்டேன்னா என்னத் திட்டக்கூடாது' கார்த்திகா கூற 'என் லேப்டாப்ல ஆல்ரெடி மினி டிஎல்என்ஏ (miniDLNA) இன்ஸ்டால் பண்ணி ஆச்சுங்க, அதனாலதான் உங்க கிட்ட கேட்டேன், இன்ஸ்டால் பன்றது ஒன்னும் பெரிய விஷயம் இல்ல, ஆர்ச் விக்கி பாலோ பண்ணாலே போதும்' மதன் கூறினான். 'ஒக்கே, அப்ப டிவிய உங்க லேப்டாப்பில் எப்படி கனெக்ட் பண்றது' கார்த்திகா கேட்க, 'எல்லா ஸ்மார்ட் டிவியிலயும் வைபை செட்டிங்ஸ் இருக்கும், அங்க போய் உங்க லேப்டாப்போட ஹாட்ஸ்பாட் பாஸ்வேர்ட் கொடுத்து மொதல்ல கனெக்ட் பண்ணுங்க. ஒன்ஸ் உங்க டிவி நம்ம லேப்டாப்ல இயங்குற வைஃபை நெட்வர்க்கு வந்துட்டாலே ஆட்டோமேட்டிக்கா டிஎல்என்ஏ டிடக்ட் பண்ணிடும் எந்த மூவி வேணுமோ அத நாம டிவியில் செலக்ட் பண்ணிப் பார்க்கலாம்' மதன் சொல்லிக்கொண்டிருக்கும்போதே கார்த்திகா வைஃபையை கனெக்ட் செய்து மதனின் லேப்டாப்பில் உள்ள மூவி போல்டர்களைத் தன் டிவியில் மீடியா சென்டர் மூலமாக பார்க்கத் தொடங்கினாள்.

'ஏகப்பட்ட கேட்டகிரில படங்கள அடுக்கி வெச்சிருக்கீங்க, காமெடின்னு ஒரு போல்டர், ஜாக்கிச்சான் மூவீஸ்னு ஒரு போல்டர், வடிவேலுக்கு ஒரு தனி போல்டரா, டை ஆட்டு சீரீஸ்? புரூஸ் வில்லிஸ் தானே, ட்ரான்ஸ்பார்மர்ஸ், மேட்ரிக்ஸ்? சுத்தமாப் புரியாதே, டைட்டானிக், ஜுராசிக் பார்க்குக்குத் தனி போல்டர், ஹாரி பாட்டர், உங்களுக்கும் பிடிக்குமா? எங்கிட்டயும் இருக்கு, அவதார்,

நாட்டாமை, சூரிய வம்சம், பூவே உனக்காக, வானத்தைப்போல, நீங்க விக்ரமன் ஃபேனா? டைரக்டர் சேரன்னு ஒரு போல்டர், சேரனோட எல்லாப் படமும் வெச்சிருக்கீங்க? அவ்வளவு புடிக்குமா? அடுத்து தங்கர் பச்சான்னு தனி போல்டர், அதுல, அழகி, சொல்ல மறந்த கதை, பள்ளிக்கூடம்' கார்த்திகா சொல்லிக்கொண்டே ஒரு போல்டரைப் பார்த்ததும் ப்ரவுஸ் பண்ணுவதை நிறுத்தினாள். 'மாட்னீங்களா? டோன்ட் வாட்ச் அப்படின்னு ஒரு போல்டரா? இந்த போல்டரில தானே அந்தப் படங்க இருக்கு?' கார்த்திகா சிரித்துக்கொண்டே கேட்க 'வேணாம் அதுக்குள்ள போகாதீங்க, உங்க நல்லதுக்குச் சொல்றேன்' மதன் சொல்லிக்கொண்டிருக்கும்போதே கார்த்திகா உள்ளே என்ன இருக்கு என்பதைப் பார்த்தாள் 'முள்ளும் மலரும்?' கார்த்திகா மதனைப் பார்க்க 'நானும் என் தங்கச்சியும் ஒன்னாச் சேர்ந்து பாப்போம். எப்ப இந்தப் படத்தப் பாத்தாலும் அடுத்து ரெண்டு நாள் அவ நியாபகமாவே இருக்கும். முக்கியமா ரஜினி சொல்ற அந்த, கெட்ட பையன் சார் டயலாக் வரும்போதெல்லாம் என்ன பாத்துச் சிரிப்பா' மதன் தன் தங்கையை நினைத்தவாறே சிரித்தான்.

'கவிக்குயில்? நீங்க பாடுன அந்த பாட்டு இதுலதானே?' கார்த்திகா கேட்க 'ஆமாம். படத்தோட கதை லாஜிக்கலாக் கொஞ்சம் கேவலமா இருக்கும், ஆனா படத்த பார்த்தா உள்ள ஏதோ ஒன்னு பண்ணும்' மதன் கூறினான். 'ஆறிலிருந்து அறுபது வரை? எங்க அப்பாவும் இந்தப் படத்தப் பத்திச் சொல்லியிருக்கார்' கார்த்திகா கேட்க

‘எனக்கும் எங்கப்பா தான் இந்தப் படத்தப் பத்திச் சொன்னாரு, அவரப் பொறுத்தவரைக்கும் ரஜினி படங்கள்ளையே இதுதான் பெஸ்டாம். அதனாலேயே இத பார்த்தேன். ஆப்டர் எபெக்ட் மூனு நாள் இருந்தது, அதுவும் ரஜினி மனைவி போட்டு வச்ச இன்சூரன்ஸ் வரும்போது ரஜினி அழுவுற சீன், கிளைமாக்ஸ், எங்கப்பாவுக்கு நிறைய விஷயம் சொல்லிக்கொடுத்த படம்னு நினைக்கிறேன்’ மதன் கூற ‘எங்கப்பாவும் அப்படித்தான் சொல்லுவாரு. ரஜினி நடிச்சதுலயே இந்தப் படம்தான் பெஸ்டுன்னு’ கார்த்திகாவும் ஒத்துக்கொண்டாள்.

‘குணா? இந்தப் படமா?’ கார்த்திகா கேட்க ‘ஏற்கனவே பாத்திருக்கீங்களா?’ மதன் கேட்க ‘பாத்திருக்கேன்’ கார்த்திகா கூற ‘எப்ப? முழுசாப் பாத்தீங்களா? படம் புரிஞ்சதா’ மதன் கேட்க ‘ரொம்ப நாள் முன்னாடி, டிவியில் போடும்போது பார்த்தேன். ஸ்டார்ட்டிங் மொக்கையா இருக்கும், முழுசாப் பார்த்ததா நியாபகம் இல்ல’ கார்த்திகா பதில் கூற ‘ரொம்ப நல்லது, தயவு செஞ்சு பாக்காதீங்க’ மதன் சொல்ல ‘அப்ப கண்டிப்பா இதத்தான் இப்பப் பார்க்கப் போறோம்’ கார்த்திகா சொல்லிவிட்டு படத்தை ப்ளே செய்தாள். ‘சொன்னா கேட்கமாட்டேன்ரீங்க, கல்யாணம் ஆகப் போறவங்க இந்தப் படத்தப் பாக்கக் கூடாதுங்க, நாலு நாளானாலும் சரியாத் தூக்கம் வராது, நான் பட்ட மாதிரி நீங்களும் படாதீங்க’ மதன் சொல்வதைக் கேட்காமல் கார்த்திகா படத்தைப் பார்க்க ஆரம்பித்தாள். ‘ஸ்டார்ட்டிங் கமல் ஒத்தக்கால்ல நிக்கிற சீன்லாம் பார்த்த நியாபகம்

இல்லையே' கார்த்திகா படத்தில் முதலில் வரும் சீனைப் பார்த்துக் கூற. 'அதே மாதிரி கடைசியில ஒரு முற பண்ணுவாரு, அப்ப நீங்க அழுதுட்டு இருப்பீங்க' மதன் புன்னகையுடன் கூறினான். 'பாக்கலாம்' கார்த்திகாவும் புன்னகைத்தாள். படம் சிறிது நிமிடங்கள் ஓடியது. 'இந்த டாக்டர் கிட்ட பேசுற டயலாக் ஒரே டேக்ல எடுத்ததாம், நிறைய பேர் அந்த சீன பத்திப் பேசிப் பாத்திருக்கேன்' கார்த்திகா கூற 'ஆமாம், மறக்காம கோவில்ல ஜனகராஜ் பிப்பிரி பிப்பிரி பீ ஊதுர சீன் வந்தவுடன் சொல்லுங்க' மதனும் தன் லேப்டாப்பில் வேலை செய்து கொண்டே கூறினான். 'என்னது பீப்பி ஊதுவாரா, ஏன் அந்த சீன்?' கார்த்திகா கேட்க 'அங்க தான் கதையே ஸ்டார்ட் ஆகுது' மதன் கூறினான். மீண்டும் கார்த்திகா படத்தில் மூழ்கினாள். மதன் தன் வேலையில் மூழ்கினான். சில நொடி`கள் ஓடின. கார்த்திகா சிரித்துக்கொண்டே 'ஜனகராஜ் பீப்பி ஊதிட்டாரு' என்று கூற மதனும் சிரித்துக்கொண்டே தன் லேப்டாப்பை மூடினான். படத்தில் கமலிடம் திசை காட்டும் கைப் பலகை ஹீரோயின் இருக்கும் திசையைக் காட்டும் சீன் வந்தவுடன் மதன் 'இப்ப பாருங்க கமலோட பர்பாமன்ஸ்ஸ' என்று கூற 'என்ன இருந்தாலும் இளையராஜா பிஜிஎம் வேர லெவல் தான்' கார்த்திகாவும் ரசித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள். கார்த்திகா பார்த்த விழி பாடல் முடிந்தவுடன் பாஸ் செய்தாள். 'இப்படியெல்லாம் கூடவா ஒரு பெண்ணைப் பார்க்கும்போது பசங்களுக்குத் தோணும். உண்மையாவே அவள

அபிராமியாகப் பார்க்க ஆரம்பிச்சுட்டான்' கார்த்திகா கூற 'அவன் ஒரு ஆப் சைக்கோன்றத மறந்துட்டீங்க' மதன் கூற 'இன்னொரு பாதி மனுஷன். இதுல எந்தப் பாதி அவள கடவுளா பாக்குதுன்னு உங்களால் கண்டுபிடிக்க முடியுமா?' கார்த்திகா கூற 'போற போக்கப் பாத்தா பாதிப் படத்துலயே அழுதுடுவீங்க போல' மதன் மீண்டும் கார்த்திகாவைச் சீண்ட, 'பாப்போம்' கார்த்திகாவும் திடமாகப் படத்தைப் பார்க்கத் தொடங்கினாள். மீண்டும் இருவரும் மௌனமாகப் படத்தில் மூழ்கினர். அவர்களுக்கே தெரியாமல் இருவரும் மிக அருகில் அமர்ந்திருந்தனர். படத்தில் எழுபத்து ஓராவது நிமிடத்தில் கமல் தன் ரத்தத்தால் ஹீரோயினுக்குப் பொட்டு வைக்கும் சீன் முடிந்தவுடன் கார்த்திகா பாஸ் செய்தாள். கார்த்திகா மதனைப் பார்க்க, மதனும் கார்த்திகா என்ன சொல்லப் போகிறாள் என்று பார்த்தான். 'என்ன இப்படி இருக்கு, அந்த பீஜிஎம் வேற போட்டுக் கொல்லுது. இந்தப் படத்தை எப்படி நான் மிஸ் பண்ணேன்' கார்த்திகா கூற. 'லாஜிக்கலா பார்த்தா இதுக்கு பேரு ஹராஸ்மென்ட், அந்தப் பொண்ணோட கன்சன்ட் இல்லாம அவள புடிச்சு வெச்சிக்கிட்டு வற்புறுத்துறான். ஒரு பெமினிஸ்டா இருந்துக்கிட்டு எப்படி இத இரசிக்கறீங்க' மதன் கிண்டலாகக் கேட்க, 'ஒரு பொண்ண ஒருத்தன் மனசார விரும்புனா உங்களுக்குப் பொறுக்காதே, உடனே அவன அவமானப்படுத்துவது, எப்பத்தான் இந்த மிசோஜனிஸ்டுங்க திருந்துவாங்களோ' கார்த்திகாவும் மதனைக் கிண்டலடித்தபடிப்

படத்தை மீண்டும் தொடர்ந்தாள். படத்தின் நூற்றுப் பதினாறாவது நிமிடத்தில் வரும் சீன் முடிந்து கண்மணி பாடல் தொடங்கியவுடன் கார்த்திகா பாஸ் செய்தாள். ‘அந்தப் பொண்ணே என்ன உனக்கு வேணுமான்னு கேட்டும் அவள தெய்வமாகத்தான் பார்க்குறான்’ கார்த்திகா மதனைப் பார்த்துக் கூற ‘தெய்வமாப் பார்க்குற அவள கல்யாணம் பண்ணிக்க ஆசைப்படலாமா?’ மதன் கேட்க ‘அவன் அவளோட உடம்புக்கு ஆசைப்படலையே. அவன பொருத்தவரைக்கும் தெய்வத்த அடைஞ்சு தன் பிறப்ப தூய்மை படுத்திக்குறதுக்குப் பேர்தான் கல்யாணம். நாம அத முக்தின்னு சொல்றோம் அவன் அத கல்யாணம்னு சொல்றான், அவ்வளவுதான். இதுல என்ன தப்பிருக்கு?’ கார்த்திகா கேட்க மதன் ‘பாய்ன்ட்’ என்று சிரித்தபடியே கூற கார்த்திகா மீண்டும் படத்தைத் தொடர்ந்தாள்.

படத்தின் இறுதியில் இளையராஜா இசைக்க அந்தப் பாழடைந்த தேவாலயத்தைக் காட்டும் இடத்தில் கார்த்திகா படத்தை நிறுத்தினாள். கார்த்திகா சில நொடிகள் எதையும் பேசவில்லை, மதனும் கார்த்திகா என்ன சொல்லப் போகிறாள் என்று எதிர்பார்த்து மௌனமாக இருந்தான். ‘கடைசியில் அவனும் செத்துட்டான்ல?’ கார்த்திகா கண்கள் ஈரமாயிருந்தது. ‘நான் சொல்லல, கமல் கடைசியா ஒத்த கால்ல நிக்கும்போது நீங்க அழுதுட்டு இருப்பீங்கன்னு?’ மதன் கூற கார்த்திகா சிரித்துக்கொண்டே ‘நான் ஒன்னும் அழல, லைட்டா தூசி’ கார்த்திகா சமாளிக்க மதன் புன்னகைத்தான். இருவரும் சில நொடிகள்

பேசவில்லை, கார்த்திகா மீண்டும் ‘என்ன காதல் இது?’ என்று கேட்க ‘அதன் அவனே சொல்லிட்டானே, மனிதர் உணர்ந்துகொள்ள இது மனிதக் காதல் அல்ல அப்படின்னு, எய்ட்டீஸ்ல, நயின்ட்டீஸ்ல லவ் பண்ணவங்க உண்மையிலேயே லவ்வுக்காக உயிர விட்டாங்க தெரியுமா? நான் சின்ன வயசுல இருந்தப்ப எங்க தெருவுல என் கூட ரொம்பப் பாசமா இருந்த ஒரு அக்கா தூக்குப் போட்டுக்கிட்டாங்க, அவங்க லவ்வுக்காக, அவங்கல மறக்க ரொம்ப நாள் ஆச்சு’ மதன் கூறினான். ‘உண்மைதான், நான் சின்ன வயசுல இருந்தப்ப எங்க கிராமத்துக்குப் பக்கத்துல கூட நிறைய பேர் மலையில இருந்து குதிச்சித் தற்கொலை பண்ணிக்கிட்டாங்க. சுதாவோட ஊர்ல இருந்து தான் ஆளுங்க போய்த் தேடுவாங்க, ஆனா இப்ப இருக்குறவங்க யாரும் அந்தளவுக்கு லவ் பண்றதில்ல’ கார்த்திகா கூற ‘இப்ப இருக்குறவங்க லவ் உயிர கொடுக்கிற அளவுக்கு ஒர்த் இல்லைங்கிறத தெரிஞ்சிக்கிட்டாங்க’ மதன் கூற ‘நீங்க லவ் பண்ணி இருக்கீங்களா?’ கார்த்திகா கேட்க மதன் சில நொடிகள் கழித்து ‘ஆட்டோகிராப் படம் பாத்தீங்களா?’ மதன் முடிப்பதற்குள் ‘அப்ப நான் கல்யாணத்துக்கு முன்னாடி வரவளா? இல்ல கல்யாணம் பண்ணிக்கிறவளா?’ கார்த்திகா கேட்க ‘அத நீங்க தான் முடிவு பண்ணனும்’ மதன் புன்னகையுடன் பதில் கூறினான். கார்த்திகா எதுவும் பேசவில்லை, மதனின் கையில் தன் கை கோத்து அவன் தோள் மீது தன் தலையை வைத்துச் சாய்ந்துகொண்டாள். இதுவரை அவன் உணராத ஒரு புது

உணர்வு மதனுக்குள் உண்டானது, ‘யாராவது வரப்போறாங்க’ மதன் சற்றுப் பதற்றத்துடன் கூற ‘வந்தா பார்க்கலாம்’ கார்த்திகா கூற ‘தேவை இல்லாம என்னால உங்க வீட்ல பிரச்சனை வரக்கூடாதுன்றதாலத்தான் இங்க வர பயந்தேன்’ மதன் கூற ‘எனக்கும் தெரியும், ஆனாலும் உங்க கூட இருக்கணும்னு தோனுச்சு’ கார்த்திகா மதனின் தோள்மீது சாய்ந்தவாறு கூறினாள். இதைக் கேட்டவுடன் மதன் கார்த்திகாவைப் பார்க்க அவளும் தன் தலையை அவன் தோள் மீது சாய்த்தவாறே அவனைப் பார்த்தாள். இருவரும் புன்னகையுடன் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டிருந்தனர்.

அப்போது சுதா அமைதியாக வந்து கார்த்திகாவின் அருகில் அமர்ந்தான். சுதாரித்த மதனும் கார்த்திகாவும் சற்று விலகி அமர்ந்தனர். சுதாவைத் தொடர்ந்து சுரேஷும் தீப்தியும் வீட்டிற்கு வந்தனர். கார்த்திகாவும் மதனும் அருகருகே அமர்ந்திருந்ததையும் டிவியில் குணா படத்தின் காட்சி இருப்பதையும் பார்த்த சுரேஷ் ‘என்னடா நடக்குது இங்க, என்ன பண்ணிட்டு இருந்தீங்க?’ மதனைப் பார்த்துக் கேட்க ‘படம் பாக்குறது கூடத் தப்பாடா?’ என்று மதன் பதில் கேள்வி கேட்டான். அருகில் இருந்த சுதாவைப் பார்த்து சுரேஷ் ‘டேய் ஈசிப்பு, நீ வரும்போது ரெண்டு பேரும் என்னடா பண்ணிட்டு இருந்தாங்க?’ என்று கேட்க ‘அக்கா அண்ணா மேல சாஞ்சிட்டு’ சுதா கூறுவதற்குள் கார்த்திகா அவன் வாயை அமுக்கிச் சமையல் அறைக்குள் தூக்கிக் கொண்டு சென்றாள். ‘இதுக்குப் பேர் தான் உங்க

ஊர்ல ப்ரண்ட்ஷிப்பா?' சொல்லிக்கொண்டே சுரேஷ் மதன் அருகில் அமர வந்தான். 'இர்ரா, ஈரத்தோட உட்காராத, எங்க போய் நெனஞ்ச?' மதன் கேட்க 'சுதா ஒரு சூப்பரான அருவி காம்சான்டா. செம்மையா இருந்தது, இவ அத பாத்த உடனே அப்படியே போய் நின்னுட்டாடா, அவளை இழுக்கப் போய் நானும் இப்படி ஆயிட்டேன், எல்லாம் அவதான்' சுரேஷ் தீப்தியைப் பார்த்துக் கூறினான். 'போய் ரெண்டு பேரும் துணி மாத்திட்டு தலைய துடைங்கடா, கார்த்திகா அப்பா அம்மா பாத்தாங்கன்னா திட்டப் போறாங்க' மதன் சுரேஷையும் தீப்தியையும் பார்த்துக் கூறினான். அதன்படி இருவரும் உடையை மாற்றித் தலையைத் துவட்டியவாறு வந்து அமர்ந்தனர். சுதாவும் சமையல் அறையில் இருந்து வந்து சோபாவில் உட்கார்ந்தான். 'டேய் சுதா, உங்க ஊர் சூப்பரா இருக்கு. நான் உங்க வீட்லையே இருக்கட்டுமா, எனக்கு உங்க காட்டுல இருக்கிற எல்லா இடத்தையும் காட்ரியா' தீப்தி சுதாவைப் பார்த்துக் கேட்க அவன் வெட்கத்துடன் சிரித்தவாறே அமர்ந்திருந்தான். 'சுதாவோட ஊர்க்காரங்க சூப்பர்டா. அதுவும் கார்த்திகா வீட்டு விருந்தாளிங்கன்னு தெரிஞ்சவுடனே என்னமா பாத்துக்கிட்டாங்க தெரியுமா' சுரேஷ் சொல்லும்போதே கார்த்திகா எல்லோருக்கும் காபியைப் பரிமாறினாள். 'அவங்க எங்க வீட்டு விருந்தாளின்னு தெரியலைனாலும் அப்படித்தான் பாத்துப்பாங்க' கார்த்திகா கூறினாள். 'அக்கா ஒரு குகைக்கு உள்ள ஒரு ஓட இருக்குதுக்கா.

தண்ணீர் எவ்வளவு க்ளியரா இருக்குக்கா, அவ்வளவு டேஸ்ட்' தீப்தி கார்த்திகாவைப் பார்த்துக் கூறினாள். 'நீ மிஸ் பண்ணிட்டடா, நீயும் வந்திருக்கலாம்ல?' சுரேஷ் மதனைப் பார்த்துக் கேட்க 'நீங்க பார்த்து இரசிச்சீங்கல்ல, சந்தோஷம்' மதன் சமாளித்தான். இவர்கள் பேசிக்கொண்டிருக்கும்போதே கார்த்திகாவின் அப்பாவும் அம்மாவும் வந்தனர், கார்த்திகா அவள் அப்பா கொண்டு வந்த பையைச் சமையல் அறைக்கு எடுத்துச் சென்றாள். 'என்னப்பா ஊர் சுத்திப் பார்த்தீங்களா, புடிச்சிருக்கா?' என்று சுரேஷைப் பார்த்துக் கேட்டார். 'சார், இனி எங்களுக்கு எப்ப வெக்கேஷன் போகனும்னு தோணுதோ அப்ப வண்டி எடுத்துட்டு உங்க வீட்டுக்கு வந்துடுவோம் நீங்க எங்கள தங்க வைக்கனும்' சுரேஷ் கூற 'உங்களுக்காக எங்க வீடு எப்பவும் காத்துக்கிட்டு இருக்கும்' என்று கூறினார். 'கார்த்தி சீக்கிரம் டின்னர் ரெடி பண்ணுங்கம்மா, டேய் சுதா, பொழுது சாயுது, இங்கயே படுத்துக்கடா, நாளைக்கு வீட்டுக்குப் போவ, இன்னைக்கு அக்கா உனக்காக ஸ்பெஷலா சமைக்கப்போறா' கார்த்திகா அப்பா கூறியவுடன் சுதா மீண்டும் அதே வெட்கத்துடன் கூடிய அமைதியை வெளிப்படுத்தினான். 'கார்த்தி சுதா வீட்ல போன் போட்டு சொல்லிடு, நான் மாடிக்குப் போறேன் கொஞ்சம் ஸ்கூல் வேல இருக்கு' என்று சொல்லிவிட்டு கார்த்திகாவின் அப்பா மாடிக்குச் சென்றார். கார்த்திகாவும் அவள் அம்மாவும் சமையல் அறைக்குச் சென்றனர். தீப்தியும் கார்த்திகாவைப் பின்தொடர்ந்து சமையல் அறைக்குச்

சென்றாள். சுரேஷ் தன் பையில் இருந்த லேப்டாப்பை எடுத்து ஷோபாவின் எதிரில் இருந்த கண்ணாடி மேஜையில் வைத்து வேலை பார்க்க ஆரம்பித்தான். மதனும் தன் வேலையில் மூழ்கினான்.

அன்று இரவு எல்லோரும் சமையல் அறையில் இருந்த டைனிங் டேபிளில் உட்கார்ந்து சாப்பிட்டனர். சாப்பிட்ட பின்னர் கார்த்திகாவின் அப்பா 'சுரேஷ், நீங்களும் மதனும் மேல ஒரு ரூம் இருக்கு அதுல படுக்கறீங்களா, இல்ல கீழ இருக்குற ரூம்ல படுக்கறீங்களா?' என்று கேட்க 'கீழேயே படுத்துக்கறோம் சார்' என்று மதன் கூறினான். 'அப்ப தீப்தி, நீயும் கார்த்திகாவும் மேல இருக்குற ரூம்ல படுத்துக்கோங்க, சுதா, நீ எங்க படுத்துக்கரடா? அக்காங்க கூடவா? அண்ணாங்க கூடவா? இல்ல என் கூடவா?' என்று கார்த்திகாவின் அப்பா கேட்க 'அக்காகூட' என்று மெதுவான குரலில் சுதா கார்த்திகாவைப் பார்த்து பதிலளித்தான். 'சீக்கிரம் தூங்குங்க, நாளைக்குச் சீக்கிரம் எழனும்' என்று சொல்லிவிட்டு கார்த்திகா அப்பா மீண்டும் மாடிக்குச் சென்றார். சிறிது வினாடிகளில் கார்த்திகாவின் அம்மாவும் சமையல் அறையில் இருந்த பாத்திரங்களைக் கழுவி வைத்துவிட்டு 'கார்த்தி, தீப்தி, கண்ணு முழிக்காதீங்க, சீக்கிரம் போய்ப் படுங்க' என்று சொல்லிவிட்டு மாடிக்குச் சென்றார். 'பயங்கரமாத் தூக்கம் வருது, நான் போய்ப் படுக்கறேன், டேய் சுதா, வரியாடா படுத்துக்கலாம்?' என்று தீப்தி கேட்க, சுதா 'அக்கா' என்று கார்த்திகாவைக் கை காட்டினான். 'அக்கா வருவாங்க வாடா நாம

போய் படுத்துக்கலாம்’ என்று குண்டுக்கட்டாக அவனைத் தூக்கிக்கொண்டு மாடிக்குச் சென்றாள். ‘எனக்கும் பயங்கரமாத் தூக்கம் வருது, நாளைக்கு வேற நாலு மணிக்கே எழனும், உங்க ரெண்டு பேருக்கும் குட்நைட்’ என்று சொல்லிவிட்டு சுரேஷ் தன் ரூமிற்குத் தன் லேப்டாப்புடன் சென்றான். கார்த்திகாவும் மதனும் சோபாவில் அமர்ந்து அவர்களின் லேப்டாப்புகளில் வேலை பார்த்துக் கொண்டிருந்தனர். ‘நீங்க தூங்கப் போகல?’ மதன் தன் லேப்டாப்பைப் பார்த்தபடி கார்த்திகாவைக் கேட்க ‘தூக்கம் வரல, நீங்க?’ என்று கார்த்திகாவும் தன் லேப்டாப்பைப் பார்த்தபடி பதில் கேள்வி கேட்க ‘எனக்கும்தான்’ என்று மதன் பதிலளித்தான். ‘பிரியாணி உங்க அம்மா சமைச்சதா?’ மதன் கேட்க ‘நல்லா இல்லையா?’ கார்த்திகா கேட்க ‘அப்படி இல்ல, சும்மாத் தெரிஞ்சிக்கலாம் தான் கேட்டேன்’ மதன் கூற ‘அம்மாதான்’ என்று கார்த்திகா கூற ‘உங்க அப்பா கொடுத்து வெச்சவரு, செம்ம டேஸ்ட், நானா இருந்தா டெய்லி சிக்கன் வாங்கிட்டு வந்து சமைச்சு கொடுக்கச் செல்லுவேன்’ மதன் கூற கார்த்திகா மதனைத் திரும்பிப் பார்த்து ‘அம்மான்னு சும்மா சொன்னேன், எங்க வீட்ல நான் இருந்தா நான்தான் சமைப்பேன்’ கார்த்திகா கூற, ‘இதுக்குத்தான் மொதல்லயே உங்க அம்மாவான்னு கேட்டேன்’ மதன் கூற ‘நான்தான்னு மொதல்லையே சொல்லியிருந்தாப் பாராட்டி இருக்க மாட்டிங்கல்ல?’ கார்த்திகா கேட்க ‘வாயை மூடிக்கிட்டு இருந்திருப்பேன்’ மதன் கூற ‘பாராட்டக் கூட

மனசு வராது, மிசோஜனிஸ்ட்’ கார்த்திகா புன்னகைத்தவாறே மதனைச் செல்லமாக அடிக்கத் தொடங்கினாள்.

**தொடரும்..**

# அந்த ஒரு நம்பர்

காலை நான்கு மணி, ‘எந்திரா டைமாச்சு’ மதன் வழக்கம்போல் சுரேஷை எழுப்பினான். இருவரும் குளித்து முடித்துவிட்டு ஹாலுக்கு வந்து அங்கிருந்த சோபாவில் உட்கார்ந்தனர். தீப்தியும் தன் பைகளை எடுத்துக்கொண்டு மாடியில் இருந்து இறங்கி வந்து சுரேஷுக்குப் பக்கத்தில் அமர்ந்தாள். கார்த்திகாவின் தந்தையும் வெளியில் போய்ச் செவ்வாழை, சர்க்கரை வள்ளிக்கிழங்கு, என்று பல கனிகளை மூன்று பைகளில் போட்டுக் கொண்டுவந்து மதனிடமும் சுரேஷ் மற்றும் தீப்தி இடமும் கொடுத்தார். ‘எதுக்கு சார் இதெல்லாம்’, மதன் கேட்க ‘இருக்கட்டும்பா, வீட்ல கொடு’ என்று கொடுத்தார். கார்த்திகாவின் அம்மா மூவருக்கும் காபி கொண்டுவந்துக் கொடுத்தார். ‘கார்த்திகா தூங்குறாங்களா?’ மதன் தீப்தியிடம் காதோரமாகக் கேட்டான். ‘நீங்க பத்திரமா ஊருக்குப் போகனுமாம், அதுக்காகக் காலையிலேயே குளிச்சிட்டு கிராமத்துல இருக்குற கோயிலுக்குப் போயிருக்காங்க’ தீப்தி பதிலளிக்க ‘கிண்டல் பண்ணாத தீப்தி’ மதன் நம்ப மறுக்கக் கார்த்திகா அந்த இருட்டிலும் வெளியே போய்விட்டு வீட்டிற்கு வந்துக் கொண்டிருந்தாள். ‘நீங்களே பாருங்க’ தீப்தி கார்த்திகா வருவதை மதனுக்குக் கூறினாள். ‘இவள எப்படி ஐடி கம்பெனியில சேர்த்துக்கிட்டாங்க?’ மதன் சுரேஷிடம் கூற ‘உன்னையே

சேர்த்துக்கிட்டாங்க' சுரேஷ் கூறி விட்டுச் சிரிக்க மதன் சுரேஷை கோபமாகப் பார்த்தான்.

கார்த்திகா உள்ளே வந்ததும் அங்கிருந்தவர்களுக்குத் திருநீறு கொடுத்தாள். 'எதுக்காகக் கார்த்திகா இந்த டைம்ல எல்லாம் காட்டுக்குள்ள போறீங்க' சுரேஷ் கார்த்திகாவைப் பார்த்துக் கேட்க 'யாராவது ஊருக்குப் போனா அவங்க பத்திரமாப் போகக் கோயிலுக்குப் போய்க் கும்பிட்டு வரது வழக்கம்தான் தம்பி, நீங்க காலையிலேயே போறதால அவளும் காலையிலேயே சுதாவ கூட்டிக்கிட்டு அங்கப் போயிட்டா' கார்த்திகாவின் அப்பா பதிலளித்தார். மூவரும் புறப்பட தயாராயினர். 'அப்ப நாங்க வரோம் சார். உங்க வீட்ட எங்களால மறக்கவே முடியாது' சுரேஷ் கார்த்திகா அப்பாவின் கைகளைக் குலுக்கி விட்டுத் தன் பைகளை எடுத்துக்கொண்டு காருக்குச் சென்றான். 'போயிட்டு வர்றேன் ஆண்டி, அக்கா சீக்கிரம் சென்னைக்கு வாங்க' தீப்தியும் கார்த்திகாவின் அம்மாவிடமும் கார்த்திகாவிடமும் கூறிவிட்டு காரிடம் சென்றாள்.

மதன் கார்த்திகாவின் அப்பாவிடம் வந்து நின்றான். 'சார், இப்ப நான் சொல்றத எப்படி எடுத்துப்பீங்கன்னு எனக்குத் தெரியல, நான் இங்க வந்ததுல இருந்து ஏதோ தப்பு பண்ணிட்டு இருக்குற மாதிரி இருக்கு, அதே மைண்டோட இங்கிருந்து போக எனக்கு மனசு இல்ல, நீங்க என்ன கார்த்திகாவோட பிரண்டுன்னு நெனச்சித் தான் உங்க

வீட்டுக்குக் கூப்பிட்டு இருப்பீங்கன்னு நினைக்கிறேன். ஆனா நான் கார்த்திகாவை பிரண்டா மட்டும் பார்க்கல, அவங்கள கல்யாணம் பண்ணிக்க ஆசப்படறேன். இது கார்த்திகாவுக்கும் தெரியும்னு நம்புறேன். உங்க பொண்ண ராணி மாதிரி வச்சிக் காப்பாத்த வசதி இருக்கான்னு எனக்குத் தெரியாது, ஆனா நீங்க உங்க பெண்ண எப்படிப் பாத்துக்கிட்டீங்களோ அதே மாதிரி நானும் பாத்துப்பேன். உங்களுக்கும் ஆண்டிக்கும் சம்மதம்னா எனக்கு ஒரு போன் பண்ணுங்க, எங்க அப்பா அம்மாவ கூட்டிட்டு வறேன்' மதன் தன் மனதில் இருப்பதை கார்த்திகாவின் அப்பாவிடம் கூறிவிட அங்கிருந்த எல்லோரும் உறைந்து நின்றனர். யாரும் பேசாததால் மதன் காருக்குப் போக தயாரானான். 'நில்லுங்க தம்பி' கார்த்திகாவின் தந்தை பேசினார், 'மனசுல பட்டத வெளிப்படையா சொன்னதுக்குப் பாராட்டுறேன். அதுக்காக என் பொண்ண உடனே உங்களுக்கு கல்யாணம் பண்ணிக் கொடுக்கனும்னு கட்டாயம் இல்லையே?' கார்த்திகாவின் அப்பா மதனைப் பார்த்துக் கேட்க 'எனக்கும் உங்க சம்மதம் கிடைச்சா தான் கார்த்திகாவ கட்டிக்க முடியும்னு கட்டாயம் இருந்திருக்காது சார், உங்க பொண்ணு கொஞ்சம் தைரியமா அவங்க மனசுல பட்டத சொல்லியிருந்தா' மதன் சொல்லிக்கொண்டிருக்கும்போதே கார்த்திகா குறுக்கிட்டு 'மதன் மேற்கொண்டு எதுவும் பேசாதீங்க, எதுவா இருந்தாலும் அப்புறம் பேசிக்கலாம்' என்று கூற மதன் கார்த்திகாவைப் பார்த்து

‘இப்பவாச்சும் உங்க மனசுல என்ன இருக்குன்னு சொல்லுங்க. நீங்க மொதல்லயே தெளிவா ஏதாவது சொல்லி இருந்தா இந்தாள்கிட்டல்லாம் வந்து தொங்கிக்கிட்டு இருக்கணும்னு அவசியம் இருந்திருக்காதில்ல’ மதனின் கோபம் அதிகமாகிக் கொண்டிருந்தது. ‘டேய், என்னடா?’ சுரேஷ் கார்த்திகாவின் அப்பாவை மதன் மரியாதை குறைவாகப் பேசுவதைத் தட்டிக்கேட்டான். ‘இந்த ஆளுக்கெல்லாம் என்னடா மரியாத, அந்த காலண்டர் பாத்தியா, அந்த கட்சிக்காரங்கக் காலண்டர்’ மதன் கூறியதும் சுரேஷ் கார்த்திகாவின் வீட்டு காலண்டர் பார்த்தான். அதில் முக்கனியில் ஒரு கனி கொண்ட ஒரு கட்சிக்கொடி போட்டோ போடப்பட்டிருந்தது. ‘இவங்கல்லாம் இப்படித்தான்டா, வெளியே தான் கம்யூனிஸ்ட், ஸ்டாலின் போட்டோவ நடு வீட்ல வெச்சிக்கிட்டு சீன் போடுறது, உள்ளுக்குள்ள அதே பழைய ஆண்ட பரம்பரை புத்தி தான்டா’ சுரேஷிடம் சொல்லிவிட்டு ‘யோவ், தயவு செஞ்சு அந்த ஸ்டாலின் போட்டோவ நடு வீட்ல மாட்டாதயா, உன் வீட்ல அந்த ஆள் போட்டோ இருக்குறதுக் கேவலமா இருக்கு’ மதன் சொல்லிக்கொண்டிருக்கும்போதே பளார் என்று அவன் கன்னத்தில் ஒரு அறை விழுந்தது. ‘இதுக்கு மேல ஒரு வார்த்த பேசுனீங்க, பிரண்டுன்னு கூடப் பாக்க மாட்டேன் செருப்பு எடுத்து அடிச்சிடுவேன், உங்களுக்கு என்ன தெரியும் என் அப்பாவைப் பத்தி?’ கார்த்திகா மிகவும் கோபமாக மதனை அறைந்துவிட்டுக்

கேட்டாள். அவள் கண்களில் நீர் பெருக்கெடுத்திருந்தது. சில நொடிகள் யாரும் அங்கு பேசவில்லை. கார்த்திகாவின் கண்களில் இருந்து கண்ணீர் பொங்கியது.

மதன் ஒருவழியாகத் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு ‘அட்டாக் பண்ணிட்ட இல்ல. நல்லாயிரு’ என்று கார்த்திகாவிடம் சொல்லிவிட்டு ‘என்ன மன்னிச்சிடுங்க’ என்று கார்த்திகாவின் அம்மாவிடம் சொல்லிவிட்டு காரை நோக்கி நடந்தான். சுரேஷ் மதனுக்கு எதிரே வீட்டினுள் செல்ல ஆயத்தமானான். ‘ஏன்டா அங்கப் போற?’ மதன் கேட்க ‘உன் பேக் எடுக்கத்தான்டா, மொதல்லயே கார்ல வச்சிட்டு வந்து சண்டை போட வேண்டியதுதானே’ சுரேஷ் கூறினான். மதனால் எதையும் பேச முடியவில்லை, நேரே காரின் அருகாமையில் போய் நின்றான். சுரேஷ் வீட்டினுள் போய் மதனின் பைகளை எடுத்துக்கொண்டு வெளியே வந்து கார்த்திகாவின் அப்பாவிடம் நின்றான். ‘தயவு செஞ்சி அவன் பேசுனத தப்பா எடுத்துக்காதீங்க சார்’ சுரேஷ் கார்த்திகாவின் அப்பாவிடம் கூற ‘எனக்கு எந்த வருத்தமும் இல்லப்பா, நீங்க பத்திரமாப் போயிட்டு வாங்க’ என்று கார்த்திகாவின் அப்பா கூறினார். சுரேஷ் இப்போது கண்களில் கண்ணீர் வடிந்துக் கொண்டிருக்கும் கார்த்திகாவிடம் வந்தான். ‘ஹி இஸ் ஏ ஸ்டுப்பிட் ஆசோல், டோன் டேக் திஸ் சீரியஸ்லி’ சுரேஷ் கூற கார்த்திகா அமைதியாக இருந்தாள். சுரேஷ் இப்போது கார்த்திகாவின் அம்மாவிடம் வந்து நின்றான். ‘நீ என்ன சொல்லப் போறேன்னு

எனக்குத் தெரியும் பா. எங்களுக்கு எந்த வருத்தமும் இல்ல, நீங்க பத்திரமாப் போயிட்டு வாங்க' கார்த்திகா அம்மா சுரேஷிடம் கூறினார். மூவரிடமும் விடைபெற்று சுரேஷ் காருக்கு வந்தான். சுரேஷ் போனவுடன் கார்த்திகாவின் அப்பா கார்த்திகாவின் அம்மாவிடம் 'உன்கிட்ட எத்தன முற தம்பி கொடுத்த அந்த காலண்டர மாட்டாதன்னு சொன்னேன், இப்ப பாத்தியா? மொதல்ல அந்த காலண்டர் கழட்டிட்டு வேற மாட்டு' என்று கூறிவிட்டு 'நீ ஏண்டா கார்த்தி வருத்தப்படற, அப்பா இருக்கேன்' என்று கார்த்திகாவிடம் கூறி அவளை சமாதானப்படுத்தினார்.

'நான் ஓட்டுறேன்' மதன் சுரேஷிடம் சாவியை கேட்டான். சுரேஷும் சாவியைக் கொடுக்க மதன் காரைத் திருப்பினான். சுரேஷும் தீப்தியும் கார்த்திகாவைப் பார்த்து கையசைத்து விட்டு காரின் பின் இருக்கைகளில் அமர்ந்தனர். கார் கார்த்திகாவின் வீட்டிற்கு முன் இருந்த தோட்டத்தைக் கடந்து ரோட்டிற்கு வந்தது. காரில் தீப்தியும் சுரேஷும் கார்த்திகாவின் வீட்டைக் கடந்து சென்றுகொண்டே சுதாவின் கிராமத்தைப் பார்த்தவாறு இருந்தனர். 'உனக்கு சுதாவோட ஊரப் பாக்கக் கொடுத்து வைக்கல' சுரேஷ் கூற 'டேய்ச் செம கடுப்புல இருக்கேன், பேசாம வா' மதன் கடுப்பாகக் கூறினான். 'செய்றதெல்லாம் செஞ்சுட்டு ஏண்டா கத்துற' சுரேஷ் கேட்க 'அவர் சொன்னது மட்டும் சரியா? கட்டிக்கொடுக்க மாட்டேன்னிட்டார்ல? ஜாதி பாத்துத் தானே அப்படிச் சொன்னார்?' மதன் கேட்க 'அவர்

உடனே கட்டிக்கொடுக்கனும்னு அவசியம் இல்லைன்னு தானே சொன்னார், கல்யாணமே செஞ்சு வைக்க மாட்டேன்னு சொல்லலையே. நீ பண்ண ஹீரோயிசத்தைப் பாத்தவுடனே இவ்வளவு நாளா பாசமா வளத்த பொண்ண கூட்டிக்கிட்டு போப்பான்னு சொல்லுவாங்களா? இது என்ன சினிமாவா? பிராக்டிகலா யோசி டா?' சுரேஷ் கூற 'நான் ஒன்னும் அப்பவே கூட்டிக்கிட்டுப் போறேன்னு சொல்லலையே, முறைப்படி அப்பா அம்மாவைக் கூட்டிக்கிட்டு வர்றேன்னு தானே சொன்னேன்' மதன் பதில் அளிக்க 'என்ன இருந்தாலும் அவர மரியாதை இல்லாம பேசியிருக்கக் கூடாதுடா' சுரேஷ் கூற 'ஜாதி பார்க்குறவங்களுக்கெல்லாம் என்னால மரியாத கொடுக்க முடியாது' மதன் கூற 'ஒரு காலண்டர் வெச்சு முடிவு பண்ணாதடா, பொண்ண பெத்தவங்க கவல அவர்களுக்குத்தான் தெரியும், எனக்கென்னமோ கார்த்திகாவின் அப்பா நீ நெனைக்குற மாதிரி ஜாதி பார்க்குறவராத் தெரியல' சுரேஷ் கூற மதன் மவுனமாகக் காரை ஓட்டினான். மதன் காரை ஓட்டும்போது ரியர் வியூ மிரரையும் பக்கத்து சீட்டையும் பார்க்க நேரிட்டது. அப்பொழுதெல்லாம் கார்த்திகா அவனுடன் இருப்பதைப்போல் மதன் உணர்ந்தான். 'எப்படித்தான் மறக்கப் போறேனோ' மதன் சுரேஷைப் பார்த்துக் கூற 'நீதான ஆரம்பிச்ச, படு' சுரேஷ் பதில் அளித்தான். மதன் சிறிது நேரம் மௌனமாகக் காரை ஓட்டினான். 'டேய், இந்த கேள்விய கேட்கிறேன்னு என்ன தப்பா

நெனச்சாலும் பரவாயில்லை, என்னைக்காச்சும் தீப்திய விட்டுப் பிரிஞ்சிடுவேன்னு நெனச்சிப் பார்த்திருக்கியா?' மதன் சுரேஷைப் பார்த்துக் கேட்க சுரேஷ் மௌனமாக இருந்தான். தீப்தி சுரேஷ் என்ன சொல்லப் போகிறான் என்று ஆவலுடன் காத்துக் கொண்டிருந்தாள். சில நொடிகள் கழித்து 'நிறைய முறை யோசிச்சிருக்கேன். எப்ப அதப்பத்தி யோசிச்சாலும் எனக்குள்ள அவ எப்படி என்ன விட்டுட்டு இருக்கப்போறான்னுதான் தோனுமே தவிர நான் எப்படி அவள விட்டு இருக்கப் போறேன்னு தோனுனதில்ல, என் அம்மாவைவிட என் மேல சின்ன வயசுல இருந்து பாசமா இருக்காடா. என்னால இந்த ஜென்மத்துல அவள விட்டுப் பிரிஞ்சு இருக்க முடியாது, அவளாப் பிரிஞ்சு போனாத்தான் உண்டு' சுரேஷ் உருக்கத்துடன் கூறினான். தீப்தி சுரேஷ் அப்படிக் கூறியதும் அவள் கண்களில் கண்ணீர் ஊறியது. புன்னகையுடன் சுரேஷின் கை விரல்களைப் பிடித்துக் கொண்டாள். ரியர் வியூ மிரரில் மதன் தீப்தியையும் சுரேஷையும் பார்க்க இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டிருந்தனர். 'தயவு செஞ்சு சீக்கிரம் கல்யாணம் பண்ணிக்கோங்க, தேவையில்லாம தள்ளிப்போடாதீங்க. எனக்குத்தான் குடுப்பன இல்ல' மதன் விரக்தியில் பேசினான்.'ஏன்டா இப்பவே பொலம்ப ஆரம்பிச்சிட்ட, பாசிட்டிவா இருடா, இவன வெச்சிக்கிட்டு ரூம்ல என்ன பாடு படப் போறேனோ' சுரேஷ் கூற 'அண்ணா, நடந்தது நல்லதுக்கேன்னு நினைச்சுக்கோங்க. அக்காகிட்ட நிதானமா ஒருமுறை பேசிப்

பாருங்க, உங்ககிட்ட அக்கா போன் நம்பர் இருக்குல்ல?’ தீப்தி கேட்க மதன் மௌனமாக இருந்தான். ‘ஏன்டா அமைதியா இருக்க, பேசுவியா மாட்டியா? தப்பு உன் மேல தான் டா, நீதான் பேசனும்’ சுரேஷ் கூற மதன் அப்பொழுதும் அமைதியாய் இருந்தான். ‘டேய் ஏதாவது சொல்றா’ சுரேஷ் மீண்டும் கேட்க ‘டேய் என்கிட்ட அவங்க நம்பர் இல்லடா’ மதன் பதிலளிக்க ‘வௌங்கின மாதிரித்தான்’ சுரேஷ் கூறினான். ‘சரி என்கிட்ட இருக்குன்னா, நான் உங்களுக்கு அனுப்புறேன் பேசுங்க’ என்று தீப்தி கூற ‘வேண்டாம்மா, நீதான் நம்பர் அனுப்புனன்னு தெரிஞ்சா அவங்க உன்ன தப்பா நினைப்பாங்க. என்னால உங்களுக்குள்ள வீணா பிரச்சனை வேணாம். அதுவும் இல்லாம, நான் அவங்கள விட்டு விலகி இருக்குறதுதான் சரின்னு தோணுது. போன் நம்பர் இருந்தா பேசத் தோணும்’ மதன் கூறினான். மேற்கொண்டு சுரேஷும் தீப்தியும் மதனை வற்புறுத்தவில்லை. மதனும் அமைதியாகக் காரை ஓட்டினான். ஒருவழியாகக் கார் மதன், சுரேஷ் தங்கியிருக்கும் ரூமிற்கு வந்தடைந்தது. ‘சரிடா, தீப்திய அவ ரூம்ல விட்டுட்டு நான் வீட்டுக்குப் போய் வண்டிய விட்டுட்டு பைக் எடுத்துட்டு வறேன், நீ கண்டத யோசிக்காம கொஞ்சம் ரெஸ்ட் எடு, மதியம் ஆப்பீஸ்ல மீட் பண்ணுவோம்’ சுரேஷ் மதனை ரூமில் இறக்கி விட்டு சென்றான். மதன் தன் ரூமைத் திறந்தபடி கடந்த இரண்டு நாட்களில் நடந்ததை

யோசித்துப் பார்த்தான். அவன் கார்த்திகாவுடன் இருந்த தருணங்கள் அவன் கண் முன்னே நடப்பது போன்று இருந்தது.

பல நாட்கள் ஓடின. கார்த்திகா மீண்டும் சென்னை வரவில்லை என்பதும் அவள் வீட்டில் இருந்தே வேலை பார்க்கிறாள் என்பதும் தீப்தியின் மூலம் சுரேஷின் வழியாக மதனின் காதுகளுக்கு எட்டியது. அன்று காலையிலேயே மதன் ஆபீஸ் ஜிம்மிற்குப் போய் விட்டுத் தன் வொர்க்ஸ்டேஷனில் அமர்ந்து வேலை பார்த்துக் கொண்டிருந்தான். அப்பொழுது அவனுக்கு ஒரு கால் வந்தது ‘அலோ மதன் இருக்காரா?’ மறுமுனையில் தெரிந்த குரல், மதன் இது கயல் என்று உடனே கணித்தான். ‘கயல்தான?’ மதன் கேட்க ‘ஆமாம்’ என்று பதிலளித்தாள். ‘எப்படி இருக்கீங்க, மில்ட்ரி எப்படி இருக்காரு? எங்க இருக்கீங்க?’ மதன் கேட்க ‘நாங்க எல்லோரும் நல்லா இருக்கோம், ‘ஜம்மு’லத்தான் இருக்கேன். அவர் நல்லா இருக்காரு’ கயல் பதில் கூறினாள். ‘என் நம்பர் உங்களுக்கு எப்படிக் கெடச்சது’ மதன் கேட்க ‘தீப்தி கொடுத்தா’ கயல் கூறினாள். ‘கன்சீவ் ஆகி இருக்கீங்கன்னு கேள்விப்பட்டேன் கங்கிராட்ஸ்’ மதன் கூற ‘தேங்ஸ்’ என்று கயல் கூறினாள். இருவரும் சில நொடிகள் மவுனமாக இருந்தனர். ‘நடந்தது உங்கக் காதுக்கு வந்திருக்கும்னு நினைக்கிறேன்’ மதன் தயக்கத்துடன் ஆரம்பித்தான். ‘ம்ம். வந்தது’ கயல் மீண்டும் மௌனமானாள். ‘எல்லாரும் என்னைத் திட்டித் தீர்த்துட்டாங்க, நீங்களும் உங்க பங்குக்குத் திட்டுங்க’ மதன் கூற. ‘திட்றதால எதுவும் நடக்கப்

போறதில்ல, நான் உங்களுக்குப் போன் பண்ணதே உங்களுக்கு தேங்க்ஸ் சொல்லத்தான்' கயல் கூற 'எதுக்கு?' மதன் கேட்க 'இதுக்குக் கார்த்திகாவைப் பத்திக் கொஞ்சம் சொல்ல வேண்டி இருக்கு, உங்களுக்கு ஓகேன்னா மேற்கொண்டு இதப்பத்திப் பேசலாம், இல்ல இந்த தேங்ஸ் சோட நிறுத்திக்குவோம்' கயல் கூற 'தேங்சோட நிறுத்திக்குவோம்' மதன் திட்டவட்டமாகக் கூறினான். 'தப்பா நினைச்சுக்காதீங்க, உங்களை யாரெல்லாம் திட்னாங்க?' கயல் கேட்க 'வேற யாரு, தீப்தியும் சுரேஷும்தான்' மதன் கூறினான். 'எதுக்குத் திட்னாங்கன்னு தெரிஞ்சிக்கலாமா?' கயல் கேட்க 'நான் கார்த்திகா அப்பாவ மரியாத இல்லாமல் பேசிட்டேன்னு திட்டினாங்க' மதன் கூற 'அவ அப்பாவ பத்தி உங்களுக்கு முழுசாத் தெரியுமா? அவங்க ஏன் அந்தக் காட்டுக்குள்ள இருக்கிற வீட்ல இருக்காங்கன்னு கார்த்திகா உங்ககிட்ட சொன்னாளா?' கயல் கேட்க 'என்ன சொல்றீங்க?' மதன் கேட்க 'கார்த்திகாவோட தாத்தா ஆசனூர்லயே பெரிய புள்ளி, கார்த்திகா அப்பாவோட சேர்த்து அஞ்சு பேர், பசங்க நாலு, ஒரு பொண்ணு. கார்த்திகாவோட அப்பாவுக்கு மூத்தவங்க ரெண்டு பேர், கார்த்திகா அப்பாவுக்குச் சின்னவர் ஒருத்தர். அவ அப்பாவோட வீட்ல அவ அப்பாத்தான் காலேஜ் வரைக்கும் போயிப் படிச்சவரு. அவ அப்பாவோட தங்கச்சிக்கு கல்யாணம் நிச்சயம் ஆன மறுநாளே கார்த்திகாவோட தாத்தா டிக்கெட் வாங்கிட்டாரு. ஒரு வழியா கார்த்திகா அப்பாவோட தங்கச்சி கல்யாணம் முடிஞ்ச கையோட

கார்த்திகா அப்பாவுக்கும் வாத்தியார் வேலை கிடைச்சு சொந்த ஊர்லயே போஸ்டிங் வந்தது. ஸ்கூல் வாத்தியாரா இருந்தாலும் பயங்கரமான கம்யூனிஸ்ட். எந்த ஒரு பிரச்சனைக்கும் இவர்தான் போய் மொதல்ல நிப்பாரு. கார்த்திகா அப்பா தன்னார்வலராக வாரா வாரம் பக்கத்துப் பழங்குடி கிராமங்களுக்குப் போய் முதியோர் கல்வி திட்டத்துல பாடம் நடத்துவார், அப்போ அவருக்குத் துணையாக ஒவ்வொரு கிராமத்துலயும் ஒருத்தர் இருந்தாங்க. நீங்க பாத்திருப்பீங்கன்னு நினைக்கிறேன், கார்த்திகாவோட வீட்டுக்குக் கொஞ்சம் கீழ போனா ஒரு கிராமம் வரும், அந்த கிராமத்துல கார்த்திகா அப்பாவுக்கு முதியோர் கல்வித் திட்டத்துல துணையா இருந்தவங்க தான் கார்த்திகாவோட அம்மா. அப்ப கார்த்திகாவோட அம்மா படிச்சிக்கிட்டு இருந்தாங்க. அந்த கிராமம்தான் கார்த்திகா அம்மாவோட சொந்த ஊர். கார்த்திகாவோட அம்மா ஒரு பழங்குடி இனத்தவங்க' கயல் சொன்னவுடன் மதனுக்கு வாரிப்போட்டது. 'கார்த்திகாவோட பேரண்ஸ் லவ் மேரேஜா?' மதனால் நம்ப முடியவில்லை. 'சாதாரண லவ் இல்லைங்க, அவங்க ரெண்டு பேரோட உயிரையே காவு வாங்க இருந்த லவ்' கயல் கூறியது மதனை மிரளவைத்தது. 'கார்த்திகா தாத்தாவோட பல தோட்டங்கள்ள ஒரு சின்ன தோட்டம் தான் இப்ப கார்த்திகா பேரண்ட்ஸ் இருக்குற அந்த வீடும் தோட்டமும். கார்த்திகா அப்பாவுக்கும் அம்மாவுக்கும் நட்பு ஏற்பட்டதால கார்த்திகா அப்பா அடிக்கடி அந்தத்

தோட்டத்துக்கும் கார்த்திகா அம்மாவோட கிராமத்துக்கும் வருவார். கார்த்திகாவோட அம்மா டீச்சர் ஆகுறதுக்கு அவ அப்பா உறுதுணையாக இருந்தார். அவ அம்மாவும் அதே ஊர்ல டீச்சர் ஆனாங்க. இவங்க ரெண்டு பேருக்கும் இடையில் இருந்த நட்பு காதலா மாறுச்சு. கார்த்திகா அப்பா இந்த விஷயத்தை அவர் வீட்ல சொல்ல, பூகம்பமே வெடிச்சது. அண்ணன் தம்பிகளுக்குள் பெரிய சண்டை, கார்த்திகா அம்மாவ கட்டுனா சொத்துல ஒரு பைசா கூடக் கொடுக்க மாட்டோம்னு கார்த்திகா அப்பாவோட அண்ணனுங்க சொல்லிட்டாங்க. ஆனாலும் கார்த்திகா அப்பா கார்த்திகா அம்மாவ கார்த்திகா அம்மாவோட ஊர்ல இருக்குற அந்த கோயில்ல வெச்சி யாருக்கும் தெரியாம தாலியைக் கட்டிட்டார். இந்த விஷயத்தைக் கேள்விப்பட்ட கார்த்திகா அப்பாவோட அண்ணனுங்க இவங்க ரெண்டு பேரையும் ஊருக்குப் போறதுக்கு முன்னாடியே வெட்டிப் போட ஆள் ஏற்பாடு செஞ்சு அவங்கல நடுக்காட்டுல வெட்டவும் வந்துட்டாங்க, நல்ல வேலையா கார்த்திகா அப்பாவோட கம்யூனிஸ்ட் தோழர்களும் அம்மாவோட ஊர்ல இருந்தவர்களும் குறுக்கப் புகுந்து வெட்ட வந்தவர்களை விரட்டிட்டாங்க. அப்ப சின்னப்பையனாக இருந்த கார்த்திகா அப்பாவோட தம்பி தான் அந்த அண்ணனுங்க கைல கால்ல விழுந்து கார்த்திகா அப்பாவையும் அம்மாவையும் விட்றுங்கன்னு கெஞ்சி சமாதானப்படுத்தினார். கார்த்திகா அப்பாவோட அண்ணனுங்க கார்த்திகா அப்பா சொத்துல

பங்கு கேட்காம போயிட்டா கார்த்திகா அம்மாவ உயிரோடு விட்டுட்றோம்னு வாக்குக் கொடுத்தாங்க. அதோட கார்த்திகா அப்பாவோட தம்பிக்கும் சொத்துல பங்கு கிடையாதுன்னு சொல்லிட்டாங்க. கார்த்திகா அப்பாவோட தங்கச்சி தான் கெஞ்சிக் கேட்டு கார்த்திகா அப்பாவுக்கு இப்ப கார்த்திகா வீடு இருக்குற தோட்டத்தையும் கார்த்திகா அப்பாவோட தம்பிக்குக் கோபியில இருந்த ஒரு ரைஸ்மில்லையும் கொடுக்க சம்மதிக்க வச்சாங்க. கார்த்திகா அப்பா அவர் பொண்டாட்டி மேல கார்த்திகா அப்பாவோட அண்ணனுங்க இன்னொரு முறை கைய வெச்சிருந்தா அவங்களை வெட்டிட்டு ஜெயிலுக்குப் போகவும் தயாரா இருந்தாரு. தனக்காகப் போராடுன தன் தம்பிய பாத்துத் தான் அவர் அவரோட அண்ணனுங்க கிட்ட சமாதானமாகப் போக ஒத்துக்கிட்டார்' கயல் கூறினாள். கார்த்திகா அப்பாவின் கதையைக் கேட்ட மதனுக்குத் தவறு செய்து விட்டோமோ என்ற குற்ற உணர்வு மேலோங்கியது. அவன் கண்கள் கார்த்திகாவின் தந்தையை எண்ணியவுடன் கலங்கியது. அன்று அவன் கார்த்திகாவின் அப்பாவிடம் ஏன் காட்டுக்குள் வீடு கட்டிக்கொண்டு இருக்கின்றீர்கள் என்று கேட்ட போது கார்த்திகாவின் அப்பா ஏதோ சொல்ல வந்து சொல்லாமல் நிறுத்தியதை நினைவு கூர்ந்தான்.

'கார்த்திகா சித்தப்பா தான் இன்னைக்குக் கோபியில நீங்க சொன்ன அந்த ஜாதிக் கட்சியில செயலாளரா இருக்காரு. அவரும் கார்த்திகா

அப்பாவ போலத் தான், எந்த ஒரு பிரச்சனைன்னாலும் முன்னாடி போய் நிப்பாரு. எந்த கட்சிக்காரனும் கார்த்திகா சித்தப்பான்னா ஒரு தனி மரியாதை கொடுப்பாங்க. எங்க அம்மாவே அவங்களுக்கு அந்தக் கட்சியால ஏதாவது உதவி ஆகனும்னா கார்த்திகாவோட சித்தப்பாவதான் தேடுவாங்க. கார்த்திகா சித்தப்பாவாலத்தான் அந்த கட்சி காலண்டர் கார்த்திகா வீட்டுக்குப் போயிருக்கனும். இப்ப சொல்லுங்க கார்த்திகா வீட்ல யார் சாதி வெறி புடிச்சவங்கன்னு?' கயல் கேட்க மதன் மவுனமாய் இருந்தான். 'நீங்க தப்பு பண்ணிட்டீங்கன்னு நான் சொல்ல வரல, இன்பேக்ட் என்ன கேட்டா நான் கார்த்திகா தான் தப்பு பண்ணிட்டான்னு சொல்லுவேன். அவளுக்கு உங்கள புடிக்கும்றத தெளிவா முன்னாடியே உங்களுக்குப் புரிய வச்சிருந்தான்னா நீங்க அவசரப்பட்டு அவ அப்பாகிட்ட போய்ப் பொண்ணு கேட்டு இருக்க மாட்டீங்க. நீங்க பொண்ணு கேட்டு அங்க நடந்த விஷயத்தைக் கார்த்திகா சொல்லும்போது கூட நான் அவள தான் திட்டினேன். நான் உங்ககிட்ட இந்த விஷயத்தைச் சொல்றேன்னு சொன்னேன். ஆனா அப்பகூட அவ அப்பாவோட கதைய உங்ககிட்ட சொல்லாதன்னு கேட்டுக்கிட்டா, தெரிஞ்சா நீங்க வருத்தப்படுவீங்கன்னு கவலப்பட்டா' கயல் கூறிவிட்டுச் சில நொடிகள் பேசுவதை நிறுத்தினாள். மதனுக்கு அழும் நிலை ஏற்பட்டது. 'இப்பக்கூட கார்த்திகா அப்பாவைப் பத்தி உங்ககிட்ட நான் சொல்லியிருக்க

மாட்டேன், ஆனா நீங்க இன்னமும் கார்த்திகா அப்பாவ தப்பா நினைக்குறீங்கன்னு தெரிஞ்சதும் என்னால சொல்லாம இருக்க முடியல. உங்களுக்கு உண்மை தெரிஞ்சே ஆகணும் அதான் சொன்னேன்' கயல் தன்னைத் திடப்படுத்திக்கொண்டு கூறினாள். மதன் தன் அழுகையை மிகவும் போராடிக் கட்டுப்படுத்தினான்.

'நீங்க சண்ட போட்டுட்டு போனதுல இருந்து டெய்லி போன் பண்ணி உங்க நியாபகம் வந்துக்கிட்டே இருக்குன்னு சொல்லுவா. நானும் அது கொஞ்ச கொஞ்சமாகத்தான் சரியாகும், டைம் கொடுடின்னு சொல்லி அவள தேத்திக்கிட்டு வந்தேன். கொஞ்ச நாளா போன் பண்றத நிறுத்தி இருந்தா. ஒரு வாரத்துக்கு முன்னாடி மறுபடியும் போன் பண்ணா, இந்தமுற வழக்கமா நடந்தத பத்திப் புலம்பப் போறாள்னு பார்த்தா, வேற ஒரு விஷயத்த பத்திச் சொல்லி சந்தோஷப்பட்டா, அந்த சந்தோஷத்துக்குக் காரணம் நீங்கதான். அதனாலத்தான் டைம் கிடைக்கும்போது உங்களுக்குப் போன் பண்ணி தேங்க்ஸ் சொல்லனும்னு இருந்தேன். உங்களுக்குப் போன் பண்ணேன்' கயல் மீண்டும் புதிர் போட்டாள். 'அப்படி என்ன நடந்துச்சு' மதன் கேட்க 'உங்களுக்கே தெரியுமே, அவளோட ப்ராஜக்ட்ல முதல்ல அவளுக்கு லினக்ஸ் தெரியலைன்னு அவள மட்டம் தட்னாங்கன்னு, ஆனா ரீசண்டா ஒரு இன்சிடன்ட் நடந்துச்சு. புரொடக்ஷனுக்கு ஒரு கிரிட்டிக்கல் அப்ளிகேஷனோட அப்டேட் ஒன்னு போச்சு. அத கார்த்திகா தான் புஷ் பண்ணா. ப்ரொடக்ஷனுக்கு

புஷ் பண்றதுல எந்த பிரச்சனையும் இல்ல, ஆனா அந்த அப்டேட்ல ஒரு மெமரி லீக் இருந்திருக்கு, அந்த க்ரிட்டிக்கல் அப்ளிகேஷன் இஷ்டத்துக்கும் மெமரிய யூஸ் பண்ணி ரொப்பிடுச்சு, யாராலயும் அந்த சர்வர கனெக்ட் பண்ணி ரிக்கவர் பண்ண முடியல. நல்ல வேளையா கார்த்திகா ஏற்கனவே ஒப்பன் பண்ணி வெச்சிருந்த செக்யூர் ஷெல் மட்டும் ஆக்டிவா இருந்துச்சு. என்ன பண்ணலாம்னு ஒரு ஹை லெவல் மீட்டிங் போட்டு இருக்காங்க. அதுல கார்த்திகாவும் இருந்திருக்கா. டெவலப்பருங்க பக் பிக்ஸ் பண்ணி புது பில்ட்ட வேணும்னா ப்ரொடக்ஷனுக்கு அனுப்புறோம் ஆனா கரண்ட் மெமரில இருக்குற டேட்டாவ சர்வர ரிக்கவர் பண்ணாம எங்களால ஒன்னும் பண்ண முடியாதுன்னு கைய விரிச்சிட்டாங்க. இதுக்கு பிஸ்னஸ் சைடுல இருந்து பயங்கர அப்போஸ், மெமரியில் இருக்கும் டேட்டாவை ரிக்கவர் பண்ணலைன்னா நிறைய லாஸ் வரும் மேல பதில் சொல்ல முடியாதுன்னு அவங்க கத்துறாங்க. கார்த்திகாவின் ப்ராஜக்ட் மேனேஜரும் எங்க வேலைய நாங்க முடிச்சிட்டோம் எங்க கிட்ட எதுவும் இல்லைன்னு கைய விரிச்சிட்டான். ஆனாலும் அந்த டெவலப்பருங்க கார்த்திகா டீம்தான் இத ஹேன்டல் பண்ணனும்னு கோத்து விட்டானுங்க. அப்ப கார்த்திகாவுக்கு நீங்க கத்துக்கொடுத்த SIGSTOP/SIGCONT பத்தி நியாபகம் வந்திருக்கு. அத வச்சி அந்த அப்ளிக்கேஷன ப்ரீஸ்/அன்ப்ரீஸ் பண்ண முடியும்னு தோணியிருக்கு, அப்படி அப்ளிகேஷன ப்ரீஸ் பண்ணாலும் சர்வர் ரிக்கவர் ஆகாது,

அதுக்கு ஏதாவது செஞ்சாகணும்னு யோசிச்சிருக்கா, அப்ப அவளுக்கு நீங்க இந்த சிச்சுவேஷன்ல இருந்தா என்ன பண்ணி இருப்பீங்கன்னு யோசிச்சிருக்கா, கூகிள்ல மெமரிய எப்படி ரியல்டைமா இன்க்ரீஸ் பண்ணலாம்னு தேடியிருக்கா, கெடச்ச ரிசல்ட்ஸ் வெச்சு அவளுக்கு ஐடியா தோணியிருக்கு, ஹார்டிஸ்க்ல dd கமாண்ட் மூலம் ஒரு எம்டி இமேஜ் கிரியேட் பண்ணி அந்த பைல mkswap கமாண்ட் மூலம் ஸ்வாப் பார்மட் பண்ணி அத swapon பண்ணா உடனே ஸ்வாப் மெமரி இன்க்ரீஸ் ஆகும், சிஸ்டமும் மெமரி கிடைச்சதால ரிக்கவர் ஆகும். அப்புறம் அந்த அப்ளிகேஷன அன்ப்ரீஸ் பண்ணி உடனே அந்த அப்ளிகேஷன் மெமரியில் இருக்கும் டேட்டாவை டம்ப் பண்ற ஏபிஐ கால் பண்ணா மெமரியில இருக்கும் டேட்டாவை ரிக்கவர் பண்ணலாம்னு கார்த்திகா யோசிச்சிருக்கா, அவளோட ஐடியாவ அந்த மீட்டிங்ல சொல்லியிருக்கா, அந்த மீட்டிங்ல இருந்தவங்க இவளோட பிரப்போசல அக்சப்ட் பண்ணி புரொசிட் பண்ண சொல்லிட்டாங்க. உடனே அவ நினைச்ச மாதிரி முதல்ல சர்வர ரிக்கவர் பண்ணிட்டா, டெவலப்பர் டீம்ல இருந்தவங்க மேற்கொண்டு அந்த அப்ளிகேஷன ஆக்ஸஸ் பண்ணி மெமரில இருந்த டேட்டாவ ரிக்கவர் செஞ்சுட்டாங்க. கார்த்திகா ரிமோட்ல வேலை பாத்துக்கிட்டு இருந்தாலும் அவ டீம்மெட்சும் அவ ப்ராஜக்ட் மேனேஜரும் அவள தலையில தூக்கி வச்சிக் கொண்டாடி இருக்காங்க, அப்ப கார்த்திகா

உங்கள நினைச்சு உங்களுக்கு தேங்க்ஸ் சொல்லியிருக்கா’ கயல் சொல்லும்போது மதனுக்குப் பெருமிதமாக இருந்தது. ‘இதுல முக்கியமானது என்னன்னா அவ ப்ராஜெக்ட்டுக்கு வரும்போது ஒரு நாள் ரொம்ப வெக்சாகி நான் வேலையை விட்டுப் போறேன்னு சொன்னா, அதுக்கு காரணம் அவ ப்ராஜக்ட்ல இருந்த ஒரு முக்கியமான சீனியர் ரிசோர்ஸ் இவ பார்த்த வேலை தப்புன்னு எல்லோர் முன்னாடியும் சொல்லி கேவலப்படுத்திட்டாராம். ஆனா அதே சீனியர் ரிசோர்ஸ் தான் கார்த்திகாவின் ப்ரப்போசலுக்கு முதல் ஆளா அக்சப்ட் பண்ணி சப்போர்ட் பண்ணாராம். அது அவளுக்குப் பெரிய விஷயமா இருந்திருக்கு. அவ ப்ராஜக்ட் மோனேஜர் அவ தனியா கஷ்டப்பட கூடாதுன்னு புதுசா ஹையர் பண்ணி அவளுக்குக் கீழ இப்ப ஐஞ்சு ஜூனியர்ஸ் வெச்சி கார்த்திகாவ டீம் லீடராக மாத்திட்டாராம்’ கயல் கூறினாள். ‘அவங்க என்கிட்ட எதுக்கு லினக்ஸ் கத்துக்க வந்தாங்களோ அத அச்சீவ் பண்ணிட்டாங்க, என்ன கேட்டா அவங்க எனக்கு தேங்க்ஸ் சொன்னதுக்குப் பதிலா லினக்சுக்கு தேங்ஸ் சொல்லியிருக்கனும். ஏன்னா அதுதான் அவங்கள அப்படி யோசிக்க வச்சது, நான் இல்ல’ மதன் பெருமிதத்துடன் கூறினான்.

‘உண்மைதான், என் ப்ரண்ட டிப்ரஷன்ல இருந்து மீட்டதுக்கு நான் உங்களுக்கு தேங்ஸ் சொல்றதுக்குப் பதிலா அந்த லினக்சுக்குத்தான் தேங்ஸ் சொல்லியிருக்கனும். எனிவே உங்களுக்கும் தேங்க்ஸ், ஏன்னா அவளுக்கு லினக்ஸ் கத்துக்கொடுத்ததுக்கு. முடிஞ்சா

அப்புறம் பேசலாம். பாய்' கயல் சொல்லிவிட்டு போனை கட் செய்தாள்.

மதன் தன் இருக்கையில் அமர்ந்தவாறே கயல் சொன்னவற்றை யோசித்தான். அவனால் தன் வேலையில் ஈடுபட முடியவில்லை. மெதுவாக எழுந்து ரெஸ்ட் ரூம் சென்றான். கார்த்திகாவின் பெற்றோர்கள் கலப்புத் திருமணம் செய்தவர்கள் என்பதையும் காதலுக்காகக் கார்த்திகாவின் பெற்றோர்கள் மரணத்தைச் சந்தித்து இருக்கின்றனர் என்பதையும் யோசிக்கும்போது மதனின் கண்களில் கண்ணீர் பெருக்கெடுத்தது. கார்த்திகாவின் அப்பாவை அவன் மரியாதை இல்லாமல் பேசியதை யோசித்து தலை குனிந்து கொண்டு தன் கைகளால் முகத்தை மூடிக்கொண்டு அழுதான். கார்த்திகாவின் பெற்றோரிடம் காலில் விழுந்து மன்னிப்பு கேட்க வேண்டும் என்று மதன் துடித்தான். மதன் அழுத பின் அவன் மனதில் இருந்த குற்ற உணர்வு ஓரளவு நீங்கியது. ஒருவழியாகத் தன்னைத் திடப்படுத்திக் கொண்டு வந்து முகத்தைக் கழுவிக் கொண்டு மீண்டும் வந்து தன் இருக்கையில் அமர்ந்து வேலை பார்க்க ஆரம்பித்தான். மதன் மிகவும் வருத்தத்தில் இருந்தாலும் கார்த்திகா இப்போது ஒரு டீம் லீடர் அதுவும் லினக்ஸ் கற்றுக்கொண்டு அவள் எண்ணியதை அடைந்துவிட்டாள் என்பதை எண்ணும் போது சற்று ஆறுதலாக இருந்தது. அன்று மதியம் தீப்தியும் சுரேஷும் மதனுடன் சாப்பிட வந்திருந்தனர். அப்போது காலையில் கயல் பேசியதை மதன்

கூறினான். ‘அப்பவே நெனச்சேன், சுதாவ வீட்ல தங்க வைக்குறாங்கன்னா அந்த கிராமத்துக்கும் இவங்களுக்கும் வேற ஒரு நெருக்கமான தொடர்பு இருக்கணும்னு, இப்பத்தான் புரியுது மாமியார் வீட்டுத் தொடர்புன்னு’ சுரேஷ் கூறினான். ‘டேய் நான் என்ன சொல்லிக்கிட்டு இருக்கேன் நீ என்ன யோசிக்குற?’ மதன் கேட்க ‘அவசரப்பட்டு வாய் விட்டல்ல, இப்ப அனுபவி ராஜா, கயல் உன்ன ஒரு வார்த்த கூடவாத் திட்டல?, நானா இருந்தா தும்பப் பூவுல தூக்குல தொங்குற மாதிரி நல்லாக் கேட்டிருப்பேன்’ சுரேஷ் மதனைக் கலாய்த்துக் கொண்டிருந்தான். ‘சும்மா இர்ரா’ தீப்தி சுரேஷைத் திட்டினாள். ‘அதில்ல தீப்தி, அவன் சொல்றதும் சரி தான். கயல் நாலு வார்த்த திட்டியிருந்தாலும் நான் வருத்தப்பட்டு இருக்க மாட்டேன்’ மதன் கூற ‘அண்ணா, நீங்க தெரிஞ்சு எந்தத் தப்பும் பண்ணல, யார்கிட்டயும் நீங்க மன்னிப்பு கேட்கனும்ற அவசியம் இல்ல, யாருக்கும் உங்களைத் திட்ட உரிமையும் இல்ல, நீங்க தேவையில்லாம குழப்பிக்காதீங்க. அவன் பேச்ச கேட்காதீங்க, உங்கள அழவெச்சுப்பாப்பான்’ தீப்தி சுரேஷைப் பார்த்து திட்டியபடியே மதனிடம் பேசினாள். தீப்தியின் வார்த்தைகள் மதனுக்குச் சற்று ஆறுதலாக இருந்தது. மூவரும் சாப்பிட்டு முடித்துவிட்டுத் தங்கள் டெஸ்கிற்குச் சென்றனர்.

பல மாதங்கள் ஒடின. ஒருநாள் கம்பெனியில் வேலை செய்பவர்கள் எல்லோருக்கும் ஒரு மெயில் வந்தது. அதில் அந்த வாரம்

வெள்ளிக்கிழமை கம்பெனியின் சிஇஒ எல்லோரிடமும் லைவ் ப்ராட்காஸ்ட் மூலம் பேச வேண்டும் என்றும் மறக்காமல் அதை எல்லோரும் அட்டென்ட் செய்ய வேண்டும் என்றும் சொல்லப்பட்டிருந்தது. அந்த வெள்ளிக் கிழமையும் வந்தது. மதன் வேலை செய்யும் ஆபீஸில் ஒரு மிகப் பெரிய ஆடிட்டோரியம் இருந்தது. அங்கு எல்லோரும் சிஇஒ வின் பேச்சிற்காக வந்து உட்கார்ந்து கொண்டிருந்தனர். மதன் தன் டெஸ்கில் வேலை பார்த்துக் கொண்டிருந்தான். ‘வாடா போகலாம்’ உதய் மதனை அழைத்தார். ‘நீங்கப் போங்கண்ணா, சும்மா ஏதாவது இந்த வருஷம் கம்பெனி இவ்ளோ ப்ராபிட் பாத்துச்சு லாஸ் பாத்துச்சுன்னு கத அளந்துக்கிட்டு இருக்கப்போறான், அதப் போய்க் கேட்கணுமா. நமக்குச் சல்லிப் பைசா இன்கிரிமென்ட் போட மாட்டாங்க’ மதன் புலம்பினான். ‘நீ திருந்த மாட்டா, சரி நான் வர்றேன்’ உதய் கூறிவிட்டு ஆடிட்டோரியம் நோக்கி நடந்தார். அப்போது மதனின் க்யூப்பிக்கலுக்கு தீப்தி அவசரமாக ஓடி வந்தாள். ‘அண்ணா வாண்ணா போகலாம்’ மதனின் கைகளைப் பிடித்து இழுத்தாள். ‘எங்கம்மா, ஆடிட்டோரியத்துக்கா, ப்ளேடு போடுவாங்கம்மா, நான் வரல’ மதன் சொல்லும்போதே தீப்தி அவனை இழுத்துக்கொண்டு ‘அதெல்லாம் இருக்கட்டும் நீ வாண்ணா’ என்று சொல்லி மதனை அழைத்துக்கொண்டு ஆடிட்டோரியம் வந்தாள். ‘டேய், எவ்வளவு நேரம்டா வரதுக்கு, சீக்கிரம் வந்து உட்காரு’ என்று சுரேஷ் மதனை அழைத்துப் பக்கத்தில்

உட்கார வைத்தான். ‘சரிடா, நான் போய்க் கூட்டிட்டு வறேன்’ தீப்தி சுரேஷிடம் கூறிவிட்டு மறுபடியும் எங்கேயோ ஓடினாள். ‘எங்கடா போரா’ மதன் ஒன்றும் புரியாமல் சுரேஷைக் கேட்டான். ‘வரும்போது தெரியும், மூடிட்டு படத்தைப் பாரு’ சுரேஷ் கூற ‘சினிமா காட்றாங்கன்னே முடிவு பண்ணிட்டியேடா, அவன் சும்மா ஸ்டேட்டிக்ஸ்டிக்ஸ் வெச்சிக்கிட்டு பீலா உடப்போரான்டா’ மதன் கூற ‘ஏதோ ஒன்னு சும்மா டைம் பாஸ் பண்ணுடா’ சுரேஷ் ஆர்வத்துடன் ஆடிட்டோரியத்தில் இருந்த ஸ்க்ரீனைப் பார்த்துக்கொண்டிருந்தான். அப்பொழுது தீப்தியுடன் யாரோ வருவதை மதன் கவனித்தான். தீப்தியும் அந்த இன்னொருத்தரும் நடந்து வர மதனின் இதயத்துடிப்பு அதிகமானது. அது அவளாக இருக்குமோ என்று மதனின் மூளை ஏகத்துக்கும் ப்ராப்பபப்ளிட்டி கணக்குப் போட ஆரம்பித்தது. மதனும் சுரேஷும் உட்கார்ந்திருந்த சீட் வரிசையை தீப்தியும் அந்த மற்றொருவரும் வந்தவுடன் திரும்பியதும் அந்த மற்றொருவர் மதனைப் பார்க்க மதனும் அந்த மற்றொருவரைப் பார்த்தான். அவன் மூளை கணக்குப் போட்டபடியே அந்த மற்றொருவர் கார்த்திகா. இருவரும் சில நொடிகள் கண் இமைக்காமல் பார்த்துக்கொண்டிருந்தனர். ‘உட்காருங்க அக்கா, ஏன் நிற்கறீங்க’ என்று தீப்தி கார்த்திகாவை சீட் வரிசைக்குள் இழுத்து உட்கார வைத்தாள். அவர்கள் உட்கார்ந்த வரிசை திரைக்கு இடது புறம் இருந்தது. மதன் நடைபாதையில் இருந்து உள்ளே நான்காவது சீட்டில்

அமர்ந்தான். அடுத்ததாக சுரேஷ் உட்கார, அவனுக்குப் பக்கத்தில் தீப்தி உட்காரக் கடைசியாக நடைபாதையின் தொடக்கத்தில் கார்த்திகா உட்கார்ந்தாள்.

**Note**

*வாசகர் குறிப்பு*

*இப்பொழுது மதன் பணிபுரியும் கம்பெனியின் சிஇஒ பேசவிருக்கிறார். அவர் பேசுவது இங்கு தமிழில் இருந்தாலும் அவர் ஆங்கிலத்தில் பேசி இருப்பார் என்று எடுத்துக் கொள்ளவும். மதன் வேலை செய்வது ஒரு பன்னாட்டு மென்பொருள் நிறுவனம். அவர்களுக்கு மதன் வேலை செய்யும் ஆபீஸ் போல் உலகம் முழுவதும் பத்திற்கும் மேற்பட்ட ஆபீஸ்கள் உள்ளன*

‘ஹலோ எவ்ரிபடி, உங்க பிசியான ஷெட்யூலில் என்னோட டைம் ஸ்பென்ட் பண்ண வந்ததுக்கு மொதல்ல நன்றி தெரிவிக்கின்றேன். என்னடா பினான்சியல் இயர் எண்ட் கூட இல்லையே இப்ப எதுக்கு இவன் கம்பனியில இருக்குறவங்க கிட்டப் பேசுறான்னு உங்கள்ல பலபேர் யோசிச்சிருப்பீங்க. வழக்கம்போல கையில பேப்பர் ஸ்கிரீன்ல சார்டுமா வந்து மொக்கப் போடப்போறான்னும் பலபேர் யோசிச்சிருப்பீங்க. அப்படி நினைச்சிருந்தா உங்க கணிப்பு தப்பு. நான் உங்கக் கூட பேசுறது வேற ஒரு விஷயத்துக்காக. ரீசண்டா

எனக்கு ஒரு ப்ரண்ட் அறிமுகமானான். அவனோட பேரு மிஸ்டர் எக்ஸ். இந்தப் பேரச் சொன்னவுடனே எல்லோருக்கும் தோன்றுவது ஒருவேள மிஸ்டர் எக்ஸ் ஹேக்கரா இருப்பானோன்னு. உங்கள தப்பு சொல்ல மாட்டேன். ஆனா ஆவன் "ஹேக்கர்ன்னு பெரிய வார்த்தையெல்லாம் சொல்லாதீங்க, நான் பார்த்த ப்ராப்ளத்த உங்ககிட்ட சொன்னா அத ரெக்டிஃபை பண்ணிப்பீங்கன்னு உங்ககிட்ட சொல்றேன் அவ்வளவுதான்" அப்படின்னு ரொம்ப சாதாரணமாச் சொன்னான். இப்ப உங்களுக்கு ஓரளவுக்குப் புரிஞ்சிருக்கும்னு நினைக்கிறேன். ஆமாங்க, கொஞ்ச நாள் முன்னாடி, நம்ம கம்பெனியோட இன்டர்னல் சோசியல் நெட்வொர்க்ல ஒரு ஹேக் நடந்தது. அத நடத்தியது மிஸ்டர் எக்ஸ். வேடிக்கை என்னன்னா, மிஸ்டர் எக்ஸ், நம்ம கம்பனியில வொர்க் பண்ற ஒருத்தர். இப்பவும் வொர்க் பண்ணிக்கிட்டு இருக்கார். உங்க பக்கத்துல கூட உட்கார்ந்து இருக்கலாம்' சிஇஒ சொன்னதும் சுரேஷுக்கு மதனைத் திரும்பிப் பார்க்க தோன்றியது. மதன் இமையைக் கூட சிமிட்டாமல் ஸ்க்ரீனைப் பார்த்துக்கொண்டிருந்தான். 'மிஸ்டர் எக்ஸ் என்ன மொதல்ல ஒரு ட்விட்டர் போஸ்ட்ல ஒரு கருப்பான போட்டோவுக்கு நடுவுல "identify -format '%[EXIF:toCEO]' <thisimage>" அப்படிங்குற லினக்ஸ் கமாண்ட் இருந்த ஒரு போட்டோவ போட்டு என்ன டேக் பண்ணி இருந்தாரு. எனக்கு மொதல்ல யாரோ சும்மா விளையாடறாங்கன்னு தோனுச்சு, பட் அந்த

போஸ்ட்ல இருந்த போட்டோல ஏதோ இருக்குன்னு மட்டும் எனக்குத் தோனுச்சு. நான் நம்ம கம்பெனியோட சிஐஎஸ்ஒ கிட்ட இத பத்தி சொன்னேன். உடனே அவர் தன் லேப்டாப்ல அந்த போட்டோவ டவுன்லோட் பண்ணி அந்த போட்டோவுல இருக்குற கமாண்ட ரன் பண்ணாரு. உடனே ஒரு பெரிய மெசேஜ் வந்தது. அது எனக்கு மிஸ்டர் எக்ஸ் எழுதிய லெட்டர். டிவிட்டர் கேரக்டர் லிமிட்டேஷன் பைபாஸ் பண்ண அப்படி பண்ணியிருக்காரு. அவர் அனுப்பிய லெட்டர் இதுதான் "டியர் சிஇஒ, நான் உங்க கம்பெனில ஒர்க் பண்ற ஒரு சாதாரண எஞ்சினியர். ரீசண்டா நம்ம இன்ப்ராஸ்ட்ரக்சர்ல இருந்த ஒரு ப்ராப்ளம் எனக்குத் தெரிஞ்சது அத உங்களுக்குச் சொல்லனும்னு தோனுச்சு. நம்ம கம்பெனியோட இன்டர்னல் சோசியல் நெட்வொர்க் டெடிகேட்டட் சப்நெட்ல முடிஞ்சா பிசிக்கல் மெஷின்ல பப்ளிக் ஆக்ஸஸ் மட்டும் இருக்கிற மாதிரி ஒரு இடத்துல வெச்சு ரன் பண்ணுங்க. கரண்டா, நம்ம சோசியல் நெட்வொர்க் வெப்சைட் சர்வரும், எம்ப்ளாயிஸ் விர்ச்சுவல் மெஷின்களும் ஒரே இடத்துல இருக்கு. என்னத்தான் ஒரு தனி வீலேன் நம்ம சோசியல் நெட்வொர்க்குக்கு நீங்க ஒதுக்கி இருந்தாலும் என்னால அந்த சைட் ரன் ஆகும் ஒரு சர்வர்ல லாகின் பண்ண முடிஞ்சது. அந்த சர்வர் மூலம், நம்ம கம்பெனி எம்ப்ளாயிஸ் எல்லோரோட டீடெய்ல்சும் இருக்குற டேட்டாபேஸ் சர்வர ஈசியாத் தொட முடிந்தது, அந்த டேட்டாபேஸ்ல இருந்து ஒரே ஒரு போன் நம்பர் மட்டும் நான்

எடுத்துக்கிட்டேன். மத்தபடி எதையும் நான் தொடல. என்ன நீங்க நம்பலாம், நம்பாம போகலாம், அது உங்க இஷ்டம். ஆனா நான் சொல்வது உண்மை. அதுக்கு ஒரு சின்ன ப்ரூப்பா நான் உள்ள நுழைஞ்ச சர்வர்ல ஒரு அட்மின் அக்கவுண்டுக்கு பேரு pbadm7698, இந்த அக்கவுன்டுக்கு sudo பர்மிஷன் இருக்கு. அதனால இந்த அக்கவுன்டோட ஆக்ஸஸ் கெடச்சா அந்த சர்வரில் என்ன வேணும்னாலும் பண்ணலாம். இந்தாங்க அந்த அக்கவுண்ட ஆக்ஸஸ் பண்றதுக்கு தேவைப்படும் பாஸ்வேர்ட் JaiSriRam1JaiRadhe4JaiHanuman3' சிஇஒ தன் ஸ்கிரீனில் அந்த வரிகளைக் காட்டியதும் சுரேஷ் 'F**k, நம்ம ஊர் கூமுட்டை தான் எவனோ பலியாகி இருக்கான், எப்படி மச்சி அந்த எக்ஸ் இவ்வளவு பெரிய பாஸ்வேர்டு பிரேக் பண்ணி இருப்பான், ப்ரூட் ஃபோர்ஸ் பண்ண ரொம்பச் செலவாகியிருக்கும், ரெயின்போவா?' மதனிடம் கேட்க 'கண்டிப்பா ரெயின்போ இல்லை' என்று மதன் சொல்லிவிட்டு மீண்டும் ஸ்கிரீனைப் பார்த்தான். சிஇஒ தொடர்ந்தார் 'அந்த பாஸ்வேர்டைப் பாத்ததும் சிஐஎஸ்ஒ உடனே நம்ம சோசியல் நெட்வர்க் ரன் ஆகுற எல்லா சர்வர் இன்ஸ்டென்ஸ்லயும் மிஸ்டர் எக்ஸ் கொடுத்த யூசர் நேம் பாஸ்வேர்டு யூஸ் பண்ணி லாகின் செய்ய முயற்சி செய்தார். மிஸ்டர் எக்ஸ் சொன்ன மாதிரியே ஒரு இன்ஸ்டன்ஸ்ல அவரால லாகின் பண்ண முடிஞ்சது. உடனே நம்ம சிஐஎஸ்ஒ அவரோட டீம்கு ரெட் அலர்ட் மெயில் அனுப்பிச்சிட்டாரு,

கூடவே பாரன்சிக் அனலைசிஸ் தொடங்கிட்டாரு. மிஸ்டர் எக்ஸ் லெட்டர்ல மேலும் “நான் எப்படி உள்ள போனேன்னு தெரிஞ்சுக்கனும்னா ஏதாவது ஒரு IRC க்ளைன்ட் மூலம் இந்த ஆனியன் யூஆர்எல் இருக்குற இடத்துக்கு வாங்க. எப்படி இந்த யூஆர்எல் வெர்க் ஆகுதுன்னு யாராவது சைபர் செக்யூரிட்டி எக்ஸ்பர்ட் கிட்ட கேளுங்க உங்களுக்கு ஹெல்ப் பண்ணுவாங்க” இப்படித்தான் மிஸ்டர் எக்ஸ் தன்னோட லெட்டர முடித்திருந்தார்’ சிஇஓ சிரித்துக்கொண்டே கூறினார்.

‘நிலைமையின் சீரியஸ்னஸ் புரிஞ்சு எக்ஸ்பர்ட்ஸ் எல்லாம் நம்ம கம்பெனி சர்வர்ஸ அலசி ஆராய ஆரம்பித்து இருந்தாங்க. ஆனா எனக்கு ஏன் அந்த மிஸ்டர் எக்ஸ் ஒரே ஒரு போன் நம்பர் மட்டும் எடுக்கனும் அப்படிங்கிறத தெரிஞ்சுக்க ஆவலா இருந்தது. நான் மறுபடியும் மிஸ்டர் எக்ஸ IRC க்ளைன்ட் மூலம் Tor அப்படிங்கிற ஒரு டார்க்நெட்டோட ஒரு ஆனியன் அட்ரஸ்ல இருந்த ஒரு IRC சர்வர ஆக்ஸஸ் செய்தேன். நான் கனெட் ஆன உடனே நேராக #WelcomeCEO அப்படிங்குற IRC சேனலுக்கு என் க்ளைன்ட் ஆட்டோமேட்டிக்கா ரீடைரக்ட் ஆச்சு. அங்கு மிஸ்டர் எக்ஸ் அப்படிங்கிற நிக் இருந்தது, நான் “அலோ மிஸ்டர் எக்ஸ், நான் சீஇஓ வந்திருக்கேன்” அப்படின்னு அந்த சேனல்ல மெசேஜ் அனுப்பினேன். உடனே “வெல்கம் டியர் சீஇஓ” அப்படின்னு ரிப்ளை வந்தது. நான் மிஸ்டர் எக்ஸ் கிட்ட இரண்டு கேள்விகள் கேட்டேன் “எப்படி அந்த

போன் நம்பர் எடுத்தீங்க” அப்புறம் “ஏன் அந்த போன் நம்பர் எடுத்தீங்க” இந்தக் கேள்விகளைக் கேட்டேன். “முதல்ல எப்படி எடுத்தேன்னு சொல்றேன், அத மூனு ஸ்டேஜா பிரிச்சிக்கலாம், இப்ப முதல் ஸ்டேஜ், எனக்கு கம்பனியில ப்ராஜக்ட் வொர்க்குக்காக ஒரு விர்ச்சுவல் மெஷின் ஒதுக்குனாங்க. வழக்கம்போல அதுல லினக்ஸ் இன்ஸ்டால் பண்ணேன். ஒரு டிபக்கிங் (debugging) பர்பஸ்காக tcpdump யூஸ் பண்ண வேண்டியிருந்தது. tcpdump யூஸ் பண்ணும் போது தேவையில்லாமல் ஏகப்பட்ட ப்ராட்காஸ்ட் பாக்கெட்ஸ் என்னோட இன்டர்பேஸ்ல ஹிட்டாகிட்டு இருந்தது. அதுல ஒரு பாக்கெட்டை எடுத்து பார்க்கும்போது அதில் வீலேன் டேக் இருந்தது, அப்ப எனக்கு ஒன்னு தோணுச்சு, எல்லா விர்ச்சுவல் மெஷினும் ஒரே ஒரு பெரிய பிசிகல் மெஷின்ல ரன்னாகிக்கிட்டு இருக்கனும், ஆனா ஒவ்வொரு விர்ச்சுவல் மெஷினும் வீலேன் மூலம் டிவைட் செய்து இருக்கனும்னு தோனுச்சு. எனக்கு என்னோட விர்ச்சுவல் மெஷின்ல ரூட் ஆக்ஸஸ் இருக்கு. என்னோட விர்ச்சுவல் மிஷின்ல லினக்ஸ் இருக்குறதால நான் ஈஸியா ஒரு வீலேன் இன்டர்பேஸ் கிரியேட் பண்ணி அதுக்குச் சரியான வீலேன் டேக் செட் செஞ்சு ஈஸியா எந்த ஒரு வீலேனையும் ஆக்ஸஸ் பண்ண முடிஞ்சது. இதுவரைக்கும் ஸ்டேஜ் ஒன்” மிஸ்டர் எக்ஸ் தன்னோட முதல் ஸ்டேஜ் முடிச்சார்’ சிஇஒ முடிக்கும்போது ஆடிட்டோரியத்தில் எல்லோருக்கும் அடுத்த

ஸ்டேஜ் என்ன நடந்திருக்கும் என்ற ஆவலுடன் ஸ்கிரீனைப் பார்த்துக்கொண்டிருந்தனர்.

‘மிஸ்டர் எக்ஸ் தன்னோட அடுத்த ஸ்டேஜ் பற்றி விவரிக்க ஆரம்பித்தார் “நான் என்னோட லினக்ஸில் டெம்ரவரியா ஒரு வீலேன் இன்டர்பேஸ் கிரியேட் செஞ்சு அதுக்கு என்னோட வீலேன் டேக் நம்பர்ல இருந்து முன்ன பின்ன இருந்த டேக் நம்பர்களை வெச்சு முயற்சி செய்தேன். அதுல ஒரு டேக் நம்பர்ல பிராட்காஸ்ட் பேக்கொட்ஸ் கிடச்சது. அந்த வீலேன் சப்நெட்ல இருக்குற எல்லா ஐபி அட்ரஸ்களையும் ஸ்கேன் பண்ணி ஒவ்வொரு ஐபிலயும் எந்தெந்த போர்ட் எல்லாம் ஓப்பன்ல இருக்குன்னு பார்த்தேன் அதுல ஒரு குறிப்பிட்ட ஐபியில https மற்றும் ssh போர்ட்டுங்க ஓப்பன்ல இருந்துச்சு. அந்த ஐபியோட https போர்ட்ல கனெக்ட் செஞ்சா அது நம்ம கம்பெனி இன்டர்னல் சோசியல் நெட்வொர்க் ரன் ஆகிட்டு இருக்குற ஒரு சர்வர். என்னால இப்ப நம்ம சோசியல் நெட்வர்க் ரன் ஆகிட்டு இருக்குற எல்லா சர்வர்களையும் அதுங்களுக்குன்னு ஒதுக்கி இருக்குற வீலென் சப்நெட்ல இருந்தே ஆக்ஸஸ் பண்ண முடிஞ்சது. நம்ம கம்பனியில யார் வேண்டுமானாலும் நம்ம சோசியல் நெட்வர்க் ரன்னாகுற சர்வர்ச ஆக்ஸஸ் பண்ண முடியும் ஏன்னா அப்பத்தான் அந்த வெப்சைட்ட யூஸ் பண்ண முடியும். ஆனா எல்லோரும் https புரோட்டோக்கால் வழியாகத்தான் நம் சோசியல் நெட்வர்க ஆக்சஸ் பண்ண முடியும். சோசியல் நெட்வொர்க் சர்வர்ஸ் ரன்னாகுற அந்த

பர்ட்டிக்குளர் வீலேன் சப்நெட் வழியாத்தான் சர்வர்கள ssh புரோட்டோக்கால் மூலமா ஆக்ஸஸ் பண்ண முடியும். நான் இப்ப அந்த வீலேன்ல இருக்கேன் அதனால என்னால ssh ப்ரோட்டோக்கால் மூலம் ஆக்ஸஸ் பண்ண முடியும்” எக்ஸ் சொல்லிக்கொண்டிருக்கும்போதே சிஐஎஸ்ஒ எக்ஸ் கிட்ட “அந்த யூசர் நேம் பாஸ்வேர்ட் எப்படி பிரேக் பண்ணீங்க? நீங்க சொல்றபடிப் பார்த்தா இப்பவும் சர்வருக்கு வெளியே தான் இருக்கீங்க இன்னும் நீங்க சர்வருக்கு உள்ள போகல” என்று கேட்டார். அதுக்கு எக்ஸ் “கரெக்ட், நீங்க சொல்றது உண்மைதான், நான் சர்வருக்கு உள்ள இன்னும் போகல, ஆனா அந்த சர்வர்ஸ் இருக்குர சப்நெட்ல இருக்கேன். இது பழைய ஆதிகாலத்து டெக்னிக்தான். Arp cache poisoning, உங்களோட சர்வருக்குப் பதிலா என்னோட விர்ச்சுவல் மெஷின் தான் உன்மையான சர்வரோட ip address க்கு சொந்தக்காரன்னு Arp பாக்கெட்ஸ சப்நெட்ல ப்ராட்காஸ்ட் பண்ணேன். அதனால் அந்த சப்நெட்ல இருக்குற எல்லா டிவைசும் இப்ப என்னோட விர்ச்சுவல் மெஷின் தான் உண்மையான சோசியல் நெட்வர்க் ரன் ஆகும் சர்வர்னு நம்ப ஆரம்பிச்சிடுச்சுங்க. இப்ப என்னோட லினக்ஸ் மெஷின்ல நான் மாடிஃபை பண்ணி வெச்சிருந்த ssh சர்வர ரன் பண்ணி யாராவது லாகின் பண்ணுவாங்களான்னு ட்ராப் வெச்சு காத்துக்கிட்டு இருந்தேன். கொஞ்ச நேரத்துலயே ஒரு எலி வந்து சிக்குச்சு, அந்த எலிதான் pbadm7698, அந்த எலி கொடுத்த

பாஸ்வேர்டு தான் Jaisriram1jairadhe4jaihanuman3" எக்ஸ் சொன்னவுடன் சிஐஎஸ்ஒ சிரித்தார். நான் என்ன என்று கேட்டேன். அதற்கு அவர் "இன்டர்னல் சப்நெட்டாச்சேன்னு Arp poisoning attack மிட்டிகேட் பண்ணாம விட்டுட்டு இருக்காங்க, ஹி ப்ரோக் இன் யூசிங் தட்" அப்படின்னு சொன்னார். மிஸ்டர் எக்ஸ் தொடர்ந்தார் "ஒன்ஸ் எனக்குத் தேவையான யூசர் நேம் பாஸ்வேர்ட் கெடச்சதும் மீண்டும் Arp ப்ராட்காஸ்ட் பண்ணி மறுபடியும் அந்த சப்நெட்ல இருந்த டிவைஸ்கல ஒரிஜினல் சர்வர் தான் ஒரிஜினல் சர்வரோட ip address க்கு சொந்தக்காரன்னு நம்ப வெச்சிட்டேன். இப்ப எனக்கு கெடைச்ச யூசர் நேம் பாஸ்வேர்ட் வெச்சு அந்த ஒரிஜினல் சர்வர்ல லாகின் பண்ணேன். பாத்தா அந்த சர்வர்ல இருந்து நம்ம கம்பனி டேட்டாபேஸ் சர்வருக்கு டைரக்ட் பாஸ்வேட்லஸ் ஆக்ஸஸ் இருந்தது. அதுவும் நான் ப்ரேக் பண்ண அக்கவுண்ட் ஒரு அட்மின் அக்கவுன்டுன்றதால எந்த ஒரு ரிஸ்ட்ரிக்ஷனும் இல்ல. இதுவரைக்கும் ஸ்டேஜ் டூ" எக்ஸ் அவரோட ஸ்டேஜ் டூ எப்படி நடந்ததுன்னு சொன்னார்' சிஇஒ சொல்லி முடித்தார். அப்போது சுரேஷ் 'மச்சி ஏதாவது புரிஞ்சதாடா' மதனை பார்த்துக் கேட்க 'அப்புறம் உனக்கு எக்ஸ்ப்ளெயின் பண்றேன்' மதன் ஆவலுடன் ஸ்க்ரீனைப் பார்த்துக்கொண்டிருந்தான்.

சிஇஒ தொடர்ந்தார் 'எக்ஸ் அவரது ஸ்டேஜ் த்ரீ எப்படி நடந்ததுன்னு சொன்னார் "இப்ப ஸ்டேஜ் த்ரீ, ஒன்ஸ் நான் டேட்டாபேஸ் சர்வர்ல

லாகின் பண்ணவுடன், அந்த டேட்டாபேஸ் சர்வர் லாக்ஸ் அனலைஸ் பண்ணேன். எப்படியும் இந்த டேட்டாபேஸில் யாரும் டைரக்டா sql query போட மாட்டாங்க, அப்படிப் போட்டா அலர்ட் போகிற மாதிரி வச்சிருப்பாங்கன்னு என்னால ஓரளவுக்கு யோசிக்க முடிந்தது, ஏன்னா எந்த ஒரு நல்ல கம்பனியும் இதச் செய்வாங்க. அந்த லாக்ஸ்ல நான் யோசித்த மாதிரி டைரக்ட் sql query போட்ட உடனே அலர்ட் போயிருந்தது. இப்ப நான் எனக்குத் தேவையான போன் நம்பர் எடுக்க டைரக்ட் sql query போட்டா அது தெள்ளத் தெளிவாக லாக்ஸ்ல வரும், அலர்ட்டும் போகும் அதனால, ஒரே ஒரு எம்ப்ளாய் ஐடி வச்சு கொரி போடுறதுக்குப் பதில் ரேண்டம்மா ஒரு பத்தாயிரம் எம்ப்ளாய் ஐடிய ஜெனரேட் பண்ணேன். அந்த ஐடிக்களுக்கு நடுவே எனக்குத் தேவையான எம்ப்ளாய் ஐடியையும் சொருகுனேன். அந்த எல்லா எம்ப்ளாய் ஐடிக்கும் சம்பந்தப்பட்ட போன் நம்பர எடுக்க ஒரே ஒரு கொரிய அந்த டேட்டாபேஸ்ல எக்ஸிக்யூட் பண்ணேன். வந்த ரிசல்ட்ட டெம்ரவரியா ஒரு லொக்கேஷன்ல சேவ் பண்ணி எனக்குத் தேவையான எம்லாயியோட போன் நம்பர மட்டும் எடுத்துக்கிட்டு டெம்ப்ரவரியா சேவ் பண்ண ரிசல்ட ரிமூவ் பண்ணிட்டேன். நான் டைப் பண்ண எல்லா கமாண்ஸ்சையும் ஷெல் ஹிஸ்ட்ரீல இருந்து கிளீன் பண்ணிட்டேன். நான் எதிர்பார்த்த மாதிரியே ஒரு அலர்ட் போய் இருந்தது. அத வச்சி செக்யூரிட்டி டீம் என்ன பண்ணாங்கன்னு உங்களுக்குத்தான் தெரியும். என்னோட விர்ச்சுவல் மெஷின்ல நான்

டெம்ரவரியா கிரியேட் பண்ண வீலேன் இன்டர்பேஸையும் டெலிட் பண்ணி பேக்லாக்ஸ் ரிமூவ் பண்ணிட்டேன்” எக்ஸ் சொன்னவுடனே நம்ம சிஐஎஸ்ஓ அவரோட டீமுக்குப் போன் போட்டு இப்படி ஒரு அலர்ட் வந்திருக்கே என்ன பண்ணீங்கன்னு கேட்டார். அவருக்கு வந்த ரெஸ்பான்ஸ் நெனச்சு ரொம்ப வருத்தப்பட்டார், அவரோட டீம் அத ஒரு பால்ஸ் அலர்ட்னு விட்டுட்டாங்களாம். ஏன்னா பல சமயம் சோசியல் நெட்வெர்க் சைட்ட டெவலப் பண்ற டெவலப்பர்ஸ், டைரக்டா ப்ரொடக்ஷன் சர்வர்ல கொரி பண்ணுவாங்களாம். அந்த அலர்ட் வந்ததும் செக்யூரிட்டி டீம் அப்படி யாராவது ஒரு டெவலப்பர் தான் கொரி பண்ணி இருப்பாருன்னு அந்த அலர்ட்ட க்ளோஸ் பண்ணிடுவாங்களாம். எனக்கு என்ன சொல்றதுன்னே தெரியல, டேட்டா செக்யூரிட்டிக்கு வருஷத்துக்கு எவ்வளவு செலவு செஞ்சாலும் இதுமாதிரி ஆப்பரேஷ்னல் இக்னோரன்ஸ்னால செலவு செஞ்சது வீணாப் போகுது. என்னால் செக்யூரிட்டி டீம கோச்சிக்க முடியல, அந்த சோசியல் நெட்வொர்க் வெப்சைட் டெவலப்பர்களையும் கோச்சிக்க முடியல, இது டேட்டா செக்யூரிட்டிய எக்ஸிக்யூட் செய்றதுல வர டே-டு-டே ப்ராப்ளம். ஆனா நம்ம சிஐஎஸ்ஓ ரொம்ப கடுப்பானார். போட்டு அவரோட டீம வாங்கு வாங்குன்னு வாங்குனார். எப்படி இந்த லேக் வரலாம், நீங்க சைபர் செக்யூரிட்டி டீமா இல்ல வேற யாராவதா அப்படின்னு அவரது டீம கடுமையாத் திட்டினார். அவருக்கு மிஸ்டர் எக்ஸ் உள்ள

நுழைஞ்சது பெருசா தெரியல, அப்படி ஒரு அலர்ட் வந்தும் அவரது செக்யூரிட்டி டீமோட ரெஸ்பான்ஸ் சரியா இல்லையேன்னு மிகவும் கோபப்பட்டார்' சிஇஓ நடந்ததை விவரித்தார். அப்போது சுரேஷ் 'இப்ப அந்த எக்ஸ்ஸ கண்டுபிடிக்கனும்னா அவர் எடுத்த அந்த ஒரு நம்பர் கண்டுபிடிக்கணும், அப்ப அந்தப் பத்தாயிரம் எம்ப்ளாய்களையும் விசாரிக்கனும். அதுதானே ஒரே வழி' என்று கூற 'அந்த ஒரு நம்பருக்கும் மிஸ்டர் எக்ஸுக்கும் ஏதோ ஒரு ரிலேஷன்ஷிப் இருக்கு' தீப்தி கூறினாள். 'வேற எந்த ரூட்லயும் மிஸ்டர் எக்ஸ நெருங்க முடியாது இல்ல?' சுரேஷ் கேட்க 'முடியும், மிஸ்டர் எக்ஸ் ஒரு விர்ச்சுவல் மெஷின்ல இருந்து தான் இதப் பண்ணி இருக்காரு, அதுவும் ஒரு லினக்ஸ் விர்ச்சுவல் மெஷின்ல இருந்து பண்ணியிருக்காரு, நம்ம கம்பெனியில் எத்தனை பேர் லினக்ஸ் விர்ச்சுவல் மெஷின் யூஸ் பண்றாங்க?' மதன் ஸ்கிரீன் பார்த்தவாறே கூறியவுடன் சுரேஷ், தீப்தி, கார்த்திகா மூவரும் ஒரே நேரத்தில் மதனைப் பார்த்தனர். 'தீப்தி, எனக்கு ஒன்னு தோணுது' சுரேஷ் மதனைப் பார்த்தவாறே தீப்தியிடம் கூற 'எனக்கும் அது தான் தோணுது' என்று தீப்தியும் மதனைப் பார்த்தவாறே கூறினாள்.

சிஇஓ மீண்டும் தொடர்ந்தார் 'எப்படி நம்பர் எடுத்தேன்னு மிஸ்டர் எக்ஸ் விவரமாகச் சொல்லிட்டார். ஆனா ஏன் அந்த நம்பர் எடுத்தார்னு கொஞ்ச நேரம் சொல்லாம இருந்தார். நானும் எதுக்காக அவர் சொல்லனும் நமக்குத் தேவையான விவரங்களைச்

சொல்லிட்டாறேன்னுதான் கேட்காம இருந்தேன். ஆனா என் கூட இருந்த சிஐஎஸ்ஒ ஏன் அந்த போன் நம்பர் எடுத்தீங்கன்னு எக்ஸ் கிட்ட கேட்டார். நான் எதுக்குக் கேக்கறீங்க நமக்குத் தேவையானது கெடச்சிடுச்சேன்னு சிஐஎஸ்ஒ கிட்ட சொன்னேன். ஆனா அதுக்கு அவர், எந்த ஒரு ஹாக்கரும் காரணம் இல்லாமல் இவ்வளவு தூரம் வர மாட்டாங்க. அந்த நம்பரில் ஏதோ இருக்கு அப்படின்னு சொன்னார். நானும் அந்த நம்பர்ல என்னதான் இருக்குன்னு தெரிஞ்சுக்க ஆர்வமாக இருந்தேன். கொஞ்ச நேரத்துக்கு அந்த IRC channel ல எந்த ஒரு மெசேஜும் மிஸ்டர் எக்ஸ் கிட்ட இருந்து வரல, அவருக்குச் சொல்ல விருப்பம் இல்லைன்னு நாங்க நெனச்சப்ப "அந்த நம்பர் எனக்குப் பிடிச்ச ஒரு பொண்ணோட நம்பர்" அப்படின்னு மெசேஜ் வந்தது' சிஇஒ மிஸ்டர் எக்ஸ் அனுப்பிய மெசேஜைத் திரையில் காண்பித்ததும் ஆடிட்டோரியத்தில் இருந்த அனைவரும் சற்று நிமிர்ந்து ஆர்வத்துடன் சிஇஒ சொல்வதைக் கவனிக்க ஆரம்பித்தனர். சாய்ந்து உட்கார்ந்திருந்த சுரேஷும் தீப்பியும் ஒருசேர 'வாட்?' என்று சொல்லியபடி நிமிர்ந்து உட்கார்ந்தனர். இருவரும் மதனை மீண்டும் பார்த்தனர். அவன் திரையை விட்டு வேறு எங்கும் பார்ப்பதாக இல்லை, இருவரும் கார்த்திகாவைப் பார்த்தனர், அவளும் திரையைத் தவிர வேறு எங்கும் பார்க்கவில்லை. சிஇஒ தொடர்ந்தார் 'அந்த மெசேஜ் வந்ததும் என்னால் என் ஆர்வத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லை. நம்ம

சிஜஎஸ்ஒ மிஸ்டர் எக்ஸ் கிட்ட அந்தப் பெண் உங்க லவ்வரா என்று கேட்டார் அதற்கு மிஸ்டர் எக்ஸ் நான் அப்படித்தான் நினைத்தேன் ஆனா அந்த பெண் அப்படி நினைக்கிறாளா இல்லையான்னு என்னால கண்டுபிடிக்க முடியலன்னு சொன்னார். நம்ம சிஜஎஸ்ஒ அப்ப அந்தப் பெண் உங்க எக்ஸ் லவ்வரா உங்கள விட்டுட்டு போய்டாங்களா என்று கேட்டார். அதற்கு மிஸ்டர் எக்ஸ் தனக்கும் அந்தப் பெண்ணிற்கும் சில நாட்களுக்கு முன் ஒரு பிரச்சனை நடந்தது என்றும் அதனால அந்தப் பெண்ணைப் பிரிய வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது என்றும் கூறினார். அந்தப் பெண் உங்கக் கூட பழகிக்கிட்டு இருக்கும் போது அவளோட போன் நம்பரை ஏன் நீங்க வாங்கல என்று நம்ம சிஜஎஸ்ஒ கேட்டார். அதற்கு மிஸ்டர் எக்ஸ், இதே கேள்வியைத்தான் அவரது ப்ரண்ட்சுகளும் கேட்டாங்க அவருக்கு அந்தப் பொண்ணோட போன் நம்பர் கூட வாங்கத் தெரியலையான்னு அவர திட்டினாங்கன்னு சொன்னார். அவரோட பிரண்ட்ஸ் கிட்ட அந்தப் பொண்ணோட போன் நம்பர் இருந்ததாம் அதை அவர்கள் மிஸ்டர் எக்ஸ் கிட்ட கொடுத்து அந்த பெண்ணிடம் பேசச் சொல்லியிருக்கின்றார்கள். ஆனா நம்ம எக்ஸ் அத வாங்க மறுத்திருக்காரு, அவரது ப்ரண்ட்ஸ் மூலம் அந்தப் பெண் நம்பர் வாங்கி அந்தப் பெண்ணிடம் பேசினால் அந்தப் பெண் தன்னோட ப்ரெண்ட்ஸ் மேல வச்சிருக்குற நம்பிக்கைக்குக் களங்கம் வரும்னு நம்பர் வாங்க மறுத்து இருக்காரு. அதுவும் இல்லாம அந்தப்

பெண்ணின் வாழ்க்கையில இவரால மறுபடியும் பிரச்சனை வரக் கூடாதுன்னு முடிவு பண்ணி விலகி இருக்குறதாகவும் சொன்னார். நம்ம சிஐஎஸ்ஒ அப்புறம் ஏன் அந்தப் பொண்ணோட நம்பர் இவ்வளவு ரிஸ்க் எடுத்து கண்டுபிடிச்சீங்க என்று கேட்டார், ஆல்ரெடி ஃபாரின்சிக் அனலைசிஸ் ஆரம்பிச்சிட்டதாகவும், மிஸ்டர் எக்ஸ், அவரோட டிஜிட்டல் ஃபூட்பின்ஸ்ஸ க்ளீன் பண்ணி இருப்பாருன்னு நம்புறதாகவும், அப்படிப் பண்ணாம விட்டிருந்தா மிஸ்டர் எக்ஸ் மாட்டிப்பாருன்னும், அவர் பண்றது ஒரு கிரிமினல் அபன்ஸ் அப்படின்னு நம்ம சிஐஎஸ்ஒ மிஸ்டர் எக்ஸ் கிட்ட சொன்னார். அதர்க்கு மிஸ்டர் எக்ஸ், அவர் பண்ணது கிரிமினல் அபன்ஸ், அவரோட டிஜிட்டல் ப்பூட்பின்ஸ்ஸ க்ளீன் பண்ணதுல ஏதாவது லீக் இருந்தா அவர் மாட்டிக்க வாய்ப்பு இருக்குன்னு அவருக்கும் தெரியும்னு சொன்னார். ஆனாலும் மிஸ்டர் எக்ஸ் எதுக்காக ரிஸ்க் எடுத்தார்னா எப்பவாச்சும் அந்தப் பெண் இவருக்கு கால் பண்ணா நீங்க யார் பேசுறதுன்னு கேட்டுட கூடாதுன்றதுக்காகவும், அவர் கூட அன்பாப் பழகின அந்தப் பொண்ணோட போன் நம்பர் கூட கேட்க தைரியம் இல்லாத கோழையா இருந்துட்டோமேன்னு அவருக்குள் இருந்த தாழ்வு மனப்பான்மையை உடைக்கவும் அவர் அந்த ரிஸ்க்கை எடுத்துட்டதாகவும் கூறினார். அதுமட்டும் இல்லாம, ரொம்ப மெனக்கெட வேண்டாம், சிஇஒ என்னோட உண்மையான அடையாளத்தைத் தெரிஞ்சுக்கனும்னு ஒரே ஒரு மெசேஜ் இந்த IRC

channel ல போட்டா போதும் அப்பவே அவர டாக்ஸ் பண்ணிக்கிறேன்னு மிஸ்டர் எக்ஸ் சொல்லிட்டார். ஏன்னா நியாயப்படி அவர் பண்ணது ஒரு டிஜிட்டல் திருட்டு, அதனால் அவருக்குக் கிடைக்க வேண்டிய தண்டனையை ஏத்துக்க எப்பவும் தயாரா இருக்கிறதா மிஸ்டர் எக்ஸ் அந்த IRC சேட்ல எங்க கிட்ட சொன்னாரு' சிஇஒ சொல்லி முடித்துவிட்டுச் சற்று அமைதியாக இருந்தார்.

ஆடிட்டோரியத்தில் இருந்த பலபேர் மிஸ்டர் எக்ஸின் நேர்மையைக் கைதட்டிப் பாராட்டினர். எல்லோரும் அந்த எக்ஸ் யாராக இருக்கும் என்று அவர்களுள் லினக்ஸ் தெரிந்த வல்லுநர்கள் யார் யார் என்று விவாதித்துக் கொண்டிருந்தானர். ஆனால் கார்த்திகா, தீப்தி, சுரேஷ் மதன் ஆகிய நால்வரும் எதுவும் பேசாமல் வாயடைத்துப்போய் ஸ்க்ரீனையே பார்த்துக்கொண்டு இருந்தனர். 'என்னோட சிஇஒ லைஃப்ல எத்தனையோ க்ரைசிஸ் ஹேண்டில் பண்ணி இருக்கேன், ஆனா இப்படி ஒரு இன்ட்ரஸ்டிங்கான க்ரைசிஸ் முதல் முறையா நான் ஹேன்டில் பண்ற வாய்ப்பு மிஸ்டர் எக்ஸ் மூலமா எனக்குக் கிடைத்தது. அதுவும் நான் ஒரு வார்த்த சொன்னா போதும் தன்ன டாக்ஸ் பண்ணிக்க ரெடியா ஒருத்தர் இருக்கார்ன்னு யோசிக்கும்போது அவர் மேல் மரியாதை தான் வந்தது. இருந்தாலும் இது சைபர் செக்யூரிட்டி சம்பந்தப்பட்டதால நம்ம கம்பெனி சிஐஎஸ்ஒ கிட்ட பைனல் டிசிஷன் எடுக்கக் கேட்டுக்கிட்டேன், அவர் இன்னைக்கு தன்

முடிவை இந்த ப்ராட்காஸ்ட்ல சொல்ல தயாரா இருக்காரு, அவர் என்ன சொல்கிறார்னு கேளுங்க' சீஇஓ முடித்ததும் சிஐஎஸ்ஒ திரையில் தோன்றினார்.

ஆடிட்டோரியத்தில் இருந்த எல்லோரும் சிஐஎஸ்ஒ என்ன சொல்லப் போகின்றார் என்று மிக ஆர்வமுடன் அவர்கள் சீட்டின் நுனியில் அமர்ந்தவாறு ஸ்கிரீனைப் பார்த்துக்கொண்டிருந்தனர். தீப்தியும் சுரேஷும் மிகவும் ஆர்வத்துடன் என்ன சொல்லப் போகிறார் என்று பார்த்துக் கொண்டிருந்தனர். இதுவரை சிஇஒ சொன்னதை வைத்துப் பார்க்கும்போது கார்த்திகாவுக்கு அந்த மிஸ்டர் எக்ஸ் மதனாக இருக்க வாய்ப்பு இருக்கிறது என்று பலமாக நம்பினாள், அந்தப் பெண் தானாக இருக்கும் என்று அவளுக்குத் தோன்றியது. சிஐஎஸ்ஒ சரண் அடையச் சொன்னால் மதன் கண்டிப்பாகத் தன் உண்மையான அடையாளத்தை வெளிப்படுத்தி விடுவான் என்று உறுதியாக நம்பினாள். மதனின் இந்த நிலைமைக்குத் தான்தான் காரணம் என்று என்னும் போது கார்த்திகாவின் கண்கள் கலங்கின. மதன் என்ன செய்கிறான் என்று கார்த்திகா மதனையே பார்த்துக்கொண்டிருந்தாள்.

**Note**

*வாசகர் குறிப்பு*

*இப்பொழுது பேசவிருக்கும் சிஐஎஸ்ஒ பேசுவது இங்கு தமிழில் இருந்தாலும் அவர் ஆங்கிலத்தில் பேசியிருப்பார் என்று எடுத்துக்கொள்ளவும்*

‘அலோ மிஸ்டர் எக்ஸ். நீங்க இந்த ப்ராட்காஸ்ட் பார்த்துக்கிட்டு இருப்பீங்கன்னு நம்புறேன். ஃபர்ஸ்ட் டாப் ஆல் உங்களுக்கு ஒரு பிக் தேங்க்ஸ், நான் சில மாதங்களாக என்னோட செக்யூரிட்டி டீம ரீ ஆர்கனைஸ் பண்ணி ரெட் அண்ட் ப்ளூ டீம்ஸ் பார்ம் பண்ண அப்ரூவல் வாங்கப் போராடிக்கிட்டு இருந்தேன். நம்ம சிஇஒ அப்ரூவல் தள்ளி போட்டுக்கிட்டே இருந்தார். நீங்க உள்ளே புகுந்தது தெரிய வந்ததும் ப்யூச்சர்ல இப்படி நடக்காம இருக்க என்ன பண்ணலாம்னு என்கிட்ட கேட்டார். அதுக்கு நான் ஏற்கனவே சொன்ன ரெட் அண்டு ப்ளூ டீம்ஸ் இருந்திருந்தா இதத் தடுத்திருக்கலாம், மிஸ்டர் எக்ஸ் என்ன பண்ணாரோ அதைத்தான் இந்த ரெட் டீம் ஒரு குறிப்பிட்ட மாதங்கள் இடைவெளியில் யாருக்கும் தெரியாம பண்ணுவாங்க, அந்த ரெட் டீம் உள்ள நுழைய விடாமல் இந்த ப்ளூ டீம் தடுப்பாங்க அப்படின்னு டீட்டெய்ல்டா எக்ஸ்ப்லெயின் பண்ணேன். உடனே என்னோட பிரப்போசல் அப்ரூவ் பண்ணி இம்மீடியட்டா என்னோட சைபர் செக்யூரிட்டி டீம்ஸ் ரீ ஆர்கனைஸ் பண்ணச் சொல்லிட்டாரு. உங்களால இப்ப நம்ம கம்பனியில ரெட் அண்ட் ப்ளூ டீம்ஸ் பார்ம் ஆகிடுச்சு,

என்னோட டீம்ல இருக்குற செக்யூரிட்டி ரிசோர்சர்சும் புது உத்வேகத்தோட இருக்காங்க. சோ, ரெட் டீமோட இம்பார்ட்டன்ஸ் நம்ம சிஇஒக்குப் புரிய வச்சதுக்கு பிக் தாங்ஸ். சிஇஒ விருப்பப்பட்டா உங்கள டாக்ஸ் பண்ணிக்கிறேன்னு சொல்லியிருந்தீர்கள், அந்த முடிவ சிஇஒ என்ன எடுக்கச் சொல்லிட்டார். எங்களுக்கு உங்க உண்மையான முகத்தைப் பார்க்கணும்னு ஆவலா இருக்கு. ஆனா, உங்க விருப்பம் இல்லாமல் உங்களை நாங்கப் பார்க்க விரும்பல. நீங்க விரும்பினா, நீங்க உள்ள புகுந்த அந்த சர்வர் வீலேன் சப்நெட்ல அந்த சர்வருக்கு ஒதுக்கப்பட்ட ஐபி அட்ரஸ்ஸ ஆதாரமா வச்சு நான் தான் அந்த மிஸ்டர் எக்ஸ் அப்படின்னு எனக்கு ஒரு மெயில் அனுப்புங்கள். எங்க ரெட் டீம்ல உங்களுக்கு ஒரு போஸ்டிங் ரிசர்வ் பண்ணி வச்சிருக்கோம், உங்களுக்காக அந்த இடம் எப்போதும் காத்துக்கிட்டு இருக்கும். வி ஆர் வெயிட்டிங் பார் யூ மிஸ்டர் எக்ஸ்' சிஐஎஸ்ஒ பேசி முடித்தவுடன் ஆடிட்டோரியத்தில் இருந்த அனைவரும் எழுந்து கைதட்டிப் பாராட்டினர். மிஸ்டர் எக்ஸையும் அவரை மன்னித்து அவருக்காக உயரிய ஒரு வேலை காத்துக் கொண்டிருக்கிறது என்று சொன்ன தங்கள் கம்பனியின் மேனேஜ்மன்டையும் எல்லோரும் வெகுவாகப் பாராட்டினார்கள். மீண்டும் சிஇஒ திரையில் வந்து 'தேங்ஸ் பார் திஸ் நைஸ் எக்ஸ்பீரியன்ஸ் மிஸ்டர் எக்ஸ், குட்லக் எவ்ரிபடி, உங்கள வேற ஒரு

மீட்ல சந்திக்கிறேன். பாய்' என்று சொல்லிவிட்டு ப்ராட்காஸ்ட் நிறுத்தினார்.

'ஒரு ஹேக்கர் பிளாக் போஸ்ட் படிச்சது மாதிரி இருந்தது, அந்த எக்ஸ் ஸ்டேஜ் பை ஸ்டேஜா சூப்பரா எக்ஸ்ப்ளைன் பண்ணான்' நால்வரும் அமர்ந்திருந்த வரிசைக்கு முன் வரிசையில் இருந்த ஒருவர் சொல்லியவாறே எழுந்து ஆடிட்டோரியத்திற்கு வெளியில் செல்ல தயாரானார். 'கடைசி வரைக்கும் அந்த எக்ஸ் யாருன்னு சொல்லாம போயிட்டாங்க. அதுதான் வருத்தமா இருக்கு' இன்னொருவர் கூறினார். 'அந்த எக்ஸ் கொடுத்து வச்சவன். ரெட் டீம் எல்லாம் ஜாயின் பண்ணா செம்ம காசு தெரியுமா' இன்னொருவர் கூற 'யோவ், அவனே நொந்துபோய் எக்ஸ் லவ்வரோட நம்பர் வாங்கி வைக்காத விரக்தியில் ஏதோ கஷ்டப்பட்டு நம்பர் எடுத்திருக்கான், இப்பவாவது அவன் தாழ்வு மனப்பான்மை இல்லாமல் இருக்கட்டும்னு வேண்டிக்கோங்கயா' ஒரு சீனியர் எம்ப்ளாயி மிஸ்டர் எக்ஸின் நிலையை எண்ணி வருத்தப்பட்டு பேசிக்கொண்டே வெளியில் சென்றார். எல்லோரும் ஆடிட்டோரியத்தில் இருந்து வெளியில் சென்றுவிட்டனர். ஆனால் கார்த்திகா, தீப்தி, சுரேஷ் ,மதன் மட்டும் சீட்டிலிருந்து எழவில்லை. தீப்தியும் சுரேஷும் மதனுக்கு முன் இருக்கும் வரிசையில் மதனுக்கு நேராக இருக்கும் அடுத்தடுத்த இரண்டு சீட்டுகளில் போய்ப் பின்புறமாகத் திரும்பி மதனை பார்த்தவாறு 'எப்படா இதெல்லாம் பண்ண? மாட்டியிருந்த என்ன

நடந்திருக்கும் தெரியுமில்ல?' சுரேஷ் மதனைக் கேட்க மதன் மௌனமாக இருந்தான். 'கார்ல வர்றப்ப போன் பண்ணி அக்கா கிட்ட பேச சொன்னப்ப போன் நம்பர் இல்லைன்னு சொன்னீங்களே அதனாலதான் இப்படிப் பண்ணீங்களா?' தீப்தியும் தன் பங்கிற்கு மதனை மடக்கினாள். அப்பொழுதும் மதன் எதுவும் பேசவில்லை. 'ஏதாவது பேசுடா, நீதான மிஸ்டர் எக்ஸ்' சுரேஷ் கேட்க மதன் நிதானமாகத் தன் செல்போனை எடுத்து அதில் ஒரு வீடியோவைக் காட்டினான். அது மிஷன் இம்பாசிபில் 5 ரோக் நேஷன் படத்தின் க்ளைமேக்ஸில் ஐஎம்எப் லீடராக நடித்திருக்கும் ஜெர்மி ரென்னர் பேசும் டயலாக், அந்த டயலாக்கில் ரென்னர் ஐ கேன் நீதர் கன்ஃபார்ம் நார் டெனி எனி அலெகேஷன்ஸ் என்று சொல்வார். 'சீரியசான சிச்சுவேஷன்ல கூட நக்கல் பண்றத மறக்காதடா. F**k ஜெர்மி ரென்னர், F**k ஈத்தன் ஹான்ட், F**k ஐஎம்எப், F**k மிஷன் இம்பாசிபில், F**k என்எஸ்ஏ, F**k ஜிசிஎச்க்யூ, F**k ரிசர்ச் அன்ட் அனலைசிஸ் விங், F**k யூ' என்று சுரேஷ் மதனைப் பார்த்துத் திட்டிவிட்டு 'அவன் கிட்ட யாரு கேட்டாலும் எப்படிக் கேட்டாலும் அந்த வீடியோவ தான் காட்டப் போறான், எனக்குப் பசிக்குது நீ வரியா இல்லையா?' என்று சுரேஷ் தீப்தியிடம் கேட்டான். தீப்தி கார்த்திகாவிடம் 'வாங்கக்கா போகலாம்' என்று கூறினாள். அதற்குக் கார்த்திகா 'நீங்க போய்ட்டிருங்க பின்னாடியே வர்றேன்' என்று சொன்னாள். தீப்தியும் சுரேஷும் ஆடிட்டோரியம் விட்டு வெளியே

சென்றனர். கார்த்திகாவும் மதனும் நடுவில் இரண்டு சீட் இடைவெளியில் அமர்ந்திருந்தனர். கார்த்திகா மதனைப் பார்த்தாள். மதனும் கார்த்திகாவைப் பார்த்தான். இருவரும் மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்தனர். கார்த்திகாவின் கண்கள் கலங்கியதைப் பார்த்த மதனின் கண்களும் கலங்கின. கார்த்திகா ஏன் என்பதுபோல் தன் கண்களாலேயே கேட்க மதன் என்ன சொல்வதென்று தெரியாமல் தலை குனிந்தான். கார்த்திகா எழுந்து வந்து மதன் அருகாமையில் உட்கார்ந்தாள். கார்த்திகா மதனின் முகத்தை நிமிர்த்தி மீண்டும் ஏன் இப்படிச் செய்தாய் என்பதுபோல் முகபாவனையில் கேட்டாள். மதனால் அவளைப் பார்க்க முடியவில்லை. உடனே கார்த்திகா மதனின் கைகளில் இருந்த செல்போனை எடுத்துத் தன் செல்போனில் இருந்து மதனின் நம்பருக்கு கால் செய்தாள். சில நொடிகளில் மதனின் செல்போன் அடித்தது. கார்த்திகா கணித்தபடியே மதனின் செல்போனில் அவளின் நம்பர் கார்த்திகா என்று சேமித்து வைக்கப்பட்டிருந்தது. கார்த்திகா கால் கட் செய்தவுடன் மதன் செல்போனின் லாக் ஸ்கிரீனில் weechat-android என்ற ஒரு IRC client அப்ளிகேஷனில் #WelcomeCEO என்ற IRC channel ல் சிஇஒ மிஸ்டர் எக்ஸ்சுக்கு இன்று நடந்த சிஇஒ ப்ராட்காஸ்ட் அட்டென்ட் செய்தீர்களா என்று மெசேஜ் அனுப்பி இருந்தார். அதைப் பார்த்ததும் அவள் நம்பியது போல் மதன் தான் மிஸ்டர் எக்ஸ் என்பதை உறுதிப்படுத்திக்கொண்டாள். அந்த மெசேஜை மதனுக்குக்

காட்டினாள். மதனுக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை. கார்த்திகாவும் மதனும் அருகருகே உட்கார்ந்து இருந்தனர். எதுவும் பேசவில்லை. அப்போது சுரேஷ் ஆடிட்டோரியத்தின் நுழைவாயிலில் இருந்து ‘டேய், வாங்கடா சாப்பிடலாம், பசி உயிரே போகுது’ என்று மதனைப் பார்த்துக் கத்தினான். மதன் எழ கார்த்திகாவும் எழுந்து ஆடிட்டோரியம் விட்டு வெளியே வந்தனர்.

நால்வரும் கேண்டீனில் உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தனர். ‘நீங்க எப்ப சென்னை வந்தீங்க கார்த்திகா? டீம் லீட் ஆகிட்டீங்கன்னு கேள்விப்பட்டேன். கங்கிராட்ஸ்’ என்று சுரேஷ் கார்த்திகாவைப் பார்த்துக் கூற. ‘தேங்ஸ், சிஇஒ கிட்ட இருந்து மெயில் வந்ததால என் ப்ராஜக்ட் மேனேஜர் ஆபிசுக்கு ஒரு நாள் வந்து போகச் சொன்னார். அதான் இன்னைக்கு வந்தேன்’ என்று கார்த்திகா கூறினாள். ‘கார்ல ரிட்டர்ன் ஆகும் போதே அந்த லூசுப்பய எக்ஸ் கிட்ட உங்க நம்பர் கொடுத்துப் பேசச் சொன்னோம், பெரிய புடுங்கி மாதிரி வேணாம் அது தப்பு அப்படி இப்படின்னு கதவிட்டான். கடைசியில பார்த்தா எனக்கே தெரியாம இவ்வளவு வேலை பாத்துருக்கான்’ சுரேஷ் மதனைப் பார்த்து எக்ஸைத் திட்டுவது போல் மதனைத் திட்டினான். கார்த்திகா எதுவும் பேசாமல் மௌனமாக இருந்தாள். ‘என்ன இருந்தாலும் நம்ம கம்பெனி சிஜஎஸ்ஒ அவரோட ரெட் டீம்ல மிஸ்டர் எக்சுக்கு ஒரு தனி இடம் கொடுத்து வெயிட் பண்றது பெரிய விஷயம்’ என்று தீப்தி மதனைப் பார்த்துப் பாராட்டினாள். மதன்

எதுவும் பேசாமல் அமைதியாகச் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். ‘டேய் பாத்துடா, நீ சொன்ன மாதிரி ஃபாரன்சிக் எக்ஸ்பர்ட்ஸ் விர்ச்சுவல் மெஷின்ல லினக்ஸ் யார் யார் யூஸ் பண்றாங்கன்னு கணக்கெடுத்து மிஸ்டர் எக்ஸ் புடிச்சுடப் போறாங்க’ என்று சுரேஷ் மதனை உசுப்பேத்த ‘டேய், ஒரு sql query ரன் பண்ணவே அவ்வளவு யோசித்தவன் இத கூடவா யோசிக்க மாட்டான். அவன் வேல முடிஞ்சதும் அவன் டிஜிட்டல் ஃபுட்பிரின்ட்ஸ்ஸ மறைக்க அவனோட விர்ச்சுவல் மெஷின எப்பவோ விண்டோஸ்சுக்கு மாத்திட்டான்’ மதன் சொன்னவுடன் சுரேஷ், தீப்தி மற்றும் கார்த்திகா புன்னகைத்தனர். ‘ஐ மீன், மிஸ்டர் எக்ஸ் மாத்திட்டு இருப்பான்னு சொல்ல வந்தேன்’ என்று மதன் சமாளித்தான். எல்லோரும் சாப்பிட்டு விட்டு அவரவர் கேபினுக்குச் சென்றனர்.

அன்று இரவு பதினோரு மணி ஐம்பது நிமிஷம், சுரேஷிற்கு அவன் வீட்டில் இருந்து ஒரு கால் வந்தது. ‘எப்போ, இப்ப எங்க இருக்காங்க, பேசுராங்களா. நான் கிளம்பி வர்றேன்’ சுரேஷ் பதற்றத்துடன் பேசிவிட்டுத் தன் சட்டையை தேடினான். பக்கத்தில் பார்த்துக்கொண்டிருந்த மதன் ‘என்னடா?’ என்று கேட்டான். சுரேஷ் கண்களில் கண்ணீருடன் ‘அம்மாவுக்கு மறுபடியும் கார்டியாக் அரெஸ்ட், ஹாஸ்பிடல் கூட்டிக்கிட்டுப் போறாங்க’ என்றான். உடனே மதன் தன் சட்டையைப் போட்டுக் கொண்டு அவனும் புறப்பட தயாரானான். ‘டேய் நீ இருடா’ சுரேஷ் கலங்கியவாறு மதனைப்

பார்த்து கூற ‘டேய் மூடிக்கிட்டு வந்து பைக்ல உட்கார்ரா, இந்த நிலைமையில வண்டி ஓட்டிக்கிட்டு போவ’ சுரேஷை உட்கார வைத்துக்கொண்டு மதன் அடுத்த இருபது நிமிடத்தில் இருவரும் ஆஸ்பிட்டலில் இருந்தனர். சுரேஷ் டாக்டரிடம் பேசிவிட்டு மதனிடம் வந்தான் ‘கார்டியாக் அரெஸ்ட் இல்ல, ஜஸ்ட் ஒரு சின்ன ஏர் ஜங்ஷன், ஆக்ஸிஜன் வச்சிருக்காங்க, பயப்பட ஒன்னும் இல்லன்னு சொன்னாங்க’ என்று கூறினான். மதன் சுரேஷ் கூறிய பிறகுதான் நிம்மதி அடைந்தான். சுரேஷின் அம்மாவிடம் தீப்தியின் அம்மா உட்கார்ந்திருந்தார். சுரேஷும் மதனும் ஹாஸ்பிடல் வெளியே இருந்தனர். அப்பொழுது தீப்தியைக் கார்த்திகா கயலின் டியோவில் கூட்டிக்கொண்டு வந்தாள். ‘எங்கடா? எப்படி இருக்காங்க?’ தீப்தி வந்தவுடன் சுரேஷிடம் கேட்டாள். ‘ஒன்னும் இல்லடி, பயப்படாத, உள்ள இருக்காங்கப் போய்ப் பார்’ என்று கூறி உள்ளே அனுப்பி வைத்தான். அன்று இரவு முழுவதும் சுரேஷின் அம்மாவும் தீப்தியின் அம்மாவும் ரூமின் உள்ளே இருக்க தீப்தியும் கார்த்திகாவும் ரூமுக்கு வெளியில் இருந்தனர். சுரேஷும் தீப்தியும் அடிக்கடி ரூமிற்கு உள்ளே சென்று வந்து கொண்டிருந்தனர். மறுநாள் காலையில் சுரேஷின் அம்மா நன்றாகப் பேசும் நிலைக்கு வந்தார். கார்த்திகாவும் மதனும் ரூமுக்கு வெளியில் இருப்பதை அறிந்த சுரேஷின் அம்மா, கார்த்திகாவை முதலில் அழைத்தார்.

‘என்னம்மா கார்த்தி, எப்படி இருக்க?’ சுரேஷின் அம்மா கேட்க ‘உங்களுக்கு இப்ப எப்படி இருக்கு ஆண்டி?’ என்று கார்த்திகா கேட்டாள். ‘இதோ நீயே பாக்குறியே’ என்று சுரேஷின் அம்மா கூறினார். ‘நீங்க கவலைப்படாதீங்க ஆண்டி, உங்கள நல்லா பாத்துக்க தீப்தி இருக்கா, சுரேஷ் இருக்காரு’ கார்த்திகா கூற ‘அதனால தாம்மா நானும் தீப்தியோட அம்மாவும் சேர்ந்து ஒரு முடிவெடுத்து இருக்கோம், கூடிய சீக்கிரம் ரெண்டு பேருக்கும் கல்யாணம் பண்ணி வெச்சுட்டா என்னோட கடமை முடியும். நான் போனாலும் பிரச்சனை இல்லை’ என்று சுரேஷின் அம்மா கூற ‘அப்படியெல்லாம் சொல்லாதீங்க ஆண்டி, தீப்தி பதினாறு பசங்க பெத்து தரப்போரா, அவங்கள எல்லாம் எடுத்துக் கொஞ்சனும், இப்பவே போறேன்னு சொன்னா எப்படி’ கார்த்திகா கூற ‘சும்மா இருக்கா’ தீப்தி வெட்கத்துடன் கார்த்திகாவைக் கேட்டுக்கொண்டாள். ‘வீட்ல அப்பா அம்மா நல்லா இருக்காங்களா?’ சுரேஷின் அம்மா கேட்க ‘நல்லா இருக்காங்க ஆண்டி’ என்று கார்த்திகா பதில் கூறினாள். ‘மதன் எங்க போனான்’ சுரேஷின் அம்மா சுரேஷைப் பார்த்துக் கேட்க ‘வெளிய இருக்கான்’ என்று சொல்லி சுரேஷ் மதனை ரூமிற்கு உள்ளே அழைத்தான். ‘இப்ப எப்படி இருக்கும்மா’ மதன் உள்ளே வந்ததும் கேட்டான் ‘வாடா. நான் இருக்குறது இருக்கட்டும், நீ எப்படி இருக்க? டிப்ரஷன்ல இருக்கிறதா கேள்விப்பட்டேன். ரூம்ல ஒரே சோகப் பாட்டா போட்டு சாகடிக்கிறியாமே, ஏ ஆர் ரகுமான் ஏதோ

கொஞ்சமாத்தான் சோகப் பாட்டு போட்டிருக்கார், கொஞ்சமாவது விட்டு வெய்டா' சுரேஷின் அம்மா சொன்னதும் மதன் சுரேஷை முறைத்தபடி 'அதெல்லாம் ஒன்னும் இல்லம்மா' என்று சுரேஷின் அம்மாவிடம் கூறினான். 'அப்புறம் எதுக்குத் தாடி வச்சிருக்க?' என்று சுரேஷின் அம்மா கேட்கக் கார்த்திகா ஏதோ சொல்ல வந்து சொல்லாமல் இருந்தாள். சுரேஷும் தீப்தியும் கார்த்திகாவைப் பார்த்து புன்னகைத்தனர். 'ஷேவ் பண்ண டைம் இல்லம்மா அதான் வளந்துருச்சு' மதன் சமாளித்தான். 'சுரேஷ் சொன்னானா?' கார்த்திகாவின் அம்மா மதனைப் பார்த்துக் கேட்டார், 'என்னம்மா?' மதன் புரியாமல் கேட்க 'சுரேஷுக்கும் தீப்திக்கும் கூடிய சீக்கிரம் கல்யாணம் பண்ணனும், என் கடமை முடிச்சிட்டா நிம்மதியாப் போய்ச் சேர்ந்திடுவேன்ல?' சுரேஷின் அம்மா கூற 'நல்ல விஷயம் சொல்லும் போது எதுக்கும்மா இதெல்லாம். எங்கள விட்டுட்டு நீங்க எங்கேயும் போக மாட்டீங்க, அதுக்கெல்லாம் ரொம்ப நாள் இருக்கு' என்று மதன் ஆறுதலாகக் கூறினான். 'கல்யாணம் முடிஞ்ச கையோட சுரேஷை கம்பெனி பொறுப்ப ஏத்துக்கச் சொல்லிட்டேன். அவனும் சரின்னிட்டான். என்னாலயும் இதுக்கு மேல முடியாதுடா மதன்' சுரேஷின் அம்மா மதனிடம் கூற 'நீங்க செய்வது சரிதாம்மா' என்று கூறினான். அங்கு சில நிமிடங்கள் யாரும் எதையும் பேசவில்லை. 'மறுபடியும் அப்பா அம்மாவ கூட்டிட்டு போய் கார்த்தி வீட்ல பொண்ணு கேட்டியா?' சுரேஷின் அம்மா மதனைப் பார்த்துக் கேட்க

மதன் சுரேஷின் அம்மாவிடம் இருந்து இந்தக் கேள்வியை எதிர்பார்க்கவில்லை. ‘என்ன நடந்ததுன்னு சுரேஷ் சொன்னான். அதான் மறுபடியும் போய்ப் பொண்ணு கேட்டியான்னு கேட்டேன்’ சுரேஷின் அம்மா விவரமாக மதனிடம் கேட்டார். ‘எப்படிம்மா மறுபடியும் போய் கேட்க முடியும்?’ என்று மதன் கூற ‘லவ்ல அவமானம் அசிங்கம்லாம் சாதாரணம். லவ்வுக்காக எத்தன முற வேணும்ணாலும் அவமானப்படலாம், மொதல்ல உன் அப்பா அம்மாவ கூட்டிக்கிட்டு அவ அப்பா அம்மாப் போய்ப் பாரு’ சுரேஷின் அம்மா கூற, ‘எப்படிம்மா என் அப்பா கிட்ட போய் நான் ஒரு பொண்ணை லவ் பண்றேன் வந்து கல்யாணம் பண்ணி வைங்கன்னு கேட்பேன், என் அப்பாவ பத்தி உங்களுக்கே தெரியும், அந்தப் பொண்ணு உன்ன லவ் பன்றாளான்னு தான் அவர்கிட்ட இருந்து வர மொத கேள்வியா இருக்கும். அந்தக் கேள்விக்கு இப்ப என்கிட்ட பதில் இல்ல’ மதன் சுரேஷின் அம்மாவிடம் கூற மீண்டும் அந்த இடம் அமைதியானது. சில நிமிடங்கள் யாரும் எதையும் பேசவில்லை. அப்போது சுரேஷ் ‘டேய், நமக்குப் பிடிச்சவங்க நமக்குக் கிடைக்கனும்னா, நாமதான் இறங்கி வரனும்’ சுரேஷ் மதனைப் பார்த்துக் கூற ‘நான் எவ்வளவு வேணும்னாலும் இறங்கி வர தயாரா இருக்கேன்டா, ஆனா என்னால என்னோட கைய கொடுக்கத்தான் முடியும், அவங்க கைய புடிச்சி இழுத்துக்கிட்டு வர முடியாது. என் கைய அவங்கதான் புடிக்கணும். கைய புடிக்க

விருப்பம் இல்லாதவங்க கிட்ட என் கைய நீட்டி என்ன பிரயோஜனம்?' மதன் சற்று உரக்கமாக சுரேஷைப் பார்த்துக் கேட்டான். 'ஆமாண்டா, அவங்க அப்பாவ திட்டிட்டு நீ கைய நீட்டினா உடனே உன் கைய பிடிச்சிக்கிட்டு வருவாங்க, லூசுத் தனமாப் பேசாதடா?' சுரேஷும் சற்று உரக்கமாக மதனை பார்த்துக் கேட்டான். 'நீங்க ஏண்டா இப்ப சண்ட போட்றீங்க' சுரேஷின் அம்மா குறுக்கிட்டு 'மதன், எப்படி நான் சுரேஷையும் தீப்தியும் பாக்குறேனோ அப்படித்தான் உன்னையும் கார்த்திகாவையும் பாக்குறேன். நீங்க ரெண்டு பேரும் கல்யாணம் பண்ணிக்கணும், அதுதான் என் விருப்பம். நீ இன்னொரு முறை அவ அப்பா அம்மா கிட்ட போய்ப் பொறுமையா நிதானமாப் பேசு. எல்லாம் நல்லபடியா நடக்கும்' சுரேஷின் அம்மா மதனிடம் கூற 'யாரு இவனாம்மா? பொறுமையாப் பேசுவானா? மறுபடியும் காலண்டர் பாத்துட்டு டென்ஷனாகி பிரச்சனை பண்ணிட்டு வருவான்' சுரேஷ் மதனைப் பார்த்தவாறே தன் அம்மாவிடம் கூறினான். 'சும்மார்ரா, மதன பத்தி எனக்கும் தெரியும்' என்று சுரேஷின் அம்மா சுரேஷை சமாதானப்படுத்தினார். அப்போது டாக்டர்ஸ் மார்னிங் செக்கப் வந்ததால் தீப்தியின் அம்மாவைத் தவிர மற்றவர்கள் ரூமை விட்டு வெளியே வர நேர்ந்தது.

'எப்படா டிசைட் பண்ணீங்க?' மதன் சுரேஷிடம் கேட்டான். 'அம்மா தீப்திய பார்த்தவுடன் புலம்ப ஆரம்பிச்சிட்டாங்க, என்னாலயும் இதுக்கு மேல அம்மாவ கஷ்டப்படுத்த விருப்பமில்ல, எவ்வளவு

நாள்தான் எங்க கம்பெனி பொறுப்ப தாங்கிக்கிட்டு இருப்பாங்க, அதான் ஓக்கே சொல்லிட்டோம்’ சுரேஷ் தீப்தியைப் பார்த்துக் கொண்டே மதனிடம் கூறினான். ‘இப்ப இருக்குற வேலைய ரிசைன் பண்ணனும் இல்லையா’ மதன் கேட்க ‘ஆமாம்டா, ரெண்டு பேரும் ரிசைன் பண்றோம், தீப்தியும் எங்க கம்பனியில ஜாயின் பண்றா’ சுரேஷ் விளக்கினான். ‘கங்கிராட்ஸ் தீப்தி, பைனலி’ கார்த்திகா புன்னகையுடன் தீப்தியிடம் கூறினாள். ‘அப்படியே சொல்லிட்டு ஊருக்குப் போய்டாதிங்க, சுதா உட்பட உங்க வீட்ல இருந்து எல்லோரும் வந்துடனும். இன்விடேஷன் வைக்க வீட்டுக்கு வரோம்’ தீப்தி கூறினாள். ‘நிச்சயதார்த்தம் பிளஸ் மேரேஜ் ரெண்டும் ஒரே டைம்லயா?’ மதன் கேட்க ‘ஆமாண்டா, அத வேற தனித்தனியாக எதுக்கு வெச்சிக்கிட்டு, ரெண்டும் ஒரே டைம்ல முடிச்சிடலாம்னு அம்மா சொன்னாங்க’ சுரேஷ் கூறினான். ‘சரிடா அப்ப நான் கிளம்பறேன், மதியமாச்சும் ஆபீஸுக்குப் போகனும்’ மதன் சுரேஷிடம் சொல்லிட்டு ‘வர்றேன் தீப்தி’ என்று தீப்தியிடம் சொல்லிவிட்டு கார்த்திகாவைப் பார்த்தான். கார்த்திகாவும் மதனைப் பார்த்தாள். இருவரும் பார்த்துக் கொண்டிருப்பதைப் பார்த்த சுரேஷ், ‘போய்ட்டு வர்றேன் கார்த்தின்னு வாய தொறந்து சொல்லித்தான் தொலையேண்டா’ என்று மதனைத் திட்டினான். மதன் மனத்திற்குள் சிரித்தபடி தன் பைக்கை எடுத்துக்கொண்டு ஹாஸ்பிடலில் இருந்து கிளம்பினான். ‘நானும் புறப்படுறேன் தீப்தி, இப்ப பஸ் புடிச்சாத்தான்

ஈவினிங் கோபி போக முடியும் நைட்டுக்குள்ள வீட்டுக்குப் போய்டலாம்' கார்த்திகா கூற 'எதுக்குப் பஸ்ல, எங்க டிரைவர் இருக்காரு, டைரக்டா வீட்ல விட்ர சொல்றேன்' சுரேஷ் கூற 'நீங்க வேற, தேவையில்லாம எதுக்கு, சரி நான் வறேன் தீப்தி, வறேன் சுரேஷ், அம்மாவ பாத்துக்கோங்க' என்று சொல்லிவிட்டுத் தான் கொண்டு வந்த கயலின் டியோவை எடுத்துக்கொண்டு கார்த்திகா ஹாஸ்பிடலில் இருந்து கிளம்பினாள்.

**தொடரும்..**

# உடன்கட்டை

அன்று வெள்ளிக்கிழமை, சுரேஷ், தீப்தியின் திருமணத்திற்கு முந்தைய நாள். சுரேஷின் பார்ம் அவுஸ் அவன் திருமணத்திற்குப் பிரம்மாண்டமாக தயாராகிக்கொண்டிருந்தது. அவன் பார்ம் அவுஸ் சென்னையின் கிழக்குக் கடற்கரைச் சாலையில் கோவலம் கடற்கரையைத் தாண்டி ஒரு இடத்தில் பத்து ஏக்கர் நிலப்பரப்பில் சவுக்கு மரங்களைக் கொண்டு முழுவதும் காம்பவுன்ட் சுவர்கள் எழுப்பி அமைக்கப்பட்டிருந்தது. ஈசிஆர் ரோட்டில் இருந்து சுரேஷின் பார்ம் அவுஸ்ஸுக்குச் சென்னையிலிருந்து பாண்டிக்குப் போகும் திசையில் இடதுபுறம் திரும்பி ஐந்நூறு மீட்டர் சென்றாலே வந்துவிடும். பார்ம் அவுஸின் ஆரம்பத்தில் ஒரு ப்ரம்மாண்ட நுழைவாயில் இருக்கும், அங்கு இரண்டு செக்யூரிட்டிக்கள் இருபத்துநான்கு மணிநேரமும் காவல் இருப்பார்கள். திருமணத்திற்காக அந்த நுழைவாயிலில் அதிக காவலர்கள் இருந்தார்கள். உள்ளே வரும் ஒவ்வொரு காரையும் சோதனையிட்டு உள்ளே அனுப்பினர். நுழைவாயிலுக்கு அடுத்து சில தூரம் அடர்ந்த சவுக்கு மரங்கள் இருக்கும் அதைக் கடந்து வந்தால் பார்ம் ஆவுஸ் நிலப்பரப்பின் நடுவில் ஒரு அழகிய அரண்மனை போன்ற வீடு தெரியும். அந்த வீட்டின் அளவில் மூன்று மடங்கு அதிக நிலப்பரப்பில் வீட்டைச் சுற்றி அழகிய பூந்தோட்டம்

வடிவமைக்கப்பட்டிருந்தது. பூந்தோட்டத்தின் ஆரம்பத்தில் இருந்து வீட்டின் நுழைவாயில் போகும் வழியில் அடர்ந்த பூங்கொடிகள் படர்ந்த வளைவுகள் இருந்தன. திருமணத்திற்காக அந்த வளைவுகளில் அழகிய மின்விளக்குகள் பொருத்தப்பட்டிருந்தன. அடர்ந்த பூங்கொடிகள் கொண்ட வளைவுகள் வீட்டின் நுழைவாயில் செல்லும் வழியில் மட்டுமல்லாமல் வீட்டைச் சுற்றி இருக்கும் பூந்தோட்டத்தின் நான்கு திசைகளிலும் வீட்டிற்குச் செல்லும் வழி போன்று வடிவமைக்கப்பட்டிருந்தது. பூந்தோட்டத்தைச் சுற்றி எத்தனை கார்கள் வேண்டுமானாலும் நிறுத்தும் அளவிற்கு சமவெளிப்பகுதியை சுரேஷின் திருமணத்திற்கு வரும் விருந்தினர்களுக்காக ஏற்பாடு செய்திருந்தனர். கார்கள் நிற்கவைக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும் சமவெளிப்பகுதி பூந்தோட்டத்திற்கும் சவுக்கு மரங்களுக்கும் இடையே தற்காலிகமாக அமைக்கப்பட்டிருந்தது. ஈசிஆர் ரோட்டில் இருந்து பார்த்தால் சுரேஷின் பார்ம் ஆவுஸ், ஏதோ வெறும் சவுக்கு மரங்கள் தோட்டம் போன்று தான் தெரியும், ஆனால் நுழைவாயிலைத் தாண்டிச் சவுக்கு மரங்களைக் கடந்து வந்தால்தான் சுரேஷ் பார்ம் ஹவுஸின் உண்மையான அழகு கண்ணில் புலப்படும்.

சுரேஷின் திருமணத்திற்கு, ரிசப்ஷன் மேடை, பார்ம் ஹவுஸ் வீட்டின் வலது புறம் அமைக்கப்பட்டிருந்தது. விருந்தினர் பார்ம் ஹவுஸ் நுழைவாயிலில் இருந்து காரை ஓட்டிக்கொண்டு சவுக்கு மரங்களைக்

கடந்து வந்தால், அடுத்து இருக்கும் கார்கள் நிறுத்தும் இடத்தில் காரை நிறுத்திவிட்டு அதற்கு அடுத்து இருக்கும் பூந்தோட்ட வளைவுகளில் ஏதேனும் ஒன்றில் நுழைந்து வீட்டின் நுழைவாயிலுக்கு அருகாமையில் வர ரிசப்ஷன் மேடை வீட்டின் வலது புறத்தில் தென்படும். ரிஷப்ஷன் மேடையின் எதிரே நான்கு பேர் அமரக்கூடிய வட்ட வடிவிலான ரிஷப்ஷன் டேபிள்கள் ஏராளமாய்ப் போடப்பட்டிருந்தன. சுரேஷின் திருமணத்தின் நிகழ்வுகள் அவன் திருமணத்திற்கு வந்திருப்பவர்கள் எங்கு இருந்தாலும் அவர்களுக்குத் தெரியும்படிச் செய்ய வேண்டும் என்பதில் மதன் உறுதியாக இருந்தான். அதனால் இசையமைப்பாளர்கள் நடத்தும் நேரடி இசை நிகழ்ச்சிகளுக்கு சவுண்ட் சிஸ்டங்கள் ஏற்பாடு செய்யும் ஒரு நிறுவனத்தை மதன் சுரேஷின் திருமணத்திற்காக லீசுக்கு எடுத்தான். கார் பார்க்கிங் ஏரியாவில் கார்கள் பார்க்கிங் செய்வதற்கு இடையூறு இல்லாதபடி மிகப்பெரிய 16x9-98”-8k-OLED ஸ்கிரீன் செட்டப்பை நான்குத் திசைகளிலும் நிறுவினான். அவைப் பார்ப்பதற்கு ஒரு மினி சினிமா ஸ்க்ரீன்கள் போன்று இருந்தது. வருபவர்களுக்குத் துல்லியமான ஒலி வழங்க வேண்டும் என்று மதன் டால்பி அட்மாஸ் துள்ளிய ஒலியை எழுப்பும் ஸ்பீக்கர்களை 9.2.4 செட்டப்பில் நிறுவினான். அதன்படி ரிஷப்ஷன் நடக்க இருக்கும் மேடைக்கு இரு பக்கங்களிலும் இரண்டு ஸ்பீக்கர்களும், இரண்டு சப்ஊப்பர்களும், ரிஷப்ஷன் டேபிள்கள் போடப்பட்டிருக்கும் இடத்தைச் சுற்றி டால்பி

அட்மாஸ் 9.2.4 செட்டப்பில் ஏழு ஸ்பீக்கர்களையும் நிறுவினான். மேற்கொண்டு நான்கு சீலிங் ஸ்பீக்கர்கள் சீலிங்கில் இருக்க வேண்டும் என்பதால் மேடைக்கு எதிரில் விருந்தினர்கள் அமர வைக்கப்பட்டிருக்கும் ரிஷப்ஷன் டேபிள்கள் இருக்கும் இடத்திற்கு மேலே இரண்டு கம்பிகளைச் சிறிது இடைவெளி விட்டு இரு திசையிலும் இருக்கும் சவுக்கு மரங்களில் கட்ட வைத்து அந்தக் கம்பிகளின் உதவியுடன் ரிஷப்ஷன் டேபிள்கள் உள்ள இடத்திற்கு மேலே வெட்டவெளியில் உயரமாக நான்கு அட்மாஸ் ஸ்பீக்கர்கள் தொங்குமாறு செய்தான். ரிஷப்ஷன் மேடைக்கு அருகாமையில் வலதுபுறம், பூந்தோட்டத்தின் உள்ளே, ரிஷப்ஷன் மேடையைப் பார்க்கும்படியும் ஆனால் விருந்தினர்கள் ரிஷப்ஷன் டேபிளில் உட்கார்ந்தால் தெரியாதபடியும் ஒரு சிறிய மறைவான இடத்தில் பந்தல் போடப்பட்டு ஆடியோ, வீடியோ கண்ட்ரோலர்களையும், ஆம்ளிப்பையர்களையும் வைத்திருந்தனர். ஆடியோ, வீடியோ கன்ட்ரோலர்களை இயக்க ஒரு சவுண்ட் எஞ்சினியரை அந்த நிறுவனம் அனுப்பியிருந்தது.

மதனின் பெற்றோரும், அவன் தங்கையும், தங்கையின் கணவருடன் அவள் குழந்தையையும் அழைத்துக் கொண்டு வந்திருந்தாள். மதன் குடும்பத்தினருக்கு வீட்டின் மாடியில் ஒரு ரூம் ஒதுக்கப்பட்டிருந்தது. அன்று மாலை, கார்த்திகாவின் வீட்டிலிருந்தும் கார்த்திகாவின் அப்பாவும் அம்மாவும் கார்த்திகாவுடன் வந்தனர். அவர்களுக்கும்

வீட்டில் ஒரு ரூம் ஒதுக்கப்பட்டிருந்தது. இரு வீட்டினரின் ரூம்களும் அடுத்தடுத்து இருந்தன. மதன் காலை முதல் சுரேஷின் வீட்டில் இருந்தாலும் அவன் அன்று முழுவதும் அந்த வீட்டின் உள்ளே செல்ல வாய்ப்பு கிடைக்கவில்லை, ஸ்க்ரீன்கள் மற்றும் சவுண்ட் சிஸ்டம் நிறுவும் பணியில் அவனுக்கு அந்த நாள் சென்றுகொண்டிருந்தது. இதனால் கார்த்திகா அன்று மாலை வந்ததைக் கூட அவனால் கவனிக்க முடியவில்லை.

திருமணத்திற்கு வந்த மதனின் தங்கை, தீப்தி இருக்கும் ரூமிற்கு உதவியாக இருக்கச் சென்றாள். ‘என்னக்கா இன்னும் ரெடி ஆகலையா’ மதனின் தங்கை தன் கைக் குழந்தையுடன் உள்ளே நுழைந்தவாறு தீப்தியிடம் கேட்டாள். ‘ப்யூட்டிசியன் இன்னும் வரல, லோட்டாயிடுமோன்னு பயம்மா இருக்கு’ தீப்தி பதற்றத்துடன் கூறினாள். ‘ஏன் டென்ஷன் ஆறீங்க, லொகேஷன் ஷேர் செஞ்சிட்டீங்கள்ள, வந்துடுவாங்க. நீங்க ரிலாக்ஸா இருங்க’ மதனின் தங்கை தீப்தியை ஆறுதல் படுத்தினாள். அப்போது கதவைத் திறந்தபடி ‘என்ன இன்னும் அப்படியே இருக்க? ரெடியாகலையா?’ கார்த்திகா உள்ளே வந்து தீப்தியைக் கட்டிப்பிடித்துக்கொண்டாள். ‘எப்பக்கா வந்தீங்க’ என்று தீப்தி கார்த்திகாவைப் பார்த்துக் கேட்க, ‘இப்பத்தான், வந்ததும் நேராக உன்னைப் பார்க்கனும்னு தேடிக்கிட்டு வறேன்’ கார்த்திகா கூற, ‘பொய்தான?’ தீப்தி கார்த்திகாவை கலாய்க்க ‘சும்மார்ரி’ என்று கார்த்திகா புன்னகையுடன் கூறினாள். அப்போது

அங்கு இருந்த மதனின் தங்கையைக் கார்த்திகா பார்த்ததும் ‘ஹாய், என் பேர் கார்த்திகா’ என்று கூறித் தன் கையை நீட்டினாள். மதனின் தங்கையும் ‘ஹாய்’ என்று கார்த்திகாவின் கைகளைக் குலுக்கினாள். இருவருக்கும் இருவரும் யார் என்று அப்போது தெரியாது. அந்த ரூமில் அப்போது இருவரையும் பற்றித் தெரிந்தவள் தீப்திதான். அங்கிருந்த தீப்தி இருவரும் கை குலுக்குவதைப் பார்த்துப் புன்னகைத்தாள். மதனின் தங்கையைக் கார்த்திகாவிற்கு அறிமுகப்படுத்த தீப்தி ஆயத்தமாகி ‘கார்த்திகா அக்கா, இவங்க..’ தீப்தி முடிப்பதற்குள். தீப்தியின் ரூம் கதவுகள் மீண்டும் திறக்கப்பட்டன. இப்போது உள்ளே வந்தது சுரேஷ், ‘என்னடி ரெடியாகலையா?’ சுரேஷ் தீப்தியைக் கேட்க ‘நான் என்ன ரெடி ஆகமாட்டேன்னா சொன்னேன், ப்யூட்டிசியன் இன்னும் வந்து சேரல’ தீப்தியும் தன் பங்கிற்குப் புலம்பினாள். ‘சரி டென்ஷனாகாத, வந்துருவாங்க’ என்று சுரேஷ் தீப்தியிடம் சொல்லிவிட்டு அங்கிருந்தவர்களைப் பார்த்தான். அவன் கண்களுக்கு முதலில் கார்த்திகா தென்பட்டாள். ‘எப்ப வந்தீங்க கார்த்திகா?’ சுரேஷ் கேட்க ‘இப்பத்தான் பியூ மினிட்ஸ் பேக்’ கார்த்திகா பதில் கூறினாள். சுரேஷ் அடுத்து மதனின் தங்கையை அவள் கைக்குழந்தையுடன் பார்த்தான். ‘கருவாச்சி, எப்படி வந்த? என் மருமகன் என்ன பண்றான்? தூங்குறானா?’ சுரேஷ் மதனின் தங்கையை அவளின் குழந்தையின் கன்னத்தைக் கிள்ளிய படி நலம் விசாரித்தான். ‘அப்பா அம்மா வரல?’

சுரேஷ் மதனின் தங்கையைக் கேட்க, ‘ரூம்ல இருக்காங்க’ மதன் தங்கை பதில் கூறினாள். ‘ஹஸ்பண்ட் வரல?’ சுரேஷ் கேட்க ‘அவர் தான் வண்டி ஓட்டிக்கிட்டு வந்தாரு, ரூம்ல இருக்கார்’ மதனின் தங்கை கூறினாள். இப்போது மீண்டும் ரூம் கதவுகள் திறந்தன. ‘தேங் காட் இப்பவாச்சும் வந்தீங்களே’ தீப்தி உள்ளே வந்த பியூட்டிசியனைப் பார்த்துக் கூறினாள். ‘சாரி மேடம் கொஞ்சம் ரூட் கன்பியூஷன் அகிடுச்சு, வெளியே இருந்து பாக்குறதுக்கு வெறும் காடு மாதிரி இருந்தது, பார்ம் ஹவுஸ் உள்ள வந்த பிறகுதான் அதோட உண்மையான அழகுத் தெரிஞ்சது’ அவர்கள் கூறியதும் தீப்தி சுரேஷைப் பார்த்துப் புன்னகைத்தாள். ‘சரிங்க, நாம ஆரம்பிக்கலாம்’ என்று தீப்தி கூறியதும் ப்யூட்டிசியன் வந்த வேலையைத் தொடங்கினார். மதனின் தங்கை அவள் குழந்தையுடன் அமர, கார்த்திகாவும் அமர்ந்தாள். ‘அப்புறம் கருவாச்சி, லைப் எப்படிப் போகுது’ சுரேஷ் மதனின் தங்கையிடம் கேட்க ‘டேய், அவங்களுக்கு கல்யாணம் ஆகி ஒரு குழந்தை இருக்கு, இப்பவாவது ஒழுங்கா பேர் சொல்லிக் கூப்பிடு, அவங்க ஹஸ்பண்ட் நீ இப்படி கூப்பிடுறதுக் கேட்டார்னா என்ன நினைப்பார்’ சுரேஷ் மதனின் தங்கையைக் கூப்பிடுவதை தீப்தி தட்டிக்கேட்டாள். ‘என் தங்கச்சிய நான் எப்படி வேணும்னாலும் கூப்பிடுவேண்டி, யார் எப்படின்னா நெனச்சிக்கட்டும், கருவாச்சின்னா கருப்பா இருக்குற பொண்ணுன்னு அர்த்தமில்ல, தமிழச்சின்னு அர்த்தம், அவளோட கலையான முகம்

யாருக்கும் வராது டீ, என்ன சொல்றீங்க கார்த்திகா? கரெக்ட் தானே?' சுரேஷ் தீப்தியிடம் சொல்லிக்கொண்டே கார்த்திகாவைப் பார்த்தபடி கேட்க 'உண்மையிலேயே ரொம்ப அழகா இருக்காங்க' கார்த்திகாவும் மதனின் தங்கையைப் பார்த்தபடி புன்னகையுடன் கூறினாள். 'என்ன வச்சு காமிடி தான பண்றீங்க?' மதனின் தங்கை சிரித்துக்கொண்டே சுரேஷிடம் கேட்டாள். 'சீரியசா சொல்லுறேண்டி, பக்கா தமிழ்ப் பொண்ணு யாருன்னு யாராவதுக் கேட்டா என் தங்கச்சிடான்னு உன்னத்தான் நான் சொல்லியிருக்கேன், வேணும்னா தீப்திய கேளு?' சுரேஷ் கூற தீப்தி மேக்கப் போட்டுக்கொண்டே சிரித்தாள். 'அவங்களோட உண்மையான அண்ணன் கூட உன்ன மாதிரி ஐஸ் வைத்திருக்க மாட்டார்டா' தீப்தி சுரேஷைப் பார்த்துக் கூற 'அவன் கிடக்கிறான் வெளக்கெண்ண, இப்ப கூடப் பாரு, முக்கியமானவங்க வந்திருப்பாங்களே, அவங்கள வந்து மீட் பண்ணலாம்னு இருக்கானா, இன்னைக்குக் காலைல பாத்தா மரத்துல தொங்கிக்கிட்டு இருக்கான்டி, கேட்டா டால்பி அட்மாஸ் ஸ்பீக்கர் ரிசப்ஷன் டேபிள் ஏரியாவுக்கு நேராத் தொங்கவிடனுமாம், அவன் திருந்தவே மாட்டான்டி' சுரேஷ் தீப்தியிடம் கூறினான். அதுவரை மதனின் தங்கை யார் என்பதை தெரிந்திராத கார்த்திகா, சுரேஷ் மதனின் தங்கையை உரிமையுடன் செல்லப்பேரிட்டு கூப்பிடுவதையும், சுரேஷும் தீப்தியும் பேசியதை வைத்து சுரேஷுக்கு மிக நெருங்கிய நண்பனின் தங்கை என்பதை உணர்ந்தாள். 'யார் அந்த

முக்கியமானவங்க?' தீப்தி சுரேஷிடம் கேட்க 'அது, அதான், அவனோட தங்கச்சி ஃபேமிலியோட வந்திருக்கா, அவன் அப்பாவும் அம்மாவும் வந்திருக்காங்க, அவங்களத்தான் முக்கியமானவங்கன்னு சொன்னேன்' சுரேஷ் தீப்தியிடம் கூறிவிட்டு 'நீங்க வந்தது அவனுக்குத் தெரியுமாம்மா?' சுரேஷ் மதனின் தங்கையிடம் கேட்க 'வந்ததும் எங்கடா இருக்கேன்னு போன் பண்ணேன், வந்து பார்க்கிறேன்னு சொன்னான். இன்னும் வரல' மதனின் தங்கை பதில் அளித்தாள். 'அவனுக்குப் பொண்ணு பாக்கப் போனீங்களே என்னாச்சு?' சுரேஷ் கேட்க 'அத ஏன் கேட்குறீங்க, அப்பா எவ்வளவோ கஷ்டப்படுறார், அவன் ஜாதகத்துல வேற செவ்வாதோஷம் இருக்குறதால நிறைய அலைய வேண்டி இருக்கு, அப்படியே செவ்வாதோஷம் இருக்குற பொண்ணோட ஜாதகம் வந்தாலும் ஏதோ எட்டுப் பொருத்தம் வரணுமாம். அப்படி ஒரு பொண்ணு ஜாதகம் வந்து பொண்ணு பாக்க அப்பா எல்லா ஏற்பாடும் பண்ணிட்டு அவன ஊருக்குப் பொண்ணு பாக்குற நாளுக்கு ஒரு நாள் முன்னாடியே வரச்சொன்னார். ஆனா அவன் நேராப் பொண்ணு வீட்டுக்கு வந்தான். எந்திரன் படத்துல ரஜினி ரோபோவ கிரியேட் பண்ணிட்டு தாடி வளர்த்துக்கிட்டு வீட்டுக்கு வருவாரே அது மாதிரி வந்தான். அப்பா பயங்கர டென்ஷன் ஆகி கத்திட்டார். உனக்கு ஜென்மத்துக்கும் கல்யாணம் ஆகாதுடான்னு சொல்லிட்டு கடைக்குப் போய்ட்டார். அம்மாவும் ரொம்ப கவலைப்பட்டு அழுதுட்டே ஏன்டா

இப்படி இருக்க, தாடி எடுக்குறதுதானேடான்னு கேட்டாங்க, அதுக்கு அவன், இது தாம்மா என்னோட உண்மையான முகம், இத மறச்சா தான் எனக்கு கல்யாணம் ஆகும்னா அப்படியாப்பட்ட கல்யாணமே வேண்டாம்னு சொன்னான். எனக்கென்னமோ அவன் லவ் பெய்லியர்னு தோனுது, அதையும் அவன் கிட்ட கேட்டேன். யாராவது மனசுல இருந்தாச் சொல்லு நான் அப்பா கிட்ட சொல்லி அவங்க வீட்டுக்குப் போய் பேசி பார்ப்போம்னு கேட்டேன். மூடிட்டு உன் வேலைய பாருடின்னு சொல்றான், ஒரு வேள அவனோட லவ்வர்க்கு கல்யாணம் ஆயிடுச்சோ என்னமோ, வீடே ரொம்ப வெறிச்சோடி இருக்குண்ணா. நான் அங்க போனா என் பையன பார்த்தாத்தான் அப்பா முகத்துல கொஞ்சம் சிரிப்பு வருது. அப்பா அண்ணங்கிட்ட பேசுறதில்ல, நீங்களாச்சும் அவனுக்கு என்னாச்சுன்னு சொல்லுங்கன்னா? எனக்கென்னமோ அவன் ரொம்ப டிப்ரஷன்ல இருக்குற மாதிரி தோணுது, ரூம்ல தனியா வேற இருக்கான், பயமா இருக்கு’ மதனின் தங்கை சுரேஷையும் தீப்தியையும் பார்த்துக் கேட்டாள். ‘நீ பயப்படும் அளவுக்கு ஒன்னும் இல்லம்மா, எங்களோட மேரேஜ் கன்பார்ம் ஆனத தெரிஞ்ச நாளுக்கு முன்னாடி இருந்தத கம்பேர் பண்ணா இப்ப அவன் எவ்வளவோ மேல். நார்மலாகிட்டான்னே சொல்வேன். அவன்லாம் கிடைக்கலன்னா ரொம்ப எக்ஸ்ட்ரீமுக்குப் போற அளவுக்கு எது மேலயும் ஆசப்படமாட்டாம்மா, கெடச்சா சந்தோஷம், கிடைக்கலன்னா

இருக்கவே இருக்கு அவனோட ஃபர்ஸ்ட் லவ் லினக்ஸ், போடா மயிருன்னு போயிட்டே இருப்பான், கொஞ்ச நாள் போகட்டும், அவனே வந்து எனக்கு மேரேஜ் பண்ணி வைக்கப் போறீங்களா, இல்லையான்னு கேட்பான் பாருங்க' சுரேஷ் மதனின் தங்கையிடம் ஆறுதலாகக் கூறினான். இதைக் கேட்டுக்கொண்டிருந்தக் கார்த்திகாவுக்கு அவர்கள் பேசுவது மதனைப் பற்றித்தான் என்று பலமாகத் தோன்றியது, அவர்கள் பேசிக் கொண்டிருந்த நபருக்கு கல்யாணம் ஆகாமலும், காதல் தோல்வியில் அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறார் என்பதையும் மிக முக்கியமாக, அவர் ஒரு லினக்ஸ் விரும்பி என்பதை வைத்துப் பார்த்தால் அது மதனாகத் தான் இருக்க முடியும் என்று கார்த்திகாவால் யூகிக்க முடிந்தது. அந்தக் காதல் தன்னுடைய காதல்தான் என்றும் அருகில் குழந்தையுடன் அமர்ந்திருப்பவரின் அண்ணன் மதன் தான் என்பதையும் கார்த்திகாவால் கணிக்க முடிந்தது, ஆனால் உறுதியாக நம்ப முடியவில்லை. 'யாரோ சொல்லி இப்பத்தான் முடி வெட்டி தாடியை ட்ரிம் பண்ணி வச்சிருக்கான்' மதன் தங்கை கூற 'என் அம்மா தான் கூப்டுத் திட்டினாங்க, கல்யாணத்துக்குச் சாமியார் மாதிரி வராத டா, கொஞ்சம் ஒழுங்கா வாடான்னு சொன்னாங்க' சுரேஷ் கூறினான்.

ஒரு வழியாக மதன் ஏவி கன்ரோலர்களை வைத்திருக்கும் இடத்திற்கு வந்தான். அங்கு சவுண்ட் இன்ஜினியர், லைவ் மிக்ஸிங் செட்டப் செய்து முடித்து அவர் கொண்டுவந்த லேப்டாப்பில் ஒன்றை லைவ்

மிக்ஸிங்கை கன்றோல் செய்யும் சாப்ட்வேரில் எல்லாம் சரியாக உள்ளனவா என்று சரிபார்த்துக்கொண்டிருந்தார். ‘என்ன சரண், எல்லாம் கரெக்டா இருக்கா, டெஸ்ட் பண்ண ஆரம்பிக்கலாமா?’ மதன் அந்த சவுண்ட் இன்ஜினியரிடம் கேட்டான். ‘செக் பண்ணிட்டு இருக்கேன் ப்ரோ’ என்று சரண் பதில் அளித்தான். ‘சரண், நீ உண்மையிலேயே சவுண்ட் இன்ஜினியரிங் முடிச்சிருக்கியா?’ மதன் கேட்க ‘ப்ரோ நான் இன்னும் ஸ்கூலே முடிக்கல’ சரண் பதில் அளித்தான். ‘அப்புறம் எப்படி?’ மதன் கேட்க ‘எங்க கம்பெனியோட ஓனர் இருக்கார்ல, நீங்கக் கூட பேசி இருப்பீங்க, அவர் என் அண்ணாதான். நான் இந்த மாதிரி ஈவன்ட்ஸ் போய் லைவ் மிக்ஸிங் கத்துக்கிட்டேன்’ சரண் கூறினான். ‘இந்த மாதிரி ஈவன்ஸ்ல எந்தமாதிரி மியூசிக் ப்ளே பண்ணுவீங்க?’ மதன் கேட்க ‘இந்த மாதிரி ஈவன்ச்ஸ்ல வெறும் டிஜே தான். அதுவும் எல்லாம் முடிஞ்சு கடைசியா ஆரம்பிப்போம், நாலு இல்ல ஐந்து மணி நேரம் ப்ளே பண்ணுவேன். அதுக்குள்ள ஏர்லி மார்னிங் வந்துடும். என் அண்ணன் டிஜேக்கின்னு ஒரு தனி கலெக்ஷன் வெச்சிருக்கான் அத ஸ்டார்ட் பண்ணிட்டு நான் பாட்டுக்கு மிக்ஸிங் பண்ணிக்கிட்டு இருப்பேன், அவ்வளவுதான்’ சரண் கூற ‘அப்ப இளையராஜா ஏஆர்ஆர் மியூசிக் லாம் கிடையாதா?’ மதன் கேட்க ‘அதெல்லாம் டீஜேல போட மாட்டாங்க ப்ரோ’ சரண் கூறினான். ‘சரி, உன்கிட்ட எக்ஸ்ட்ரா லேப்டாப் இருக்கா?’ மதன் கேட்க ‘இருக்கு’ என்று சொல்லிவிட்டு

சரண் அவனிடம் இருந்த இன்னொரு லேப்டாப்பை எடுத்து வைத்தான். மதன் அதை ஆன் செய்ய வின்டோஸ் லாகின் ஸ்க்ரீன் வந்து நின்றது. ‘ப்ரோ அதுல எதுவும் டெலிட் பண்ணாதீங்க, என்னோட பர்ஸ்னல் லேப்டாப்’ சரண் கூற ‘நான் லாகினே செய்யமாட்டேன்’ மதன் சொல்லிக்கொண்டே தன்னிடம் இருந்த ஒரு யுஎஸ்பி பென்டிரைவ்வை லேப்டாப்பில் சொருகினான். ‘என்ன ப்ரோ, சாங்ஸ் ஏத்திக்க போறீங்களா?’ சரண் கேட்டுக்கொண்டிருந்தபோதே மதன் அந்த லேப்டாப்பை ரீபூட் செய்து கீபோர்டில் Esc கீயை அழுத்திக் கொண்டே இருந்தான். ‘எதுக்கு ப்ரோ பயாஸ் போறீங்க?’ சரண் கேட்டுக்கொன்டிருந்தபோதே மதன் பயாசில் செக்யூர் பூட்டை டிசேபிள் செய்யப்பட்டிருக்கின்றதா என்று பார்த்தான். நல்ல வேளையாக டிசேபிள் செய்யப்பட்டிருந்தது, மதன் பூட் சீக்வென்ஸ்ஸில் யூஎஸ்பி ட்ரைவ் முதலாக வருமாறு செய்துவிட்டு பயாசில் அவன் செய்த மாற்றங்களை சேவ் செய்துவிட்டு மீண்டும் லேப்டாப்பை ரீபூட் செய்தான். லேப்டாப்பில் சில நொடிகளில் லினக்ஸ் பூட்டாகும் ஸ்க்ரீன் வந்தது. அடுத்த சில நொடிகளில் மதன் அவன் உருவாக்கி வைத்திருக்கும் மியூசிக் சாப்ட்வேர் முகப்பு தோன்றியது. ‘ப்ரோ என் லேப்டாப்ல என்ன இன்ஸ்டால் பண்ணீங்க? என்ன சாப்ட்வேர் இது?’ சரண் சற்று பதற்றத்துடன் கேட்டான். ‘பயப்படாதடா, உன் லேப்டாப்பின் ஹார்ட் டிஸ்க் நான் டச் பண்ணல,

இப்ப உன் லேப்டாப் என்னோட பென்டிரைவ்ல இருந்து பூட் ஆகி இருக்கு' மதன் கூற 'பென்டிரைவ்ல இருந்து எப்படி பூட் பண்ணுவீங்க?' சரண் கேட்க 'லினக்ஸ் லைவ் யுஎஸ்பி கேள்விப்பட்டு இருக்கியா?' மதன் கேட்க 'லினக்ஸ்னா?' சரண் பதில் கேள்வி கேட்க 'லினக்ஸ் விண்டோஸ் மாதிரி ஒரு ஓஎஸ், அத யுஎஸ்பி பெண்டிரைவில் இருந்து கூட பூட் பண்ணலாம், இப்ப என்னோட யுஎஸ்பில இருக்குறதும் அதுமாதிரி ஒரு லினக்ஸ் லைவ் யுஎஸ்பி லினக்ஸ்தான். அதுல ஆட்டோமேட்டிக்கா நான் எழுதின ஒரு அப்ளிகேஷன் ரன் பண்ற மாதிரி செட்டப் செய்து வெச்சிருக்கேன்' மதன் விளக்கினான். 'என்ன சாப்ட்வேர் இது' சரண் கேட்க 'பெருசா ஒன்னும் இல்ல. ஜஸ்ட் ஒரு மியூசிக் பிளேயர், சாங்ஸ் ப்ளே பேக் மட்டும் இல்லாம இதுல சாங்ஸ் ப்ளே பண்றப்ப ஹியூமன் வாய்ஸ் மட்டும் எடுத்துட்டு வெறும் மியூசிக் மட்டும் அவுட்புட் கொடுக்குற மாதிரி ப்ரோக்ராம் பண்ணி வெச்சிருக்கேன். அதுமட்டுமில்லாம சாங்ஸ் ப்லே பண்றப்ப அந்த சாங்கோட லிரிக்சும் சேர்ந்து வர மாதிரி பண்ணி இருக்கேன்' என்று மதன் கூறியபடி அவன் முன்னே இருந்த லேப்டாப்பில் இருந்த சாப்ட்வேரைக் காண்பித்தான். 'சூப்பர் ப்ரோ, லிரிக்ஸ் எப்படி?' சரண் கேட்டு முடிப்பதற்குள் 'இன்டர்நெட்ல இருந்துதான் டவுன்லோட் பண்றேன், கிடைக்காத பாட்டுங்களுக்கு நானே லிரிக்ஸ் டைப் பண்ணிக்கிட்டேன், அது மட்டும் இல்லாம இதுல ஒரு வாய்ஸ் சர்ச் எஞ்சினும் இருக்கு, நீ இந்த சர்ச் பட்டன

அழுத்திட்டு ஏதாவது ஒரு பாட்டோட வரிகள பேசினா உடனே அந்த பாட்ட ஆட்டோமேட்டிக்கா டிடக்ட் பண்ணி காட்டும்' மதன் விளக்கமாகக் கூறினான். 'உன் மொபைலில் வைஃபை ஹாட்ஸ்பாட் ஆன் பண்ணு, லிரிக்ஸ் வேணும்னா இன்டர்நெட் வேணும். ஆன் பண்ணிட்டு, ஏதாவது ஒரு பாட்டோட லைன்ஸ் பேசு' மதன் சரணை பார்த்து சொல்லிவிட்டு தான் எழுதிய சாப்ட்வேரில் இருந்த சர்ச் பட்டனை அழுத்தினான். சரணும் லேப்டாப்பில் அருகே வந்து 'தேனி காத்தோட தேன கலந்தாலே' என்று சில வரிகளைக் கூறினான், அடுத்த நொடியில் மதன் எழுதிய சாப்ட்வேர் சரண் பாடிய வணக்கம் சென்னை படத்தில் வரும் பாடலைத் தேடிக் காட்டியது. 'சூப்பர் ப்ரோ, ப்ளே பண்ணுங்க' சரண் கேட்க மதனும் ப்ளே செய்தான், அப்போது அந்த சாப்ட்வேர் பாடலில் வரும் ஹியூமன் வாய்ஸ் மட்டும் இல்லாமல் கரோக்கே மட்டும் ப்ளே செய்தது, சாப்ட்வேரின் கீழ்ப் பகுதியில் பாடலின் வரிகள் காண்பிக்கப் பட்டிருந்தது, மேல் பகுதியில் பாடலின் இசைக்கு ஏற்றாற்போல் சின்த் விசுவலைஸ் செய்யப்பட்ட வீடியோ ஓடிக்கொண்டிருந்தது. 'பென்டாஸ்டிக் ப்ரோ, இரு மாதிரி ஒரு சாப்ட்வேர் நான் இப்பத்தான் பார்க்கிறேன்' சரண் கூற 'எனக்குப் பாட்டு கேட்கும் போது கூடவே சேர்ந்து பாடுற பழக்கம், அதனால இப்படி ஒரு சாப்ட்வேர் இருந்தா நல்லா இருக்கும்னு தோணுச்சு, அதான் எழுதிட்டேன். கீழ இருக்குற லிரிக்ஸ் தேவையில்லன்னா சின்த் விசுவல்ஸ மட்டும் புல் ஸ்கிரீன்

பண்ணிக்கலாம்’ என்று மதன் சொல்லிக்கொண்டே லேப்டாப்பில் அவன் சாப்ட்வேரை புல் ஸ்கிரீன் செய்தான். பாடலின் இசைக்கு ஏற்றபடி லேப்டாப்பின் திரையில் அழகாக சின்த் விசுவல்கள் தோன்றின. ‘ப்ரோ, உங்க சாப்வேர, இங்க நாம செட்டப் பண்ணி வச்சிருக்கிற ஏவி சிஸ்டங்கள்ல ப்ராட்காஸ்ட் பண்ணலாமா’ சரண் கேட்க ‘நானே அதுக்குத்தான் உன்கிட்ட லேப்டாப் வாங்கினேன், என்னோட லேப்டாப்ல இருந்து வர ஏவி ஸ்ட்ரீம்ஸையும் கேமராமேன் ரிஷப்ஷன்ல இருந்து கொடுக்குற ஸ்ட்ரீம்களையும் உன்னால மிக்ஸ் பண்ணி நம்ம ஏவி சிஸ்டங்களில் கொடுக்க முடியுமா’ மதன் சரணைப் பார்த்துக் கேட்க ‘கொடுக்க முடியுமாவா, மொதல்ல உங்க கிட்ட இருக்குற லேப்டாப்ல இந்த எச்டிஎம்ஐ கேபிள் கனெக்ட் பண்ணுங்க’ சரண் சொல்லிக்கொண்டே எச்டிஎம்ஐ கேபிலின் மறு முனையை தன் மிக்ஸிங் கன்சோலில் இணைத்தான். அடுத்த நொடி சரண் வைத்திருந்த லேப்டாப்பில் மிக்சிங் கன்சோலை கன்ட்ரோல் செய்யும் அப்பளிகேஷனில் மதன் எழுதிய சாப்ட்வேரின் வீடியோவும், ஆடியோவும் தோன்றியது. ‘சூப்பர், சோ, சோர்ஸ் ஜஸ்ட் கேபிள் மூலம் ஜாயின் பண்ணா போதுமா?’ மதன் கேட்க ‘அவ்வளவுதான் ப்ரோ, எத்தன அப்ஸ்ட்ரீம் சோர்ஸ் வேண்டுமானாலும் இந்த கன்சோலில் ஜாயின் பண்ணிக்கலாம், எங்க கேமராமேன் அனுப்பபுர ஏவி ஸ்ட்ரீம்ஸ் இங்க அப்பியர் ஆகும், எந்த ஆடியோ மற்றும் வீடியோ ஸ்ட்ரீம் ப்ராட்காஸ்ட் பண்ணனுமோ அத

நான் இங்க செலக்ட் பண்ணிப்பேன், ப்ரோ உங்க ஏவிய இப்ப ப்ராட்காஸ்ட் பண்ணி நம்ம காலைல இருந்து செட்டப் பண்ண சிஸ்டம் டெஸ்ட் பண்ணிக்கலாமா?' சரண் மதனிடம் கேட்க 'சரி' மதன் சொல்லிவிட்டு அவன் சாப்ட்வேரில் மதன் வழக்கமாக கேட்கும் ப்ளேலிஸ்ட் ஓப்பன் செய்தான். முதலாவதாக தால் என்னும் இந்தி படத்தில் வரும் தால் சி தால் பிஜிஎம் இருந்தது 'இந்த ஏஆர்ஆர் பேன்ஸ்ஸ திருத்தவே முடியாது பா, சரி, ப்ளே பண்ணலாமா?' சரண் கூறிக்கொண்டே அவன் கன்சோல் சாப்ட்வேரில் எல்லா செட்டிங்கையும் சரிபார்த்து மதனிடம் இருக்கும் லேப்டாப்பில் இருந்து வரும் ஏவி ஸ்ட்ரீம்களை ப்ராட்காஸ்ட் செய்யும்படி ரெடியாக வைத்தான். 'இப்ப ப்ளே பண்ணுங்க' சரண் கூறியவுடன் மதன் தன் சாப்ட்வேரில் ப்ளே பட்டனை அழுத்தினான், அழுத்தியவுடன் அந்த பாடலின் முதலாவதாக வரும் ப்ரிக்யூஷன் இசை, சுரேஷின் பார்ம் ஹவுஸ் முழுவதும் கேட்கும்படி மதன் செட்டப் செய்து வைத்திருந்த டால்பி அட்மாஸ் ஸ்பீக்கர்களில் ஒலிக்க ஆரம்பித்தது. பார்ம் ஹவுசின் நான்கு திசைகளிலும் வைக்கப்பட்டிருந்த மினி தியேட்டர்களைப் போன்ற ஒஎல்இடி ஸ்கீன்கள், மதனின் சாப்ட்வேரில் இருந்து வரும் பாடலுக்கேற்ற சின்த் விசுவல்களைக் காண்பிக்க ஆரம்பித்தது. டால்பி ஸ்பீக்கிளில் இருந்து வரும் ஒலியையும், ஒஎல்இடி ஸ்க்ரீன்களில் வரும் சின்த் விசுவல்களையும் பார்த்தவுடன் பார்ம் ஹவுசில் இருந்த எல்லோருக்கும் ஏதோ ஒரு

புதிய விதமான உணர்வை அனுபவித்தனர். பலர் அந்த அனுபவத்தை இப்போது இருக்கும் லேட்டஸ்ட் சினிமா தியேட்டரில் உணர்ந்திருப்பதாக பேசிக்கொண்டனர். பார்ம் ஹவுசில் இருந்த பலர் ஒலி எங்கிருந்து வருகிறது என்று தேடி மதனும் சரணும் அமர்ந்திருந்த மிக்ஸிங் கன்சோல் கூடாரத்திற்கு வந்து பார்த்துச் சென்றனர். ‘ப்ரோ சூப்பர், நீங்க இதுக்குத்தான் டால்பி 9.2.4 செட்டப் வச்சீங்களா? உங்க சாப்ட்வேர் சாங்ஸ் எந்த பார்மெட் இருந்தாலும் ப்ளே பண்ணுமா?’ சரண் கேட்க ‘gstreamer ப்ரேம் வெர்க் யூஸ் பண்றதால என் சாப்ட்வேர்னால எந்த பார்மெட்ல இருக்கும் ஆடியோ வீடியோ பைலையும் ப்ளே பண்ண முடியும்’ மதன் கூற ‘சூப்பர் ப்ரோ’ சரண் தன் ஏவி கன்சோல் சாப்ட்வேரில் ஆடியோ சேனல்களின் ஆம்பிப்பிக்கேஷனை அட்ஜஸ்ட் செய்து கொண்டு மதனைப் பாராட்டினான். சரண் அட்ஜஸ்ட் செய்ய டால்பி ஸ்பீக்கர்களில் இருந்து வரும் ஒலி சுரேஷ் பார்ம் ஹவுசில் ஏற்படும் எதிரொலிக்கு ஏற்றவாறு கச்சிதமாகப் பொருந்தியது.

தீப்தியின் ரூமில் ‘உன் அண்ணன் ஆரம்பிச்சிட்டான் போல’ சுரேஷ் மதனின் தங்கையைப் பார்த்துக் கேட்டான் ‘அவனேதான்’ மதனின் தங்கை கூறும் போதே அவள் தோள் மீது தூங்கிக் கொண்டிருந்த குழந்தை சற்று சிணுங்க ஆரம்பித்தது. ‘நான் பாப்பாவ ரூமில் தூங்க வச்சிட்டு வறேன்’ மதனின் தங்கை சுரேஷிடம் சொல்லிவிட்டு தீப்தியின் ரூமில் இருந்து வெளியே சென்றாள். அவள் வெளியே

சென்றதும் ‘சுரேஷ், நீங்க இவ்வளவு நேரம் மதன பத்தித்தான பேசிக்கிட்டு இருந்தீங்க?’ கார்த்திகா சுரேஷைப் பார்த்துக் கேட்க ‘அப்ப உங்க பக்கத்துல குழந்தையோட உட்கார்ந்து இருந்தது மதனோட தங்கச்சின்னு தெரியாதா?’ சுரேஷ் கூறியதும் கார்த்திகா மதனின் தங்கையை மீண்டும் பார்க்க ரூமை விட்டு வெளியேறினாள். ‘ஏன்டி நீ மொதல்லையே சொல்றதில்லையா, நான் ரெண்டு பேரும் ஒன்னா இருக்காங்களே ஆல்ரெடி இன்ரட்யூஸ் ஆகி இருப்பாங்கன்னு நெனச்சேன்’ சுரேஷ் தீப்தியிடம் கேட்டான் ‘விடுங்க, லைட்டா இப்பத்தான் பத்தி இருக்கு, என்ன நடக்குதுன்னு பாப்போம்’ தீப்தி சிரித்துக்கொண்டே ரிசப்ஷனுக்கு ரெடியானாள்.

கார்த்திகா மதனின் தங்கை அவள் ரூமுக்குச் செல்வதைப் பார்த்து பின்தொடர மதனின் தங்கை அவள் ரூமுக்குள் சென்று விட்டாள். அவள் சென்ற ரூம் தன் பெற்றோர் இருக்கும் ரூமுக்கு அடுத்து இருந்ததைப் பார்த்து கார்த்திகா புன்னகைத்தாள். இப்போது எப்படி மதனின் ரூமிற்குப் போவது என்று எண்ணிக் கொண்டிருக்கையில் அங்கிருந்த எல்லா ரூம்களில் மினரல் வாட்டர் வைக்க வந்து கொண்டிருந்தனர். கார்த்திகா அவர்களிடம் போய் தன் ரூமுக்கு இரண்டு பாட்டில்களும் மதனின் ரூமிற்கு நான்கு பாட்டில்களும் எடுத்துக்கொண்டாள். நேரே மதனின் ரூம் கதவைத் தட்டினாள். கதவைத் திறந்த மதனின் தங்கை ‘உள்ள வாங்க’ என்று கார்த்திகாவை அழைத்தாள். ‘அம்மா இது கார்த்திகா அக்கா, தீப்தி அக்காவோட

ப்ரண்ட்’ என்று மதனின் தாயாருக்குக் கார்த்திகாவை அறிமுகப்படுத்தினாள். ‘வாட்டர் பாட்டில் கொடுத்துட்டுப் போலாம்னு வந்தேன்’ கார்த்திகா தன்னிடம் இருந்த பாட்டில்களை மதனின் அம்மாவிடம் கொடுத்தாள். ‘உட்காரும்மா’ மதன் அம்மா கார்த்திகாவைப் பார்த்துச் சொன்னார். அப்போது மதனின் தந்தை உள்ளிருந்து வந்தார், ‘மாப்பிள்ளை பொண்ணு ரெடி ஆகிட்டாங்களாம்மா’ மதனின் தந்தை கார்த்திகாவிடம் கேட்க ‘ரெடி பண்ணிக்கிட்டு இருக்காங்க சார்’ என்று கார்த்திகா கூறினாள். கார்த்திகாவின் கண்கள் மதன் ரூமில் இருக்கின்றானா என்று தேடிக்கொண்டிருந்தது. அப்போது மதன் தங்கையின் கணவர் உள்ளிருந்து வந்தார். கார்த்திகா அமர்ந்திருந்ததை மதன் தங்கையின் கணவர் கவனிப்பதை மதனின் அம்மா கவனித்தார். ‘தீப்தியின் ப்ரண்ட் மாப்ள, வாட்டர் பாட்டில் கொடுத்துட்டுப் போக வந்தாங்க’ மதனின் தாயார் கூறினார். ‘அங்க ரெடி பண்ணிட்டாங்களா?’ மதன் தங்கையின் கணவர் கார்த்திகாவைப் பார்த்துக் கேட்க ‘பண்ணிக்கிட்டு இருக்காங்க’ என்று கார்த்திகா பதில் அளித்தாள்.’அப்ப நான் வறேன்’ என்று சொல்லிவிட்டு கார்த்திகா மதனின் ரூமில் இருந்து வெளியே வந்தாள்.

கார்த்திகா தன் ரூமில் உட்கார்ந்து இருந்தாள். கார்த்திகாவின் அப்பாவும் அம்மாவும் பயணக் களைப்பில் ஆழ்ந்து தூங்கிக் கொண்டிருந்தனர். அப்போது திருடா திருடா படத்தில் வரும் தீ தீ

தித்திக்கும் தீ பாடல் இசை ஒலிக்கத் தொடங்கியது. ஏஆர்ஆர் இசையைக் கேட்டவாறே ரூமின் ஜன்னல் ஓரத்தில் வந்து நின்றாள். ஜன்னலில் இருந்து தெரிந்த ஒஎல்இடி ஸ்கிரீனில் இசைக்கு ஏற்றவாறு சின்த் விஷுவல்கள் கண்களுக்கு இதமாக வந்து சென்றுகொண்டிருந்தன. கார்த்திகா மற்றவற்றை மறந்து சிறிது நேரம் ஏஆர்ஆர் இசையை இரசித்தபடி இருந்தாள். அதே வேளையில் ஏவி மிக்ஸிங் கன்சோல் இருக்கும் இடத்தில் மதனும் சரணும் அவர்கள் நிறுவிய ஏவி சிஸ்டம்களில் இருந்து வரும் இசையையும் சின்த் விசுவல்களையும் இரசித்தபடி அவர்கள் அந்த சிஸ்டம்களுக்குப் போகும் சிக்னல்களைச் சரிபார்த்து கொண்டிருந்தனர். ‘ப்ரோ, பேசாம நீங்க எங்க கம்பெனில ஜாயின் பண்ணுங்க ப்ரோ, இந்த மாதிரி ஏவி செட்டப்ப இதுவரைக்கும் என் அண்ணன் செட் பண்ணி நான் பார்த்ததில்ல, அவன் கஸ்டமரே பாக்குறாங்கன்னு சொன்னப்போ சொதப்பப் போறாங்கன்னு நெனச்சேன், அப்படித்தான் பல இடத்துல நடந்திருக்கு, ஆனா நீங்க வேற லெவல் ப்ரோ’ சரண் மதனைப் பார்த்து பாராட்டினான். ‘அதுவும் ஒஎல்இடி ஸ்க்ரீஸ் எல்லாம் 8k ரெசல்யூஷன்ல சின்த் விஷுவல்ஸ் காட்டும்போது சூப்பரா இருக்கு’ சரண் தான் ரசித்துக் கொண்டிருப்பதை மதனிடம் கூறினான். ‘நீ பாக்காததா?’ மதன் தன்னடக்கத்துடன் கூறினான். ‘இந்த ஏஆர்ஆர் சாங்ஸ், இதெல்லாம் எப்ப வந்தது ப்ரோ, இவ்வளவு இன்ஸ்ட்ரூமென்ட்ஸ் வெச்சு ஒருத்தரால மியூசிக் கம்போஸ் பண்ண

முடியுமா, நான் ஆல்மோஸ்ட் எல்லா சேனலும் அட்ஜஸ்ட் பண்ணிட்டேன். யூசுவலா இந்த மாதிரி அட்ஜஸ்ட்மென்ட் எல்லாம் டிஜே ஆரம்பித்து ஒரு மணி நேரம் கழிச்சுத்தான் என்னால கரெக்டா உட்கார வைக்க முடியும், ஆனா உங்க ஏஆர்ஆர் பாட்டுங்களால ரெண்டே பாடல்ல உட்கார வச்சிட்டேன். உண்மையிலேயே ஏஆர்ஆர் ஒரு ஜீனியஸ்தான் ப்ரோ' சரண் கூற மதன் புன்னகையுடன் பாடலை இரசித்துக் கொண்டிருந்தான். பாடலின் மூன்றாவது நிமிடம் முப்பத்து நான்காவது நொடியில் வந்த அழகான மெல்லிய குரலுடன் தென்றல் காற்றும் சேர்ந்து பாடுவது போன்ற இசை டால்பி ஸ்பீக்கர்களில் ஒலித்தது 'வாட்? ப்ரோ, ஏர்ப்ளே எபக்ட், கவனிச்சீங்களா?' சரண் உணர்ச்சிவசப்பட்டு மதனிடம் கேட்டான் 'ஏர்ப்ளே எப்பக்ட்?' மதன் புரியாமல் கேட்க 'அந்த லேடி வாய்ஸ் சேர்ந்து காத்தும் பாடிக்கிட்டே வீசுர மாதிரி இருக்கு பாத்தீங்களா? அதுதான் ஏர்ப்ளே எபக்ட், நான் ஒரு சில சாங்ஸ்ல தான் இது மாதிரி கேட்டிருக்கேன், ஆனா ஏஆர்ஆர் இருபது வருஷத்துக்கு முன்னாடி இத யூஸ் பண்ணி இருக்கார் பாருங்க' சரண் மெல்ல மெல்ல ஏஆர்ஆர் இரசிகனாக மாறிக் கொண்டிருப்பதை மதன் பார்த்து இரசித்தான்.

ரிஷப்ஷன் டேபிள்கள் வைக்கப்பட்டிருந்த இடங்களில் விருந்தினர்கள் உட்கார்ந்து இசையை இரசித்தபடி பேசிக்கொண்டிருந்தனர். கார்த்திகா தன் ரூமில் இருந்து ரிஷப்ஷன்

டேபிள்கள் இருந்த இடத்துக்கு வந்தாள். அப்போது ரிஷப்ஷன் டேபிளில் உட்கார்ந்திருந்த ஒரு முதியவர் ‘தண்ணீர் கொஞ்சம் கொடுக்க முடியுமா?’ என்று கார்த்திகாவிடம் கேட்டார். கார்த்திகா உடனே வீட்டின் உள்ளே தண்ணீர் கொடுத்துக்கொண்டு இருந்தவர்களிடம் ஒரு பாட்டில் கொண்டு வந்து அந்த முதியவரிடம் கொடுத்தாள். அவள் அங்கு உட்கார்ந்து இருந்தவர்கள் யாருக்கும் தண்ணீர் வழங்கப்பட வில்லை என்பதை உணர்ந்தாள். உடனே மீட்டும் வீட்டினுள் சென்று தண்ணீர் பாட்டில்களை ஒவ்வொரு ரிஷப்ஷன் டேபிள்களில் உள்ளவர்களிடம் கொடுக்கத் தொடங்கினாள். கார்த்திகா தண்ணீர் கொடுத்துக் கொண்டிருக்கும் இடமும் மதன் உட்கார்ந்து இருக்கும் கன்சோல் ஏரியாவும் அருகே இருந்தாலும் மதன் உட்கார்ந்திருக்கும் இடம் செடிகளுக்கு மறைவில் இருந்தால் இருவரும் பார்த்துக் கொள்ள வாய்ப்பின்றி இருந்தது. சரண் பாடல் கேட்டபடி இருக்க அவன் மொபைலில் அழைப்பு வந்தது, ‘சொல்ரீ..’ சரண் அவன் கேர்ள்ப்ரண்டிடம் பேச ஆரம்பித்தான். பல நிமிடங்கள் பாடலை ரசித்தபடி சரண் பேசிவிட்டு மொபைல் வைத்தான். ‘மேட்டரே இல்லன்னாலும் போன் பண்ணி மொக்க போட்ரா’ சரண் மதனிடம் கூற மதன் புன்னகையுடன் தன்னிடம் இருந்த லேப்டாப்பைப் பார்த்துக்கொண்டிருந்தான். ‘ப்ரோ, நீங்க யாரையாவது லவ் பண்றீங்களா?’ சரண் கேட்க மதன் புன்னகைத்தான். ‘அப்போ லவ் பெய்லியர்?’ சரண் கேட்க ‘நானே

நொந்து போய் இருக்கேன்' மதன் கூற 'அப்ப கன்பார்ம் லவ் பெய்லியர், என்ன உங்க எக்ஸ் கல்யாணம் பண்ணிக்கிட்டு போயிட்டாங்களா?' சரண் கேட்க மதன் புன்னகையுடன் அமைதியாக இருந்தான். அங்கிருந்த அனைத்து ரிஷப்ஷன் டேபிள்களில் கார்த்திகா தண்ணீர் பாட்டில்களை வைத்து முடித்தாள். ரிஷப்ஷன் மேடைக்கு அருகில் முதல் வரிசையில் இருந்த ரிஷப்ஷன் டேபிள்களில் தண்ணீர் பாட்டில்களைக் கார்த்திகா வைக்க ஆரம்பித்தாள். டென்டில் அமர்ந்திருந்த சரண் அவன் இடத்தை விட்டு எழுந்து ரிஷப்ஷன் மேடைக்கு அருகில் வந்தான். கார்த்திகா தண்ணீர் பாட்டில்களை வைத்து வந்து கொண்டிருப்பதைப் பார்த்த சரண் 'அக்கா எங்க இடத்துலயும் மினரல் வாட்டர் கொடுப்பீங்களா?' என்று செடிகளுக்கு மறைவில் இருந்த டென்டைக் காண்பித்தான். கார்த்திகா அந்த டென்டைப் பார்த்தாள், கம்ப்யூட்டர் மானிட்டருக்குப் பின் யாரோ அமர்ந்து வேலை பார்த்துக் கொண்டிருந்தது தெரிந்தது. கார்த்திகா தான் கொண்டு வந்த தண்ணீர் பாட்டில்களை டென்டில் வைக்கச் சென்றாள். டென்டின் அருகே செல்லச் செல்ல மானிட்டரின் பின் இருந்த மதனின் முகம் கார்த்திகாவுக்கு மெல்ல மெல்லத் தெரிய ஆரம்பித்தது. கார்த்திகா மதன் அருகில் வந்து நின்றாள். லேப்டாப்பில் மூழ்கியிருந்த மதன் யாரோ எதிரில் நிற்பது கண்டான். மெல்ல தலையைத் தூக்கிப் பார்க்க கார்த்திகாவின் அழகிய முகம் தெரிந்தது. கார்த்திகாவைப் பார்த்தவுடன் மதன் எழுந்தான். கார்த்திகா

மதனைப் பார்க்க மதனும் கார்த்திகாவைப் பார்த்தவாறு இருந்தான். சில நொடிகள் இருவரும் பார்த்தவாறு இருந்தனர். இதைக் கவனித்துக் கொண்டிருந்த சரண் அவர்கள் அருகில் வந்து ‘ப்ரோ இவங்கள உங்களுக்குத் தெரியுமா?’ என்று கேட்க மதன் எதையும் பேசவில்லை, கார்த்திகாவும் தன் கையில் இருந்த பாட்டிலை அருகில் வைத்துவிட்டு அங்கிருந்து நகர்ந்தாள். கார்த்திகா செல்வதைக் கண்டு மதன் அவன் உட்கார்ந்து இருந்த இடத்தை விட்டு விலகி கார்த்திகாவைப் பின்தொடர்ந்து சென்று ரிஷெப்ஷன் மேடைக்கு அருகில் முன்பு சரண் நின்ற இடத்தில் நின்றான்.

உள்ளே தண்ணீர் பாட்டில் எடுக்க சென்ற கார்த்திகா வீட்டில் இருந்து வந்துகொண்டே மதன் தன்னைப் பார்க்க நின்று கொண்டிருப்பானா இல்லை அவன் வேலையைப் பார்த்துக் கொண்டிருப்பானா என்ற கேள்வியுடன் ரிஷெப்ஷன் டேபிள்கள் இருக்கும் இடத்திற்கு வந்து கொண்டிருந்தாள். அவள் ஆசைப்பட்டதைப் போல் மதன் ரிசப்ஷன் மேடைப் பக்கத்தில் அவளுக்காகக் காத்திருந்தான். மதன் தன்னைப் பார்ப்பதைக் கவனித்த கார்த்திகா கண்டும் காணாததுமாக மெல்ல நடக்க ஆரம்பித்தாள். கார்த்திகா மதன் அருகில் வந்து கொண்டிருக்கும் போது காதலன் படத்தில் வரும் இந்திரையோ இவள் சுந்தரியோ என்ற அழகிய பாடல் கார்த்திகா நடந்து வருவதற்கு ஏற்ப இசைக்கத் தொடங்கியது, இசை தொடங்கியவுடன் கார்த்திகா நின்றுவிட்டாள். மதன் தான் வேண்டுமென்றே இதை

இசைக்க வைத்திருக்க வேண்டும் என்று நினைத்து மதனை கோபப்படுவது போல் பார்த்தாள். மதன் கார்த்திகா தன்னைத் தவறாக நினைக்கிறாள் என்று எண்ணி நான் இதைச் செய்யவில்லை என்பது போல் கையைக் காண்பித்தான். உள்ளே சரண் தான் அடுக்கி வைத்திருந்த ப்ளேலிஸ்டில் ஏதோ விளையாடிவிட்டான் என்று உணர்ந்த மதன் சரணைப் பார்க்க சரண் சிரித்துக்கொண்டிருந்தான். கீழே இருந்து ஒரு சிறு கல்லை எடுத்து சரண் இருக்கும் இடத்தைப் பார்த்து எரிந்தான். அந்தக் கல்லைச் சரண் அழகாகப் பிடித்துக் கொண்டு சிரித்தான். மதனும் சரணும் செய்வதைப் பார்த்தக் கார்த்திகா சிறு புன்னகையுடன் தண்ணீர் பாட்டில்களை வைத்து மதனைக் கடந்து சென்றாள். கார்த்திகா சென்றவுடன் மதன் சரணைப் பிடித்து அடிக்க நகர்ந்தான், அதைச் சரியாக யூகித்த சரண் மதனிடம் சிக்காமல் இருக்க ரிஷப்ஷன் ஏரியாவை நோக்கி ஓட முயன்றான், ஆனால் மதனிடம் சரண் சிக்கிக்கொண்டான். ‘அக்கா, இங்கப் பாருங்க என்ன அடிக்க வராரு’ சரண் கார்த்திகாவைப் பார்த்து சொல்லும் போதே சரணின் வாயை மதன் மூடினான். கார்த்திகா திரும்பிப் பார்க்க மதன் சரணைப் பிடித்து வாயை மூடிக் கொண்டிருந்தான். கார்த்திகா பார்க்கத் தொடங்கியவுடன் மதன் சரணை விட்டுவிட்டு மீண்டும் அமைதியானான். தண்ணீர் பாட்டில்களை வைத்து விட்டு கார்த்திகா மதனையும் சரணையும் பார்த்துக்கொண்டே அவர்களைத் தாண்டிச் சென்றாள். கார்த்திகா சென்றவுடன் மீண்டும் மதன் சரணைப் பிடிக்க

முற்பட்டான். சரண் உடனே ரிஷப்ஷன் ஏரியாவில் நுழைந்துவிட்டான். பின்னால் சிறு சத்தத்தைக் கேட்ட கார்த்திகா மதன் சரணைத் துரத்திக் கொண்டிருப்பதைக் கண்டாள். மதன் கார்த்திகா மீண்டும் பார்ப்பதைக் கண்டு அமைதியானான். மதன் தன்னைப் பார்த்து அமைதியானதைக் கண்டு உள்ளுக்குள்ளே சிரித்தவாறு கார்த்திகா திரும்பி வீட்டை நோக்கி நடந்தாள்.

ஒரு வழியாக மதனும் சரணும் மிக்ஸிங் கன்சோல் டெண்டிற்கு வந்து அமர்ந்தனர். 'ஏண்டா அந்த பாட்ட போட்ட, அதுவும் கரெக்டா அவ வரும்போது?' மதன் சரணைப் பார்த்துக் கேட்டான். 'பயங்கர கெமிஸ்ட்ரி ப்ரோ உங்க ரெண்டு பேருக்கும், அப்படி பாத்துக்கறீங்க. இருந்தாலும் ஒரு எக்ஸ் லவ்வர அப்படிப் பாக்கக்கூடாது ப்ரோ, பார்த்தாலும் பாத்துக்காம போயிடனும்' சரண் மதனுக்கு அட்வைஸ் கொடுத்தான். இருவரும் சில நொடிகள் பேசிக்கொள்ளவில்லை, 'உங்களுக்குள்ள என்ன தான் நடந்தது?' சரண் கேட்க 'பழசெல்லாம் கேட்காதடா, என்னால அவ ரொம்ப கஷ்டப்பட்டுட்டா, நடக்கக்கூடாததெல்லாம் நடந்துடுச்சு, நான் பெரிய தப்பு பண்ணிட்டேன்' மதன் வருந்தி கூற 'என்ன ப்ரோ சொல்றீங்க, அவ்வளவு தூரத்துக்குப் போய்ட்டீங்களா? நம்பவே முடியல, உங்களையும் அந்த அக்காவையும் பார்த்தா அப்படிப் பண்றவங்களா தெரியலையே, வயித்துல எதுவும் கொடுத்துடலையே?' சரண் கேட்க 'உன் வாயில டாமக்ஸ் ஊத்த, என் கனவுல கூட அந்த நோக்கத்தில்

நான் அவள நினைச்சி பாத்ததில்லடா’ மதன் கூற ‘அதான பாத்தேன், நைன்டிஸ் கிட்ஸ் ஆவது மேட்டர் வரைக்கும் போறதாவது, பட் யூ டூ லுக் மேட் பார் ஈச் அதர், பேட் லக் ப்ரோ’ சரண் மதனை சமாதானப்படுத்தினான். ‘வெறுப்பேத்த தான சொன்ன’ மதன் கேட்க ‘சத்தியமா வெறுப்பேத்தத்தான் சொன்னேன்’ சரண் கூற மதன் சரணைப் பிடித்து முதுகில் மொத்தினான். மீண்டும் இருவரும் வந்து அமர்ந்தனர். ‘ப்ரோ பட் தட் சாங், எப்படி ப்ரோ தேடி கண்டுபிடிக்கரீங்க, என்னா மியூசிக், என்னா லிரிக்ஸ், யாரு ப்ரோ அந்த பாட்டு எழுதியது, வைரமுத்துவா? ஒரு அழகான தேவதைய அப்படியே கன் முன்னாடி கொண்டு வரார் ப்ரோ. வைரமுத்து இப்படிக் கூடவா தூய தமிழ்ல பாட்டு எழுதுவார்?’ சரண் கேட்க ‘வைரமுத்துவும் இது மாதிரி எழுதுவார், அத ரசிக்கத்தான் இங்க ஆள் இல்லை, இந்தப் பாட்ட எழுதியது வேற ஒருத்தர். குற்றாலக் குறவஞ்சி கேள்விப்பட்டிருக்கியா? சிற்றிலக்கியம்? குறத்திப்பாட்டு? தமிழ்?’ மதன் கேட்க ‘சாரி ப்ரோ, இங்கிலீஷ் மீடியம்’ சரண் கூற ‘அதுவும் சரிதான், தமிழ் மீடியத்துல மட்டும் என்ன வாழுது, எல்லாம் மக்கப் அடிச்சித்தான தமிழ்ல மார்க் வாங்குறாங்க, எக்ஸாமும் அதத்தான எதிர்பார்க்கிறது, ஆனா ஒவ்வொரு இலக்கியத்தையும் புரிஞ்சிக்கிட்டா அதுங்க லெவலே வேற, பை த வே, இந்த பாட்ட எழுதினவர், திரிகூடராசப்ப கவிராயர், ஏய்டீன்த் செஞ்சுரில வாழ்ந்த ஒரு புலவர், அவர் எழுதிய குற்றாலக்குறவஞ்சில வர லிரிக்ஸ் தான்

இந்த பாட்டுக்கு யூஸ் பண்ணி இருக்காங்க’ மதன் கூற ‘எப்படி ப்ரோ இவ்வளவு டீட்டெயில்ஸ் சொல்றீங்க’ சரண் கேட்க ‘விக்கிப்பீடியாவ பாத்துச் சொல்லிட்டு இருக்கேன்’ மதன் சிரித்துக்கொண்டே கூற சரணும் சிரித்தான்.

பொழுது சாய விருந்தினர்கள் வந்தபடி இருந்தனர். பார்ம் ஹவுசில் செய்யப்பட்டிருந்த ஏற்பாடுகளைப் பார்த்து எல்லோரும் வியந்தனர். அங்குச் செய்யப்பட்டிருந்த ஏவி செட்டப்பைப் பார்த்து பலபேர் இதே போல் அவர்கள் வீட்டு விசேஷங்களுக்கும் செய்ய வேண்டும் என்று சரணிடம் சொல்லி அவன் அண்ணனின் காண்டாக்ட் நம்பரை வாங்கிச்சென்றனர். ‘ப்ரோ தயவு செஞ்சு எங்க கம்பெனிக்கு அட்வைசரா வாவது வந்துடுங்க, இவ்வளவு டிமான்டையும் எங்களால சமாளிக்க முடியாது’ சரண் மதனைப் பார்த்து கூற ‘என்ஜாய்’ மதன் சிரித்துக்கொண்டே கூறினான். மதனின் தங்கை மதனைத் தேடிக்கொண்டு அங்கு வந்தாள். ‘எங்கெல்லாம் தேடுறது, அம்மா உன்ன கூப்பிடுறாங்க’ மதனின் தங்கை கூற, ‘எதுக்கு’ மதன் கேட்க, ‘போய் டிரஸ் மாத்துடா, இப்படியேவா பங்ஷன் அட்டன் பண்ண போற?’ மதனின் தங்கை கேட்க ‘ஏன் இதுக்கென்னவாம்?’ மதன் கூற ‘ப்ரோ போய் டிரஸ் மாத்துங்க ப்ரோ, நமக்காக இல்லன்னாலும் உங்க ப்ரண்டுக்காகவாவது மாத்துங்க ப்ரோ, இப்படியே மேடையில கிப்ட் கொடுக்கப் போனீங்கன்னா நல்லா இருக்காது ப்ரோ’ சரண் கேட்டுக்கொண்டான். மதன் மிக்ஸிங்

கன்சொல் இருக்கும் இடத்தை விட்டு ரிசப்ஷன் டேபிள் ஏரியாவைக் கடந்து போகும் போது சிறிது தூரத்தில் கயலின் அம்மாவும் மாமாவும் உட்கார்ந்து இருந்தனர். ‘நீ ரூமுக்குப் போ நான் பின்னாடியே வறேன்’ மதன் தன் தங்கையிடம் கூறிவிட்டு கயல் அம்மா உட்கார்ந்து இருந்த இடத்திற்கு வந்து நின்றான். ‘வாப்பா, எப்படி இருக்க?’ கயலின் மாமா கேட்க ‘நல்லா இருக்கேன் சார். கயல் வரல?’ மதன் கேட்க ‘சுரேஷ் உன்கிட்ட விஷயம் சொல்லலியா? குருவுக்கு லீவு கிடைக்கல, எமர்ஜன்ஸின்னு சொல்லிட்டு தான் அவன் இங்க வந்திருக்கனும், கயலும் கன்சீவா இருக்குறதால ட்ராவல் பண்ண வேணாம்னு டிசைட் பண்ணிட்டாங்க’ கயல் அம்மா கூற மதன் மௌனமாக இருந்தான். ‘சரி, ஏதாவது வேணும்னா என்ன கூப்பிடுங்க, நான் அந்த டென்டுக்குள்ள தான் இருப்பேன்’ என்று மதன் மிக்ஸிங் கன்சொல் டென்டைக் காண்பிக்க ‘இதெல்லாம் உன் ஏற்பாடாப்பா?’ என்று கயல் மாமா கேட்க ‘ஏன் சார்? நல்லா இல்லையா?’ மதன் கேட்க ‘அட நீ வேற, இப்பதான் இது மாதிரி பர்ஸ்ட் டைம் பார்க்கிறேன். சூப்பரா பண்ணியிருக்கீங்க, இத பண்ணவங்க காண்டாக்ட் கொடு, அடுத்த முற விசேஷத்துக்கு புக் பண்ணிடலாம்’ கயல் மாமா கூற ‘இதோ கூப்பிடுறேன்’ என்று மதன் சரணைக் கூப்பிட்டு கயலின் அம்மாவுக்கும் மாமாவுக்கும் அறிமுகப்படுத்தினான். ‘உள்ள கொஞ்சம் வேல இருக்கு, நீங்க பேசிக்கிட்டு இருங்க’ என்று மதன் சொல்லிவிட்டு அவன் ரூமுக்கு வந்தான்.

‘எங்கடா இருந்த, சீக்கிரம் ரெடியாகிக் கீழ வா’ என்று மதன் அம்மா கூறிவிட்டு மதன் வீட்டினர் எல்லோரையும் அழைத்துக்கொண்டு ரிசப்ஷனுக்குச் சென்றார். கார்த்திகாவின் ரூமில் கார்த்திகாவின் அப்பா ‘மா, லேட் ஆகுது நாங்க கீழ போறோம் நீ வா’ என்று சொல்லிவிட்டு கார்த்திகாவின் பெற்றோர் கீழே சென்றனர். ஒரு வழியாக மதன் ரெடியாகி அவன் வாங்கி வைத்திருந்த கிப்ட் எடுத்துக்கொண்டு ரூமை பூட்ட வெளியே வந்தான். அதே சமயம் பக்கத்து ரூமையும் யாரோ பூட்டுவதுபோல் இருந்தது. கதவை பூட்டிவிட்டுத் திரும்ப அங்குக் கார்த்திகா. காலில் போட்டுக் கொண்டிருக்கும் அழகிய காலணிகளை மறைத்துக் கொண்டிருக்கும் மிக நேர்த்தியான வேலைப்பாடுகளுடன் கூடிய அழகிய பச்சை நிற லஹிங்காவும், அதே அளவிற்கு வேலைப்பாடுகளுடன் கூடிய அதே பச்சை நிற லாங் லஹிங்கா டாப்சும், அதற்கு ஏற்றாற்போல் பச்சை நிற துப்பட்டாவும், கழுத்தில் அம்மா கொடுத்த அழகிய தங்க நெக்லஸ்ஸும் போட்டுக்கொண்டு, தன் இரு கைகளிலும் இரண்டு கிப்ட் பாக்ஸ் வைத்துக்கொண்டு ரூமைப் பூட்ட ஒரு தேவதை சிரமப்பட்டுக் கொண்டு இருப்பதை மதன் கவனித்தான். யாரோ பக்கத்து ரூமைப் பூட்டிவிட்டு தன்னைப் பார்த்துக் கொண்டு இருப்பதை உணர்ந்து கார்த்திகா திரும்ப அங்கு மதன். வழக்கம்போல் கருப்பு நிற அடிடாஸ் ஷூ, கருப்பு நிற ஜீன்ஸ், கருப்பு நிர பெல்ட், வெண்மை நிர ப்ளெய்ன் வீ நெக் டீ-ஷர்ட், சுரேஷின் அம்மா

சொன்னதால் ட்ரிம் செய்து வைத்த வைக்கிங் தாடியும், தாடியுடன் சண்டை போடும் முறுக்கு மீசையும், காதல் தோல்வியால் வந்த டிப்ரஷனை விரட்டியடிக்க ஜிம்மிற்குச் சென்று ஏற்றி வைத்திருந்த உடம்பு கொண்ட ஒரு காளை தன்னைப் பார்ப்பதைக் கார்த்திகா கண்டாள். வழக்கம் போல் இருவரும் சில நிமிடங்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டே இருந்தனர். மதன் கார்த்திகாவின் கையில் இருந்த பூட்டைக் கேட்பதுபோல் கையை நீட்ட அவளும் தன் கையில் இருந்த பூட்டைக் கொடுத்தாள். மதன் கார்த்திகாவின் ரூமைப் பூட்டி விட்டு சாவியை அவளிடம் கொடுத்தான். கார்த்திகா முன்னே நடக்க மதன் கார்த்திகா போகட்டும் பிறகுப் போவோம் என்று காத்திருந்தான். ஆனால் கார்த்திகா சிறிது தூரம் சென்றதும் மதன் தன்னைப் பின் தொடர வில்லை என்று தெரிந்து அங்கேயே நின்றாள். இதைக் கவனித்த மதன் கார்த்திகாவைப் பின்தொடர ஆரம்பித்தான்.

கார்த்திகாவும் மதனும் கீழே இறங்கி சுரேஷும் தீப்தியும் ரெடியாகி கொண்டிருந்த ரூமின் கதவருகில் வந்தனர். கதவைத் திறந்து கார்த்திகா உள்ளே வந்து ‘இன்னும் ரெடியாகலையா, எல்லாரும் நீங்க ரெடி ஆகிட்டீங்கன்னு ரூம்ல இருந்து ரிசப்ஷனுக்குக் கிளம்பிட்டாங்க’ என்று கூற ‘வாவ், அக்கா க்ரீன்ல கலக்குறாங்க’ ஏற்கனவே ரெடியாகி உட்கார்ந்திருந்த தீப்தி கார்த்திகாவைப் பார்த்துக் கூறினாள். ‘டீ, என்ன, ஜூவல்ரி ஷாப் மாடல் ஆக்கிட்டாங்களா?’ கார்த்திகா தீப்தி போட்டிருந்த தங்க நகைகளைப் பார்த்து கிண்டல் செய்தாள். ‘உங்க

கல்யாணத்தப்பவும் நீங்க இப்படித்தான் இருக்கப் போறீங்க, அப்ப இருக்கு உங்களுக்கு' தீப்தி கார்த்திகாவை எச்சரித்தாள். 'என்ன சுரேஷ், நீங்கதான் லேட்டா?' கார்த்திகா சுரேஷைப் பார்த்துக் கேட்க, மேக்கப் போடுபவர்களை சில நொடிகள் இருக்க செய்து 'எல்லாம் இவதான், நானே சிம்பிலா பண்ணிக்குறேன்டி, புரப்பஷனல் மேக்கப் எல்லாம் வேணாம், லேட் ஆகும்னு சொன்னா கேட்கல' சுரேஷ் கூறினான். 'மதன் அண்ணா எங்க?' என்று தீப்தி சுரேஷைப் பார்த்துக் கேட்க 'வெளியத்தான் நின்னுக்கிட்டு இருக்காரு' கார்த்திகா கூறினாள். சுரேஷ் கதவருகே போய் 'டேய், ரூம் வரைக்கும் வந்துட்டு, உள்ள வரதுக்கு என்ன?' என்று மதனைத் திட்டிவிட்டு உள்ளே இழுத்தான். மதன் உள்ளே வந்து மூவரையும் பார்த்துவிட்டு அமைதியாக நின்றான். 'என்னனா அமைதியா இருக்கீங்க? எப்படி இருக்கு மேக்கப்' தீப்தி மதனைக் கேட்க 'ரொம்ப அழகா இருக்கும்மா' மதன் சொல்லிவிட்டு அமைதியானான்.
'அவ்வளவுதானா?' தீப்தி மதனை மீண்டும் கேட்க 'அது வந்து, நீ போட்டுட்டு இருக்குற கோல்ட் வேய்ட் எவ்வளவு தேரும்னு தோராயமாக் கணக்குப் போட்டுக்கிட்டு இருந்தேன், அதான் வேற எதுவும் சொல்ல முடியல' மதன் தீப்தியைக் கலாய்க்க 'நீங்களுமா' தீப்தி மதனை முறைத்தவாறே கேட்க 'நகைச்சுவை' மதன் சிறு புன்னகையுடன் தீப்தியை சமாதானப்படுத்தக் கார்த்திகாவும் தீப்தியைப் பார்த்து புன்னகைத்தாள். 'அசிங்கப்பட்டா ஆட்டோக்காரீ'

சுரேஷும் தன் பங்கிற்கு தீப்தியைக் கலாய்க்க ‘வேனாம், புருஷனாகப் போற, மரியாத கொடுக்கனும்னு யோசிச்சு வெச்சிருக்கேன், திட்ட வைக்காத’ தீப்தியும் சுரேஷைச் செல்லமாகத் திட்டினாள். சில நொடிகள் கழித்து ‘மச்சி, கயலும் குருவும் கால் பண்ணி இருந்தாங்க, மேரேஜ் ரொம்ப மிஸ் பண்றாங்களாம். அவங்க கொடுக்க இருந்த கிப்ட கார்த்திகா கிட்ட அனுப்பிட்டாங்களாம், அதை நீயும் கார்த்திகாவும் சேர்ந்து கொடுக்கனும்னு விருப்பப்படுறாங்க’ சுரேஷ் கூற மதன் அதைக் கேட்டு அமைதியாக இருந்தான். ‘டேய் வாய தொரடா, சேர்ந்து கொடுக்க உனக்கு அப்ஜக்ஷன் இல்லையே?’ சுரேஷ் கேட்க ‘டேய், என்னடா கேள்வி இது, அவங்களுக்காக இதக் கூடச் செய்ய மாட்டேனா, அவங்க வரலைன்றதே கயல் அம்மா சொல்லிக் கேள்விப்பட வேண்டி இருக்கு, உங்களுக்கு விஷயம் தெரியும்ல, என்கிட்ட சொல்லி இருக்கலாம்ல?’ என்று மதன் வருத்தத்துடன் கேட்க, ‘டேய், தேவையில்லாம டென்ஷன் ஆகாத, இன்னைக்குக் காலையில தான் கயல் கால் பண்ணிச் சொன்னாங்க, நீ பிசியா இருந்துட்ட, நானும் உன்ன மீட் பண்ண முடியல, இப்பத்தான் சொல்லிட்டேன்ல, ப்ரீயா விடு, கார்த்திகா உங்களுக்கு எந்த அப்ஜக்ஷனும் இல்லையே?’ என்று சுரேஷ் கார்த்திகாவைப் பார்த்துக் கேட்க, ‘இத நீங்க கேட்கனுமா, எனக்கு எந்த ப்ராப்ளமும் இல்ல’ என்று கூறினாள்.

தீப்தியும் சுரேஷும் அவர்கள் வீட்டின் பூஜை அறைக்கு முன் அமர தீப்தியின் குடும்பமும் சுரேஷின் குடும்பமும் சூழ்ந்து இருக்க புரோகிதர் நிச்சயதாம்பூலபத்திரிக்கை வாசிக்க இரு வீட்டாரும் தட்டை மாற்றிக்கொண்டனர். இந்தக் காட்சிகள் நேரடியாக வெளியில் வைக்கப்பட்டிருந்த பெரிய திரைகளில் ஒளிபரப்பப்பட்டன. ரிஷப்ஷன் ஏரியாவில் அமர்ந்திருந்த விருந்தினர் அங்கு அமர்ந்தவாறே அந்தக் காட்சிகளைக் கண்டு களித்தனர். நிச்சயம் முடிந்து இரு வீட்டாரும் மணப்பெண்ணிற்கும் மணமகனுக்கும் நலங்கு வைத்து சம்பிரதாயங்களை ஆரம்பித்தனர்.ஒருவழியாக அங்கு நடக்க வேண்டியவை முடித்து மணமக்களை ரிஷப்ஷன் செல்ல அனுமதித்தனர். சுரேஷின் அம்மா சுரேஷையும் தீப்தியையும் வழிநடத்திச் செல்ல மணமக்களைச் சூழ்ந்த வாறு குடும்பத்தினர் செல்ல, மதனும் கார்த்திகாவும் கடைசியாகப் பின்னால் வந்தனர். மணமக்கள் நடந்து வருவதை ரிஷப்ஷன் ஏரியாவில் அமர்ந்திருந்த விருந்தினர் பெரிய ஒஎல்இடி ஸ்க்ரீன்களில் பார்த்துக்கொண்டிருந்தனர். அப்போது மதன் தன் கையில் இருந்த மொபைலில் இருந்த ஒரு அப்ளிகேஷனை ஓபன் செய்தான். அது கன்சோல் ஏரியாவில் சரணின் ஸ்பேர் லேப்டாப்பில் இயங்கிக்கொண்டிருக்கும் மதனின் ம்யூசிக் அப்ளிகேஷனுடன் மதன் க்லவுடில் இயக்கிக்கொண்டிருக்கும் வீபிஎன் நெட்வொர்க் மூலம் இணைக்கப்பட்டிருந்தது. மதன் ப்ளே லிஸ்டில் இருந்து ஏஆர்ஆர் சன்

டிவிக்காக 1995 ஆம் ஆண்டு பொங்கல் சிறப்பு நிகழ்ச்சிகளுக்காகப் போட்டுக்கொடுத்த நாதஸ்வர இசை பிஜிஎம் இசைக்கச் செய்தான். முதலில் வந்த நாதஸ்வர இசையைக் கேட்டதும் கன்சோலில் அமர்ந்திருந்த சரண் மதன் இயக்கிக்கொண்டிருக்கும் லேப்டாப்பில் உள்ள ப்ளேலிஸ்டைப் பார்த்தான். அது மாறியிருந்ததைச் சரண் உணர்ந்தான். மதன் தன் மொபைல் மூலம் ப்ளேலிஸ்டை மாற்றியிருக்கிறார் என்று உணர்ந்து புன்னகைத்தபடியே தன் மிக்ஸிங்கைத் தொடர்ந்தான். அந்த நாதஸ்வர இசை டால்பி அட்மாஸ் ஸ்பீக்கர்களில் ஒலித்தவுடன் வந்திருந்த விருந்தினர் அனைவரின் கவனமும் ஒஎல்இடி ஸ்க்ரீன்களுக்குத் திரும்பியது. அப்போது தீப்தியும் சுரேஷும் ரிஷப்ஷன் மேடைக்கு வருவதை எல்லோரும் திரையில் பார்த்தனர். பீஜிஎம்மின் இருபத்து ஐந்தாவது நொடியில் ஆரம்பிக்கும் பேஸ் இசை சுரேஷின் பார்ம் ஹவுசின் அனைத்துத் திசையிலும் எதிரொலிக்க அந்த இடமே வேறொரு உலகில் இருப்பதைப் போன்ற உணர்வை விருந்தினருக்கு ஏற்படுத்தியது. எல்லோரும் மணமக்கள் வரும் அழகையும் ஏஆர்ஆர் இசையையும் ஒன்று சேர இரசித்துக் கொண்டிருந்தனர். மதன் தன் கையில் எதையோ செய்தவுடன் இசை தொடங்கியதை உணர்ந்த கார்த்திகா மதனைப் பார்த்து சிறு புன்னகைத்தாள். முன்னே சென்று கொண்டிருக்கும் சுரேஷ், அந்த நாதஸ்வர இசையை மதன் தான் கச்சிதமாக அவர்கள் ரிஷப்ஷன் வரும்போது இசைக்க வைத்திருக்க வேண்டும் என்று

எண்ணி அதை தீப்தியிடம் காதோரமாகக் கூறினான். அதை தீப்தி சுரேஷின் தாயாரிடம் நடந்துகொண்டே காதோரமாகக் கூறினாள். சுரேஷின் தாயார் மதன் எங்கே இருக்கின்றான் என்று பின்னால் பார்த்தார். மதனும் கார்த்திகாவும் பின்னால் நடந்து வந்து கொண்டிருப்பதைப் பார்த்த சுரேஷின் தாயார் அவர்கள் இருவரையும் முன்னே வரச்சொன்னார். கார்த்திகாவும் மதனும் மணமக்களுக்குப் பின் வந்து நின்றனர். ஒஎல்இடி ஸ்க்ரீனில் பார்த்துக்கொண்டிருந்த விருந்தினர்கள் மணமக்களுக்குப் பின் வரும் இருவரும் யார் என்று வினவத் தொடங்கி இருந்தனர். கயலின் அம்மாவும் மாமாவும் கார்த்திகாவையும் மதனையும் ஸ்கிரீனில் பார்த்தவுடன் புன்னகைத்தனர். மதன் தங்கையும் மதன் தங்கையின் குழந்தையுடன் அமர்ந்திருந்த மதன் தங்கையின் கணவரும் மதன், கார்த்திகா இருவரும் சேர்ந்து வருவதைப் பார்த்தவுடன் ‘அந்தப் பொண்ணு நம்ம ரூமுக்கு வந்த பொண்ணு தான?’ மதன் தங்கையின் கணவர் மதன் தங்கையிடம் கேட்க ‘அவங்க தான்’ என்று கூறினாள். ‘உன் அண்ணன் தாடி விட்டுக்கிட்டு திரிஞ்சதுக்குக் காரணம் இவங்க தானா?’ மதன் தங்கையின் கணவர் கேட்க ‘நீங்க உங்க எக்ஸ் லவ்வர பார்த்தா கூடப் போய் நிப்பீங்களா?’ மதனின் தங்கை தன் கணவனை மடக்க ‘அந்தப் பொண்ணு எக்ஸ் லவ்வரா இல்லாம இருந்தா?’ மதன் தங்கையின் கணவர் மதன் தங்கையைப் பார்த்துக் கேட்க மதனின் தங்கைக்குக் கார்த்திகா தான் மதன் மனத்தில் இருப்பவராக

இருக்குமோ என்ற சந்தேகம் வலுவடைந்தது. மதனின் தங்கையும் அவள் கணவரும் பேசியதைக் கேட்டுக்கொண்டிருந்த மதனின் தாயார் ஒன்றும் புரியாமல் மதனின் தந்தையைப் பார்க்க, அவர் ஒன்றும் பேசாமல் மதனின் தாயாரைப் பார்த்தார்.

வேறு ஒரு டேபிளில் 'அங்கப் பாத்தீங்களா?' கார்த்திகாவின் தாயார் கார்த்திகாவின் தந்தையைப் பார்த்துக் கேட்க அவர் புன்னகைத்தார். 'என்ன சிரிக்கிறீங்க, அப்ப உங்களுக்கு அவங்க ஒண்ணா இருக்கிறது சம்மதமா?' கார்த்திகா அம்மா கேட்க, 'ஏண்டி, எத்தன வாட்டி நான் கார்த்திய வீட்ல இருந்து வேலை பார்க்க சொல்லியிருப்பேன், பொண்ணு பார்க்க வரவங்களுக்கு வசதியா இருக்கும்னு தான் அவள வீட்ல இருந்து வேலை பார்க்கச் சொன்னேன், அப்பல்லாம் கேட்காதவ, அந்த சம்பவம் நடந்ததுல இருந்து வீட்ல இருந்து தான் வேல பார்க்குறா, ஆனா நான் பொண்ணு பார்க்க ஒருத்தன கூடக் கூட்டிட்டு வரல, அப்பவே உனக்குத் தெரியல?' கார்த்திகா அப்பா கூற, 'அப்புறம் ஏன் அவள கொடுக்க மாட்டேன்னு அந்தப் பையன் கிட்ட சொன்னீங்க?' கார்த்திகா அம்மா கேட்க 'நீயும் புரிஞ்சுக்காம பேசாதடி, நான் கொடுக்க மாட்டேன்னு சொல்லலடி, அவன் ஏத்துக்கிட்டா மட்டும் போதுமா, அவன் பேமலி என் பொண்ண ஏத்துக்காம போயிட்டாங்கன்னா நாம எப்படி நம்ம கல்யாணம் பண்ணிக்கிட்டு என் குடும்பம் உன்ன ஏத்துக்காம கஷ்டப்பட்டோமோ அப்படித்தான்டி அவங்களும் படுவாங்க, அவனுக்குக்

கொடுக்கிறதுல எனக்கு எந்த பிரச்சனையும் இல்ல, ஆனா அவன் குடும்பத்தோட சம்மதத்தோடத்தான் என் பொண்ண அவனுக்குக் கொடுப்பேன். இதெல்லாம் அவனுக்குச் சொல்றதுக்குள்ள அவன் அவசரப்பட்டுட்டான்' கார்த்திகாவின் அப்பா கார்த்திகாவின் அம்மாவிடம் கூறினார். 'தேவ இல்லாம ரெண்டு பேரும் சேர்ந்து என் பொண்ண அழ வெச்சீங்க' கார்த்திகா அம்மா கார்த்திகா அப்பாவைப் பார்த்து கூற 'லவ் பண்ணா எல்லாத்தையும் படனும் டீ' கார்த்திகா அப்பா புன்னகையுடன் கூறினார்.

தீப்தியும் சுரேஷும் ரிஷப்ஷன் மேடைக்கு வந்தவுடன் பரிசு கொடுக்க நின்றிருந்த விருந்தினர்கள் மணமக்களுக்குப் பரிசுப்பொருட்களைக் கொடுக்கத் தொடங்கினர். கார்த்திகா கயல் அம்மாவைப் பார்த்தவுடன் அங்குச் சென்று விட்டாள். மதன் நேராக மிக்ஸிங் கன்சோல் டென்டிற்குச் சென்றான். 'நீங்கதான மாத்துனது?' சரண் மதன் தன் மொபைல் மூலம் ப்ளேலிஸ்ட் மாற்றியதைச் சரண் கேட்டான். 'உங்க பென்ட்ரைவ் நீங்க கொடுக்கலைன்னாலும் நான் திருடிக்கிட்டு போகப்போறேன், உங்க பீஜிஎம் செலக்ஷனெல்லாம் டாப் க்ளாஸ் ப்ரோ, அதுவும் கல்யாணம் பண்ணிக்கப் போற மாப்பிள்ளையும் பொண்ணும் நடந்து வரும்போது வந்த அந்த மியூசிக் அட்மாஸ்பியர் தூக்கி விட்டுச்சு ப்ரோ, எல்லாரும் ஔல்இடி ஸ்க்ரீனத்தான் பாத்துட்டு இருந்தாங்க, நீங்களும் உங்க எக்ஸும் ஸ்க்ரீன்ல வரும்போது என்னாலயே நம்ப முடியல, இவ்வளவு நேரம் என் கூட இருந்தவரா

இப்படி இருக்காருன்னு ஆச்சரியமா இருந்துச்சு, இப்பவும் சொல்றேன், உங்க ரெண்டு பேருக்கும் பயங்கர கெமிஸ்ட்ரி ப்ரோ, நான் மட்டும் இல்ல, உங்கள ஸ்க்ரீன்ல பார்த்த எல்லோரும் அப்படித்தான் சொல்லுவாங்கப் பாருங்க' சரண் மதனைப் பார்த்து கூற மதன் வெட்கத்துடன் புன்னகைத்தான். கார்த்திகாவின் பெற்றோர்கள் மணமக்களுக்குப் பரிசு கொடுக்க மேடைக்கு வந்தனர், ஆனால் கார்த்திகா அவர்களுடன் மேடை ஏறவில்லை, 'வாங்க சார். எங்க கார்த்திகா கூட வரல' சுரேஷ் கார்த்திகாவின் பெற்றோர்களைப் பார்த்தவுடன் கேட்க 'அவ கயல் அம்மா கிட்ட பேசிக்கிட்டு இருக்கா, எனிவே கங்க்ராட்ஸ் தம்பி, வாழ்த்துக்கள் தீப்தி' கார்த்திகாவின் தந்தைக் கூறி கார்த்திகாவின் பெற்றோர்கள் தங்கள் கொண்டு வந்த பரிசை சுரேஷ் மற்றும் தீப்தியிடம் கொடுத்தனர். அவர்கள் கொடுப்பதை மதன் சரணின் மிக்ஸிங் கன்சோலில் கவனித்தான். அந்த சம்பவம் நடந்து முடிந்து இப்போதுதான் அவன் கார்த்திகாவின் தந்தையைப் பார்க்கின்றான். அவன் மனத்தில் குற்ற உணர்ச்சி மீண்டும் தலைதூக்கியது. சில நிமிடங்கள் கழித்து மதனின் தங்கையும் மதனின் பெற்றோர்களும் மேடைக்கு வந்தனர். 'டேய் மருமகனே, நல்லாத் தூங்கினியா, எங்க உன் மாமன மேடைக்குக் கூட்டிக்கிட்டு வரலையா' சுரேஷ் மதன் தங்கையின் குழந்தையைப் பார்த்துக் கேட்க 'அவன் இங்க தான் எங்கேயோ இருக்கான்' மதனின் தங்கை கூறினாள். 'ரொம்ப தேங்ஸ் பா, கல்யாணத்துக்கு வந்ததுக்கு, எங்க

நீங்க யாரும் வராம மதன மட்டும் அனுப்பி வைக்கப் போறீங்கன்னு இருந்தேன்’ சுரேஷ் மதனின் தந்தையைப் பார்த்துக் கூற ‘என் பொண்ணு கல்யாணத்துக்கு நீங்க குடும்பத்தோட வரும்போது, நாங்க வராம போயிடுவோமா, வாழ்த்துக்கள், அம்மா தீப்தி, இனிமே உன் அம்மாவ மட்டும் பாத்துக்காம மாமியாரையும் அம்மா மாதிரி பாத்துக்கணும்’ மதனின் தந்தை தீப்தியைப் பார்த்து கூற ‘இவ்வளவு நாள் அவ பாத்துக்காமலா இருந்தா, சுரேஷோட அம்மாவுக்கு ஏதாவது ஒன்னுன்னா அவதான் மொதல்ல போய் நின்னா’ மதனின் அம்மா மதன் அப்பாவிடம் தீப்தியைப் பற்றிப் பெருமையாகக் கூறும் போது தீப்தி அழகாக வெட்கப்பட்டாள்.

வந்திருந்த விருந்தினர்கள் பெரும்பாலானோர் பரிசுப் பொருட்களைக் கொடுத்து விட்டு பக்கத்தில் சாப்பிட ஏற்பாடு செய்யப்பட்டிருந்த இடத்திற்குச் சென்றிருந்தனர். அப்போது கார்த்திகா மிக்ஸிங் கன்சோல் இருந்த இடத்துக்கு வந்தாள். கார்த்திகா வருவதை மதன் கவனிக்கவில்லை, அவன் தன் சாப்ட்வேர் இயங்கிக்கொண்டிருக்கும் லேப்டாப்பில் மூழ்கி இருந்தான், சரண் கார்த்திகாவைப் பார்த்ததும் ‘ப்ரோ அங்கப் பாருங்க’ என்று மதனிடம் கூற மதன் கார்த்திகா காத்திருப்பதைப் பார்த்தான். ‘நான் போய் கிப்ட் ஒன்னு கொடுத்துட்டு வந்துடறேன்’ மதன் சரணிடம் கூற ‘நீங்க ரெண்டுபேரும் உண்மையிலேயே எக்ஸ் லவ்வர்ஸ்தானா?’ சரண் கேட்க ‘நான் உன்கிட்ட அவ என்னோட எக்ஸ் ன்னு சொன்னேனா?’

மதன் சரணைப் பார்த்து புன்னகையுடன் கூற ‘ப்ரோ?? என்ன சொல்றீங்க? அப்ப’ சரண் சொல்லி முடிப்பதற்குள் மதன் அங்கிருந்து நகர்ந்தான். கார்த்திகாவும் மதனும் தங்களுக்குப் பின்னால் யாரும் பரிசு கொடுக்க நிற்கவில்லை என்று உறுதிப்படுத்திக்கொண்டு மேடை எறினர். கார்த்திகா வந்தவுடன் தீப்தியைக் கட்டிப்பிடித்துக்கொண்டாள். ‘இப்பதான் உங்க ரெண்டு பேருக்கும் இங்க வர தோணுச்சா, அப்டியே போயிட வேண்டியதுதானே’ சுரேஷ் இருவரையும் பார்த்துத் திட்டினான். ‘நாங்க எவ்வளவு நேரம் வேணும்னாலும் வெயிட் பண்ணலாம், மத்தவங்க வெயிட் பண்ணக் கூடாதில்ல, எனிவே, ஹாப்பி மேரிட் லைப்’ கார்த்திகா சுரேஷிடமும் தீப்தியிடமும் தன் கொண்டு வந்த பரிசில் ஒன்று கொடுத்தாள். கார்த்திகா கொடுத்து முடிந்ததும் மதன் ‘உங்களுக்கு கங்க்ராட்ஸ் வேற சொல்லனுமா, என்ன பொறுத்தவரைக்கும் ஆல்ரெடி ஹஸ்பன்ட் அண்ட் வைஃப் மாதிரித்தான் இருந்தீங்க, இப்ப என்ன ஊர்ல இருக்கிறவங்களும் அப்படியே கூப்பிடப்போறாங்க, அவ்வளவுதான், இந்தா புடி’ என்று இருவரையும் பார்த்து கூறிவிட்டு தன் கையில் இருந்த கிப்டைக் கொடுத்தான். ‘வாழ்த்துரதையும் திட்ராமாதிரியே சொல்றான்பாரு, நாதர்ஸ்’ சுரேஷ் தன் பங்கிற்கு மதனைத் திட்டினான். மதன் கொடுத்து முடித்ததும் கார்த்திகா மதனைப் பார்த்து கயலின் கிப்டைக் கொடுக்கலாமா என்று கேட்பதுபோல் பார்க்க, மதன் தன் கையில் இருந்த மொபைலை

எடுத்து கயலுக்கு வீடியோ கால் செய்தான். அடுத்த முனையில் கயலும் குருவும் மொபைல் திரையில் வந்தனர். மதன் தன் முகத்தைக் காட்டாமல் கயல், குரு இருவரும் நேராக தீப்தியையும் சுரேஷையும் பார்க்கும்படிச் செய்தான். ‘அடியே தீப்தி, என்னடி கழுத்துல, ஒரு நகைக்கடையே இருக்கு’ கயல் தன் பங்கிற்குத் தீப்தியை ஓட்டினாள். ‘நீங்களும் ஓட்டாதிங்கக்கா’ தீப்தி கூற ‘அப்ப எனக்கு முன்னாடி யாராவது இத சொன்னாங்களா?’ கயல் கேட்க ‘அதான் கார்த்திகா அக்கா இருக்காங்களே’ என்று தீப்தி கூறியவுடன் மதன் பிடித்திருந்த மொபைலைக் கார்த்திகா பக்கம் திருப்பினான். ‘அடிப்பாவி எப்படி இப்படி எல்லாம் டிரஸ் பண்ண ஆரம்பிச்ச, உன்ன வந்து பேசிக்கறேன்’ கயல் கார்த்திகாவின் அழகைப் பார்த்து வியந்தாள். ‘யோவ் மொக்க, அப்படியே நம்ம பார்ட்னர் பக்கம் திருப்புங்க’ என்று குரு மதனுக்குக் கூற மதனும் சுரேஷ் பக்கம் தன் மொபைலைத் திருப்பினான். ‘பார்ட்னர், நேரா பொட்டி படுக்கை எடுத்துட்டு இங்க வந்துடுங்க, உங்களுக்காக ஹனிமூனுக்குத் தனி வீடு காத்துக்கிட்டு இருக்கு’ குரு கூற ‘ரெடி பண்ணி வைங்கப் பார்ட்னர், அங்கதான் வந்துக்கிட்டு இருக்கோம்’ சுரேஷ் கூற தீப்தி சுரேஷின் முகத்தில் செல்லமாக ஒரு குத்து விட்டாள். சுரேஷுக்கு அப்பொழுது ஒன்று தோன்றியது ‘மச்சி, கயலும் குருவும் பேசுறத அப்படியே பெரிய ஸ்க்ரீன்ல வரவழைக்க முடியுமா?’ சுரேஷ் மதனைப் பார்த்துக் கேட்க ‘மொபைல்ல இருக்குறது எப்படி இங்க இருக்குற ஏவில கொண்டு வர

முடியும்?’ தீப்தி சுரேஷை சந்தேகமாக கேட்க ‘டோன்ட் அண்டர் எஸ்டிமேட் த பவர் ஆப் இன்ட்ரோவர்ட்ஸ் தீப்தி’ என்று சுரேஷ் கூற, ‘அப்படின்னா’ என்று கார்த்திகா கேட்க ‘ஊமக்கோட்டானுங்க சாதாரணமா எடை போடக்கூடாது கார்த்திகா’ கார்த்திகாவிடம் சொல்லிவிட்டு மதனைப் பார்த்து ‘என்னடா நான் சொன்னது கரெக்ட் தானே’ என்று கேட்டான். மதன் சுரேஷைச் சில நொடிகள் முறைத்துவிட்டு ‘கயல் ஒரு நிமிஷம் ஹோல்ட் போட்றேன்’ என்று கயலிடம் கூறி கயலின் காலை ஹோல்டில் வைத்துவிட்டு மதன் சரணுக்குக் கால் செய்தான். ‘சரண், என்னோட லேப்டாப்ல இருந்து வர ஆடியோ ஸ்ட்ரீம ப்ராக் காஸ்ட் பண்ணு அப்படியே எக்ஸ்ட்ரா ஒரு வீடியோ ஸ்ட்ரீம் கூட வரும் அதையும் ப்ராட்காஸ்ட் பண்ணு’ என்று சரணிடம் கூறினான். அதன்படி சரணும் மதனின் சாப்ட்வேர் இயங்கிக்கொண்டிருக்கும் லேப்டாப்பில் இருந்து வந்த இரண்டு ஸ்ட்ரீம்களையும் மிக்ஸிங் கன்சோலில் ப்ராட்காஸ்ட் செய்யும்படி வைத்தான். உடனே மதனின் மொபைல் ஸ்கிரீன் நான்கு புறங்களிலும் வைக்கப்பட்டிருந்த ஔஎல்இடி ஸ்க்ரீன்களில் பெரிதாகத் தெரிந்தது. மதனின் சாப்ட்வேர் இயங்கிக்கொண்டிருக்கும் லேப்டாப்பில் இருந்த சர்வர் எப்படி மதன் மொபைலில் இயங்கிக்கொண்டிருக்கும் க்லைன்டின் கட்டளைக்கேற்ப ப்ளேலிஸ்டை மாற்றியதோ அதே வழியில் இப்போது மதனின் மொபைலில் இருந்து வந்துகொண்டிருக்கும் ஆடியோ மற்றும் வீடியோ ஸ்ட்ரீம்களை

மிக்ஸிங் கன்சோலுக்கு அனுப்பிக்கொண்டிருந்தது. ‘கயல் இப்ப நீங்க ரெண்டு பேரும் லைவ் ரிலேல இருக்கீங்க’ சுரேஷ் வீடியோ காலில் இருக்கும் கயலைப் பார்த்துக் கூறிய வார்த்தைளும் ப்ராட்காஸ்ட் ஆனது. அங்கு கயல் ஒன்றும் புரியாமல் ‘என்ன லைவ் ரிலே?’ என்று சுரேஷைப் பார்த்துக் கேட்க மதன் தன் கையில் இருந்த மொபைலை மெதுவாக ஒஎல்இடி ஸ்க்ரீன்கள் வைக்கப்பட்டிருந்த திசையை நோக்கித் திருப்பினான். இவர்கள் மேடையில் பேசிக்கொண்டிருப்பதும் தானும் தன் கணவரும் பெரிய ஸ்க்ரீனில் தெரிவதையும் பார்த்த கயல் ‘அமேசிங், யாரு நம்ம மேட்மேன் வேலையா’ என்று கயல் கேட்க ‘வேற யாரு அவனே தான்’ என்று சுரேஷ் கூறினான். மேடையில் நடப்பது அப்படியே ப்ராட்காஸ்ட் ஆவதால் நண்பர்கள் பேசிக்கொண்டிருப்பதை விருந்தினர்கள் எல்லோரும் ஆர்வமுடன் பார்த்துக்கொண்டிருந்தனர். பஃபே பரிமாறப்பட்டு கொண்டிருக்கும் இடத்திலும் எல்லோரும் தங்கள் கையில் உணவை வைத்தபடி ஒஎல்இடி ஸ்க்ரீனில் நடப்பதைக் கவனித்துக் கொண்டிருந்தனர். ‘சரி, அப்ப கொடுத்துடலாமா?’ என்று கார்த்திகா மதனைப் பார்த்துக் கேட்க மதனும் தலை அசைத்தான். கார்த்திகா வீட்டில் நடந்த சம்பவத்திற்குப் பிறகு கார்த்திகா மதனிடம் முதன் முதலாகப் பேசியதால் மதன் மிகவும் மகிழ்ந்தான். ஆனால் எதையும் காட்டிக் கொள்ளாமல் அவள் தெரியாமல் அவனிடம் பேசிவிட்டாள் என்று எண்ணித் தன் முகத்தில் வந்த சந்தோஷத்தை

அடக்கினான். கார்த்திகா, தீப்தி, சுரேஷ் மற்றும் மதன் எல்லோரும் தெரியும்படி மதன் தன் மொபைலைத் தூக்கிப் பிடித்துக் கொண்டே கயல் அனுப்பிய கிப்டைக் கார்த்திகாவும் மதனும் சேர்ந்தவாறு மணமக்களிடம் வழங்கினர். ‘விஷ் யூ ஹேப்பி மேரிட் லைப்’ என்று கயலும் குருவும் ஒருசேர மொபைலில் வாழ்த்து தெரிவித்தது அங்கிருந்த ஒஎல்இடி ஸ்க்ரீனில் அழகாய்த் தெரிந்தது, விருந்தினர்கள் எல்லோர் முகத்திலும் புன்னகையை வரவழைத்தது.

‘தீப்தி, அந்த கிப்ட் ஸ்ப்பெஷலி பார் யூ’ கயல் கூறியவுடன் ‘அதென்ன ஸ்பெஷல், ஓப்பன் பண்ணு பாப்போம்’ என்று சுரேஷ் கூறினான். ‘லேடிஸ் சம்பந்தப்பட்டது ஏதாவது இருக்கப்போகுதுடா, லைவ் ரிலே வேற போய்க்கிட்டு இருக்கு’ மதன் கூற விருந்தினர்கள் அப்படி என்ன கிப்டாக இருக்கும் என்று ஆர்வத்துடன் பார்த்தனர். ‘சென்சார் பன்ற அளவுக்கு சீக்ரெட் இல்லை’ என்று கயல் கூற ‘அப்ப உடனே பிரிடி’ என்று சுரேஷ் தீப்தியிடம் கூறினான். தீப்தியும் அந்தக் கிப்டைப் பிரித்தாள், அது ஓர் அழகிய தங்கக் காசுமாலை, அதில் பதினாறு லஷ்மி உருவம் பொதித்த தங்கக் காசுகள் கோக்கப்பட்டிருந்தன. அதைப் பார்த்ததும் தீப்தி சிரித்தாள், ‘அக்கா உங்க லொள்ளு பார்டருக்குப் போனாலும் போகாதே, அங்கிருந்து கொடுத்து விட்டு கலாய்க்கிறீங்க’ என்று தீப்தி கூறினாள். ‘இருந்தாலும் பதினாறு லஷ்மி தாங்காதுங்க, ஒன்னு ரெண்டு ஆம்பள புள்ளைங்கள பெத்துக்குறோம்’ சுரேஷ் தன் பங்கிற்குக் கயலிடம்

புலம்பினான். ‘அந்தக் காசு மாலைய அப்படியே திருப்பி பாருங்க’ என்று கயல் கூற, தீப்தி காசு மாலையை திருப்பினாள். அப்போது பதினாறு லஷ்மி உருவத்திற்குப் பதிலாக பதினாறு முருகர் உருவங்கள் இருந்தன. ‘உங்களுக்கு எத்தன லஷ்மி வேணுமோ அத்தன லஷ்மி வெச்சிக்கோங்க, எத்தன முருகர் வேணுமோ அத்தன முருகர் வெச்சிக்கோங்க, ஆனா மொத்தம் பதினாறு வரனும், என்னடி தீப்தி கணக்கு கரெக்டுதான?’ கயல் கூறியவுடன் தீப்தி ‘அக்கா லைவ் ரிலேல இருக்கீங்கக்கா, பெரியவங்க எல்லாம் பாத்துட்டு இருக்காங்க அக்கா’ வெட்கத்துடன் சிரித்த படியே கூறினாள். ‘அடிங்கோ, அவங்க காலங்காலமாச் சொன்னது தான் நானும் சொல்லியிருக்கேன், பதினாறு பெத்துக்கோன்னு, அதெல்லாம் தப்பா நினைக்க மாட்டாங்க’ கயல் சிரித்தபடியே கூறினாள். கயலின் அம்மாவும் மாமாவும் நடப்பதைப் பார்த்துச் சிரித்தபடி இருந்தனர். ‘சுரேஷ், உங்க மேரேஜ நாங்க ரொம்ப மிஸ் பண்றோம்’ என்று கயல் சுரேஷிடம் கூறிவிட்டு ‘தேங்ஸ் மதன், அட்லீஸ்ட் எல்லோரையும் நேர்ல பார்க்க வச்சிட்டீங்க’ கயல் மதனுக்கும் நன்றி தெரிவித்தாள். ‘இருங்க கட் பண்ணிடாதீங்க, உங்க ப்ரண்ட் கார்த்திகா பாடுறத கேட்காம போறீங்களே’ சுரேஷ் கார்த்திகாவைப் பார்த்துக்கொண்டே கயலிடம் கூற ‘ஆமாமா, அவ வாய்ஸ் கேட்டு ரொம்ப நாள் ஆச்சு’ கயலும் ஆர்வத்துடன் இருந்தாள். ‘கிப்ட் கொடுக்க வந்தது ஒரு குத்தமா?’ கார்த்திகா சுரேஷைப் பார்த்துக் கேட்க ‘அக்கா எங்களுக்காகப்

பாடுங்கக்கா, வேனும்னா கம்பெனிக்கு மதன் அண்ணாவையும் பாடச் சொல்றேன், என்ன மதன் அண்ணா, ரெண்டு பேரும் சேர்ந்து பாடப் போறீங்களா, இல்ல தனித்தனியாகவா?' தீப்தி மதனைக் கோத்து விட்டாள். மதனுக்கு என்ன சொல்வதென்று புரியவில்லை, 'ரெண்டு பேருக்கும் கரெக்டா டைம் பாத்து செஞ்சு விடுறதே பொழப்பு, இல்ல?' மதன் இருவரையும் பார்த்துக் கேட்டான். 'கேட்டதுக்குப் பதில் சொல்றா, சோலோவா? இல்ல டூயட்டா?' சுரேஷ் கேட்க, 'முதல்ல அவங்கப் பாடட்டும்' மதன் ஒருவழியாக ஒத்துக்கொண்டான். 'ஓக்கே கார்த்திகா நீங்க மொதல்ல ஸ்டார்ட் பண்ணுங்க' சுரேஷ் கூற கார்த்திகா சற்று தயக்கத்துடன் 'வாய்ஸ் மட்டுமா?' கேட்க 'மச்சான் இருக்கும்போது மியூசிக்குக்கா பஞ்சம், இந்தாங்க முதல்ல அவன் போன பிடிங்க' என்று சுரேஷ் மதனின் மொபைலை அவனிடம் இருந்து வாங்கி கயலிடம் கொடுத்தான். 'டிப்ரஷன்ல இருக்கும் போது சாப்ட்வேர் ஒன்னு ரெடி பண்ணான், அது மூலமாத்தான் அனேகமா இப்ப நாம பேசுறத ப்ராட்காஸ்ட் பண்ண வெச்சிக்கிட்டு இருக்கான். அதுல கரோக்கே மோட் ஒன்னு இருக்கு, இந்த சர்ச் பட்டனை க்ளிக் பண்ணிட்டு உங்களுக்குப் பிடிச்ச சாங்ல இருந்து ஒரு ரெண்டு மூணு வார்த்தை சொல்லுங்க, உடனே உங்களுக்குப் பிடிச்ச பாட்ட தேடி கண்டுபிடித்து அந்த பாட்ட லாக் பண்ணும், அப்புறம் இந்த கரோக்கே பட்டனை பிரஸ் பண்ணா, மியூசிக் மட்டும் வரும், ஹியூமன் வாய்ஸ் பில்டர் பண்ணிடும்'

சுரேஷ் கார்த்திகாவிடம் விளக்கமாகக் கூறினான். கார்த்திகா சில நொடிகள் அமைதியானாள். ‘ஸ்டார்ட் பண்ணலாமா’ என்று கார்த்திகா கேட்க தீப்தியும் சுரேஷும் ஆம் என்று தலையை அசைத்தனர். கையில் இருந்த மதனின் மொபைலில் கயலும் குருவும் தன்னை ஆர்வத்துடன் பார்த்துக்கொண்டிருப்பதை கார்த்திகா கண்டு புன்னகைத்தாள். கார்த்திகா தன் சாப்ட்வேர் இயக்க தயாராவதைக் கண்டு தான் எழுதிய சாப்ட்வேர் சொதப்பாமல் இருக்க வேண்டும் அதுவும் தன் மனதுக்குப் பிடித்தவள் இயக்கப்போகும் போது எந்தப் பிழையும் ஏற்படக்கூடாது என்று மதன் கடவுளிடம் வேண்டிக் கொண்டிருந்தான். கார்த்திகா மதனின் க்ளைண்ட் அப்ளிகேஷனில் இருந்த சர்ச் பட்டனை அழுத்த அது வாய்சுக்குக் காத்திருந்தது, அப்போது கார்த்திகா ‘ஆற்றங்கரை புதரில் சிக்கி ஆடும் நுரை போலே’ என்று காதலன் படத்தில் வரும் காற்றுக்குதிரையிலே பாடலில் வரும் வரிகளைக் கூறினாள். உடனே அந்த பாடல் அப்ளிகேஷனில் முதல் வரிசையில் வந்து நின்றது, அதன் அருகில் ஒரு கரோக்கே பட்டன் இருந்தது, அதை அழுத்தியதும் அந்த பாடலில் வரும் இசை தொடங்கியது. ஏஆர்ஆரின் பேஸ் கிட்டாரும் பியானோவும் சுரேஷ் பார்ம் ஹவுசை நிரப்பியது. விருந்தினர்கள் மட்டுமல்லாமல் சாப்பிடும் இடத்தில் பரிமாறிக்கொண்டு இருந்த வேலையாட்களும் வந்த இசையைக் கேட்டு கார்த்திகாவை ஒஎல்இடி ஸ்கிரீனில் பார்க்கத் தொடங்கினர். ஒஎல்இடி ஸ்க்ரீன்களில்

கார்த்திகாவின் முகம் மிகவும் அருகே தெரிந்ததால் சரண் மதனின் மொபைலில் இருந்து வரும் வீடியோ ஸ்ட்ரீமை மட்டும் எடுத்துவிட்டு ரிஷப்ஷன் மேடையை போக்கஸ் செய்துகொண்டிருக்கும் கேமராமேன்களிடத்தில் இருந்து வந்த ஸ்ட்ரீம்களைப் பயன்படுத்த ஆரம்பித்தான். மேடையில் இருந்த கார்த்திகா, தீப்தி, சுரேஷ், மதன் நால்வரும் பெரிய திரைகளில் நன்றாகத் தெரிந்தனர். ப்ராட்காஸ்ட் செய்யப்பட்டு கொண்டிருந்த வீடியோ ஸ்ட்ரீம் ஸ்விட்ச் ஆனதை மதனும் கவனித்தான். ‘காற்றுக் குதிரையிலே என் கார்குழல் தூது விட்டேன்’ என்று கார்த்திகா பாடியவுடன் அடுத்தடுத்து வந்த இசை டால்பி சவுண்ட் சிஸ்டத்தில் எதிரொலித்தவுடன் அங்கிருந்தவர்களுக்கு மெய்சிலிர்த்தது. ‘காற்றுக் குதிரையிலே என் கார்குழல் தூது விட்டேன்’ என்று கார்த்திகா இரண்டாவதாகப் பாடும்போது மதனைப் பார்த்தாள். கார்த்திகா தன்னிடம் பேசக் காத்துக் கொண்டிருக்கிறாள் என்பதைச் சொல்லாமல் சொல்கிறாள் என்று மதன் உணர்ந்தான். ‘ஆற்றங்கரை புதரில் சிக்கி ஆடும் நுரை போலே’ என்று பாடியவுடன் மதன் கார்த்திகாவைப் பார்த்தான். தன்னால்தான் கார்த்திகா பல இன்னல்களுக்கு ஆளானாள் என்று நினைத்து மதன் மிகவும் வேதனையுடன் கார்த்திகாவிடம் மன்னிப்பு கேட்பது போல் பார்த்தான். கார்த்திகாவும் அவன் என்ன எண்ணுகிறான் என்று உணர்ந்தவுடன் அவள் கண்களில் நீர் சுரந்தது. கார்த்திகா பாடி முடித்ததும் தீப்தி கார்த்திகாவைக் கட்டிப்பிடித்துக்

கொண்டாள். அங்கிருந்தவர்கள் அனைவரும் கார்த்திகாவைக் கைதட்டிப் பாராட்டத் தொடங்கினர். சுரேஷ் மதன் இருவரும் கார்த்திகாவால் இப்படியும் பாட முடியுமா என்று வியந்து பாராட்டித் கைதட்டினர். தூரத்தில் அமர்ந்திருந்த மதன் தங்கையின் கணவர் மதன் தங்கையிடம் ‘எனக்கு ஒரு சந்தேகம்’ கூறியவுடன் மதனின் தங்கையும் ‘எனக்கும் அதே சந்தேகம் தான்’ என்று முடித்தாள். கார்த்திகா மதனின் மொபைலை மதனிடம் கொடுத்தாள். இப்போது மதன் பாட வேண்டிய தருணம். மதன் மவுனமானான். சில நொடிகள் கழித்து ‘இல்லை அவளும் என்றே உணரும் நொடியில் இதயம் இருளும், அவள் பாதச் சுவடில் கண்ணீர் மலர்கள் உதிரும்’ என்று கூறியவுடன் அவன் எழுதிய அப்ளிகேஷனில் மேயாத மான் படத்தில் சந்தோஷ் நாராயணன் இசையில் வரும் மேகமோ அவள் பாடல் முதலாவதாக வந்து நின்றது. அதுவரை பேசிக்கொண்டிருந்த சிலர் மதன் கூறிய வார்த்தைகளால் கவரப்பட்டு அவன் என்ன பாடப் போகிறான் என்று ஆர்வத்துடன் பார்க்க ஆரம்பித்தனர். மதன் கரோக்கே பட்டனை அழுத்தினான். சந்தோஷ் நாராயணனின் மெல்லிய கீபோர்ட் இசை அழகாய் எல்லோர் மனதிலும் படர ஆரம்பித்தது. ‘மேகமோ அவள், மாயப்பூ திரள்’ என்று மதன் பாடத் தொடங்கியவுடன் கார்த்திகா தன்னைத்தான் மதன் நினைத்து பாடுகின்றான் என்று உணர்ந்தாள். பாடலின் மெல்லிய இசையால் மதனின் ஒவ்வொரு வார்த்தையும் கேட்பவர்களுக்குத் தெளிவாய்ப்

புரிந்தது, பலரும் மதன் பாடுவதைப் பார்த்து மதன் தன் காதலியை நினைத்துப்பாடுகின்றான் என்று நினைத்தனர். ‘உன் நியாபகம் தீயிட, விரகாயிரம் வாங்கினேன், அறியாமலே நான் அதில் அரியாசனம் செய்கிறேன்’ என்று உருக்கமுடன் பாடும்பொழுது அவனை அறியாமல் அவன் கண்கள் கலங்கின. மதனின் மொபைல் அவன் முகத்தின் அருகில் இருந்ததால் கயலும் குருவும் மதனின் உணர்வுகளைத் தெளிவாகக் கண்டனர். அதுவரை தலைகுனிந்து இருந்த கார்த்திகா மதனைப் பார்த்தாள். அவன் கண்கள் கலங்கியது கண்டு அவளும் கலங்கினாள். மதன் பாடி முடித்தவுடன் சுரேஷைப் பார்த்து ‘சாரிடா, சந்தோஷமான நேரத்தில் தேவையில்லாம’ என்று கண்கள் கலங்கியவாறு சொல்லி முடிப்பதற்குள் சுரேஷ் மதனைக் கட்டித்தழுவினான். மதன் தன் கண்களை யாரும் பார்க்காதவாறு துடைத்துக்கொண்டான். அங்கிருந்த எல்லோரும் எழுந்து நின்று மதனின் பாடும் திறனைப் பாராட்டினர். கார்த்திகாவால் அவள் அழுகையைக் கட்டுப்படுத்த முடியவில்லை இருந்தாலும் மேடையில் எல்லோரும் கவனிக்கின்றனர் என்று உணர்ந்து கண்ணீரை அடக்கக் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தாள். அதைக் கவனித்த தீப்தி கார்த்திகாவின் இடது கையைத் தன் இரு கைகளால் பிடித்துக் கவலைப்படாதே அக்கா என்பது போல் பார்த்தாள்.

ஒருவழியாகக் கைதட்டல்கள் நின்றன. மதன், கயல், குரு இருவரும் வீடியோ காலில் இருந்த அப்ளிக்கேஷனைப் பெரிது படுத்தினான்.

இதைக் கவனித்த சரண் உடனே வீடியோ ஸ்ட்ரீமை மதன் மொபைலுக்கு மாற்றினான். கயலும் குருவும் ஒஎல்இடி ஸ்க்ரீன்களில் தோன்றினர். கயல் மதனைப் பார்த்து 'மறுபடியும் அவளை அழ வச்சிட்டீங்க இல்ல?' கூற எல்லோருக்கும் கயல் மதனின் காதலியைப் பற்றித்தான் கூறுகின்றாள் என்று உணர்ந்தனர். 'அவங்கதான் என்ன மொதல்ல அழவச்சாங்க' என்று மதன் கார்த்திகா முதலில் பாடியதைச் சுட்டிக்காட்டினான். 'வாட் கேன் ஐ சே, இனிமே அவளுக்கு மட்டும் இல்லாம உங்களுக்கும் எல்லாம் நல்லது நடக்கனும்னு கடவுள்ட சேர்த்து வேண்டிக்கிறேன்' கயல் கூற 'என்ன இருந்தாலும் உங்க ப்ரண்டுக்குத்தான் பர்ஸ்ட் ப்ரியாரிட்டி, இல்ல?' மதன் கேட்க 'ஆமா, அவதான் எனக்கு மொதல்ல, நீங்க இரண்டாவது ப்ரீயாரிட்டிதான்' கயல் புன்னகையுடன் கூறினாள். கவனித்துக்கொண்டிருந்த விருந்தினர்களும் மற்றவர்களும் மேடையில் என்ன நடக்கிறது என்று புரியாமல் ஆர்வத்துடன் பார்த்துக்கொண்டிருந்தனர். ஆனால் கார்த்திகாவின் பெற்றோருக்கும், கயலின் அம்மாவிற்கும், சுரேஷின் அம்மாவிற்கும் கயலும் மதனும் என்ன பேசிக்கொண்டார்கள் என்று நன்றாகப் புரிந்தது. மதனின் தங்கைக்கும், தங்கையின் கணவருக்கும் அங்கு என்ன நடக்கின்றது என்று ஓரளவிற்குப் புரிந்தது. மதனின் தங்கை மதனின் அப்பாவைப் பார்க்க அவர் முகத்தில் எந்த உணர்ச்சியும் காட்டாமல் மேடையைப் பார்த்துக்கொண்டிருந்தார்.

‘தேங்க்ஸ் சுரேஷ் அண்ட் தீப்தி பார் திஸ் மெமரிஸ், மறக்கமுடியாத எக்ஸ்பீரியன்ஸ், நேர்ல பார்ப்போம்’ கயல் சுரேஷைப் பார்த்துக் கூறினாள். ‘யோவ் பார்ட்னர். இதோ கிளம்பி வந்துகிட்டே இருக்கோம்’ சுரேஷ் குருவிடம் கூற ‘சீக்கிரம் வாங்க பார்ட்னர் எல்லாம் ரெடியா இருக்கு’ குருவும் கூறினான். கயலும் குருவும் நன்றி சொல்லிவிட்டு வீடியோ காலில் இருந்து விடைபெற்றனர். கார்த்திகாவும் தீப்தியின் கைகளையும் சுரேஷின் கைகளையும் குலுக்கிவிட்டு ‘ஹாப்பி மேரிட் லைப்’ என்று சொல்லிவிட்டு உடனே மேடையில் இருந்து கீழே இறங்க தயாரானாள். அந்த வார்த்தைகளைக் கூறும்போது அவள் குரல் உடைந்து காணப்பட்டது. கார்த்திகா கீழே இறங்கிக் கொண்டிருந்தாள். சுரேஷ் மதனைப் பார்க்க மதன் சுரேஷைப் பார்த்தான். கார்த்திகா கீழே இறங்கித் தன் பெற்றோரிடம் போகாமல் ரிஷப்ஷன் ஏரியாவை விட்டு என்ட்ரன்ஸிற்கு நடப்பதை மதன் கவனித்தான். மதனுக்குக் கார்த்திகா ஏதோ தவறு செய்யப் போகிறாள் என்று தோன்றியது. உடனே மதனும் கார்த்திகா போகின்ற திசையில் கீழே இறங்கிச் சென்றான். தீப்தி கார்த்திகாவும் மதனும் சென்றதைப் பார்த்து ‘என்னடா’ என்று சுரேஷிடம் கேட்க ‘அதான் பின்னாடிப் போறான்ல, ஒன்னும் ஆகாது பயப்படாதே’ என்று சுரேஷ் தைரியத்தைக் கொடுத்தான்.

கார்த்திகா பார்ம் ஹவுஸ் எண்ட்ரன்ஸ் நோக்கி வேகமாக நடந்தாள். வழியில் பார்ப்பவர்கள் கார்த்திகாவைப் பாராட்டினர். தன் கண்களில்

கண்ணீரைக் கட்டுப்படுத்திக்கொண்டு அவர்களின் பாராட்டைப் பெற்றபடி கார்த்திகா நடந்தாள். கார் பார்க்கிங் ஏரியாவில் பலர் கார்த்திகாவைப் பார்த்து பாராட்டுக்களைத் தெரிவித்தனர். அவற்றைப் பெற்றுக்கொண்டு கார்த்திகா கார் பார்க்கிங் ஏரியாவைக் கடந்து சென்றாள். நீண்ட சவுக்கு மரங்களைக் கடக்கும் போது கார்த்திகாவின் மனம் போராட்டக்களத்தில் இருந்தது. என்ட்ரன்ஸ் வந்தவுடன் அங்கு இருந்த காவலர்கள் கார்த்திகாவைப் பாராட்டினர். அவர்களுக்கு நன்றி தெரிவித்து விட்டு கார்த்திகா வெளியில் வந்தாள். அவளின் இடது பக்கம் ஈசிஆர் நெடுஞ்சாலை செல்லும் வழி, வலது பக்கம் வங்கக்கடல், கார்த்திகா கடலை நோக்கி வேகமாக நடந்தாள். மதனும் கார்த்திகாவைப் பின் தொடர்ந்து பார்ம் ஹவுசின் என்ட்ரன்ஸ் வந்தடைந்தான். அவனும் பலரின் பாராட்டுக்களைப் பெற்றவாறே அங்கு வந்திருந்தான். என்ட்ரன்ஸில் இருந்தக் காவலர்கள் மதனைப் பாராட்டிக் கொண்டிருந்தனர். ஒருவழியாக மதன் பார்ம் ஹவுஸ் விட்டு வெளியே வந்தான். ஒரு காவலரிடம் ‘அண்ணா, எனக்கு முன்னாடி ஒருத்தர் பாடினாங்கள்ல, அவங்க இங்க வந்தாங்களா? எந்தப் பக்கம் போனாங்க?’ என்று மதன் கேட்க ‘பீச் பக்கம் போனாங்கப்பா? ஏம்பா ஏதாவது பிரச்சனையா?’ என்று அந்தக் காவலர் கேட்டார். ‘முப்பது நிமிஷத்துல நாங்க ரெண்டு பேரும் ரிட்டர்ன் ஆகலைன்னா கொஞ்சம் கல்யாண மாப்பிள்ளை கிட்ட இன்பார்ம் பண்ணுங்கன்னா’ என்று மதன் அந்தக் காவலரிடம்

கூறிவிட்டு கார்த்திகா சென்ற வழியில் ஓடினான். காவலர் ஒருவிதக் குழப்பத்துடன் மதன் செல்வதைக் கவனித்தார்.

கடற்கரையின் ஆரம்பத்தில் ஒரே ஒரு மின்விளக்கு எரிந்துகொண்டிருந்தது, சுற்றிலும் யாரும் இல்லை, நிலவின் வெளிச்சம் கடலில் மிதந்து கொண்டிருந்தது. கார்த்திகா நேராகக் கடல் நோக்கி வேகமாக ஓடினாள். அந்த ஒரே ஒரு மின்விளக்கின் வெளிச்சத்தால் வந்தக் கார்த்திகாவின் பிம்பம் அவலுக்கு முன்னால் கடல் நோக்கி ஓடியது. அந்தப் பிம்பம் கடலுக்குள் செல்லும் போது வேறொரு பிம்பமும் பின்னால் வந்தது. கார்த்திகா சட்டென்று நின்றாள். பின்னால் யாரோ ஒருவர் இருக்கின்றார் என்று உணர்ந்து சற்று நிதானமாகத் திரும்பினாள். அங்கு மதன் தன் கைகளை பேண்ட் பாக்கெட்டில் வைத்துக் கொண்டு நின்றிருந்தான். கார்த்திகா மதனைப் பார்த்துவிட்டு மீண்டும் கடல் பார்த்தவாறு திரும்பிக்கொண்டாள். சில நொடிகள் அங்கே எதுவும் அசையவில்லை, அலைகளைத் தவிர. ‘எதுக்கு இங்க வந்தீங்க?’ கார்த்திகா கடல் நோக்கிப் பார்த்தபடி மதனைக் கேட்க ‘இதே கேள்விய உங்கள்ட கேட்டுட்டுப் போகலாம்னு வந்தேன்’ மதன் குதர்க்கமாகக் கேட்க, கார்த்திகாவுக்குச் சிரிப்பு வந்துவிட்டது அடக்கிக் கொண்டாள். ‘நான் சாகப்போறேன்’ என்று கார்த்திகா கூற ‘உங்க வீட்ல, நல்ல விஷயம் செய்றதுக்கு முன்னாடி நேரம் காலம் பாக்க மாட்டீங்களா, உங்க அப்பாதான் கம்யூனிஸ்டுன்னா உங்க அம்மாவாச்சும் பொண்ணுகிட்ட தற்கொலை

பண்ணிக்க நல்ல நேரம் எதுன்னு சொல்லிக்கொடுத்திருக்க வேணாமா?' மதன் வேண்டுமென்றே கார்த்திகாவைச் சீண்டினான். கார்த்திகா கோபத்துடன் மதன் அருகில் வந்து நின்றாள். 'இன்னொரு முறை என் அப்பா அம்மாவை இழுத்த, கண்டிப்பாச் செருப்பால அடி வாங்குவ' கார்த்திகா பொங்கினாள். 'அவ்வளவு பாசம் இருக்குறவ கடல் கிட்ட வரதுக்கு முன்னாடி அவங்கள நெனச்சு பார்த்திருக்கனும்ல?' மதன் எதிர் கேள்வி கேட்டான். கார்த்திகா மதனைப் பார்த்தவாறு இருந்தாள். சற்று கோபம் தணிந்தது. அலைகள் வந்து போய் கொண்டிருக்கும் இடத்தில் அலைகள் தொடாதவாறு ஒரு இடத்தில் போய் அமர்ந்தாள். மதனும் அவள் அருகில் போய் அமர்ந்தான். கார்த்திகா கைகளைத் தன் கால் முட்டிகளின் மேல் வைத்துக்கொண்டு தன் முகத்தைக் கைகளினிடையே குனிந்து வைத்துக் கொண்டு அழுதாள். மதன் எதுவும் பேசாமல் அவள் அருகில் அமர்ந்து கையில் கிடைக்கும் சிறு சங்குகளை எடுத்து கடலில் போட்டுக் கொண்டிருந்தான். கார்த்திகா சில நிமிடங்கள் அழுது விட்டு கண்களைத் துடைத்துக் கொண்டு மதனைப் பார்த்தாள். அவன் சற்றும் அலட்டிக் கொள்ளாமல் சிறு சங்குகளை எடுத்துப் போட்டுக் கொண்டிருந்தான். 'பேச்சுக்காவது ஏன் அழர, அழாதன்னு சொல்லலாம்ல?' கார்த்திகா கண்களைத் துடைத்துக் கொண்டு மதனைப் பார்த்துக் கேட்டாள். 'நம்ம மூளை ஏமோஷன்ச கன்ரோல் பண்ண நிறைய செக்பாயின்ட்ஸ் வெச்சிருக்கோம், அத

எல்லாத்தையும் ஒடச்சிக்கிட்டு வரதுதான் அழுகயாம், அந்த அழுகை நமக்குள்ள இருக்குறத விட வெளிய வந்துட்டா நல்லதாம். இண்டர்நெட்ல யாரோ ஒரு சைக்காலஜிஸ்ட் எழுதினத படிச்சேன்' மதன் கிண்டலடித்தான். இதைக் கேட்டதும் பக்கத்தில் இருந்தக் கார்த்திகா சற்று பெரிய கல்லை எடுத்து மதன் மீது வீச முயன்றாள். 'அது பெரிய கல், சின்னதா எடு' மதன் கார்த்திகா கல்லால் அடிக்க வருவதைப் பார்த்து நகர்ந்து விட்டான். கார்த்திகாவின் மனது அமைதி அடைந்தது. மதன் அவள் பக்கத்தில் இருந்தது அவளுக்கு ஒரு வித அனுபவத்தை கொடுத்தது. அவன் பேசும் பைத்தியக்காரத்தனத்தை மீண்டும் அவள் இரசிக்க வாய்ப்பு கிடைத்ததை நினைத்து உள்ளுக்குள் சந்தோஷப்பட்டாள். கார்த்திகா மீண்டும் கடலைப் பார்த்தவாறு அமர்ந்தாள். மதன் மீண்டும் கார்த்திகாவின் பக்கத்தில் வந்து அமர்ந்தான்.

'எதுக்குக் கயல் கிட்ட அப்படி சொன்ன?' கார்த்திகா மதனிடம் கேட்க 'நீதான என்ன இன்னைக்கு முதலில் அழவச்ச? உன்னை யாரு அந்தப் பாட்டு பாடச் சொன்னது? நீ என்ன பாத்து பாடும்போது எனக்கு எப்படி இருந்துச்சு தெரியுமா?' மதன் தன் மனத்தில் இருந்ததைக் கூறினான். அதற்குக் கார்த்திகா 'நீ பாடும் போது என்னால அங்க நிக்க முடியல, ஏந்தான் பசங்க லவ் பெயிலியருக்கு மட்டும் இந்தப் பாட்டு எழுதுறவங்க இப்படி எழுதுறாங்களோ' கார்த்திகா வருத்தப்பட்டாள். 'ஏன் இந்த முடிவுக்கு வந்த?' மதன் கார்த்திகாவைப் பார்த்துக்

கேட்டான். ‘என்ன வேற என்ன பண்ண சொல்ற, உன்னோட இருந்ததை என்னால மறக்க முடியல, என் அப்பா அம்மாவ விட்டுட்டும் என்னால வர முடியால, எங்க வீட்லயும் எனக்கு வயசாகிட்டே போகுது இன்னும் கல்யாணம் ஆகலையேன்னு ரொம்ப கஷ்டப்பட்ராங்க, எனக்கும் உன்ன பிரிஞ்சதுல இருந்து நார்மலா இருக்க முடியல, இதெல்லாம் யோசிக்குறப்போ பேசாம செத்துடலாம்னு தோனுச்சு’ கார்த்திகா கூற மதன் அமைதியாகக் கார்த்திகாவைப் பார்த்தான். சில நொடிகள் கார்த்திகா எதுவும் கூறாமல் கடலைப் பார்த்துக்கொண்டிருந்தாள். ‘நான் செத்திருந்தா என்ன பண்ணி இருப்ப?’ கார்த்திகா கடலைப் பார்த்தவாறே மதனிடம் கேட்க ‘நானும் செத்திருப்பேன்’ மதனும் கடலைப் பார்த்தவாறே கூறினான். ‘காதலுக்காக உயிரை விடுவது ஸ்டுப்பிடிட்டின்னு சொன்ன மதன் எங்க போனாரு?’ கார்த்திகா கேட்க ‘இப்பவும் அதைத்தான் சொல்றேன், காதலுக்காக உயிரை விடுவது ஸ்டுப்பிடிட்டின்னு, ஆனா என்னால ஒரு பொண்ணு தன் உயிர விடுறான்னா அவளுக்காக நான் என் உயிரை விடுவது தான நியாயம். எனக்குத் தெரிஞ்சு 80ஸ் 90ஸ்ல உயிரை விட்ட லவ்வர்ஸ் எல்லாம் இப்படித்தான் முடிவு எடுத்திருப்பாங்கன்னு நினைக்கிறேன்’ மதன் கூறினான். மதன் சொன்னவுடன் கார்த்திகா மதனைப் பார்த்தாள், மதன் சிரித்தபடி கார்த்திகாவைப் பார்த்தான். சில நொடிகள் இருவரும் எதுவும் பேசாமல் கடல் அலைகளைப்

பார்த்துக்கொண்டிருந்தனர். ‘என் வீட்ல நீயும் நானும் சேர்ந்து படம் பார்த்ததை என்னால மறக்கவே முடியல, நீ வேற பிரிஞ்சு போய்ட்டியா, அந்த குணா படம் என்ன போட்டு கொன்னுக் கிட்டு இருந்துச்சு. உன்ன மிஸ் பண்ணிட்டோமேன்னு டெய்லி உள்ளுக்குள்ள அழுதுக்கிட்டு இருந்தேன், அப்பத்தான் ஆபீஸ்ல ஒரு இன்சிடென்ட் நடந்துச்சு’ கார்த்திகா கூறி முடிப்பதற்குள் ‘தெரியும், டீம் லீட் ஆக்கிட்டாங்களாமே’ மதன் கூற ‘யாரு தீப்தியா?’ கார்த்திகா கேட்க ‘கயல், அதுமட்டுமில்லாம உங்க அப்பா யாருன்னு சொன்னாங்க’ மதன் கூறினான். ‘அவகிட்ட நான் சொல்லவேனான்டீன்னு சொல்லி இருந்தேன்’ கார்த்திகா கூற ‘அவங்க சொன்னதுனால தான் உன் குடும்பத்த பத்தி எனக்குத் தெரிய வந்துச்சு. நான் எவ்வளவு பெரிய தப்பு பண்ணி இருக்கேன்னு புரிஞ்சது. உன் அப்பாவ பார்த்தா மொதல்ல அவர் கால்ல விழுந்து மன்னிப்பு கேட்கனும்னு இருக்கேன்’ மதன் கூறினான். ‘கயல் சொன்னதால தான் என் நம்பர ஆபீஸ் இன்ப்ரால நுழைஞ்சு எடுத்தியா?’ கார்த்திகா கேட்க ‘உன்கிட்ட அடி வாங்கிட்டு ரிட்டர்ன் வரும்போதே தீப்தியும் சுரேஷும் நம்பர் இருக்கான்னு கேட்டாங்க, உன் நம்பர் அப்ப என்கிட்ட இல்ல, அதுவே எனக்குக் கொஞ்சம் உறுத்தலா இருந்துச்சு. அவங்க உன் நம்பர கொடுத்து என்ன பேசச் சொன்னாங்க, நான் வேணாம் உங்க மூணு பேருக்குள்ள இருக்குற ப்ரண்ட்ஷிப் என்னால கெட வேணாம்னு சொல்லிட்டேன். ஆபீஸ்

இன்ப்ராக்குள்ள நுழைஞ்சது தற்செயலா நடந்ததுதான். உன் நம்பர எடுக்கனும்னு நுழையல, உள்ள போகப் போக உன் நம்பர எடுக்க வாய்ப்பு கெடச்சது, எடுத்துட்டேன்' மதன் விளக்கமாகக் கூறினான். 'சிஐஎஸ்ஓ ஸ்க்ரீன்ல வந்தப்ப எனக்கு எப்படி இருந்துச்சு தெரியுமா? அவங்க உன்ன சரண்டர் ஆக சொல்லியிருந்தா கண்டிப்பா நீ போய் சரண்டர் ஆயிருப்ப, என்னாலத்தான உனக்கு அப்படி நடக்க போகுதுன்னு யோசிக்க யோசிக்க அழுகையா வந்துச்சு' கார்த்திகா மதனிடம் கூறினாள். மதன் எதுவும் பேசவில்லை, மீண்டும் இருவரும் மவுனமானார்கள். 'உன் அப்பா ஆசைப்பட்டபடி வீட்ல இருந்து வேலை பார்க்க ஆரம்பிச்சிட்ட, பொண்ணு பாக்க வந்தாங்களா?' மதன் கார்த்திகாவைக் கேட்க 'என்ன பொண்ணு பாக்க வர்றது இருக்கட்டும், நீ பொண்னு பாக்கப் போனியாமே? என் கிட்ட சொன்ன அதே டயலாக்க உன் அம்மாகிட்டயும் சொன்னியாம்?' கார்த்திகா கேட்க 'யாரு சுரேஷா?' மதன் கேட்க 'உன் தங்கச்சி, சுரேஷ்கிட்ட பொலம்பிக்கிட்டு இருந்தாங்க. நீயும் உன் அப்பாவும் பேசுவதில்லையாம்?' கார்த்திகா கேட்க 'என் கதைய விடு, உன் கதைக்கு வா?' மதன் கேட்க 'என்னன்னு தெரியல, அந்த இன்சிடென்ட்ல இருந்து என் அப்பா யாரையும் பொண்ணு பாக்கக் கூப்பிடல, வந்தவங்கள கூடப் பிறகு பார்க்கலாம்னு அனுப்பி வெச்சிட்டதாக் கேள்விப்பட்டேன்' கார்த்திகா கூறினாள். 'நான் பண்ணதுக்கு இந்நேரத்துக்கு உனக்கு கல்யாணம் ஆகி வயிறு

வீங்கியிருக்கும்னு நெனச்சிருந்தேன். ஆபீஸ் கான்ப்ரன்ஸ் மீட்டிங்ல உன்ன பாத்தப்பதான் இன்னும் எதுவும் நடக்கலைன்னு தெரிஞ்சிக்கிட்டேன்' மதன் கூறினான்.

'ஆஸ்பிட்டல்ல சுரேஷ் அம்மா முன்னாடி என்ன வெச்சு ரெண்டு பேரும் சண்டை போட்டுக்கிட்டு இருந்தீங்க இல்ல? ரெண்டு பேரயும் தொடப்பக்கட்ட எடுத்து நாலு சாத்து சாத்தலாமான்னு வந்துச்சு. சுரேஷ் அம்மா இருந்ததால அடக்கிக் கிட்டு இருந்தேன். அப்பக்கூட நான் உன் கூட வராததுதான் உனக்குத் தப்பாத் தோணுச்சு இல்ல?' கார்த்திகா கேட்க 'என் அப்பா கிட்ட போய் நான் பேச வேணாமா?' மதன் கேட்க கார்த்திகா கடலைப் பார்க்க ஆரம்பித்தாள். மதன் மீண்டும் மௌனமானான். 'எனக்கு உன் அப்பா அம்மாவ பகச்சிக்கிட்டு உன்னக் கட்டிக்க துளி கூட விருப்பம் இல்லை, அப்பவும் நான் அதைத்தான் சொன்னேன். அந்த காலண்டர் பாத்துத் தொலைச்சேன், உன் அப்பா வேற அப்படிச் சொன்னதும் பயங்கரமா டென்ஷனாயிடுச்சு, அவர பத்திக் கேள்விப்பட்டதுல இருந்து எனக்குள்ள குற்ற உணர்ச்சி இருந்துக்கிட்டே இருக்கு' மதன் தன் மனத்தில் உள்ளதைக் கூறினான். கார்த்திகா மதனைப் பார்க்க மதன் கடல் அலைகளைப் பார்த்துக்கொண்டிருந்தான். சில நொடிகள் மவுனமாகக் கழிந்தன. 'அந்த சாப்ட்வேர் நீயே ரெடி பண்ணியா?' கார்த்திகா கேட்க 'அது ஒரு சாதாரண மியூசிக் ப்ளே பேக் சர்வர் சாப்ட்வேர், நீ எனக்கு வாட்டர் பாட்டில் வைக்க வரும்போது ஒரு

லேப்டாப்ல இருந்தேன்ல, அதுலத்தான் அந்த சர்வர் ரன் ஆகிட்டு இருக்கு. என் மொபல்ல அந்த சர்வர ஆக்ஸஸ் பண்ண ஒரு ஆன்ராய்ட் க்ளைன்ட் அப்ளிகேஷன் எழுதி வச்சிருந்தேன். அந்த க்ளைன்ட் மூலம் ஏவி ஸ்ட்ரீம்ஸ அந்த சர்வர் வாங்கி சரண் கண்ட்ரோல் பண்ணிட்டு இருந்த மிக்ஸிங் கன்சோலுக்கு அனுப்பும், அப்படித்தான் கயல் கூட நாம பேசினது ப்ராட்காஸ்ட் ஆச்சு' மதன் விளக்கினான். 'அவர் பேர் சரணா?' கார்த்திகா கேட்க 'ஆமாம், ரொம்ப ஜாலியான பையன், இன்னும் ஸ்கூல் கூட முடிக்கல, ஆனா அவன் அண்ணனுக்கு சைட்ல வேலை செய்கிறான். இந்த ஏவி இன்ஸ்ட்ருமெண்ட்ஸ் எல்லாம் அவன் அண்ணனோடதுதான்' மதன் சரணைப் பற்றிக் கூறினான். 'இன்ஸ்ட்ரூமெண்ட்ஸ் எல்லாம் அவங்களோடதுதான் ஆனா அத எங்க வைக்கனும் எப்படி வைக்கனும்னு நீதான் டிசைன் பண்ணியாமே, காலையில மரத்துல தொங்கிக்கிட்டு இருந்தியாமே?' கார்த்திகா சிரித்தபடி கேட்க 'டால்பி அட்மாஸ் ஸ்பீக்கர்ஸ்மா, கண்ட எடத்துல வைக்கக்கூடாது, கரெக்டா வெச்சாத்தான் அதுக்கு உண்டான எஃபக்ட் கிடைக்கும். இன்னைக்கு ப்ளே பண்ண ஏஆர்ஆர் பிஜிஎம் எல்லாம் கேட்க எப்படி இருந்துச்சு, அதுக்குக் காரணம் இந்த சவுண்ட் சிஸ்டம் தான்' மதன் விளக்கினான். 'உண்மை தான், அதுவும் நாலு பக்கமும் இருந்த ஔஎல்இடி ஸ்க்ரீன்ஸ்ல வந்த விசுவல்ஸ், டிரைவின் தியேட்டர்ல படம் பார்த்த மாதிரியே இருந்துச்சு. கயல், குரு, நாம எல்லாரும் பேசிக்கிட்டு

இருந்தது ஸ்க்ரீன்ல வந்தப்ப பார்க்க செமையா இருந்துச்சு, ரொம்ப தேங்க்ஸ், இப்படி ஒரு எக்ஸ்பீரியன்ஸ் கொண்டு வந்ததுக்கு' கார்த்திகா மதனைப் பாராட்டினாள். 'நாம கிப்ட் கொடுத்தவுடனே முடித்திருக்கலாம், தேவையில்லாம பாட்டு பாடி, எமோஷனல் ஆகி, இப்ப இங்க உட்கார்ந்து கிட்டு இருக்கோம்' மதன் நடந்ததை யோசித்து வெளியில் வேதனைப்பட்டாலும் நடந்தது ஒருவிதத்தில் நல்லதுக்குத்தான் என்று உள்ளுக்குள் மகிழ்ந்தான். மதன் இதைக் கூறியவுடன் அதே சிந்தனை கார்த்திகாவின் மனத்திலும் தோன்றியது, இருவரும் சிறு புன்னகையோடு கடல் அலைகளைப் பார்த்து இரசிக்கத் தொடங்கினர். மீண்டும் சில நொடிகள் மௌனமாய்க் கடந்தன.

'யாராவது லினக்ஸ் சம்மந்தப்பட்டது ஏதாவது சின்னதாக் கேட்டாக் கூட அவங்க கிட்ட மணிக்கணக்கா உட்கார்ந்து பேச ஆரம்பிச்சிடுவேன். எனக்கே தெரியும் ஒரு சில பேர் பல்ல கடிச்சிக்கிட்டு கேட்டுக்கிட்டு இருக்காங்கன்னு, ஒரு சில பேர் ஏன்டா இப்படி பிளேடு போட்ரன்னு டைரக்டாவே கேட்பாங்க' மதன் கடல் அலைகளைப் பார்த்துக்கொண்டே கூறத் தொடங்கினான் 'அப்ப எல்லாம் நான் ஏன் இப்படிப் பேசுறேன்னு எனக்கே கடுப்பா இருக்கும், நீ என் லைஃப்ல வந்து நான் பேசுறது இரசிச்சிக் கேட்கும்போதுதான் எனக்கே கான்பிடன்ட் வந்தது, நான் கரக்டாத்தான் பேசுறேன் மத்தவங்க தான் ஒழுங்காக் கேட்கலைன்னு.

நீ இல்லாம வேற ஒருத்தி வந்து நான் பேசுறதுக் கேட்டுட்டு உண்மையிலேயே ஒரு பைத்தியக்காரனுக்கு வாக்கப்பட்டுட்டோமோன்னு வேதனப்படப்போறா, அத நெனச்சாத்தான் கல்யாணம் பண்ணிக்கவே கொஞ்சம் பயமா இருக்கு, பேசாம அப்படியே இருந்துடலாமான்னு தோனுது' மதன் தன் ஆழ்மனத்தில் இருந்ததைக் கார்த்திகாவிடம் கூறினான். 'அதனாலத்தான் சாமியார் வேஷம் போட்டுக்கிட்டு பொண்ணு பாக்கப் போனியா? உன் அப்பா ரொம்ப வருத்தப்பட்டாராம், உன் தங்கச்சி சொல்லிக்கிட்டு இருந்தாங்க' கார்த்திகா மதனைக் கிண்டல் செய்தாள். 'தாடி வந்தா அதுக்கு நான் என்ன பண்றது. அப்ப தாடியோட சாமியார் மாதிரி இருந்தான் பாரு, அவன் தான் உண்மையான மதன். இதெல்லாம் வெறும் வேஷம், சுரேஷ் கல்யாணத்துக்குப் போட்டது' மதன் கூற 'அந்தச் சாமியார் பொண்ணு பாக்கப் போன பொண்ணா நான் இருந்திருக்கனும்' கார்த்திகா வெட்கத்துடன் கூற 'இருந்திருந்தா? பாத்துட்டு என்ன சொல்லியிருப்ப?' மதன் கேட்க கார்த்திகா வெட்கத்துடன் சிரித்துக்கொண்டே கடலில் தவழும் நிலவைப் பார்த்தாள். நிலவின் அழகைப் போல் கார்த்திகாவின் முகமும் வெட்கத்தில் அழகானது. 'அதான் வாய் வரைக்கும் வந்திடுச்சில்ல, சொல்றதுக்கென்ன?' மதன் கார்த்திகாவைப் பார்த்து புன்னகையுடன் கேட்க கார்த்திகா மதனைப் பார்த்துக்கொண்டே இருந்தாள். மதன் மெதுவாக எழுந்து

உட்கார்ந்திருந்த கார்த்திகாவின் முன் வந்து தன் இரண்டு கால்களையும் பின்னால் நீட்டியவாறு மடக்கி முட்டியிட்டு ‘இந்தச் சாமியார கட்டிக்க சம்மதமா?’ என்று கேட்டவாறு தன் இரு கைகளையும் நீட்டிக் கார்த்திகாவின் பதிலுக்காகக் காத்திருந்தான். கார்த்திகாவின் கண்கள் மதனைப் பார்த்தவாறு இருந்தன. மதன் கார்த்திகாவின் வாழ்வில் வந்ததில் இருந்து நடந்த முக்கிய நிகழ்வுகள் அவள் கண் முன்னே வந்து சென்றன. கார்த்திகாவால் மறக்க முடியாத அந்த நாள், கார்த்திகாவும் மதனும் அவள் வீட்டில் படம் பார்த்த அந்த நாளில் கார்த்திகா மதனின் கைகளைப் பிடித்துக் கொண்டு படத்தில் வந்த கதாநாயகனும் கதாநாயகியும் இறந்ததற்காக ஒரு துளிக் கண்ணீர் சிந்தியது அவள் கண் முன்னே வந்தது. அவள் பிடித்துக்கொண்ட அந்தக் கைகள் இப்போது அவளுக்காகக் காத்திருக்கின்றன என்பதைப் பார்க்க கார்த்திகாவின் கண்களில் கண்ணீர் பெருக்கெடுத்தது. அப்பெரு மகிழ்ச்சியுடனே கார்த்திகா தன் இரு கைகளையும் மதனிடம் ஒப்படைத்தாள். மதன் கார்த்திகாவின் கைகளைத் தன் கைகளில் தாங்கியபடி இரு கைகளும் ஒரு சேர அவள் கைகளில் முத்தமிட்டான். தன் கைகளை எடுத்து மதனின் முகத்தில் வைத்து மதனின் நெற்றியில் கார்த்திகா முத்தமிட்டாள். இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்து சிரித்துக் கொண்டனர். முன்பு வலது பக்கம் அமர்ந்திருந்த மதன் தற்போது கார்த்திகாவின் இடது பக்கத்தில் வந்து

அமர்ந்தான். இருவரும் சில நிமிடங்கள் ஒருவரை ஒருவர் பார்த்து சிரித்தபடி இருந்தனர்.

‘அடுத்து உன் அப்பாவா?’ மதன் தன் அடுத்த கவலையை யோசிக்க ஆரம்பித்தான். ‘நான் இருக்கேன்ல, கவலப்படாத’ கார்த்திகா மதனை ஆறுதல் படுத்தினாள். ‘உங்க வீட்ல முடிஞ்சாலும் எங்க வீடு இருக்கும்மா, மெய்னா என் அப்பா’ மதன் கூறும்போதே ‘நீ சொல்ற மாதிரியெல்லாம் உங்க அப்பா இல்ல, என்கிட்ட எவ்ளோ நல்லா பேசினார் தெரியுமா, உன் அம்மாவும் ரொம்ப பாசமாப் பேசினாங்க. உன் தங்கச்சி, தங்கச்சி ஹஸ்பண்ட், அவங்களோட குட்டிப் பாப்பா, எல்லோரும் நல்லா பழகுறாங்க’ கார்த்திகா மதனிடம் கூற ‘நீ எப்ப அவங்கள மீட் பண்ண’ மதன் கேட்க ‘உன் தங்கச்சிய தீப்தி மேக்கப் ரூம்லதான் மீட் பண்ணேன். மீட் பண்ணும் போது அவங்க தான் உன் தங்கச்சின்னு கண்டுபிடிக்க முடியல, அவங்க வெளிய போகும்போதுதான் சுரேஷ் உங்க தங்கச்சின்னு சொன்னார். அவங்கள பாலோ பண்ணி போகும்போது என் ரூம் பக்கத்து ரூம் தான் உங்க ரூம்னு தெரிஞ்சது. வாட்டர் பாட்டில் வைக்கிற சாக்குல அப்படியே ஒரு விசிட் அடிச்சேன்’ கார்த்திகா கூறினாள். ‘டிடெக்டிவ் வேல எல்லாம் பாத்திருக்க’ மதன் கூற ‘எல்லாம் இந்தச் சாமியார் தரிசனத்துக்காகத் தான்’ கார்த்திகா மதனின் தோளில் குத்தினாள். ‘யார் உனக்குத் தோள்ல குத்த கத்துக் கொடுத்தாங்க?’ மதன் தன் தோள் பட்டையைத் தேய்த்தவாறே கேட்க ‘பார்டர்ல இருக்காளே அவதான்.

செமத்தியா குத்துவா, பயங்கரமா வலிக்கும்' கார்த்திகா கூற 'பாவம் மிலிட்டரி' மதன் சிரித்தான். 'உன் மொபைல் கொடு நல்ல நல்ல ஏஆர்ஆர் பீஜிஎம்லாம் வெச்சிருக்க, நான் என் மொபைலுக்கு ட்ரான்ஸ்பர் பண்ணிக்கறேன்' கார்த்திகா மதனின் மொபைலை வாங்கினாள். 'மொபைல்ல கொஞ்சமாத்தான் இருக்கு பிளேபேக் சர்வரில்தான் நிறைய இருக்கு' மதன் கூற 'பரவால்ல இருக்குறத கொடு' என்று கார்த்திகா வாங்கித் தன் மொபைலுக்கு அனுப்பிக் கொண்டிருந்தாள். அப்போது அலைபாயுதே மேரேஜ் பிரப்போசல் என்று ஒரு பைல் இருந்தது. அதைக் கார்த்திகா ப்ளே செய்தாள். அலைபாயுதே படத்தில் முப்பத்து ஒரு நிமிடம் முப்பத்து ஆறாவது நொடியில் வரும் அலைபாயுதே கண்ணா பாடலின் புல்லாங்குழல் பிஜிஎம் இசைக்கத் தொடங்கியது. சில நொடிகள் கேட்டவுடன் கார்த்திகா 'இது அலைபாயுதே கண்ணா பாட்டுதானே, எப்படி புல்லாங்குழலுக்கு கன்வெர்ட் பண்ண?'கார்த்திகா மதனைப் பார்த்துக் கேட்க 'இல்லம்மா, இது அதே பாட்டோட ஒரிஜினல் புல்லாங்குழல் பிஜிஎம், அந்த படத்தில் கரெக்டா ஷக்தியோட அக்கா ஷக்தியோட அப்பா கிட்ட ஷக்தியோட லவ்வ பத்தி ஓப்பன் பண்ணுவா, அப்ப லேசா பேக்ரவுன்ட்ல இந்த பிஜிஎம் வரும்' மதன் விரிவாகக் கூறினான். இசை சில நொடிகள் நகர்ந்தது, 'கனிந்த உன் வேணுகானம் காற்றில் வருகுதே' என்ற வரிகள் வயலினில் வரும்போது கார்த்திகாவும் ஸ்ருதி மாறாமல் அந்த வரிகளைப் பாடினாள். மதன்

அவள் பாடுவதைக் கண்டு புன்னகைத்தான். ‘ஒரு தனித்த மனத்தில் அணைத்து எனக்கு உணர்ச்சி கொடுத்து முகிழ்த்தவா’ என்று கார்த்திகா வயலின் இசைக்கேற்ப பாடிக்கொண்டே மதனின் வலது கையைத் தன் இரு கைகளால் பிடித்துக் கொண்டு தன் தலையை மதனின் தோளில் சாய்த்துக்கொண்டாள். இசை உடனே முடிந்தது. ‘டக்குன்னு முடிஞ்சிருச்சு?’ கார்த்திகா மதன் கைகளைக் கட்டிப்பிடித்தவாறே கேட்டாள். ‘பிஜிஎம் நா சின்னதாத்தான் இருக்கும்’ மதன் சிரித்துக்கொண்டே கடல் அலைகளைப் பார்த்தவாறே கூறினான். மீண்டும் இருவரும் சில நிமிடங்கள் மவுனமானார்கள். ‘என்கிட்ட ஒரு ஷெல் ஸ்கிரிப்ட் பேர்ல ஒரு பைத்தான் சர்வர் கொடுத்துத் திருட்டுத்தனமா ப்ரொடக்ஷன்ல ரன் பண்ண வெச்சல்ல, அத பத்திரமா வச்சிருக்கேன், என் அட்மின வேர பேட் வேர்ட்ல திட்டி இருந்தல்ல?’ கார்த்திகா மதனுடன் நடந்த முதல் உரையாடலை நினைவு கூர்ந்தாள். ‘புரிஞ்சிடுச்சா? போட்டுக் கொடுத்துடாதம்மா புண்ணியமாப் போகும்’ மதன் வேண்டினான். ‘பொழச்சிப் போ, மன்னிச்சிட்டேன். பர்ஸ்ட் டைம் என்ன பாத்து ஒரு பாட்டு பாடினியே நியாபகம் இருக்கா?’ என்று கேட்க ‘சின்னக் கண்ணன் அழைக்கிறான்’ மதன் பாடலின் முதல் வரியைப் பாடினான். ‘ஆபீஸ்ல நீ என்ன பாத்துப் பாடுனத எப்ப நினைச்சிப் பார்த்தாலும் அந்த நாள் எனக்குத் தூக்கம் வராது, உன் நியாபகமாவே இருக்கும்’ கார்த்திகா கூற ‘ரொம்ப கஷ்டப்படுத்திட்டேனா?’ மதனும்

இப்போது தன் தலையைத் தன் தோளில் இருந்த கார்த்திகாவின் தலையின் மீது வைத்து கடல் அலைகளைப் பார்த்தவாறு கேட்டான். கார்த்திகாவின் கண்களில் மீண்டும் கண்ணீர் கலங்கியது. அவள் எதுவும் பேசவில்லை.

இருவரும் ஒருவர் தலை மீது ஒருவர் தலை வைத்துக் கடல் தந்த தென்றல் காற்றில் நிலவு மிதக்கும் அழகையும் அலைகள் வந்து செல்லும் அழகையும் இரசித்தவாறு இருந்தனர். அப்பொழுது மின் விளக்கு எரிந்து கொண்டிருந்த இடத்தில் கார்கள் வந்து நின்றன. முதல் காரில் சுரேஷும் தீப்தியும் இறங்க கடல் அருகே இருவர் ஒருவர் தலை மீது இன்னொருவர் வைத்து உட்கார்ந்து இருப்பது தெரிந்தது. கார்த்திகாவின் அப்பாவும் அம்மாவும் காரை விட்டு இறங்கினர். பின்னால் வந்த காரில் மதன் குடும்பத்தார் வந்து இறங்கினர். ‘நீங்க இங்கேயே இருங்க’ என்று சுரேஷ் மற்றவர்களைக் கூறிவிட்டு அவனும் தீப்தியும் அந்த இருவரையும் நோக்கி நடந்தனர். ‘என்னடா நடக்குதிங்க?’ சுரேஷ் மதன் கார்த்திகாவின் அருகில் மெதுவாக வந்து கேட்டான். யார் என்று கார்த்திகாவும் மதனும் திரும்ப அங்கே சுரேஷும் தீப்தியும் நின்றிருந்தனர். மதனும் கார்த்திகாவும் சுதாரித்துக்கொண்டு எழுந்தனர். தூரத்தில் இரு குடும்பத்தாரும் நின்றிருந்தது தெரிந்தது. ‘உன்கிட்ட மட்டும் தான்டா சொல்லச் சொல்லிட்டு வந்தேன்’ மதன் சுரேஷிடம் கேட்க ‘மயிரு, நீங்க எறங்கி போனதுமே ரெண்டு பேர் வீட்லயும் தேட

ஆரம்பிச்சுட்டாங்கடா, எவ்வளவு நேரம் நானும் சமாளிக்கிறது. கரெக்டா ரெண்டு வீட்டுக்காரங்களும் ரூம்ல இருக்கும்போது வந்து சொல்லிட்டார்' சுரேஷ் மதனைக் கடித்துக் கொண்டான்.

மதன் பின் கார்த்திகாவின் கைகளைப் பிடித்து கூட்டிக்கொண்டு கார்த்திகாவின் தந்தையிடம் வந்தான். கார்த்திகாவின் கைகளை அவள் தந்தையின் கையில் ஒப்படைத்தான். 'உங்க கிட்ட நான் ரெண்டு விஷயம் பேசனும்' என்று கார்த்திகாவின் தந்தையிடம் கேட்க அவரும் தலையசைத்தார். 'முதல் விஷயம், என்ன மன்னிச்சிடுங்க' என்று சொல்லி முடித்தவுடன் மதன் கார்த்திகாவின் தந்தை, தாயின் கால்களில் விழ முனைந்தான். 'நில்லுப்பா, எதுக்கு இப்ப இதெல்லாம்' கார்த்திகாவின் தந்தை மதனைத் தடுத்து நிறுத்தினார். 'நீங்க யாரு, உங்களுக்கு என்ன நடந்ததுன்னு தெரியாம உங்கள தப்பாப் பேசிட்டேன். உங்களைப்பத்தித் தெரிஞ்சதும் என்னால நிம்மதியாத் தூங்க முடியல, என்ன மன்னிச்சிட்டேன்னு ஒரு வார்த்தை சொல்லுங்க' மதன் கேட்க 'அட என்னப்பா, சின்ன விஷயத்துக்கெல்லாம் மன்னிப்பு கேட்டு, உன் மேல எங்களுக்கு எந்த கோபமும் இல்ல' கார்த்திகாவின் தந்தை மதனை ஆறுதல் படுத்தினார். 'இப்ப இரண்டாவது விஷயம், அப்ப கேட்டதைத்தான் இப்பவும் கேட்கப் போறேன். உங்க மகள என்னால இராணி மாதிரி வச்சு பாத்துக்க முடியலன்னாலும் அவளுக்குப் பிடிச்ச வாழ்க்கைய கொடுக்க முடியும்னு நம்புறேன். என்ன நம்பி என் கூட உங்க

பொண்ண அனுப்புங்க' மதன் கார்த்திகாவின் பெற்றோர்களை வணங்கிக் கேட்டுக்கொண்டான். 'அப்ப கோபப்பட்ட மாதிரி கோபப்படாம நான் சொல்றதைக் கொஞ்சம் பொறுமையா கேட்பேன்னு நம்புறேன், உனக்குக் கொடுக்கக் கூடாதுன்னு எங்களுக்கு நோக்கமில்லை, உனக்குப் பிடிச்சா மாதிரி உங்க வீட்ல இருக்கிறவங்களுக்கும் என் மகள பிடிக்கனும், அப்படிப் பிடிக்கலைன்னா என்ன ஆகும்னு எங்களுக்குக் கொஞ்சம் தெரியும், அரேன்ஜ் மேரேஜ்ல குலம் கோத்திரம் அப்படிங்கற பிரச்சனையெல்லாம் இருக்காது, லவ் மேரேஜ் அப்படி இல்ல, உங்க வீட்ல சம்மதம் வாங்கிட்டு வந்து என் பொண்ண கூட்டிக்கிட்டுப் போ' கார்த்திகாவின் தந்தை மதனைக் கேட்டுக்கொண்டார்.

மதன் தற்போது தன் தந்தையிடம் பேச வந்தான். மதன் வருவதற்குள் மதனின் தந்தை கார்த்திகாவின் பெற்றோரிடம் சென்றார். 'வணக்கம் சார், நான்தான் மதன் அப்பா, காஞ்சிபுரத்தில் மளிகைக் கடை வெச்சிருக்கேன். நீங்களும் என் பையனும் பேசியதைக் கேட்டேன். நீங்க அனுமதிச்சீங்கன்னா உங்க மக கிட்ட ரெண்டு வார்த்த பேசிக்கறேன்' மதனின் அப்பா கார்த்திகாவின் அப்பாவிடம் கேட்டார். 'என்ன சார் இதெல்லாம் கேட்டுக்கிட்டு, கார்த்தி, இங்க வாம்மா' என்று கார்த்திகாவின் அப்பா மதனின் அப்பாவிடம் கார்த்திகாவை வரவழைத்தார். 'நீதானம்மா எங்க ரூமுக்கு வந்து தண்ணி கொடுத்துட்டுப் போன?' மதன் அப்பா கார்த்திகாவிடம்

கேட்டார். கார்த்திகா ஆமாம் என்பது போல் தலை ஆட்டினாள். 'எவ்ளோ நாளா அவன உனக்குத் தெரியும்?' மதன் அப்பா கார்த்திகாவை கேட்க 'கிட்டதட்ட ஒரு வருஷமாத் தெரியும்' கார்த்திகா பதில் கூறினாள். 'அவன புடிச்சிருக்கா?' மதன் அப்பா கேட்க. கார்த்திகா ஆமாம் என்பது போல் தலை ஆட்டினாள். 'ஏன்?' மதன் அப்பா கேட்க கார்த்திகா 'சொல்லிக்கிட்டே போகலாம், அவர் லினக்ஸ் பற்றி எனக்குச் சொல்லிக் கொடுத்தது, கயலுக்காக அருவா எடுத்தது, வேணும்டே என்ன வம்புக்கு இழுக்கிறது, நிறைய இருக்கு' கார்த்திகா கூறினாள். இதைக் கேட்டதும் மதனின் தந்தை சிரித்தார். 'நீங்க ரெண்டு பேரும் பாடுறத இன்னைக்குத்தான் நேர்ல பார்த்தேன், ரொம்ப நல்லாப் பாடுறீங்க' மதன் தந்தை இருவரையும் பாராட்டினார். மதனின் தந்தை கார்த்திகாவின் தந்தையைப் பார்த்து 'சார், என் ஊர்ல கோயில் அதிகம். அந்தக் கோயிலுக்குள்ள இருக்குற சாமிய தான் கையெடுத்து கும்பிட்டு இருக்கேனே தவிர சாமி பேரைச் சொல்லிக்கிட்டு திரியிர எவனையும் நான் மதிச்சதில்ல. ஈரோட்ல பொறந்த அந்தத் தாடிக்கார மனுஷன் சொன்னத தான் இப்பவும் என் வாழ்க்கையில நான் பாலோ பண்ணிக்கிட்டு இருக்கேன். நானே வந்து சொன்னாலும் உன் புத்திக்குப் புரியாத எதையும் நம்பாதன்னு சொல்லிட்டு போனார்ல, என் புத்திக்கு குலம் கோத்ரம்லாம் புரியல சார். அதனால நான் அதைப் பெரிசா எடுத்துக்கிட்டதே இல்ல. உங்க மகள எங்க வீட்டுக்கு அனுப்பி வைங்க, நாங்க பத்திரமா

பாத்துக்கறோம். எப்ப உங்க வீட்டுக்கு வரனும்னு கேட்டு சொல்லுங்க, குடும்பத்தோடு வந்து பொண்ணு கேட்கிறோம்' மதன் அப்பா கூறியவுடன் கார்த்திகாவின் அப்பா அவரை கையெடுத்துக் கும்பிட்டார்.

அங்கிருந்த எல்லோர் முகத்திலும் மகிழ்ச்சி நிறைந்திருந்தது. கார்த்திகா கண்கள் கலங்க மதனின் தந்தையிடம் ஆசிர்வாதம் பெற வந்தாள் 'அதெல்லாம் வேணாம்மா. நீ சந்தோஷமா இருந்தா அதுவே போதும்' என்று மதனின் தந்தை கார்த்திகாவை வாழ்த்தினார் 'பார்ப்போம் சார்' என்று மதனின் தந்தை கார்த்திகாவின் தந்தையிடம் கூறிவிட்டு விடைபெற்றார். அவர் வரும் பாதையில் மதன் நின்றிருந்தான். மதனிடம் வந்தவர் அவனைப் பார்த்தார். மதன் தலை குனிந்து நின்றிருந்தான். 'ஒரு பொண்ண லவ் பண்றேன் அவளத்தான் கட்டிக்கப்போறேன்னு அப்பவே சொல்லி இருக்கலாம்ல, தேவையில்லாம எதுக்கு வேற ஒரு பொண்ணு பாக்க ஒத்துக்கிட்ட?' மதன் தந்தை மதனைப் பார்த்துக் கேட்டார். 'எனக்கே அவ இப்பத்தான் ஓகே சொன்னா' என்று மதன் முணுமுணுத்தான். 'என்னது?' என்று மதன் அப்பா கேட்க 'ஒன்னும் இல்லப்பா' என்று மதன் பயந்தவாறு கூறினான். 'மாப்ள வாங்க போகலாம்' என்று மதன் அப்பா மதனைப் பார்த்துவிட்டு மதன் தங்கையின் கணவரைக் கூப்பிட்டார். 'நீங்க கார்கிட்ட போங்க மாமா, குழந்தைய கொடுத்துட்டு வந்துடறேன்' என்று மதன் தங்கையின் கணவர்

சொன்னார். மதன் தந்தை காரை நோக்கி நடந்தார். மதன் தன் தாயிடம் வந்தான், அங்கு மதனின் தங்கையும், தங்கையின் கணவரும் நின்றிருந்தனர். ‘யோவ் மச்சான், கங்கிராட்ஸ்யா, சீக்கிரம் எனக்கு மருமகள பெத்துக் கொடு’ என்று மதன் தங்கையின் கணவர் முதலில் மதனுக்கு வாழ்த்து தெரிவித்தார். ‘சும்மா இருங்க மாமா’ மதன் தன் தங்கையின் கணவரைப் பார்த்துக் கூறினான். ‘ஏன்டா, என்கிட்ட கூட ஒரு வார்த்தை சொல்லல?’ மதன் தங்கை மதனை அடித்தாள். ‘வீட்ல ஒரு வார்த்த சொல்லி இருக்கலாம்ல, அப்பா கேக்குறதும் நியாயம் தானடா, அவர் உனக்காக எவ்வளவு அலைந்தார் தெரியுமா?’ மதனின் தாயார் வருத்தப்பட்டார். ‘நீயும் அப்பா மாதிரியே பேசும்மா, கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி தாம்மா என்ன கட்டிக்க சம்மதிச்சா, எதுவும் கன்பார்ம் ஆகாம எப்படிம்மா அப்பா கிட்ட வந்து சொல்ல முடியும்’ மதன் விரிவாகக் கூறினான். ‘கார்த்திகா, இங்க வாங்க, அம்மா பார்க்கனுமாம்’ என்று மதன் தங்கை தூரத்தில் இருந்த கார்த்திகாவைக் கூப்பிட்டாள். ‘நாங்க வண்டிக்கிட்ட இருக்கோம்’ என்று கூறிவிட்டு கார்த்திகாவின் பெற்றோர் அங்கிருந்து காரை நோக்கி நடந்தனர். கார்த்திகா மதனின் தங்கையிடம் வந்தாள். ‘தீப்தி அக்கா மேக்கப் ரூமில் பாத்தப்ப கூட சொல்லலையே அண்ணி?’ மதன் தங்கை கார்த்திகாவைப் பார்த்துக் கேட்க ‘அப்ப நீங்க தான் அவரோட தங்கச்சின்னு தெரியாது நாத்தனாரே, மன்னிச்சிடுங்க’ கார்த்திகாவும் மதன் தங்கைக்குப் பதில் அளித்தாள். ‘என் பையன

நல்லபடியா பாத்துப்பியா?’ மதன் அம்மா கேட்க ‘நீங்க உங்க மகன நல்லா பாத்துப்பியான்னு கேட்கறீங்க, அவரு, உங்கள நல்லா பாத்துப்பியான்னு கேட்குறாரு. நீங்க கவலையே படாதீங்க அத்த, எல்லாரயும் நல்லபடியா பாத்துக்கறேன்’ என்று கார்த்திகா பதில் அளித்தாள். ‘வாழ்த்துக்கள் சிஸ்டர்’ மதன் தங்கையின் கணவர் கார்த்திகாவைப் பார்த்து வாழ்த்தினார். ‘தேங்க்ஸ் அண்ணா’ என்று கார்த்திகா கூறினாள். ‘சரிடி குழந்தையைப் புடி, மாமா வண்டி கிட்ட இருக்காரு’ என்று கூறிவிட்டு மதன் தங்கையின் கணவர் அங்கிருந்து நகர்ந்தார். ‘இருங்க நானும் வறேன்’ என்று சொல்லிவிட்டு மதனின் தங்கையும் அங்கிருந்து நகரத் தொடங்கினார். ‘அப்ப நானும் போயிட்டு வறேன், உங்க வீட்டுக்கு எப்ப வரனும்னு சீக்கிரம் சொல்லி அனுப்புங்க’ என்று மதன் அம்மா கூற ‘கண்டிப்பா’ என்று கூறி கார்த்திகா வழியனுப்பி வைத்தாள். மதனின் தங்கை காரிடம் போவதைக் கண்ட சுரேஷ், மதன் தங்கையின் கணவரிடம் வந்து ‘ப்ரதர், ஒரு சின்ன ரிக்வெஸ்ட், கார்த்திகா பேரண்ஸ கொஞ்சம் பார்ம் ஹவுஸ்ல ட்ராப் பண்ணிட்ரீங்களா. எனக்கு உங்க மச்சான் கிட்ட ஒரு சின்ன வேலை இருக்கு, பின்னாடி வந்துடறோம்’ சுரேஷ் கேட்க ‘அதுக்குப் போய் ஏன் கேட்டுக்கிட்டு, நான் கூட்டிட்டு போறேன்’ என்று சொன்னார். ‘அப்படியே மதன் தங்கையையும் நான் வரும்போது கூட்டிக்கிட்டு வறேன், அவங்களுக்கும் மதன் கிட்ட பேச வேண்டி இருக்கு, தப்பா நினைச்சுக்காதீங்க?’ சுரேஷ் கேட்க ‘என்

மச்சானுக்கு ஏதோ பெருசா பிளான் பண்றீங்க, என் குழந்தை இங்க இருக்கட்டுமா? இல்ல கூட்டிட்டுப் போகவா?' என்று மதன் தங்கையின் கணவர் கேட்க 'குழந்தை ஒன்னும் பிரச்சனை இல்ல' என்று சுரேஷ் கூறினான். அதன்படி மதன் தங்கையின் கணவர் கார்த்திகாவின் பெற்றோரையும் தன் காரில் அழைத்துக்கொண்டு மண்டபத்திற்குச் சென்றார்.

தற்போது அங்கு சுரேஷ், தீப்தி, கார்த்திகா, மதன், மதனின் தங்கை மற்றும் மதன் தங்கையின் குழந்தை இருந்தது. 'தீப்தி, பாப்பாவ வாங்கிக்கடி' சுரேஷ் கூற தீப்தி மதன் தங்கையிடம் இருந்த குழந்தையை வாங்கிக் கொண்டாள். 'ஏன்டா, அவ்ளோ பெரிய பார்ம் ஹவுஸ்ல, அட்டாச்சுடு பார்க்கெல்லாம் இருக்கு, அங்க நீங்க ரொமான்ஸ் பண்ண இடம் இல்லையா? ரெண்டு வீட்டையும் அலையவுட்டுட்டு இங்க ஒருத்தர் தல மேல இன்னொருத்தர் தலை வெச்சிக்கிட்டு நிலாவ ரசிக்கறீங்க' சுரேஷ் சொல்லிக்கொண்டே தன் வலது கை இடுக்கில் மதனின் தலையைச் சொருகி, முதுகில் மெத்த ஆரம்பித்தான். 'கருவாச்சி, நீயும் வந்து சாத்துடி' என்று சொன்னதும், 'ஆமாம், என்கிட்ட கூடச் சொல்லாம லவ் பண்ணான்ல, இந்தா வாங்கிக்க' மதன் தங்கை சொல்லிவிட்டு மதனை நன்றாக மொத்த ஆரம்பித்தாள். தன் அம்மா தன் மாமாவை மொத்துவதைப் பார்த்து மதன் தங்கையின் குழந்தை கைதட்டிச் சிரித்தது. அதைப் பார்த்து தீப்தியும் கார்த்திகாவும் சிரித்தனர். 'டேய் இருங்கடா, கேப் விட்டு

அடிங்கடா’ அடி தாங்காமல் மதன் கூற சுரேஷும் மதன் தங்கையும் அடிப்பதை நிறுத்தினர். ‘இப்பத்தான் நான் உன்ன லவ் பண்றேன்னு ஒத்துக்கிட்டு இருக்கா, இதுக்கு மேல தான் டா நாங்க லவ்வர்ஸ் பண்ற இந்த ரொமான்ஸ் எல்லாம் கத்துக்கணும்’ மதன் சொல்ல சுரேஷும் தீப்தியும் அதிர்ச்சி அடைந்தனர். ‘அப்ப நாங்க வரதுக்கு முன்னாடி நீங்க தல மேல தல வெச்சிக்கிட்டு இருந்ததுக்கு பேரு ப்ரண்ட்ஷிப்? உங்களுக்கு ரொமான்ஸ்னா என்னன்னே தெரியாது?’ சுரேஷ் கடுப்பாகிக் கார்த்திகாவையும் மதனையும் ஒருசேரக் கேட்க அப்பாவிகளாக ஆமாம் என்பது போல் இருவரும் தலை ஆட்டினர்.’கல்யாணம் பண்ணிக்கிட்டு வீ ஆர் ஸ்டில் லவ்வர்ஸ்னு சொல்லிக்கிட்டு திரியப் போறீங்க?’ சுரேஷ் மீண்டும் மதனையும் கார்த்திகாவையும் பார்த்துக் கேட்க இருவரும் வழக்கம் போல் மீண்டும் அப்பாவிகளாக தலையசைத்தனர். ‘மவன’ என்று சொல்லிவிட்டு சுரேஷும் மதன் தங்கையும் மறுபடியும் மதனை மொத்த ஆரம்பித்தனர். அடி தாங்காமல் மதன் சுரேஷ் காரை நோக்கி ஓடினான். எல்லோரும் சுரேஷ் காரில் புறப்பட்டு பார்ம் ஹவுஸ் வந்து சேர்ந்தனர்.

**தொடரும்..**

# இனிதே தொடங்கிய பயணம்

மதன், கார்த்திகாவின் திருமணத்திற்கு முந்தைய நாள். காஞ்சிபுரத்தில் மதனின் குடும்பத்தின் சொந்த மண்டபத்தில் மதன், கார்த்திகாவின் ரிஷப்ஷன் நடைபெற்றுக் கொண்டிருந்தது. மேடையில் பட்டு வேட்டியுடன் மதனும் தங்கநிறப் பட்டுப்புடவையில் கார்த்திகாவும் நின்றிருந்தனர். கயலும் குருவும் கார்த்திகா வீட்டினரையும் தன்வீட்டினரையும் கவனித்துக் கொண்டிருந்தனர். மற்றொரு பக்கம் சுரேஷும் தீப்தியும் விருந்தினர்களுக்கு என்ன வேண்டும் என்று கவனித்துக் கொண்டிருந்தனர். மதனின் தங்கை மதன் வீட்டாரைக் கவனிக்க பம்பரம் போல் சுற்றிக் கொண்டிருந்தாள். வழக்கம் போல மதன் தங்கையின் கணவர் ஓடி விளையாடிக் கொண்டிருந்த தன் குழந்தையைப் பார்த்துக் கொண்டிருந்தார். மதனின் அப்பா சமையல் பரிமாறும் இடத்தைக் கவனித்துக் கொண்டிருந்தார். மதன் அம்மா நாளை என்னவெல்லாம் தேவைப்படும் என்று கணக்கெடுத்து எடுத்து வைத்துக் கொண்டிருந்தார். சரண் தன் மிக்ஸிங் கன்சோலில் அமர்ந்து வரும் வீடியோ ஸ்ட்ரீம்களை மண்டபம் முழுவதும் ஆங்காங்கே வைத்திருந்த சாதாரண ஒஎல்இடி டிவிக்களுக்கு அனுப்பிக் கொண்டிருந்தான். மதன் திருமண மண்டபத்திற்கு உள்ளே நடப்பதால் சுரேஷ் திருமணத்தில் வைத்ததுபோல் பல ஒஎல்இடி டிவிக்களை ஒன்றாக வைத்து மிகப்பெரிய ஸ்க்ரீன்களை அமைக்க முடியவில்லை.

வழக்கம்போல் சரணின் ஸ்பேர் லேப்டாப்பில் மதனின் பிளேபேக் சர்வர் இயங்கிக்கொண்டிருந்தது. மதன் மொபைல் மட்டுமல்லாமல் இப்போது கார்த்திகாவின் மொபைலிலும் பிளேபேக் சர்வரின் க்ளைண்ட் அப்ளிகேஷன் இயங்கிக்கொண்டிருந்தது.

விருந்தினர்கள் எல்லோரும் பரிசுப் பொருட்களைக் கொடுத்து முடித்த நிலையில் சுரேஷ், தீப்தி, கயல், குரு நால்வரும் கயலின் கைக்குழந்தையுடன் மேடைக்கு வந்தனர். சுரேஷ் வந்தவுடன் மதனின் மொபைலை வாங்கி க்ளைண்ட் அப்ளிக்கேஷனை இயக்கினான். மதன் அதைப் பார்த்து சரணுக்குத் தன் சர்வரில் இருந்து வரும் ஆடியோ ஸ்ட்ரீமை ப்ராட்காஸ்ட் செய்ய சைகையால் கூறினான். அதன்படி சரணும் ஆடியோ ஸ்ட்ரீமை ப்ராட்காஸ்ட் செய்தான். ‘மண்டபத்தில் இருக்கும் எல்லாருக்கும் வணக்கம், உங்களுக்குத் தெரியுமா தெரியாதான்னு எனக்குத் தெரியாது, ஆனா மதன் கார்த்திகா ரெண்டு பேரும் சூப்பராப் பாடுவாங்க. சோ இங்க வந்திருப்பவங்களுக்காக இப்ப இவங்க பாடப் போறாங்க’ என்று சொல்லிவிட்டு சுரேஷ் மதன் மொபைலை அவனிடம் கொடுத்துவிட்டு ஒதுங்கி நின்றான். மதன் சிரித்துக்கொண்டே தன் அப்ளிகேஷனில் இருந்த சர்ச் பட்டனை அழுத்த மதனின் குரலுக்காக அது காத்திருந்தது. மண்டபத்தில் அமர்ந்திருந்தவர்கள் மதன் என்ன பாட போகிறான் என்று ஆவலுடன் காத்திருந்தனர். சில நொடிகள் மண்டபத்தில் அமைதி பரவியது. ‘கைப் பொருள் யாவும்

கரைந்தாலும் கணக்கு கேளேன், ஒவ்வொரு வாதம் முடியும் போதும் உன்னிடம் தோற்பேன்’ மதன் சில வரிகள் கூறியவுடன் கோச்சடையான் படத்தில் வரும் கண்ணே கனியே உனைக் கை விடமாட்டேன் பாடல் முதல் வரிசையில் வந்து நின்றது. மதன் கரோக்கே பட்டனை அழுத்தியவுடன் ஏஆர் ரகுமானின் பியானோ திருமண மண்டபத்தை முழுவதுமாக நிரப்பியது, அதுவரை சாப்பாடு பரிமாறப்படும் இடத்தில் வீடியோ ஸ்ட்ரீமை மட்டும் அனுப்பிய சரண் வந்த இசையைக் கேட்டவுடன் சாப்பிட்டுக் கொண்டு இருப்பவர்களும் இந்த இசையைக் கேட்க வேண்டும் என்று உடனே அந்த இடத்திற்கும் ஆடியோவை ஆக்டிவேட் செய்தான். இசையைக் கேட்டவுடன் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள் ஔல்இடி டிவிக்களைப் பார்க்க ஆரம்பித்தனர். மணமேடை ப்ளோரில் இருந்த கேமராமேன்கள் மேடையில் ஒவ்வொரு ஆங்கிளில் நடப்பதை சரணின் கன்சோலுக்கு அனுப்பி வைத்தனர். முக்கியமாக இரண்டு கேமராக்கள் மதன், கார்த்திகாவின் முகங்களை மட்டும் போக்கஸ் செய்தவாறு வைக்கப்பட்டிருந்தது, அதைக் கன்சோலில் கவனித்த சரண் உடனே அதை ஜாய்ன்ட் செய்து ஒரே ஸ்ட்ரீமாக மாற்றி ப்ராட்காஸ்ட் செய்தான். அது இருவரும் என்ன நினைக்கின்றனர் என்று அழகாக டிவிக்களில் காட்டியது. ‘கண்ணே கனியே உன்னை கைவிடமாட்டேன் சத்தியம் சத்தியம் இது சத்தியமே’ என்று மதன் பாடியதும் பக்கத்தில் இருந்த கார்த்திகா மதன் முகத்தைப் பார்க்க

மதன் கார்த்திகாவைப் பார்த்தான். இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்வதை டிவிகள் அழகாக அங்கிருந்தவர்களுக்கு காட்டியது அதைப் பார்த்துக்கொண்டிருந்த அனைவரின் முகத்திலும் மகிழ்ச்சி காணப்பட்டது. ‘நோய் மடியோடு நீ விழுந்தால் தாய் மடியாவேன், சுவாசம் போல அருகில் இருந்து சுகப்பட வைப்பேன்’ என்று மதன் கார்த்திகாவைப் பார்த்து பாடுவதைப் பார்த்த கயலும் குருவும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டு சிரித்தனர். பாடல் முடிவடையும் நிலையில் கார்த்திகா அவசரமாகத் தன் மொபைலை எடுத்து மதனின் அப்ளிகேஷனில் ஒரு பாடலின் சில வார்த்தைகளை டைப் செய்தாள். மதன் பாடி முடிக்கும்போது உடனே மதன் பாடிய பாடலின் ஆதே ஏஆர் ரகுமான் இசையே மறுபடியும் வந்தது. எல்லோரும் என்ன இது என்று யோசித்த நிலையில் இருக்கும்போது ‘காதல் கணவா உனை கைவிடமாட்டேன் சத்தியம் சத்தியம் இது சத்தியமே’ என்று கார்த்திகா மதனை பார்த்து பாட அங்கிருந்த அனைவரும் கார்த்திகாவுக்கும் மதனுக்கும் இருந்த காதலைக் கண்டு மகிழ்ந்தனர். ‘உனது உயிரை எனது வயிற்றில் ஊற்றிக் கொள்வேன், உனது வீரம் எனது சாரம் பிள்ளைக்குத் தருவேன்’ என்று கார்த்திகா மதனைப் பார்த்து பாடும் போது அவர்கள் இடையே இருந்த காதல் மிக அழகாய் அவர்கள் முகத்தில் வெளிப்பட்டது. ‘அழகு பெண்கள் பழகினாலும் ஐயம் கொள்ளேன், உன் ஆண்மை நிறையும் போது உந்தன் தாய் போல் இருப்பேன்’ என்ற வரிகளைக் கார்த்திகா பாட

அருகில் நான்கு மாத கர்ப்பிணியாக இருந்த தீப்தியும் சுரேஷும் ஒருவரை ஒருவர் பார்த்து புன்னகைத்தனர். கார்த்திகா பாடி முடித்தவுடன் மண்டபத்தில் இருந்த எல்லோரும் கார்த்திகாவையும் மதனையும் எழுந்து நின்று கைதட்டிப் பாராட்டினர். கார்த்திகாவின் பெற்றோர் தன் மகளை அவளை மிகவும் நேசிக்கும் ஒருவனுக்குத்தான் மணமுடித்து வைத்திருக்கிறோம் என்று எண்ணி நிம்மதி அடைந்தனர். மதனின் அப்பா சமையல் பரிமாறும் இடத்தில் இருந்து அவர்கள் பாடியதைப் பார்த்தார். இருவரும் பாடியதை விருந்தினர்கள் சாப்பிடுவதை விட்டுவிட்டு இரசித்ததைக் கண்டு மகிழ்ந்தார். தன் மகன் அவன் மீது மிகவும் பாசம் வைத்திருக்கும் ஒரு பெண்ணைத்தான் மனம் முடிக்கின்றான் என்பதை உணர்ந்து நிம்மதி அடைந்தார். மதனின் தாயார் இருவரும் பாடியதையும் இருவருக்கும் இருக்கும் பாசத்தையும் பார்த்து கண்கலங்கினார். கார்த்திகா பாடி முடித்தவுடன் தீப்தி கார்த்திகாவைக் கட்டித்தழுவினாள். சுரேஷ் மதனைக் கட்டித்தழுவினாள். கயலும் குருவும் மதனுக்கும் கார்த்திகாவுக்கும் கைகுலுக்கிப் பாராட்டினர். சுரேஷுக்கு அத்தருணத்தைப் பதிவாக்கத் தோன்றியது, அங்கிருந்த போட்டோகிராபரை நோக்கி ‘பிரதர், ஒரு குரூப் போட்டோ’ என்று கூறினான். மதனின் தங்கையும் அவள் கணவரும் கீழே இருந்ததைப் பார்த்து அவர்களையும் மேடைக்கு வரவழைத்தான். மேடையின் வலதுபுறம் மதன் தங்கையின் கணவர் அவர் குழந்தையுடன் நிற்க

அடுத்ததாக மதன் தங்கை நிற்க அடுத்து சுரேஷ் நிற்க அடுத்து தீப்தி நிற்க அடுத்ததாக கார்த்திகா நிற்க கார்த்திகாவின் கைகளைப் பிடித்தவாறு மதன் நிற்க அடுத்ததாகக் குரு நிற்க குருவிற்கு அடுத்ததாகத் தன் கைக்குழந்தையுடன் கயல் நின்றாள். நின்றிருந்த அனைவரையும் சிரிக்கச் சொல்லி போட்டோகிராபர் அவர்களை அழகாகப் படம் எடுத்தார்.

இரவுப்பொழுது, கார்த்திகாவின் வீடு, கார்த்திகாவின் ரூமில் மதன், ஜன்னலில் இருந்து தெரியும் மலையையும் காட்டையும் இரவுப்பொழுதின் இசையையும் வீசும் தென்றல் காற்றையும் அனுபவித்துக் கொண்டிருந்தான். ஜன்னலுக்கு அருகில் ஒரு அலமாரி இருந்தது. மதன் அதைத் திறக்க அதில் கார்த்திகா சிறு வயதில் இருந்து படித்த புத்தகங்கள் சேமித்து வைக்கப்பட்டிருந்தன. படிப்பு சம்பந்தப்பட்ட புத்தகங்களுடன் பல நாவல்கள் கவிதைப் புத்தகங்கள் சேமிக்கப்பட்டிருந்தன. எல்லாம் அடுக்கியிருந்த நிலையில் ஒரு புத்தகம் மட்டும் அடுக்காமல் தனியாக வைக்கப்பட்டிருந்தது. மதன் அதை எடுத்துப் பார்க்க அதன் அட்டைப்படத்தில் ‘துருவங்கள்’ என்று தலைப்பு இருந்தது. அதன் கீழே ‘11=10|01’ என்று குறிப்பிடப்பட்டிருந்தது. மதன் அதைப் பார்த்து சிரித்தபடி ஜன்னல் முன் வந்து நின்று அணிந்துரையைப் படிக்கத் தொடங்கினான். அப்பொழுது கதவுகள் திறக்கப்பட்டன. கையில் பால் சொம்புடன் கார்த்திகா உள்ளே வந்தாள். மதன் ஜன்னல் அருகில் இருந்து

கார்த்திகாவைப் பார்த்துக்கொண்டிருந்தான். வந்தவள் நேராகக் கட்டிலில் போய் அமர்ந்து ஒரு பக்கமாகச் சாய்ந்து கொண்டாள். ‘எப்படா கொஞ்ச நேரம் உட்கார விடுவாங்கன்னு இருந்தது. நீங்க எப்ப இங்க வந்தீங்க?’ கார்த்திகா மதனைப் பார்த்து கேட்க ‘உன்ன ரெடியாக கூப்டாங்கல்ல, அப்பவே என்ன ரூம் உள்ள போகச் சொல்லிட்டாங்க’ மதன் கூறிக்கொண்டே ஜன்னல் அருகில் வா என்று கண்களால் கார்த்திகாவைக் கூப்பிட்டான். ‘நீங்க இங்க வாங்க, நிக்க கூட முடியல’ கார்த்திகா பதில் கூறினாள். மதன் கையில் அந்த புத்தகத்துடன் கார்த்திகாவின் அருகில் வந்து அமர்ந்தான். மதன் கையில் இருந்த புத்தகத்தைப் பார்த்ததும் கார்த்திகா ‘இந்த புக்கா, உங்க ஆள் யாரோ ஒருத்தர் எழுதினதுதான். சப்டைட்டில் பார்த்தீங்களா? என்னன்னு சொல்லுங்க பாப்போம்?’ கார்த்திகா கூற ‘நீயே சொல்லு’ மதன் புன்னகையுடன் கேட்க ‘10 அப்படின்னா, ஒரு துருவம் 01 அப்படின்னா அதுக்கு ஆப்போசிட் துருவம், அதான் அந்த புக்கோட டைட்டில், துருவங்கள்?’ கார்த்திகா கூற ‘அப்ப, 11 அப்படின்னா என்ன அர்த்தம்’ மதன் கேட்க ‘அது ஜஸ்ட் ஈக்வேஷன்’ கார்த்திகா சமாளித்தாள். ‘நீ அப்படி யோசிச்சி வெச்சிருக்கியா, எனக்கு வேற மாதிரி தோனுச்சு’ மதன் கூற ‘எப்படி?’ என்று கார்த்திகா கேட்க ‘10 இந்த பைனரிய டெசிமலா கன்வெர்ட் பண்ணா டூ, விமன், ஏன்னா ஒரு பெண்ணோட உடம்புல மட்டும் தான் இரண்டு உயிர்கள் வாழ முடியும், 01 டெசிமலா கன்வெர்ட் பண்ணா ஒன், மென், சோ,

ரெண்டு பேரும் சேர்ந்தா மூணாவதா ஒரு உயிர் உருவாங்கும்றத சிம்பாலிக்கா 11 அப்படின்னு சொல்லி இருக்காருன்னு தோனுது, 11 பைனரி டெசிமலா கன்வெர்ட் பண்ணா மூனு வரும்' மதன் கூற கார்த்திகா சிரித்தாள். 'ஒரு முடிவோடத்தான் ரூமுக்குள்ள வந்திருக்கீங்க?' கார்த்திகா வெட்கத்துடன் சிரித்துக் கொண்டே கேட்க 'அப்ப இன்னைக்கு கேம் ஸ்டார்ட் பண்றது இல்லையா?' மதன் வருத்தத்துடன் கேட்க 'பொறுமையா இருந்தா கேம் ஸ்டார்ட் பண்ணலாம், அவசரப்பட்டா நான் கேமுக்கு வர மாட்டேன், கொஞ்சம் கூட ப்ராக்டிஸ் இல்லாம பீல்டுல இறங்கிட்டேன், நீங்கதான் கத்துக் கொடுக்கனும்' கார்த்திகா புன்னகையுடன் கூற 'அலோ, நானும் ப்ராக்டீஸ் இல்லாமத்தான் ஃபீல்டுல இறங்கியிருக்கேன், என்ன, அப்பப்ப மத்தவங்க விளையாடுவதைப் பார்த்ததால ஓரளவுக்கு எப்படி விளையாடனும்னு தெரியும், ஏன் நீ மத்தவங்க விளையாடிப் பாத்ததே இல்லையா?' மதன் கேட்க 'பாத்திருக்கேன் ஆனாலும் உங்க அளவுக்குப் பாத்திருக்க மாட்டேன்' கார்த்திகா பதில் கூற 'நாம விளையாடும் போது தெரிஞ்சிடும் யாரு அதிகமா பாத்திருக்காங்கன்னு, பாப்போம்' மதன் கார்த்திகாவைப் பார்த்துக் கூற கார்த்திகா வெட்கத்துடன் மதனின் தோளில் குத்தினாள். மதன் தன் கையில் இருந்த புத்தகத்தை மீண்டும் படிக்கத் தொடங்கினான். 'யாராவது லவ் ஸ்டோரில லினக்ஸ் பற்றி பாடம் நடத்துவாங்களா, பாதி புக் லினக்ஸ் கமாண்ட்ஸ் பத்தி தான் இருக்கு' கார்த்திகா கூற 'மே

பி புக்க எழுதினவர் படிக்கிறவங்களுக்கு லினக்ஸ் கத்துக் கொடுக்கத்தான் இந்த புக்க எழுதினாரோ என்னவோ' என்று கூறினான். கார்த்திகா மதன் கூறியதைக் கேட்டவுடன் 'விட்டுக் கொடுக்க மாட்டீங்களே?' என்று கூற 'எனக்குத் தெரிஞ்சு கண்டிப்பா நான் சொன்னதுதான் அவரோட இன்டென்ஷனா இருக்கும்' மதன் உறுதியாகக் கூற கார்த்திகா புன்னகைத்தாள். சில நொடிகள் கார்த்திகாவும் மதனும் எதுவும் பேசிக்கொள்ளவில்லை, பிறகு கார்த்திகா புத்தகத்தைப் படித்துக் கொண்டிருக்கும் மதனின் தோள்களின் மீது தனது கைகளை வைத்தாள். மதனும் புத்தகத்தைப் படிப்பதை விட்டு அவள் தோள்களில் தன் கைகளை வைத்தான். இருவரும் பார்த்துக் கொண்டே இருந்தனர். அப்போது கார்த்திகா 'இன்னும் பார்த்துக்கொண்டிருந்தால் என்னாவது இந்த பார்வைக்கு தானா பெண்ணானது நான் கேட்டதைத் தருவாய் இன்றாவது' என்று 1966 ஆம் ஆண்டு வெளிவந்த வல்லவன் ஒருவன் படத்தில் வந்த பாடலின் சில வரிகளைப் பாட மதனும் அதற்கு 'இன்னும் கேட்டுக்கொண்டிருந்தால் என்னாவது இந்தக் கேள்விக்குத்தானா பெண்ணானது நெஞ்சை கோட்டையைத் திறப்பாய் இன்றாவது' என்று பாடினான். கார்த்திகா மதன் தான் பாடிய பாடலைக் கண்டுபிடித்துவிட்டான் என்பதை ஆச்சரியத்துடன் 'இந்தப் பாட்டு உங்களுக்கும் தெரியுமா?' என்று கேட்க 'இந்தப் பாட்ட ஜெர்மன்லயா போய்க் கேட்டுட்டு வந்த? தமிழ் சினிமாவோட 1960 ஸ் கிளாசிக்ஸ்'

மதன் கூறினான். இருவரும் புன்னகைத்துவிட்டு சிறிது நேரம் தோள்களில் கைகளை வைத்தவாறு பார்த்துக்கொண்டு இருந்தனர் ‘என்ன?’ மதன் கேட்க ‘விண்டோவ மூடிட்டு வாங்க, அந்த மூணாவத ப்ரொட்யூஸ் பண்ண கேம் ஸ்டார்ட் பண்ணலாம்’ என்று கார்த்திகா வெட்கத்துடன் கூற ‘இப்பவாச்சும் தோனுச்சே? இதோ வரேண்டி செல்லக்குட்டி’ மதன் உடனே போய் ஜன்னலை மூடி விளக்கை அணைத்தான்.

**முற்றும்.**

# முடிவுரை

இக்கதையை நான் எழுதத் தொடங்கியபோது எனக்குக் கணினியில் தமிழில் தட்டச்சு செய்யத் தெரியாது, அதைக் கற்றுக்கொள்ளவே இக்கதையை நான் என்னுடைய கணினியில் தமிழ்99 விசைப்பலகை முறையை நிறுவி Emacs [https://www.gnu.org/software/emacs/] இல் எழுத ஆரம்பித்தேன். இக்கதையை முடிக்கும்போது என்னால் சரளமாகத் தமிழில் தட்டச்சு செய்ய முடிந்தது. எனக்கு தமிழ்99 [https://en.wikipedia.org/wiki/Tamil_99] விசைப்பலகை முறையை அறிமுகப்படுத்திய தோழர் அன்வர் [https://twitter.com/gnuanwar] அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். இன்னும் என்னால் பிழை இல்லாமல் தமிழில் எழுத இயலாது. இக்கதையில் பல இடங்களில் தமிழில் இருக்கும் அனைத்து வகையான பிழைகளையும் உங்களால் கண்டுபிடிக்க முடியும். ஆனாலும் இக்கதையில் நம் அன்றாட வாழ்வில் பயன்படுத்தும் பேச்சுவழக்கைப் பயன்படுத்தியுள்ளேன். ஆதலால் பிழைகளைப் பொருட்படுத்த மாட்டீர்கள் என்று நம்புகிறேன்.

இக்கதையில் இருந்த எண்ணற்ற பிழைகளைத் திருத்தம் செய்து கொடுத்த தோழர் முத்துராமலிங்கம் கிருட்டினன் [https://twitter.com/muthu1809] அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக்

கொள்கின்றேன். இக்கதையை வெளியிடத் துணைபுரிந்த தோழர் சீனிவாசன் [https://twitter.com/tshrinivasan] அவர்களுக்கு என்றும் நான் கடமைப்பட்டுள்ளேன். அட்டைப்படம் உருவாக்கத் துணைபுரிந்த தோழர்கள் பரமேஷ்வர் அருணாச்சலம் [https://github.com/parameshwar-A] , லெனின் குருசாமி [https://twitter.com/guru_lenin] இருவருக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இக்கதை பகிர்தலை மட்டுமே நோக்கமாகக் கொண்டு எழுதப்பட்டது. தங்களுக்குத் தெரிந்த யாவருக்கும் இக்கதையைப் பகிருமாறு கேட்டுக்கொள்கின்றேன். இக்கதை பற்றிய தங்கள் கருத்துக்களை n.keeran.kpm@gmail.com என்ற மின்னஞ்சல் முகவரிக்கு அனுப்பி வைக்கவும். உங்களிடம் இருந்து வரும் கருத்துக்களைப் பார்த்தால் என் கிறுக்கல்களையும் ஒருவர் தன் நேரத்தை ஒதுக்கிப் படித்திருக்கிறார் என்று எண்ணிப் பெருமகிழ்ச்சி அடைவேன். இக்கதையில் ஏதேனும் திருத்தங்கள் இருப்பின் https://gitlab.com/n.keeran.kpm/dhuruvangal என்ற இடத்தில் தங்கள் திருத்தங்களைக் கூறலாம்.

இக்கதை மூலம் கட்டற்ற மென்பொருள் இயக்கத்தைப் பற்றிய அறிமுகம் கிடைத்து இருக்கும் என்று நம்புகிறேன். தற்போதைய கணினி மயமாக்கப்பட்ட உலகில் கட்டற்ற மென்பொருட்களின் பங்கு இன்றியமையாதது. ஆனால் இதைப் பற்றிய புரிதல் மக்களிடத்தில்

கொண்டு போய்ச் சேர்க்கப்படவில்லை என்று எண்ணும்போது மனம் வருந்துகின்றது. கட்டற்ற மென்பொருள் இயக்கத்தில் எண்ணற்ற திட்டங்கள் உள்ளன, அவற்றில் தங்களை இணைத்துக்கொண்டு பங்களிக்குமாறு கேட்டுக்கொள்கின்றேன்.

**நன்றி**

